# பாத்தினிய்யாக்களின்

## சமூக விரோத செயற்பாடுகள்

எம்.ஜே.எம். ரிஸ்வான் மதனி

# الباطنية

# முன்னுரை

புகழ் அனைத்தும் அகிலங்களின் அதிபதியாகிய அல்லாஹ் ஒருவனுக்கே உரித்தானது. அவனது அருளும், சாந்தியும் தூதர்களில் இறுதியான நபிகள் நாயகம் முஹம்மத்(ﷺ) அவர்கள் மீதும், அவர்களின் குடும்பத்தவர், ஸஹாபாக்கள் இமாம்கள், முஸ்லிமான சகோதர, சகோதரிகள் இஸ்லாமிய நெறியைப் பின்பற்றி வாழ விரும்பும் அனைத்து நல்லுள்ளங்கள் மீதும் உண்டாகுவதாக!

மனித சிந்தனைகளால் உருவாக்கப்படும் சமய சித்தாந்தங்களானவை, மனிதர்களின் அனுப அறிவில் இருந்து உருவாக்கப்படுகின்ற காரணத்தினால் அவற்றில் முரண்பாடுகள், எல்லாக் காலத்திற்கும், சூழலுக்கும் பொருத்தமற்ற பல நடைமுறைச் சாத்தியமில்லாத பண்புகள் என்பன அவ்வப்போது உருவெடுக்கின்றன.

அவ்வாறான சித்தாந்தங்கள், இயற்றப்படும் காலத்திற்கு வேண்டுமானால் பொருத்தமானவையாகக் கொள்ளப்படலாம், என்றாலும் அவை குறைமதி உள்ள மனிதனால் இயற்றப்படுவதனால் அவற்றில் பல குறைபாடுகள் இருப்பது இயல்பாகும்.

அத்துடன், அவற்றில் மனித பண்புகளால் ஜீரணிக்க முடியாத, அவனது பகுத்தறிவுக்கு முரண்படும் பல அம்சங்கள் இருப்பதுடன், அவை பிற்பட்ட காலங்களில் மனிதர்களாலேயே மறுசீர் திருத்தத்தை வேண்டி நிற்பதை மறுக்க முடியாது. இதற்கு நல்லொதோர் எடுத்துக்காட்டாக இலங்கை அரசியல் யாப்பைக் குறிப்பிடலாம்.

ஆனால், இறைச் செய்தியானது அவ்வாறன்று. அது தவறுகள் செய்யாத அகிலங்களின் அதிபதியாகிய அல்லாஹ்வின் வார்த்தைகள் அடங்கிய செய்தியாக இருப்பதால் அவற்றைப் போதிக்கும் தூதர் மனதிலும், அவற்றைப் பின்பற்றும் மக்கள் மனங்களிலும் மனனம் செய்யப்பட்டிருக்கும்.



அந்தச் செய்தியை மக்கள் மன்றத்தில் சமர்ப்பிக்கின்ற தூதராக இருப்பவர், அல்லாஹ்விடம் இருந்து வரும் வானவத் தூதரான ஜிப்ரீல்(عليه السلام) என்ற தூதர் ஆவார். அவரால் வழங்கப்பட்ட அந்த செய்திகளின் உண்மைத் தன்மை, நம்பகத் தன்மை பற்றி மிக்க அறிந்தவராகவும், அதில் உறுதியானவராகவும் இறைத்தூதர் இருப்பார்.

وَما يَنْطِقُ عَنِ الْهَوى (٣) إِنْ هُوَ إِلَّا وَحْيٌ يُوحى (٤) عَلَّمَهُ شَدِيدُ الْقُوى (5) [النجم : ٣ – ٥]

“(முஹம்மதாகிய) அந்த தூதர் தனது மனோ இச்சைப்படி பேசவில்லை. அது அவருக்கு (வஹி) இறைச் செய்தியாக அறிவிக்கப்பட்டதே அன்றி இல்லை. அதனை அவருக்கு பலமும், அழகும் நிறைந்தவரான (ஜிப்ரீல்) கற்றுக் கொடுத்தார்.” (அந்நஜ்ம்: 3 –5)

அது மாத்திரமின்றி அவை எழுத்திலும் முழுமையாகப் பாதுகாக்கப்பட்டிருக்கும். இது முஹம்மத் நபி (ﷺ) அவர்கள் கொண்டு வந்த போதனைகளில் காணப்படும் சிறப்பியல்புகளாகும்.

இஸ்லாமிய வழிகாட்டல்கள் இறைச் செய்தி என்ற வஹியின் அடிப்படையிலான போதனைகளாக இருப்பதால், மனித வாழ்வு, காலம், மற்றும் சந்தர்ப்ப சூழ்நிலைகள் அனைத்தையும் கவனித்த போதனைகளாக இருப்பதோடு, அவை முழுமை பெற்ற, எவ்வித குறைபாடுகளும் இல்லாத, எக்காலத்திலும் குறைகள் சொல்லமுடியாத போதனைகளாகவே இருப்பது அவற்றின் சிறப்பம்சமாகும். அதன் நடைமுறைகள் எளிமையாகவும் அனைவராலும் பின்பற்றத் தக்கவையாகவும் இருக்கும்.

وَما جَعَلَ عَلَيْكُمْ فِي الدِّينِ مِنْ حَرَجٍ [الحج : ٧٨]

“மார்க்கத்தில் உங்கள் மீது எவ்வித சங்கடத்தையும் அவன் ஆக்கவில்லை.” (அல்ஹஜ் : 78)

ما يُرِيدُ اللَّهُ لِيَجْعَلَ عَلَيْكُمْ مِنْ حَرَجٍ وَلَكِنْ يُرِيدُ لِيُطَهِّرَكُمْ وَلِيُتِمَّ نِعْمَتَهُ عَلَيْكُمْ لَعَلَّكُمْ تَشْكُرُونَ [المائدة : ٦]

“உங்கள் மீது எவ்வித சங்கடத்தையும் ஏற்படுத்த விரும்பவில்லை. அன்றியும், நீங்கள் நன்றி செலுத்தும் பொருட்டும், அவன் உங்களைப் பரிசுத்தப்

படுத்திடவும், அவனது அருள்பாக்கியத்தை உங்கள் மீது பரிபூரணமாக்கவும் அவன் விரும்புகின்றான்." (அல்மாயிதா:6)

இறைத்தூதர் முஹம்மத் நபி(ﷺ) அவர்கள் தனது போதனை களில் 'எவை' தனது தோழர்களுக்கு விளங்காத விஷயங்களாக இருக்குமோ, அவற்றை அவர்கள் அவர்களுக்குத் தெளிவு படுத்தி விளக்குவார்கள்.

அப்போது அவற்றை அவரது ஒட்டுமொத்த தோழர்களும் விளங்கி நடைமுறைப்படுத்துவர். பின்னர் அல்லாஹ் அவரை அழைக்கின்ற போது அவரும் அவரது தோழர்களும் மரணிப்பார்கள். ஆனால், போதனைகள் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும்.

அதன் பின்னர் நபித்தோழர்களிடம் பாடம் படித்த அவர்களது மாணவர்கள் அவர்களின் தூய போதனைகளை பிரச்சாரம் செய்வர். இப்படி வாழையடி வாழையாக போதனைகளில் மாற்றமின்றி, மக்கள் நல்வழி நடப்பார்கள்.

இந்த நடைமுறை அனைத்து தூதர்களுக்கும் பொதுவானதாக இருந்தும், அவர்கள் மரணித்து சில காலங்களில் அவை அழிந்து விடும், அல்லது அவற்றில் திரிபுகள் செய்யப்படும். அல்லது அவர்களின் சமூகத்தவர் பாதுகாக்காது உதாசீனம் செய்திருப்பர். எனவே, அவற்றிற்கு தொடர் பாதுகாப்பு உத்தரவாதம் என்பது இருக்காது.

يُحَرِّفُونَ الْكَلِمَ عَنْ مَوَاضِعِهِ وَنَسُوا حَظًّا مِمَّا ذُكِّرُوا بِهِ [المائدة : ١٣]

"அவர்கள் (வேதம் கொடுக்கப்பட்டவர்கள்) இறைப் போதனைகளை அதற்குரிய (சரியான) இடத்தை விட்டும் திரிபு செய்கின்றனர். எதைக் கொண்டு அவர்கள் உபதேசிக்கப்பட்டார்களோ, அதனை அவர்கள் மறந்தும் விட்டனர்." (அல்மாயிதா: 13)

இதுதான் பைபிள், மற்றும் முன்னைய வேதங்களை சுமந்த சமூகத்தின் உண்மை நிலையாகும். ஆனால், இறுதித்தூதர் முஹம்மத் நபி (ﷺ) அவர்களின் போதனைகள் அவ்வாறன்று. முந்திய தூதர்களின் போதனைகளுக்கு நடந்த கதி நடக்காதவாறு அவர்களின் போதனைகளுக்கு பாதுகாப்பு உத்தவாதம் வழங்கப்பட்டுள்ளது.

அதனால் அவை அணுவும் பிசகாது, பல நூறு வருடங்க ளாகியும் இன்றுவரையிலும் பாதுகாக்கப்பட்ட நிலையில் இருப்பது அழியாவரம் பெற்ற இந்த மார்க்கத்தின் தெய்வீகத் தன்மைக்கு சிறந்த எடுத்துக் காட்டாகும்.

நபி(ﷺ) அவர்களின் மரணத்தின் பின்னர் அவர்களின் தோழர்கள், பின்னர், அவர்களின் மாணவர்களான தாபியீன்கள் என்போர் அவர்களின் வழி நடந்து அந்த மார்க்கப் போதனைகளை நூல்களிலும், இதயங்களிலும் பாதுகாத்தார்கள்.

நபி (ﷺ) அவர்களின் நபித்துவத்தின் இறுதிக்காலத்தில் அரஃபா என்ற மைதானத்தில் ஹஜ் கடமைக்காக மக்கள் ஒன்று கூட்டப்பட்ட போது, தனது 23 ஆண்டு கால தூதுத்துவப் பணியில் எதையும் விளக்காது விட்டுவைத்தேனா என மக்கள் மன்றத்தில் பகிரங்கமாக விசாரித்தார்கள்.

அங்கு கூடியிருந்த ஒட்டு மொத்த மக்களும், "இல்லை, நீங்கள் அனைத்தையும் போதித்துள்ளீர்கள், எந்தக் குறைபாடும் செய்ய வில்லை என்று அல்லாஹ்விடம் சாட்சி கூறுவோம்" என்று கூறினர். அப்போது அவர்களை சுட்டிக் காட்டிய அல்லாஹ்வின் தூதர் அவர்கள், அல்லாஹ்விடம் அவர்களை மறுமைக்கான சாட்சியாளர்களாக ஆக்கினார்கள் என்பது எந்த சமயத்திலும் எந்த தலைவரும் செய்யாத ஒரு வழிமுறையாகும்.

அவர்களின் தோழர்கள் நபி (ﷺ)அவர்கள் எதை மார்க்கமாகச் சொன்னார்களோ அதனை அப்படியே செயற்படுத்தினார்கள். அவர்களின் வழிவந்த மாணவர்களும் அவர்களின் வழிவந்தோரும் நபி(ﷺ) அவர்களின் போதனைகளை அணுவும் பிசகாது செயற்படுத்தி னார்கள். இப்படித்தான் இஸ்லாமிய கல்விப் பரிமாற்றப் போதனை முறை காணப்பட்டது.

மூன்றாம் கலீஃபா உஸ்மான் பின் அஃப்பான்(رضي الله عنه)அவர்களின் ஆட்சியில் முஸ்லிம்கள் மத்தியில் அரசியல் மற்றும் சமயக் கோட்பாட்டுப் பிரிவினைவாதக் குழுக்கள் தோன்றிய போதும், நபி(ﷺ) அவர்கள் சொன்ன செய்திகளை அங்கீகரிக்க அதன் அறிவிப்பாளர்களை

பகுப்பாய்வு செய்தே அக்கால அறிஞர் பெருமக்கள் ஏற்றுக் கொண்டனர்.

நபித்தோழர்கள், இமாம்களின் மரணத்தின் பின்னர் வந்தோர் மார்க்கத்தை தமது சொந்த, அல்லது மத்ஹப், மற்றும் அரசியல் (போக்கு) களின் நலனுக்காக மக்களை வழிகெடுத்தனர். மார்க்க அடிப்படைகளுக்கு முரணாக பகுத்தறிவு, மனோ இச்சையின் அடிப்படையில் விளக்கம் கூறத் தலைப்பட்டனர்.

இவ்வாறானோர், தாம் தங்கி நிற்கும் சிந்தனை முகாம், பின்பற்றும் தலைமைகளின் சிந்தனைப் பின்னணியை அடிப்படையாகக் கொண்டு இஸ்லாமிய அறிஞர்களால் பொருத்தமான அடையாளப் பெயர்கள் கொண்டு அழைக்கப்பட்டனர்.

கவாரிஜ், ஷீஆ, (ராஃபிழா), முஃதஸிலா, ஜஹ்மிய்யா, கத்ரிய்யா, ஜப்ரிய்யா, பாத்தினிய்யா மற்றும் சூஃபிய்யா போன்ற வார்த்தைப் பிரயோகங்கள் வழிகேட்டினை அடையாளப்படுத்த காரண காரியங்களுடன் அறிஞர்களால் சூட்டப்பட்ட பொருத்தமான பெயர்களாகும்.

அவை, அந்தப் பிரிவினரால் மார்க்கத்தில் அளிக்கப்பட்ட தவறான விளக்கம், அல்லது கொண்டிருந்த சிந்தனை, அல்லது பின்பற்றிய ஆளுமைகள் என்பதைப் பிரதிபலிப்பதாக அமைந்தன.

எத்துணை ஆயிரம் பிரிவுகள் வந்தாலும் நபித்தோழர்கள் வழி வந்த முஸ்லிம்கள் தம்மை இவர்களில் இருந்து பிரித்துக் காட்டும் முகமாக "அஹ்லுஸ்ஸுன்னா" என்ற அழகிய பொதுப் பெயர் கொண்டு தம்மை அழைத்துக் கொண்டனர்.

அந்த வரிசையில்தான் வழிகேட்டில் விசாலமானதும், பலபிரிவுகளின் தாய்ப் பிரிவுமான "பாத்தினிய்யா" என்ற பிரிவினர் அழைக்கப்படுகின்றனர். இவர்களின் நோக்கம், தோற்றம், பெயருக்கான காரணம் போன்ற விடயங்கள் பற்றி அறிகின்ற போது "பாத்தினிய்யா" பெயர் கொண்டு இவர்கள் ஏன் அழைக்கப்படல் வேண்டும் என்பது புலனாகும்.

والباطنية الذين هم من جميع الأديان منسلخون (( حادي الأرواح إلى بلاد الأفراح (١ / ١٩٦)

"பாத்தினியாக்கள் சகல மதக் கோட்பாடுகளை விட்டும் வெளியேறியவர்கள். அதாவது, மதமில்லாதவர்கள், சமயவழிபாடுகள் அற்ற மிருகங்கள்" என்ற இமாம் இப்னுல் கையிம் (ரஹ்) அவர்களின் கூற்றின் உண்மைத் தன்மையை அறிய "பாத்தினிய்யாக்களின் சமூக விரோத செயற்பாடுகள்" என்ற தலைப்பில் இங்கு அவர்கள் பற்றிய சுருக்கமான ஆய்வு முன்வைக்கப்படுகின்றது.

பொதுவாக நபித்தோழர்களின் காலம் கடந்து தோன்றிய பிரிவுகள், இஸ்லாத்தின் சான்றுகளை தமது கொள்கைகளுக்கு வலுச்சேர்க்கும் விதமாக வளைத்து விளக்கம் கூறத் தலைப்பட்டதே அவர்களின் வழிகேட்டிற்கான காரணமாகும்.

பாதினியாக்கள் பற்றி எழுதுகின்ற போது அவர்களின் அடி மரமாகிய ஷீஆக்கள் பற்றியும் எழுத வேண்டிய கடமைப்பாடு நமக்கிருக்கின்றது. ஏனெனில், இஸ்லாத்தினுள் முளைத்த வழிகேட்டுப் பிரிவுகளுக்கு இவர்களே பிரதான நுழைவாயிலாகவும், முன்னணிப் பிரிவாகவும் விளங்குகின்றனர்.

குர்ஆனைக் குறை கண்டு, நபித்தோழர்களை காபிர்களாக்கி, முஸ்லிம்களை அசுத்தமானவர்களாக நோக்கி, தமது கூட்டம் மாத்திரமே பரிசுத்த? கர்பலா மண்ணில் இருந்து படைக்கப்பட்டவர்கள் என்ற யூதக் கோட்பாட்டை உடைய இவர்கள் நல்லவர்களான அஹ்லுல் பைத்தினர் பெயரில் வாழும் இஸ்லாத்தின் மிகப் பெரும் எதிரிகள். வழிகேட்டின் ஆணி வேர், பக்க வேர், விழுதுகள் எல்லாமே இவர்கள்தான்.

எனவே, வழிகேட்டின் மொத்த வடிவங்களான இந்த சிந்தனை பற்றி எழுதப்படும் விரிவான இத்தொடரில் நாம் பாத்தினிய்யாக்கள் பற்றியும், முக்கியமான அதன் உப பிரிவுகள் பற்றியும் பேசுகின்றோம்.

"இஸ்லாத்தின் பெயரால் தோன்றிய பிரிவுகள்" என்ற எனது நூல் 2010 ஆம் ஆண்டு சென்னை ஸாஜிதா புத்தக நிலையத்தால் வெளியிடப்பட்டு பரபரப்பாக விற்பனை செய்யப்பட்டது. இலங்கை பல்கலைக் கழக விரிவுரையாளர்கள், டிப்ளோமா மாணவர்கள் என பல

மட்டங்களில் உள்ளவர்கள் அதில் இருந்து பயன் பெற்றனர் என்பதை கேள்விப்பட்ட நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன். (அல்ஹம்து லில்லாஹ்)

இந்நூல் பாத்தினிய்யாக்களின் சமூக விரோத செயற்பாடுகள் என்ற தலைப்பில் அதன் தொடரில் இரண்டாம் பாகமாக வெளியிடப் படுகின்றது.

இந்நூலை வெளியிட அறிவின் கண்களைத் திறந்து எனக்கு பூரண உடல் ஆரோக்கியத்தை தந்த எனது இரட்சகனைப் என்றும் நான் புகழ்கின்றேன். பின்னர் எனக்கு எல்லா நேரங்களிலும் உதவியாக இருக்கும் எனது மனைவி, மக்கள், எனது பல்கலைக்கழக விரிவுரையாளர்கள், நண்பர்கள், எனக்கு சிறுபருவத்தில் மார்க்கக் கல்வியைப் புகட்டிய மதிப்புக்குரிய எனது ஆசிரியர்கள், மற்றும் இலங்கை, சவூதி அரேபிய பல்கலைக்கழக விரிவுரையாளர்கள் அனைவருக்கும் அல்லாஹ்விடம் இரு கரம் ஏந்திப் பிரார்த்தனை செய்கின்றேன்.

குறிப்பாக மதீனா மண்ணில் எனக்கும் இஸ்லாமிய அறிவின் வாசலைக் காண்பித்த எனது மரியாதைக்கும், பாசத்திற்குமுரிய விரிவுரையாளர்கள் மற்றும் இந்நூலை அச்சிட்டு வெளிடக் காரணமாக இருந்தவர்கள் அனைவருக்கும் அல்லாஹ் அருள் செய்ய வேண்டும் என பிரார்த்திக்கின்றேன்.

இது தனிமனித முயற்சி. தவறுகள், கருத்துப் பிழைகள் என்பன ஆங்காங்கு உங்கள் கண்களில் தென்படலாம். அப்படித் தென்படும் போதெல்லாம் என்னைத் திட்டித் தீர்க்காமல், ஆதாரத்துடன் சுட்டிக் காட்டுங்கள் திருத்தம் செய்கின்றேன் இன்ஷா அல்லாஹ்.

அல்லாஹ் நம்மனைவருக்கும் மார்க்கத்தில் நலவை நாடுவானாக!

இவண்,
உங்கள் சகோதரன்,

**எம். ஜே.எம். ரிஸ்வான் மதனி**





# பொருளடக்கம்

# 01 வழிகெட்ட பிரிவுகளின் தோற்றம் தவிர்க்க முடியாத ஒன்றாகும்.

நபி(ﷺ) அவர்களின் காலத்திற்கு பின் ஏற்பட்ட அரசியல் சமய மற்றும் சமூக மாற்றங்களால் வஹியின் வழியில் வாழ்ந்து வந்த ஸஹாபாக்கள் சமூகம் தமக்குள் நிர்வாக ரீதியில் பிரிந்தாலும், அவர்கள் அனைவரும் அஹ்லுஸ்ஸுன்னா, ஜமாதுல் முஸ்லிமீன் என்ற கொள்கையின் வழியிலேயே செயற்பட்டனர்.

நபி(ﷺ) அவர்களின் காலத்திற்கு பிற்பட்ட காலங்களில் தோன்றும் பிரிவுகள் பற்றி எச்சரிக்கை செய்தே நபி(ﷺ) அவர்கள் மரணித்தார்கள்.

நபி (ﷺ) அவர்கள், கவாரிஜ்கள் (இஸ்லாமிய அரசுக்கு எதிரான கிளர்ச்சிக் குழு)வின் உருவாக்கம் நடை பெறுவது பற்றி எச்சரிக்கின்ற போது,

يَخْرُجُونَ عَلَى حِينِ فُرْقَةٍ مِنَ النَّاسِ آيَتُهُمْ رَجُلٌ إِحْدَى يَدَيْهِ مِثْلُ ثَدْيِ الْمَرْأَةِ ، أَوْ مِثْلُ الْبَضْعَةِ تَدَرْدَرُ قَالَ أَبُو سَعِيدٍ أَشْهَدُ لَسَمِعْتُهُ مِنَ النَّبِيِّ صلى الله عليه وسلم وَأَشْهَدُ أَنِّي كُنْتُ مَعَ عَلِيٍّ حِينَ قَاتَلَهُمْ فَالْتُمِسَ فِي الْقَتْلَى فَأُتِيَ بِهِ عَلَى النَّعْتِ الَّذِي نَعَتَ النَّبِيُّ صلى الله عليه وسلم.
( صحيح البخاري / الشاملة/ ٦١٦٣)

‘அவர்கள் முஸ்லிம் மக்கள் பிரிந்திருக்கும் தருணம் பார்த்தே வெளிப் படுவார்கள். அவர்களின் அடையாளம் ஒரு மனிதன். அவனது மார்பகங்களில் ஒன்று பெண்ணின் மார்பு போன்றிருக்கும். அல்லது அங்குமிங்கும் ஓடும் கழலைக்கட்டி போன்றிருக்கும்; என அறிவிக்கின்ற அபூஸயீத் அல்குத்ரி (ﷺ) அவர்கள் ‘அல்லாஹ்வின் மீது சத்தியமாக நான் அப்போது அலி(ﷺ)

அவர்களின் அணியில் இருந்தேன். அவன் கொலை செய்யப்பட்டு. அவனைக் கொண்டு வந்த போது நபி(ﷺ) அவர்கள் விபரித்தவாறே அவன் காணப்பட்டான் என சத்தியம் செய்து கூறினார்கள்.' (புகாரி: 6163)

புகாரியில் இடம் பெறும் மற்றொரு அறிவிப்பில்,

وَأَشْهَدُ أَنَّ عَلِيًّا قَتَلَهُمْ وَأَنَا مَعَهُ جِيءَ بِالرَّجُلِ عَلَى النَّعْتِ الَّذِي نَعَتَهُ النَّبِيُّ صـــلى الله عليه وسلم قَالَ : فَنَزَلَتْ فِيهِ {وَمِنْهُمْ مَنْ يَلْمِزُكَ فِي الصَّدَقَاتِ} .صحيح البخاري.

"அலி(رضي الله عنه) அவர்கள், அவர்களை (கவாரிஜ்களை)க் கொலை செய்தார்கள். அப்பொழுது நான் அவர்களோடுதான் இருந்தேன். குறித்த அந்த மனிதன் கொண்டுவரப்பட்டான். இவன் பெயரில்தான் நபியே! முனாஃபிக்குகளில் சிலர் தர்மங்கள் விடயத்தில் உம்மைக் கிண்டல் செய்கின்றனர் என்ற குர்ஆன் வசனமும் இறங்கியது. அவன் நபி(ﷺ) அவர்கள் விபரித்தவாறு காணப்பட்டான் என சாட்சியம் கூறுகின்றேன் எனக் கூறினார்கள்." (புகாரி).

இவ்வாறு பார்க்கின்ற போது நபி(ﷺ) அவர்களின் அன்புத் தோழர்கள் மார்க்கத்தில் இருந்து வழிதவறியவர்களாவோ, மதம் மாறிய முர்தத்களாகவோ, கவாரிஜ், ஷீஆ, முஃதஸிலா, மற்றும் ஜஹ்மிய்யா போன்ற வழிகேட்டுப் பிரிவுகளை உருவாக்கியவர்களாகவோ, அதன் உறுப்பினர்களாகவோ கூட இருந்ததில்லை என்பது புலனாகும்.

அது மட்டுமின்றி, முஸ்லிம் சமூகத்தில் வழிகெட்ட சிந்தனைகள் விஸ்வரூபம் எடுக்கும் போதெல்லாம் மக்களை அவற்றை விட்டும் எச்சரிப்போராகவும் அவ்வாறான சிந்தனைகளுக்கு நேர் முரணானவர்களாகவுமே வாழ்ந்து வந்தனர்.

அண்ணல் நபி (ﷺ) அவர்களின் பாசறையில் வாழ்ந்த மனிதப் புனிதர்களான அவர்களின் தோழர்கள் இணைவைத்தல், தர்காவழிபாடு, தாயத்து மற்றும் தகடு போன்ற இணைவைப்பில் இருந்தும் கவாரிஜ், முஃதஸிலா, கத்ரிய்யா மற்றும் ஜஹ்மிய்யா சூஃபிய்யா போன்ற பிரிவுகளின் வழிகேடுகள் அற்றவர்களாகவும், தூய்மையில் விம்பத்தை தொட்ட உன்னதமான சமூகமாகவுமே மிளிர்ந்தனர்.

இவ்வாறு நோக்குகின்ற போது நபித்தோழர்களின் இறுதிக் காலம் அல்லது அவர்களுக்கு பிற்பட்ட காலங்களில் இஸ்லாமிய உம்மத்தினுள் காணப்பட்ட சமய, சமூகப் பிரிவுகளைப் பின்வரும் அமைப்பில் நோக்க முடியும்.

(1) மார்க்க அடிப்படைகளுக்கு நேர் முரணான, அகீதாவில் வழி கெட்ட பிரிவுகள்.

இந்தப் பிரிவுகள் மறுமையை நம்பாது, அல்லாஹ்வுக்கு இணை வைத்து (ஷிர்க்) செய்வது, மரணித்தவர்களை அழைத்து பிரார்த்திப்பது போன்ற பெரிய பாவங்களை அனுமதிக்கின்ற பிரிவுகள்.

(2) கவாரிஜ், முஃதஸிலா மற்றும் கத்ரிய்யா போன்ற அஸ்மா ஸிஃபாத் (அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளான) அகீதா அம்சங்களில் பித்அத் சார்ந்த சிந்தனைப் பிரிவுகள்.

(3) ஹதீஸ்களைப் புரிவதிலும் மார்க்க சட்டங்களை அகழ்ந்தெடுப்பதிலும் இஜ்திஹாதின் விளைவாக ஏற்படும் முரண்பாடுகள், சட்டங்கள் தொடர்பாக உருவான மத்ஹபு சார்ந்த பிரிவுகள் என முப்பெரும் பிரிவுகளாக வகுக்க முடியும்.

அவற்றில் மேற்கூறப்பட்ட முதலாம், மற்றும் இரண்டாம் பிரிவுகள் அடிப்படையான அம்சங்களில் வழிகெட்ட பிரிவுகளாக இருப்பதால் அவை அஹ்லுஸ்ஸுன்னா அறிஞர்களால் கடுமையான பித்அத் பிரிவுகளாக அடையாளப்படுத்தப்படுவதோடு, தொடர்ந்தும் விமர்சிக்கப்படும் பிரிவுகளாகவுமே காணப்படுகின்றன.

அகீதா தொடர்பான அம்சங்களில் நபித்தோழர்கள் மத்தியில் கருத்து முரண்பாடு எழவில்லை. மாற்றமாக சில சட்டங்கள் தொடர்பான விவகாரங்களில் அவர்கள் மத்தியில் கருத்து முரண்பாடுகள் எழுந்துள்ளன. அது இயல்பான ஒன்றுதான்.

அவர்களிடம் அது தொடர்பான ஹதீஸ் முன்வைக்கப்படுகின்ற போது அவர்கள் தமது கருத்தை ஒரு புறமாக ஓரம் கட்டி விட்டு அல்லாஹ்வின் தூதரின் ஹதீஸைப் பின்பற்றுவோராக இருந்தனர் என்பதே வரலாறு.

அவ்வாறே இஸ்லாமிய அறிஞர்கள் மத்தியில் சட்டங்கள் தொடர்பாக எழும் மார்க்கச் பிரச்சினைகள், கருத்து முரண்பாடுகள் இஜ்திஹாதின் அடிப்படையில் எழுகின்ற போது அவர்கள் ஹதீஸின் அடிப்படையில் சில போது தீர்ப்புக் கூறுவதில் விடும் தவறை அகீதாவில் விடும் தவறுக்கு ஒப்பானதாக எடுக்க முடியாது.

“இஜ்திஹாத் செய்து சரியான கருத்தை வெளியிட அருள் பாக்கியம் பெற்றவர் இரு கூலிகளையும், அதில் தவறு இழைத்தவர் ஒரு கூலியும் பெறுகின்றார்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.”

(புகாரி)

இந்த ஹதீஸ், சட்டம் தொடர்பான அம்சங்களுடன் தொடர்பான இஜ்திஹாதைக் குறிக்குமே தவிர, மாற்றமாக, அல்லாஹ், அவனது அஸ்மா ஸிஃபாத், ஸிஹ்ர், மண்ணறைக் கேள்வி பதில், சுவர்க்கம், நரகம் போன்ற முடிவு செய்யப்பட்ட அகீதா தொடர்பான விஷயத்தில் ஒருவர் முரண்படுவதைக் குறிக்காது என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.

இவ்வாறான நிலைப்பாட்டில் உள்ளவர்களை அகீதாவின் பிரிவுகளை நோக்குவது போன்று நோக்க முடியாது. எனவே, ஒவ்வொரு சாராரும் மற்ற சாராரின் கருத்தை மதித்து நடக்கும் பக்குவமும், உயர் பண்பும் உடையவர்களாகவும் இருக்க வேண்டும்.

ஒரு மார்க்க விஷயத்தில் கருத்து முரண்பாடு வருகின்ற போது அதற்கு அல்குர்ஆன், ஸஹீஹான ஹதீஸ் தேடப்பட்டு அதன் வழியில் முரண்பாடுகள் தீர்க்கப்படல் வேண்டும்.

பலவீனமான ஆதாரம் உள்ளவர்கள், பலமான ஆதாரம் உள்ளவர்களை அல்லது ஊர்ஜிதமற்ற கருத்தில் இருப்பவர்கள் ஊர்ஜிதமான, பலமான கருத்து உள்ளவர்களைப் பின்பற்றுவதோடு, பிறரை தரம் தாழ்த்தி, மார்க்கத்தை விட்டும் வெளியேறிவர்களைப் போன்று, நாகரிமற்ற முறையில் விமர்சனம் செய்வதை விட்டொழிக்க வேண்டும். அல்லாஹ் நம் அனைவருக்கும் அருள் செய்வானாக!

**எம். ஜே.எம். ரிஸ்வான் மதனி.**



# ௦௨ முக்கிய பிரிவுகளின் பெயர்கள், காரணங்கள்.

**காதியானிய்யா:**

(அஹ்மதிய்யா) என்ற பெயரில் பாகிஸ்தான் பஞ்சாப் மாகாண காதியான் கிராமத்தில் பிறந்த மிர்ஷா குலாம் என்பவனை நபியாக ஏற்று அஹ்மதிய்யா, காதியானிய்யா போன்ற பெயர்களில் வாழும் வழிகெட்ட பிரிவினர். இவர்கள் நவீன முஸைலமாக்கள் என்பதே சரியான வார்த்தைப் பிரயோகமாகும்.

**கவாரிஜ்:**

முஸ்லிம்களில் பாவம் செய்வோரை காபிர்கள், மறுமையில் அவர்கள் நிரந்தர நரகவாதிகள் என வாதிடுவதோடு, நான்காம் கலீஃபா அலி (ரழி) அவர்கள் செய்த சிறிய சாதாரண தவறுக்காக அவர்களின் இஸ்லாமிய ஆட்சிக்கு எதிராக விமர்சனம் முன்வைத்து கிளர்ச்சி செய்து, அவர்களைக் காபிர் என்று தீர்ப்பளித்து வெளியேறிய பிரிவினர்.

**முஃதஸிலா:**

அல்லாஹ்வின் பெயர்களையும், பண்புகளையும் மறுத்துரைப்போர். இதற்காக தம்மை அஹ்லுல் அத்ல் வத்தவ்ஹீத் என அழைத்துக் கொண்டனர். இவர்கள், பெரும் பாவம் செய்த முஸ்லிமை அவன் இஸ்லாத்திலும் இல்லை, குஃப்ரிலும் இல்லை என்ற இரு நிலைகளிலும் இல்லாத வேறு ஒரு நிலையில் வைத்து நோக்குவதோடு மறுமை நாளில் அவர்கள் நிரந்தர நரகவாதிகள் என வாதிடுவோர்.

**ஜஹ்மிய்யா:**

அல்லாஹ்வின் மிக்க அழகிய பெயர்கள், மற்றும் உயர்ந்த பண்புகளை மறுத்து அவற்றைப் பாழடிப்பதோடு அவன் தனது

பெயர்களை ஆரம்பம் முதலே இல்லாதிருந்து பின்னர் புதிதாகப் படைத்துக் கொண்டான் என வாதிடும் அதே வேளை, அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளை அடியோடு மறுத்துரைப்போர்.

**ஜப்ரிய்யா:**

பூமியில் ஓர் அடியான் தனது செயற்பாடுகளைச் செய்ய நிர்பந்திக்கப் பட்டுள்ளான், அவனுக்கு எவ்வித சுதந்திரமும் வழங்கப்படவில்லை, அவன் சுதந்திரம் பறிக்கப்பட்ட ஒருவன். அதனால் அவனை தண்டிக்க முடியாது என்ற கோட்பாட்டை முன்வைப்போர். இந்தக் கோட்பாடு அடியார்களுக்கு அல்லாஹ் வழங்கியுள்ள சுயமான நாட்டத்தை மறுதலிக்கும் கோட்பாடாகும்.

**முர்ஜிஆ:**

ஒரு முஸ்லிமுக்கு –ஈமான்– இறைநம்பிக்கை மாத்திரம் போதுமானது. அமல்கள் அவசியமற்றது, அடியார்கள் தமது உள்ளங்களில் சுமந்துள்ள ஈமான், அவர்களிடம் இருக்கின்ற நிலையில் அவர்கள் செய்கின்ற பாவங்கள் எவையும் அவர்களின் ஈமானில் எவ்வித பாதிப்பையும் உண்டு பண்ண மாட்டாது என்ற கோட்பாட்டை முன்வைப்போர்.

**கத்ரிய்யா:**

அல்லாஹ்வின் விதியை மறுப்போர். அதாவது ஒரு அடியானின் செயல் நடந்த பின்னரே அது பற்றி அல்லாஹ் அறிகின்றான் எனவாதிடுவோர். இதன் மூலம் அவர்கள் அல்லாஹ் வின் ஆதியான (ஆரம்ப) அறிவையும், பதிவேட்டின் பதிவுகளையும் மறைமுகமாக நிராகரிக்கின்றனர். இது ஷீஆக்களிடம் 'அல் பதா' என்ற நம்பிக்கையில் சேர்க்கப்படும்.

**ஷீஆ அல்லது (ராபிழா):**

மரியாதைக்குரிய அஹ்லுல் பைத்தினர் பெயரைப் பயன்படுத்தி, தமது தீய சமய, அரசியல் இலக்குகளை அடைந்து கொள்ள இமாமத் தொடர்பாக புதிய கோட்பாடுகளை உருவாக்கிய யூதன் இப்னு ஸபஃவின் கோட்பாட்டை சரிகண்டு, நபித்தோழர்களைக் காபிர்களாக்கி, அந்தக் கோட்பாடுகளை நம்பாதோரை காபிர்கள் என வாதிடுவோர்.

**முஷப்பிஹா:**

அல்லாஹ்வையும் அவனது பண்புகளையும் அல்லாஹ்வின் படைப்புக்களுக்கு ஒப்பிட்டுப் பேசுவோர்.

**முஅத்திலா:**

அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளை முழுமையாகப் பாழடிப்போர், நிராகரிப்போர்.

**முஃபவ்விழா:**

அல்குர்ஆன், அஸ்ஸுன்னாவில் இடம் பெறுகின்ற அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளின் பொருள்களை ஸலஃபுகள் போன்று வெளிப்படையான பொருள்களில் விளங்கி, விளக்காது அவ்வாறும் இருக்கலாம் எனக் கூறி, அவற்றை அல்லாஹ்விடம் பாரம் சாட்ட வேண்டும் என வாதிடுவோர்.

**அல்வாகிஃபா:**

அல்குர்ஆன், அஸ்ஸுன்னாவில் இடம் பெறுகின்ற அல்லாஹ்வின் பெயர்கள், பண்புகளின் கருத்துக்களை ஸலஃபுகள் போன்று அவற்றின் வெளிப்படையான, சரியான பொருளில் முறை கற்பிக்காது விளங்கி, விளக்காது அது பற்றி எதுவும் கூறாது மௌனம் காப்போர்.

**பாத்தினிய்யா-பாத்தினிக்கள்:**

குர்ஆனுக்கும், ஹதீஸுக்கும் அகம், புறம் என்ற இரு பகுதி சார்ந்த விளக்கம் உண்டு, அவற்றை தமது இமாம்கள் மாத்திரமே அறிவார்கள் என வாதிடுவோர்.

**அல் ஹுலூலிய்யா:**

அல்லாஹ் அனைத்து இடங்களிலும் அனைத்து படைப்புகளிலும் உள்ளான் என்ற சித்தாந்தம்.

**அல்இத்திஹாதிய்யா:**

(எல்லாம் அவனே! அனைத்திலும் அவனே! அவன் அனைத்திலும் கலந்துள்ளான், அவனை அன்றி வேறில்லை என்ற கோட்பாடு)

**சூஃபிய்யா:**

துறவறத்தின் பெயராலும், கஷ்ஃபு எனும் மெய்ஞானத்தின் பெயராலும் வழிகெட்டோர் போன்ற பல வழிகெட்ட பிரிவினர்.

03

# பித்ஆ சிந்தனைப் பிரிவுகளில் முன்னோடிகள்

பித்ஆப் பிரிவுகள் பற்றி விளக்கும் இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி (ரஹ்) அவர்கள்

هؤلاءالفرق الأربع همرؤوس البدعة ( فتح الباري – ابن حجر

(١٣ / ٣٤٤ / المكتبة الشاملة)

“கவாரிஜ், ஜஹ்மிய்யா, (முர்ஜிஆ), முஃதஸிலா, ஷீஆ ஆகிய நான்கு பிரிவுகள் உம்மத்தில் தோன்றிய பிரிவுகளில் தலைமைப் பிரிவுகளாகும்” என இமாம் இப்னு ஹஜர் அவர்கள் சுட்டிக்காட்டியுள்ளார்கள். (இப்னு ஹஜர்– ஃபத்ஹுல் பாரி).

மேற்படி நான்கு பிரிவுகளும் நபித்தோழர்களின் காலத்திலும், வழிகெட்ட ஏனைய பிரிவுகள் அவர்களின் காலத்தையொட்டியும் அடுத்த காலப் பகுதிகளிலும் அவை நான்கில் இருந்தும் தோற்றம் பெற்றுள்ளன என்பதை அவற்றின் விரிவாக்கம் பற்றி வாசிக்கின்ற போது அறிய முடியுமாக இருக்கின்றது. (அல்லாஹ்வே மிக அறிந்தவன்)

“நபி (ﷺ) அவர்களிடம், நபித்தோழர்கள் நன்மைகளைப் பற்றி வினவுவார்கள். நான் தீமைகளைப் பற்றி வினவுவேன். அவைகள் என்னை சூழ்ந்து கொள்ளாமலிருக்க” என ஹுதைபா (رضي الله عنه) அவர்கள் குறிப்பிடுவது போன்று ஒரு முஸ்லிம் வாழும் சமயத்தில் தனது மார்க்கத்திற்கு எதிரான குழுக்கள், சிந்தனைகள், கோட்பாடுகள் பற்றி தெளிவான அறிவில் இருக்க வேண்டும்.



04

# ஷீஆ மத சிந்தனையின் வளர்ச்சிக் கால கட்டங்கள்

கலீஃபா உஸ்மான் பின் அஃப்பான் (رضي الله عنه) அவர்களின் கொலைக்குப் பின்னர் தோன்றிய ஷீஆ மதம் பல்வேறுபட்ட கட்டங்களைக் கடந்து இப்போதுள்ள வழிகேட்டின் உச்ச வளர்ச்சிப் பரிணாமத்தை எட்டியுள்ளது.

இந்த சிந்தனை இப்போது எந்த நிலையில் உள்ளது என்பது பற்றி அறிய அது கடந்து வந்த கட்டங்கள் தொடர்பாக அறிவது அவசியமாகும். அந்தவகையில் பின்வரும் கால கட்டங்களையும் கடந்து அது இந்நிலைக்கு உள்ளாகி இருப்பதை அறியலாம்.

**முதலாவது கால கட்டம்:**

அலி (رضي الله عنه) அவர்களை உஸ்மான் பின் அஃப்பான் (رضي الله عنه) அவர்களை விடச் சிறந்தவராகப் பார்த்தல்.

இவர்கள் உஸ்மான் பின் அஃப்பான் (رضي الله عنه) அவர்கள் கொலை செய்யப்பட்ட பின்னர் வெளியான ஒரு பிரிவாகும். நபி (ﷺ) அவர்களின் மரணத்தின் பின்னர் இவர்களிடம் இந்த உம்மத்தில் சிறந்தவர்கள் கலீஃபாக்கள் இருவரும் என்ற கருத்து முரண்பாடுகள் இருக்க வில்லை. இந்த நிலைப்பாட்டில் கூஃபாவில் வாழ்ந்த தாபியீன்கள் சிலரும் உள்ளடங்குகின்றனர்.

இருப்பினும் இருபெரும் கலீஃபாக்களுக்கும் பின்னால் அலி (رضي الله عنه) அவர்கள் ஆட்சிக்குத் தகுதியானவர்கள் என்ற கருத்தில் அவர்கள் இருந்துள்ளனர். இவ்வாறானவர்களிடம் இருந்து மக்கள் அறிவைக்

கற்பதோடு, அவர்களின் கருத்துக்களைப் பரப்பியும் உள்ளனர்.

இப்படியானவர்களில் الفقيه -ஃபகீஹ் – மார்க்க சட்ட வல்லுனர், المحدِّث – முஹத்திஸ்– ஹதீஸ் கலை வல்லுனர், الزاهد வாழ்வில் துறவறம் பேணுவோர் என்ற பல நிலைகளிலும் உள்ள அறிஞர்களும், சட்ட வல்லுனர்களும், வணக்கசாலிகளும் உள்ளடங்குகின்றனர்.

**இரண்டாவது கால கட்டம்.**

முதலாம் கட்ட பிரிவின் சிந்தனைக்கு மாற்றமான, கலீஃபா உஸ்மான் பின் அஃப்பான்(ரலி) அவர்களின் ஆட்சியை மறுதலிப்பதோடு, அதனை விமர்சனம் செய்கின்ற ஒரு புதிய பிரிவு உருவானது. இவர்கள் “குலாத்து ஷ்ஷீஆ” எல்லை மீறிய ஷீஆக்கள் என அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம் அறிஞர்களால் அடையாளப்படுத்தப்பட்டனர்.

இந்தப் பண்பை உடையவர்கள் அறிவிக்கின்ற செய்திகள் நம்பகமான, சுன்னா சார் அறிஞர்களின் செய்திகளுக்கு ஒத்ததாக இருக்கின்ற அதே வேளை, அவர்கள் தமது கெட்ட பித்அத் சிந்தனைக்கு உரமூட்டுவோராகவோ, அதன் பக்கம் அழைப்போராகவோ இல்லாத நிலையில்தான் அவர்களின் அறிவிப்புக்கள் அங்கீகரிக்கப்படும் என்பது அறிஞர்களின் நிபந்தனையாக இருந்தது.

**மூன்றாவது கால கட்டம்:**

இக்கால கட்டத்தில் நேர்வழி நடந்த கலீஃபாக்கள் மூவரையும் விட அலி(ரலி) அவர்களை சிறந்தவராகக் காணும் ஒரு புதிய பிரிவு தோன்றியது.

இந்தக் கருத்தை அலி(ரலி) அவர்கள் வன்மையாகக் கண்டிப்பவர்களாக இருந்தார்கள். கலீஃபாக்களான அபூபக்கர், உமர்(ரலி) அவர்கள் ஆகியோரை விட தன்னைப் போற்றியோரைக் கைது செய்து, அவர்களுக்கு அவதூறுக்கான கசையடிகளின் எண்ணிக்கை அளவு அவர்களை அடித்து தண்டிக்கும்படி பணித்தார்கள் என்பது வரலாறாகும்.

**நான்காவது கால கட்டம்:**

முந்திய மூன்று கலீஃபாக்களினதும் இமாமத் (ஆட்சி)யை நிராகரிக்கின்ற மற்றொரு புதிய கூட்டம் தோன்றி, அவர்களைக் காபிர்கள் என்றும் அது வாதிட்டது. அத்துடன், இவர்களை அலி(ரலி) அவர்களுக்கு ஆட்சிப் பங்கில் அநீதி இழைத்தோராகவும் சித்திரித்து வதந்திகளைப் பரப்பியது.

அதே பிரிவு, நபி(ஸல்) அவர்களின் மரணத்தின் பின்னால் அலி(ரலி) அவர்களே ஆட்சிக்கான தகுதி உடையவர்கள் என்று வஸிய்யத் செய்யப்பட்டவர் என்றும் வாதிட்டது. அது மட்டுமின்றி, அலி(ரலி) அவர்கள் العصـــــمة –அல்இஸ்மா– பாவத்திற்கு அப்பாற்பட்ட பண்பு நிலையை உடையவர் என்றும் பிரச்சாரம் செய்தது.

இந்தக் குழுவின் நம்பிக்கைப் பிரகாரம் அலி(ரலி) அவர்களுக்கு அநீதி இழைத்த கலீஃபாக்களை பழி தீர்க்க பிற்காலத்தில் ஒருவர் வருவார், அவர்தான் மறைந்து வாழும் தமது மஹ்தி என்றும் நம்பியதோடு, அதை நம்பாத சுன்னா முஸ்லிம்களை அஹ்லுல் பைத்தினரின் எதிரிகள் என்றும் முத்திரை குத்தி அவர்களை பரம எதிரிகளாகப் பார்த்தது. பிற்காலத்தில் இவர்கள் ராபிழா, இமாமிய்யா, ஷீஆ இஸ்னா அஷரிய்யா, இமாமிய்யா போன்ற பல பெயர்களில் அழைக்கப்பட்டனர்.

இவர்கள் பற்றி இமாம் தஹபி (ரஹ்) அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்.

فالشـــيعي الغالي في زمان الســـلف وعُرفهم: هو من تكّلم في عثمان والزبير وطلحة ومعاوية وطائفة ممن حارب عليًا رضي الله عنهم، وتعرَّض لســـبهم ، والغالي في زماننا وعُرفنا : هو الذي يكِّفر هؤلاء الســادة ، ويتبرأ من الشــيخين أيضـــًا، وهذا ضالٌّ معثَّر .اهـ من ميزان الاعتدال (١ : ٦.٥)وانظر تهذيب التهذيب (١ : ٩٤ ) أثر اليهود والنصارى والمجوس في التشيع – (١ / ١٢)

ஸலஃப் அறிஞர்களின் காலத்தில் எல்லை மீறிய ஷீஆக்கள் என்போர்: உஸ்மான், சுபைர், முஆவியா மற்றும் அலி(ரலி) அவர்களுக்கெதிராக போர் தொடுத்தவர்களாக, அவர்கள் பற்றி விமர்சனம் செய்வோராக, அவர்களை ஏசிப் பேசியவர்களாக இருந்தனர். நமது இந்தக் காலத்தில் எல்லை மீறிய ஷீஆ என்பவன்: இந்த நன்மக்களை காஃபிர்களாக்கி, இருபெரும் கலீஃபாக்களையும் கலீஃபாத் தகைமையில் இருந்து விலக்கிக் கொள்பவனாகும். இவன் நிலை தடுமாறிய வழிகேடனாகும்.” (இமாம் தஹபி: மீஸானுல் இஃதிதால்).

# ஷீஆ மத சிந்தனைப் பின்னணி

05

இவர்கள் தமது கீழ்த்தரமான, அசிங்கமான நோக்கங்களை அடைந்து கொள்ள யூதக் கைக்கூலியான அப்துல்லாஹ் பின் ஸபஃ என்பவனின் இமாமத் தொடர்பான சிந்தனையை முழுமையாகப் பிரதிபலித்தனர்.

கண்ணியத்திற்குரிய அஹ்லுல் பைத்தினர் நபியின் தோழர்களான ஸஹாபாக்களால் அநீதி இழைக்கப்பட்டுள்ளனர் என்ற பொய்யான அவனது வதந்திகளை உண்மைப்படுத்திட, புத்தி குறைந்த, எதையும் பற்றி ஆழமாக சிந்திக்கும் ஆற்றல் இல்லாத, பாமர மக்களை நம்ப வைப்பதற்காக ஆயிரக்கணக்கான பொய்களை மார்க்கத்தில் இட்டுக்கட்டினர்.

அலி(ﷺ) அவர்களை வானவர்கள், நபிமார்கள், இறைத்தூதர்களை விடவும் புகழின் உச்சிக்கு கொண்டு சென்றனர். சில போது அலி (ﷺ) ஒரு இறைத்தன்மை உள்ளவர் என்றும் நம்பினர்.

இந்த சிந்தனைப் பிரிவில் இருந்துதான் பாதினிய்யா என்ற தீய குழு ஒன்று வெளியானது.

அவர்கள் அஹ்லுல் பைத்தினரின் பெயரைப் பயன்படுத்தி, நுஸைரிய்யா, அலவிய்யா- அலி(ﷺ) வழி வந்தோர், உபைதிய்யா, பாதிமிய்யா போன்ற பல பெயர்களில் அறிமுகமாகி மார்க்கமற்ற மிருகவாழ்வில் திளைத்திடும் ஒரு கால்நடை சமூகத்தை, ஷாம், எகிப்து மற்றும் ஆபிரிக்கா நாடுகளில் தோற்றுவிப்பதில் வெற்றியும் கண்டனர்.



இவர்கள், கராமித்தா, அலவிய்யா, நுஸைரிய்யா, இஸ்மாயீலிய்யா, துரூஸ் குர்ரமிய்யா, பாபகிய்யா போன்ற பல்வேறு பெயர்களில் பலதரப்பட்ட பிரதேசங்களில் அழைக்கப்பட்ட வழிகெட்ட காஃபிர்களாகும். பாதினிய்யா என்பது இவர்களின் ஒட்டுமொத்தப் பெயராகும்.

இமாம் புகாரி ரஹ் அவர்களின் خلق أفعال العــــــــــباد என்ற பெறுமதியான நூல் ஒன்றும் இருக்கின்றது. அதில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்கள்.

قال أبو عبد الله البخاري في كتابه النفيس خلق أفعال العباد : « ما أبالي صــــليت خلف الجهمي أو الرافضــي أم صليت خلف اليهود والنصــارى ،ولا يســلم عليهم ،ولا يعادون ، ولا يناكحون ،ولا يشهدون ،ولا تؤكل ذبائحهم

“ஜஹ்மிய்யா சிந்தனை வாதி, ஷீஆ மதவாதி, யூத, கிரிஸ்தவர்கள் ஆகியோருக்குப் பின்னால் தொழுவது பற்றி எனக்கென்ன கவலை வேண்டும்? (அவர்கள் பிறமதத்தவராச்சே) அவர்கள் மீது ஸலாம் உரைப்பதும் கூடாது, நோயுற்றால் அவர்களை நலன் விசாரிக்கவும் கூடாது, அவர்களின் பெண்களை மணக்கவும் கூடாது, அவர்களின் சாட்சியங்களை அங்கீகரிக்கவும் கூடாது, அவர்கள் அறுத்ததை உண்ணவும் கூடாது.” (இமாம் புகாரி- கல்கு அஃபஆலில் இபாத்)

முதலாவது கால கட்டங்களில் காணப்பட்ட ஷீஆ என்ற கருத்தோட்டம் பிற்பட்ட காலங்களில் காணமுடியாதுள்ளது. அவை தனிப்பட்ட மத சிந்தனைகளாகவே காணப்படுகின்றன. ஆரம்ப காலங்களில் காணப்பட்ட மிதவாத ஷீஆ சிந்தனை என்பது அலி (ﷺ) அவர்களின் அணி சார்ந்து நிற்பதாகும்.

நவீன கால ஷீஆ சிந்தனை என்பது நபித்தோழர்கள் விஷயத்தில் எல்லை மீறி அவர்களை மதம் மாறியோராகவும் ஆட்சியை அபகரித்தோராகவும் காணப்படும் ஆபத்தான போக்காகும். இவர்களின் சிந்தனைக்கும் ஹி. 35 காலப்பகுதியில் அலி(ﷺ) அவர்களின் அணியினர் என்ற பெயரில் காணப்பட்ட ஷீஆக்களுக்கும்

இடையில் பாரிய வேறுபாடுகள் காணப்படுகின்றன.

மேற்படி இரு சாராருக்கும் இடையில் எவ்விதமான கொள்கை உறவும் இருந்ததில்லை. இவ்வாறான சிந்தனையாளர்களிடமிருந்து அறிஞர்கள் ஹதீஸ்களை அறிவித்ததை ஆதாரமாகக் கொண்டு தற்போதைய ஷீஆக்கள் தமது வழிகேடுகளை நியாயப்படுத்த முடியாது.

நவீன காலத்தில் அஹ்லுல் பைத்தினர் பேரில் உருவான இந்தப் பிரிவினரின் நடவடிக்கைகள் படுபயங்கரமானது. அஹ்லுல் பைத்தினரை நேசிக்கின்றோம் என்ற பெயரில் முஸ்லிம் உலகில் பல அபாண்டங்களைக் கட்டவிழ்த்துவிட்டுள்ளனர். இவர்கள் பொய்கள், அவதூறுகள் கலந்த பரப்புரைகள் செய்து, பல்லாயிரம் பிரதிகள் அச்சிட்டு முஸ்லிம் உம்மத்தை உலகின் நாலாதிசையிலும் திட்டமிட்டு வழிகெடுக்கின்றனர்.

இவர்களுக்கென தனியான ஹதீஸ் நூல்கள், குர்ஆன் விரிவுரைகள், பாடத்திட்டங்கள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள், இணைய தளங்கள் உருவாக்கப்பட்டு அவற்றின் ஊடாகவும் நபித்தோழர்களைத் திட்டித்தீர்க்கின்றனர். இவர்களின் கொள்கை கோட்பாடுகளைப் பற்றி ஆய்வு செய்த புத்தி உள்ள ஒரு முஸ்லிம், இவர்களின் (குஃப்ர்) இறைமறுப்பில் சந்தேகம் கொள்ளமாட்டான்.

யூத, கிறிஸ்தவர்களின் இறைமறுப்பு வெளிப்படையில் தெரிகின்ற ஒன்றாகும், ஆனால் இவர்களோ நிராகரிப்பை மூடிமறைத்து, இஸ்லாத்தின் பெயரைப் பயன்படுத்தி வாழ்பவர்கள். அதனால் இஸ்லாத்தின் பகிரங்க எதிரிகளை விடவும் இவர்கள் ஆபத்தான ஒரு சமூகத்தவர்கள்.

யூத, கிறிஸ்தவர்களுக்கு நரகம் என்று பிரஸ்தாபிக்கின்ற அல்குர்ஆன் இஸ்லாமிய சமுதாயப் பச்சோந்திகளான இந்தக் கயவர்களுக்கு அதன் அடித்தட்டைச் சொந்தமாக்குவதும் இதற்காகவே!

ஷீஆக்களை நான்கு மத்ஹபுடன் இணைத்து ஐந்தாவது மத்ஹபாகக் கணிக்கலாம் என்பதும், சட்டம் சார்ந்த அம்சங்களில் மாத்திரமே அவர்கள் வேறுபடுகின்றார்கள் என்பதும், இஸ்லாம் பற்றிய ஆழமான அறிவில்லாதவர்களின் உளரல்களாகும். அவர்கள் பற்றிய அடிமட்ட அறிவில்லாதவனே இப்படிப் பிரச்சாரம் செய்வான்.

ஷீஆ மதத்தின் நம்பிக்கை சார்ந்த அடிப்படைக் கோட்பாடுகள், மற்றும் அதன் கிளை அம்சங்கள் என்ற இரண்டிலும் பாரிய அளவு வேறுபடுகின்ற ஒரு புதிய மதமே ஷீஆ ஆகும்.

இவ்வாறான கருத்துக்களை வெளியிடுவோர் ஷீஆக்களின் உண்மையான நிலையை அறியாத ஒருவனாகவே இருக்க முடியும். எனவே, இவ்வாறான விபரமற்ற கருத்துக்களைப் பதிவு செய்வோரை நாம் புறக்கணிக்க வேண்டும்.

அஹ்லுல்பைத்தினர் மீது நேசம் பாராட்டுதல் என்ற பெயரில் யூதன் இப்னு ஸஃபாவால் கொண்டுவரப்பட்ட ஷீஆ மத கிரந்தங்களில் காணப்படும் அபத்தங்கள், உலக முஸ்லிம்கள் பேசுகின்ற மொழியில் குறிப்பாக அவர்களின் கலிமா ஷஹாதா மாத்திரம் வெளிக் கொணரப்படுமாக இருந்தால் சாதாரண பொதுமக்களான சுன்னா முஸ்லிம்களே இதற்கு தீர்ப்பாளிகளாக மாறுவார்கள். இன்ஷா அல்லாஹ்

الخلاصة في بيان رأي شيخ الإسلام ابن تيمية في الرافضـــــــة (جمع وتحقيق \ علي بن نايف الشحود )

(என்ற நூல் ஆசிரியரின் ஷீஆக்கள் பற்றிய சுருக்கப் பார்வை தொடர்பான தொடரைத் தழுவி எழுதப்பட்டது).

**உஸ்மானிய கிலா:பத் வீழ்த்தப்படுதல்:**

துருக்கி நாட்டின் இஸ்தன்பூல் நகரைத் தலைமையகமாகக் கொண்டு இயங்கிய உஸ்மானிய கிலாஃபத்தை வீழ்த்துவதற்காக துருக்கியர்களால் (டோன்மா) மதம் மாறியோர் என அழைக்கப்பட்ட யூதர்கள், முஸ்லிம் வேடதாரி முஸ்தஃபா கமால் என்பவனை திரைமறைவில் உருவாக்கி, குறிப்பிட்ட சில ஆண்டுகளில் இஸ்லாமிய கிலாஃபத்திற்கு மூடுவிழாக் கண்டனர்.

உஸ்மானியர் ஆட்சிக்கு எதிராக திரைமறைவில் களம் இறங்கிய நயவஞ்சகர்கள் சமயமும் அரசியலும் வெவ்வேறானது என்றும், அரபு முஸ்லிம்கள், துருக்கி முஸ்லிம்கள் என்ற தேசிய வாத சிந்தனையையும் துருக்கி மக்களின் மனங்களில் முதலில் விதைத்தனர்.

இந்த வாதத்தினால் இதுவரை காலமும் அரசியலும் சமயமும் ஒன்று என்று ஒருங்கிணைந்து பயணித்த இந்த உம்மத்தின் தனித்துவமான அடையாளங்கள், அதன் உள் எதிரிகளாலேயே திட்டமிட்டு அழிக்கப்பட்டன. அதற்காக இலங்கை அரசியல் யாப்பை குர்ஆனின் யாப்பாக போதனை செய்யக் கூடாது.

இஸ்லாமிய உம்மத்தில் வழிகேட்டை விதைத்தவர்கள், நபி (ﷺ) அவர்களின் குடும்பத்தினர் மீது நேசத்தைப் பொழிபவர்களாக தம்மைக் வெளிப்படையில் காட்டியே மக்களை வழிகெடுத்தனர் என்பதற்கு ஷீஆ, பாதினிய்யா, கராமித்தா, நுஸைரிய்யா, அலவிய்யா, இஸ்மாயீலிய்யா, சூஃபிய்யா போன்ற இஸ்லாத்தில் வழிகெட்ட பிரிவுகள் நல்ல உதாரணங்களாகும்.

அதே நேரம், இஸ்லாமிய அரசை வீழ்த்திட மறைமுகமாகத் திட்டம் தீட்டியவர்கள் தேசியவாதத்தை விதைப்பதன் ஊடாகவும், அரசியலும் சமயமும் வெவ்வேறான இரு துருவங்களில் பயணிக்க வேண்டியவை போன்ற மொட்டைக் காரணங்களை முன்வைத்தே இஸ்லாமிய அரசுக்கு எதிரான கருத்துக்களை மக்கள் மனங்களில் விதைத்து காலப் போக்கில் அவற்றை வீழ்த்தினர். இதற்கு உஸ்மானிய கிலாஃபத்தில் தோற்றம் பெற்ற தேசியவாத சிந்தனையைக் குறிப்பிட முடியும்.

இந்த வரலாற்றுப் பின்னணிகள் இஸ்லாத்தின் விரோதிகள் எப்படி யெப்படியெல்லாம் இஸ்லாத்தைக் களையெடுக்க களமிறங்கி உள்ளனர் என்பதை நிச்சயம் தெளிவாக்கும். அது மட்டுமின்றி, மார்க்கத்தின் ஆதாரங்களின் அடிப்படையில் வாழ்வோர் யார்? வழிபிறழ்ந்தோர் யார்? என்பவையைக் கண்டறிய இது போன்ற ஆய்வுகள் வாய்ப்பாக அமையும் என நம்புகின்றோம். “இன்ஷா அல்லாஹ்”.



06

# பாத்தினிய்யா உருவாக்கத்தில் யூதர்களின் பங்கு.

முஸ்லிம் சமூகத்தினுள் பிரிவினைகளைத் தோற்றுவித்து சமூகத்தைத் துண்டாடுவதில் யூதர்களுக்கு பாரிய பங்குண்டு என்பதை இஸ்லாத்தின் பெயரால் தோன்றிய பிரிவுகள் நமக்குத் தெளிவாகச் சொல்கின்றன.

அஹ்லுல் பைத்தினர் மீது நேசம் கொள்ளுதல், நபி(ﷺ) அவர்களின் பின் ஆட்சிக்குத் தகுதி அலி(رضي الله عنه) அவர்களுக்கே உரியது, அது நபி(ﷺ) அவர்களின் வாயினால் வஸிய்யத் செய்யப்பட்ட ஒன்று, அந்தக் கட்டளையை நபித்தோழர்கள், குறிப்பாக கலீஃபாக்கள் மீறி விட்டனர் போன்ற கோட்பாடுகளை, இஸ்லாத்தை வெளிப்படையாக ஏற்ற, எமன் நாட்டைச் சேர்ந்த யூதன் “இப்னு ஸபஃ” என்பவனே முதலாவதாக வெளிப்படுத்தினான்.

அவனது போதனைகளை நம்பி, முஸ்லிம் உம்மத்தில் இருந்து பிரிந்தவர்கள் ஷீஆக்கள் என்ற பெயரில் தமது கோட்பாடுகளைப் பரப்பத் தொடங்கினர்.

பிற்காலத்தில் ஷீஆக்களில் இருந்து பிரிந்த முக்கிய பிரிவான இஸ்மாயீலிய்யா என்ற பிரிவினர், யூதன் உபைதுல்லாஹ் பின் மைமூன் பின் தைஸனான் அல்கத்தாஹ் என்பவனது சூழ்ச்சிக்கு பலியாகிய அவனது சிந்தனைக்குள் புதையுண்டனர். இது முஸ்லிம் சமூகத்தின் மீது மேற்கொள்ளப்பட்ட மற்றொரு யூத சூழ்ச்சியாகும்.

உபைதுல்லாஹ் தன்னை அஹ்லுல் பைத்தினரின்

பரம்பரையில் வந்த ஒருவனாக அழைத்துக் கொண்டு தனது நாஸ்திக சிந்தனைகளை அந்தப் பெயரிலேயே முன்னெடுத்து அதில் வெற்றியும் கண்டான். அவனது பரம்பரையினர்தான் பிற்காலத்தில் எகிப்தை ஆட்சி செய்தவர்கள் உபைதிய் யாக்கள், பாத்திமிய்யாக்கள் என்ற பெயரில் வந்த ஆட்சியாளர்கள் அழைக்கப்பட்டனர்.

இவர்கள் தமது கோட்பாடுகளை வெளி உலகுக்குக் காட்ட முடியாத நிர்க்கதியான ஒரு நிலையில் இருந்தனர். அப்பாஸியர் ஆட்சி மந்த கதியை அடைந்து வீழ்ச்சியை நோக்கிப் பயணித்த போது, அதனை ஒரு சந்தர்ப்பமாகப் பயன்படுத்தி தமது திட்டங்களை முன்னெடுத்தனர்.

இப்பிரிவினர் அல்லாஹ்வும், அவனது தூதரும் வழிகாட்டாத, இதுவரை காலமும் முஸ்லிம் உலகம் அறிந்திடாத பல புதிய அதிசயங்களை மார்க்கத்தின் பெயரால் அவிழ்த்தனர்.

புத்தம்புதிய பல கோட்பாடுகளைக் கண்டுபிடித்து அதற்காக ஒன்றும் அறியாத பாமர மக்களை இரையாக்கினர். தொடக்க காலத்தில் அவை மக்களுக்கு புதுமையானவையாகத் தோற்றமளித்தாலும் காலப்போக்கில் அவையே சமூக அரச அங்கீகாரம் பெற்ற செயற்பாடுகளாக மாறின என்பதே உண்மையாகும்.

இருப்பினும் அவர்களின் செயற்பாடுகள் பொதுவாக மூடுமந்திரமாக இருந்ததனாலும், அவர்களின் விளக்கங்கள் அந்தரங்க, வெளிப்படை அர்த்தங்களைக் கொண்டிருந்ததனாலும், அவர்களில் உள்ள ஒட்டு மொத்த பிரிவினரும் அல் பாத்தினிய்யா என்ற மொத்தப் பெயரில் அழைக்கப்பட்டனர். இருப்பினும், அவர்கள் பல பிரிவுகளைக் கொண்டவர்கள் என்பதே உண்மையாகும்.

07

# பாத்தினிய்யா அறிமுகம் மற்றும் தோற்றப் பின்னணி.

**பாத்தினிய்யாக்கள் அறிமுகம்:**

**பொருள் விளக்கம்:**

“(B)பத்ன்” என்பது மத்தி, அகம், உள்ளகம், உள்ளரங்கம், மறைந்திருப்பது போன்ற கருத்துக்களைத் தரும்.

**அகீதா நோக்கில்:**

ஷீஆ வேஷத்தின் ஊடாக அஹ்லுல் பைத்தினரை நேசித்தல் என்ற கோஷத்தோடு இறைமறுப்பை தமது மனங்களிலும், நடத்தை களிலும் தேக்கி வைத்து, இறை நிராகரிப்பையும், சமூகச் சீரழிவையும் மறைமுகமான கொள்கையாகக் கொண்ட, வழிகேட்டில் முந்திய ஒவ்வொருபிரிவும் பாத்தினிய்யா என்று அழைக்கப்படுகின்றது.

(இணையம்: அத்துரருஸ் ஸனிய்யா)

**பாத்தினிய்யா தோற்றப் பின்னணி:**

الباطنية: دعوة ظهرت أولا في زمان المأمون، وانتشـرت في زمان المعتصـم .وذكر أصحاب التواريخ أن الذين وضـعوا أسـاس دين الباطنية كانوا من أولاد المجوس،و كانوا مائلين إلى دين أسلافهم، ولم يجسـروا على إظهاره خوفا من سيوف المسـلمين، ومنهم: ميمون بن ديصـان المعروف بالقداح، ومحمد بن الحسـين الملقب بدندان، ثم حمدان قرمط وأبو سعيد الجنابي (( انظر " الفرق بين الفرق ": سير أعلام النبلاء. تح الأرنؤوط – (٧ / ١٨٣ ))

பாத்தினிய்யாக்கள் எனப்படுவோர் ஆரம்பமாக ஏழாவது அப்பாஸிய கலீஃபா மஃமூனின் காலத்தில் தோற்றம் பெற்றனர்.

பின்னர் எட்டாவது அப்பாஸிய கலீஃபா அல்முஃதஸிம் என்ற ஆட்சியாளரின் காலத்தில் பரவலாகக் காணப்பட்டனர்.

பாத்தினிய்யாக்களின் சமயக் கோட்பாட்டை நிறுவியவர்கள் நெருப்பு வணங்கிகளான "மஜூஸ்கள்" என சில வரலாற்று ஆய்வாளர்கள் குறிப்பிட்டள்ளனர். இவர்கள் தமது மூதாதையர்களான நெருப்பு வணங்கிகளின் வழியில் ஈர்க்கப்பட்டவர்களாக விளங்கினர்.

நெருப்பு வணங்கிகளான பாரசீகர்கள் முஸ்லிம் மன்னர்களின் வாள்களுக்கு முகம் கொடுப்பதற்கு அஞ்சியே தமது கொள்கையை வெளிக்காட்டாது மறைத்துக் கொண்டனர். இவர்களில் யூத மதகுருவும் பல்சமய சிந்தனையாளருமான மைமூன் அல் கத்தாஹ் என்று அறியப்பட்ட மைமூன் பின் தைஸான் என்பவனோடு இணைத்து, தன்தான் என்ற புனைப் பெயரில் அறிமுகமான முஹம்மத் பின் அல் ஹுஸைன் என்ற தத்துவ மேதை, இறை மறுப்பாளனாகிய ஹம்தான் கர்மத், மற்றும் அபூஸயீத் அல்ஜனாபி போன்றவர்கள் முக்கியமானவர்கள். (ஸியரின் அடிக்குறிப்பில் இருந்து)

பாத்தினிய்யா எனப்படும் இஸ்மாயீலிய்யா பிரிவினர் ஒரு இரகசிய இயக்கமாகும். அவர்கள் ஷீஆக்களிலும் பார்க்க எல்லை மீறிய, அவர்களில் இருந்து பிரிந்த மற்றொரு வழிகெட்ட பிரிவாகும். அதன் ஸ்தாபகராக மைமூன் அல் கத்தாஹ் என்ற யூதன் இடம்பெறுகின்றான்.

ஷாம் மற்றும் பாரஸீக ஈரானில் தோன்றிய இந்தப் பிரிவினர் திரைமறைவில் முஸ்லிம் அரசுகளுக்கு எதிராக கிளர்ச்சிகளை நியாயப்படுத்தும் சிந்தனையை முன் நிறுத்தி ஆரம்பத்தில் தமது நடவடிக்கைகளை இரகசியமாக முன்னெடுத்தனர்.

தமது வழிகெட்ட சித்தாந்தத்தினை யூதப் பரம்பரையில் வந்த மைமூன் பின் தைஸான், அல்கத்தாஹ், மற்றும் அவனது மகன் அப்துல்லாஹ் அல்லது உபைதுல்லாஹ் மைமூன் அல்கத்தாஹ் என்பவர்கள் வாயிலாகவும், எகிப்தில் உபைதிய்யாக்களால் நிறுவப்பட்ட தாருல் ஹிக்மா, மற்றும் அல்பாதிமிய்யா போன்ற கல்விக் கூடங்களில் இருந்தும், கராமித்தாக்கள் போன்றோரிடம் இருந்தும் பெற்றுக் கொண்டனர்.

எகிப்தில் பாத்திமிய்யாக்களின் ஆட்சி வீழ்ச்சியடைந்து, அதன் செல்வாக்கை இழக்க ஆரம்பித்த போது, மறைந்து காணப்பட்ட இந்தப் பிரிவினரின் சிந்தனைகள் முஸ்லிம் உலகில் வெளிப்படத் தொடங்கின என்பது வரலாற்று ஆய்வாளர்களின் கருத்தாகும்.

நல்லவர்களான அஹ்லுல் பைத்தினர் (நபியின் குடும்பத்தினர்) பெயரில் நெருப்பு வணங்கிகளின் பாரம்பரிய சிந்தனைகளையும், கொள்கை கோட்பாடுகளையும் முழுமையாகப் பிரதிபலிக்கின்ற இந்தப் பிரிவினரின் தொடக்கம் நெருப்பு வணங்கிகளின் தேசமான பாரஸீகம் என்பதுதான் உண்மை.

இஸ்லாமிய அடிப்படைகளை சிதைத்து, இஸ்லாமிய ஆட்சியை ஆட்டங்காணச் செய்யும் நோக்கில் பாமரர்களையும், கல்வி அறிவற்றவர்களையும் பயன்படுத்திப் பல இரகசியக் குழுக்களை இவர்கள் முஸ்லிம் பிரதேசங்களில் உருவாக்கி, தமது நகர்வுகளை முன்னெடுத்து வெற்றி கண்டனர். இன்றும் தனித்த ஒரு குழுவாகவே இயங்கி வருகின்றனர்.

08

# இஸ்மாயிலிய்யா சிந்தனை முகாமின் ஒருங்கிணைப்பாளர்

ஷீஆக்களின் ஆறாவது இமாமாகிய ஜஃபர் ஸாதிக் (ரழி) அவர்களின் மரணத்தின் பின்னால் இமாமத் தொடர்பான கருத்து முரண்பாட்டில் முஹம்மத் பின் இஸ்மாயீல் என்பவருக்கு இமாமத் பதவிக்கான தகுதியை வாதிட்டதன் மூலம் இப்பிரிவினர் இஸ்மாயீலிய்யா என அழைக்கப்படுகின்றனர்.

இஸ்மாயீலிய்யாப் பிரிவின் சிந்தனை முகாமின் ஒருங்கிணைப்பாளராகவும் அதன் நிகழ்ச்சி நிரலின் பிரதான சூத்திரதாரியாகவும் அஸ்ஸப்ஃபாஹ்" என அறியப்படும் الحسن الصباح ஹஸன் அஸ்ஸப்பாஹ் என்பவன் அறிமுகப்படுத்தப்படுகின்றான்.

இவன் ஷாம் (இப்போதைய சிரியா, ஜோர்டான்), பாரஸீகம், ஈராக் ஆகிய நாடுகளின், நகர, மற்றும் கிராமப் புறங்களில் இதற்கான பல கிளைகளை இரகசியமாக நிறுவினான். திறந்த சிந்தனைவாதி என அறியப்பட்ட இவன், தனது கொள்கைகளை சகல மதங்களிலும் இருந்தும் பெற்றே இந்தக் கோட்பாட்டை நிறுவினான்.

தர்க்கவியல், இரசானவியல் மற்றும் சூனியம் போன்ற கலைகளைப் படித்த இவன், பொதுமக்களை தன் பக்கம் ஈர்ப்பதற்காக தன்னை ஒரு பூசாரி போன்ற நிலையில் ஆக்கிக் கொண்டான்.

அக்கால மன்னர்களில் ஒருவான நிளாமுல் முல்க் என்பவரோடு தொடர்பு கொண்டு சுல்தான் (மன்னர்) மலிக்ஷாஹ் அவர்களுக்கு பணிபுரிய தனக்கு சந்தர்ப்பம் வழங்கும்படி கோரி, அதன் மூலம் தனது மதிப்பை மக்கள் மனங்களில் பதியவைத்துக் கொண்டான். காலப் போக்கில் மன்னருக்கு மோசடி செய்யத் தொடங்கினான். தனது நம்பிக்கைக் கோட்பாடாகிய இஸ்மாயீலிய்யாக் கொள்கையை மக்கள் மத்தியில் இரகசியமாகப் பரப்ப முயற்சித்தான்.

இது பற்றி அறிந்த மன்னர் கோபமுற்று இவன் ஒரு நாஸ்தீகப் பேர்வழி என அடையாளப்படுத்தி, அவனைக் கைது செய்ய முயற்சித்த போது, அவன் தப்பித்து நாட்டை விட்டும் ஓடினான். பின்னர் அவன் பல பிரதேசங்களில் சுற்றித் திரிந்தான்.

இறுதியாக எகிப்திக்குச் சென்றடைந்த இவனுக்கு பாதிமிய்யா கலீஃபாவான நஸார் பின் அல்முஸ்தன்ஸிர் என்பவரால் அமோக வரவேற்பளிக்கப்பட்டது.

கலீபா இவனிடம் அவனது இஸ்மாயீலியாப் பிரிவினான இமாமை ஏற்றுக் கொள்வதற்காக அதன் பக்கம் மக்களை ஆர்வமூட்டி அழைக்கும்படி வேண்டிக் கொண்டார். எகிப்தில் இருந்த தாருல் ஹிக்மா அல்பாதிமிய்யா கல்லூரி விரிவுரையாளர்களிடம் இவன் கல்வி கற்கவும், பாதிமிய்யாப் பிரிவின் மார்க்க விடயங்கள் தொடர்பாக தேடவும் அவர் அவனுக்கு வழி செய்து கொடுத்தார்.

அங்கு கல்விப் பயணத்தை முடித்துக் கொண்ட ஹஸன் அஸ்ஸப்பாஹ் ஷாம் தேசத்திற்கு மீண்டான். அங்கு புதிய அமைப்பொன்றை ஒழுங்கமைத்தான். பின்னர் ஈராக், அரபுநாடுகள், பாரஸீகம் ஆகிய பிரதேசங்களுக்குப் பயணம் மேற்கொண்டு அங்கெல்லாம் தனது போதனைகளைப் பரப்பினான்.

அஹ்லுல் பைத்தினரின் பரம்பரையில் வந்த இஸ்மாயீல் பின் ஜஃபர் அவர்களைத் தலைமை இமாமாக (தலைவராக) ஏற்று அவரின் நெறியில் பயணிக்க மக்களுக்கு பகிரங்க அழைப்புக் கொடுத்தான். இதற்கு அறிவில்லாத பாமரர்களை பலிக்கடாக்களாகினார்கள். (பார்க்க : உசூல் வதாரீஹீல் ஃபிரக்)


- أصول وتاريخ الفرق الإسلامية \ مصطفى بن محمد بن مصطفى
- أصول الإسماعيلية \ الدكتور سليمان السلومي
- الإنحراف العقدي في أدب الحداثة \ الدكتور سعيد الغامدي

# பாத்தினிய்யா சித்தாந்தம் தொடர்பான அறிஞர்களின் கருத்துக்கள்

இந்த சிந்தனையானது பாரஸீக நெருப்பு வணங்கிகளின் நடத்தைகள் மற்றும் கிரேக்கத் தத்துவங்கள் போன்றவற்றில் இருந்து உம்மத்தின் சாபக்கேடாக வந்து சேர்ந்த மார்க்க விரோத செயல்கள் அனைத்தினதும் கலவைக் கொள்கையாகும். இது தொடர்பாக இங்கு முஸ்லிம் அறிஞர்கள் சிலரின் கருத்துக்கள் தரப்படுகின்றன. இமாம் தபரி (ரஹ்) அவர்கள்:

وأما تســــميتهم بالباطنية فانهم ادعوا ان لظواهر القرآن والأخبار بواطن تجري مجرى اللب من القشــــر وأنها توهم الأغبياء صورا على الفطناء رموزا واشارات إلى حقائق خفية وأن من تقاعد عن العرض على الخفايا والبواطن متعثر ومن ارتقى الى علم الباطن انحط عنه التكلف واســتراح من أعيائه (( المنتظم في تاريخ الملوك والأمم للإمام الطبري – (٥ / ١١١ )

குர்ஆன், ஹதீஸ்களில் வரும் நேரடியான வார்த்தைகளுக்கு, நெல், மற்றும் கோதுமையில் காணப்படும் உமி, தொலி போன்ற உள், வெளிப் பொருள் காணப்படுவது போன்று குர்ஆனுக்கும் காணப்படும் என்பதாக இவர்கள் வாதிடுவதன் காரணமாக பாத்தினிய்யா என்று பெயர் சூட்டப்பட்டனர். (இமாம் தபரி: அல்முன்தளம்)

இக்கோட்பாடு பற்றி அறியாத மற்றவர்களுக்கு வெளிப்படையில் மயக்கமான ஒரு தோற்றப்பாட்டைக் கொடுத்தாலும், அவர்களின் கோட்பாடுகள் விவேகிகளுக்கு, மறைந்திருக்கும் யதார்த்தமான பல உண்மைகளை அவை அடையாளங்களாக, சமிக்ஞைக் குறியீடு களாக, அவர்களின் ஞானத்தில் (ஊற்றாகப்) புலப்படும் பல உண்மைகளை வெளிப்படுத்தும்.

மறைவானவைகள் தொடர்பான அம்சங்கள் பற்றி தெளிவில்லாதிருப்பவன், இக்கோட்பாட்டு இரகசியங்களால் நிலை நடுமாறுவான். யார் ஒருவன் அகவிளக்க நிலையை அடைந்து விட்டானோ, நிச்சயமாக அவனை விட்டும் மார்க்க கட்டுப்பாடுகள் தொடர்பான சட்டங்கள் நீங்கி, அதன் பாரங்களில் இருந்தும் அவன் விலகி, நிம்மதிப் பெருமூச்சு அடைகின்றான் என விளக்கம் தருகின்றனர். (அதாவது நன்மை தீமைகளை எடுத்து நடக்கவோ, ஹராம், ஹலால் பேணி நடக்கவோ வேண்டிய அவசியம் இல்லை என்பதாகும்) (இமாம் தபரி அல்முன்தளம்)

**இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள்,**

இது தொடர்பாக இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் பின்வரும் கருத்துக்களைப் பதிவு செய்துள்ளார்கள்.

فَإِنَّ الْبارِعِ مِنْهُمْ فِي الْعِلْمِ وَالْمَعْرِفَةِ يَزُولُ عَنْهُ عِنْدَهُمْ الْأَمْرُ وَالنَّهْيُ وَتُبَاحُ لَهُ الْمَحْظُورَاتُ وَتَسْقُطُ عَنْهُ الْوَاجِبَاتُ فَتَظْهَرُ أَضْغَانُهُمْ وَتَنْكَشِفُ أَسْرَارُهُمْ وَيَعْرِفُ عُمُومُ النَّاسِ حَقِيقَةَ دِينِهِمْ الْبَاطِنِ حَتَّى سَمَّوْهُمْ بَاطِنِيَّةً ؛ لِإِبْطَانِهِمْ خِلَافَ مَا يُظْهِرُونَ . ((أسباب رفع العقوبة لشيخ الإسلام ابن تيمية – (١ / ٥٩))

பாத்தினிய்யா சிந்தனையின் படி, அறிவிலும் பாதினிய்யா ஞானத்திலும் தேர்ச்சிபெறுபவன் மீது இறை கட்டளை மற்றும் தடைகள் நீங்கிவிடும். ஹராமாக்கப்பட்டவைகள் அவனுக்கு அனுமதிக்கப்படும். கடமைகள் அவனை விட்டும் நீக்கிவிடும்.

இப்படிப்பட்டவர்களின் மனக் குரோதங்களும், பல நாள் இரகசியங்களும் ஒரு பொழுது வெளிப்படும். அப்போது மக்கள் இவர்களின் மார்க்கத்தின் தீய சித்தாந்தம் பற்றி நன்கு அறிந்து கொள்வர்.

இவர்கள், தாம் வெளிப்படையாக செய்கின்றவற்றிற்கு மாற்றமாக பல அம்சங்களை மறைத்து வைத்துக்கொள்வதால் மக்களிடம் உள்ளொன்றும் புறம் ஒன்றும் பேசி ஒன்றை மறைத்து, மற்றொன்றை வெளிப்படுத்தி வேடம் தரித்து, நடிப்பதற்காக பாதினிய்யா என்ற பெயரில் அழைக்கப்பட்டனர். (இமாம் இப்னு தைமிய்யா)

**இமாம் ஷம்ஸுத்தீன் அத்தஹபி (ரஹ்) அவர்கள்,**

இமாம் தஹபி (ரஹ்) பாத்தினிய்யாக்களை வகைப்படுத்து

கின்ற போது பின்வரும் விளக்கத்தை குறிப்பிடுகின்றார்கள்.

وأما الباطنّية، فقالت: لظواهر الآيات والأحاديث واطن تجري مجرى الُّلب من القشـــــر. واحتجّوا لكلّ آيةٍ ظهر وبطن. وانّ من وقف على علم الباطن ســـــقطت عنه التّكاليف ((تاريخ الإسلام للإمام الذهبي – (٢٠ / ٢٣٤))

பாத்தினிய்யாக்கள் என்போர் அல்குர்ஆன் வசனங்கள், மற்றும் ஹதீஸ்களுக்கு அந்தரங்க, வெளிப்படைப் பொருள் சார்ந்த பகுதி உண்டு என்றும், அவை ஒரு கனியின் மேல் காணப்படும் தொலியையும், அதன் உட்பகுதியில் காணப்படும் சதைப் பகுதியையும் போன்றது என்றும் கூறி ஷரீஆ சார்ந்த சான்றுகளான ஒவ்வொரு வசனமும் உள் மற்றும் மறைந்த பகுதி என இரு பகுதிகளைக் கொண்டிருக்கும் என புதத் தத்துவம் கூறுவதால் அவர்கள் பாத்தினிய்யா என்ற பெயர் கொண்டு அழைக்கப்படுகின்றனர்.

யார் அந்த மறைவான பகுதியை அடைந்து விட்டாரோ அவரை விட்டும் மார்க்க கட்டளைகள் விழுந்து விடும். (மார்க்கப் படி நடக்க வேண்டிய அவசியம் இல்லை) என்ற வாதத்தை உடையோரே பாத்தினிய்யாக்கள் என அழைக்கப்படுவர். (அஸ்ஸஹபி- தாரீகுல் இஸ்லாம்)

**இமாம் அல்காழி அபூ யஃலா அல்ஹன்பலி,**

தபகாதுல் ஹனாபிலா என்ற பிரசித்த பெற்ற நூலின் ஆசிரியரான இமாம் அபூ யஃலா (ரஹ்) அவர்கள் பின்வருமாறு தீர்ப்பு வழங்கி இருக்கின்றார்கள்.

وكل علم ادعاه العباد من علم الباطن لم يوجد في الكتاب ولا في السنة فهو بدعة وضلالة لا ينبغي لأحد أن يعمل به ولا يدعو إليه ((طبقات الحنابلة – (٢ / ٣٤))\ أبو الحسين ابن أبي يعلى ، محمد بن محمد (المتوفى : ٥٢٦هـ )

குர்ஆனிலோ நபிவழியிலோ இடம்பெறாத மறைபொருள் தொடர்பாக அடியார்கள் வாதிடும் ஒவ்வொரு அறிவும் பித்அத்தும் வழிகேடுமாகும். அதனைக் கொண்டு யாரும் அமுல் நடப்பதோ, அல்லது மக்களை அதன் பக்கம் அழைப்பதோ கூடாத செயலாகும். (துபகாதுல் ஹனாபிலா).

# ⅮⅮ

# பெயருக்கான காரணம் மற்றும் மேற்படி சிந்தனையின் எதிர் விளைவுகள்

**பெயருக்கான காரணம்:**

பொதுமக்கள் குர்ஆனின் வெளிப்படையான பொருள்களைத்தான் அறிவார்கள். ஆனால் அதற்கு (ظاهــــر \ باطن) உள்ரங்கமான பொருள், வெளிரங்கமான பொருள் என இரு பொருள்கள் உண்டு. அது பற்றிய அறிவு தமது இமாம்களுக்கே உண்டு. மற்றவர்களுக்கு அது வழங்கப்படவில்லை.

உள்ரங்கமான, மறைவான பொருளை தமது இமாம்கள் தவிர வேறு யாரும் அறியமாட்டார்கள் என்ற நம்பிக்கை. (அது பற்றிய விபரம் பின்னர் தரப்படுகின்றது.) (பார்க்க: ஷஹ்ருஸ்தானி. அல்மிலல், வந்நிஹல், (இணையம்: அத்துரருஸ் ஸனிய்யா) மேற்படி நம்பிக்கையை பிரதிபலிப்பதனால் பாத்தினிய்யா என அழைக்கப் படுகின்றனர்.

**மேற்படி சிந்தனையின் எதிர் விளைவுகள்:**

இவர்களால் தோற்றுவிக்கப்பட்ட அவர்களின் சமயக் கோட்பாடுகள் மூலமாக மார்க்கத்தில் பல விளைவுகள் ஏற்படுகின்றன.

தமது விளக்கத்தின் மூலம் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் எதுவும் அறியாதவர்களாகவும் விபரமற்றவர்களாகவும் மறைமுகமாக சித்தரிப்பதோடு, தாமே உலக வாழ்வு பற்றி முழுமையாக அறிந்தவர்கள் போன்றும் வெளிப்படுத்துகின்றனர்.

அல்லாஹ்வையும் அவனது தூதரையும் பொய்ப்பித்தல்,

இறைத்தூதர்களைப் பொய்ப்பித்தல், வானவர்கள், சுவர்க்கம் நரம், மண்ணறை வாழ்வு, மறுமை விசாரணை என ஈமானிய அம்சங்கள் தொடர்பான அனைத்தையும் பொய்ப்பிக்கின்றனர்.

மேலும், உலக முஸ்லிம்களால் பின்பற்றப்படும் இஸ்லாத்தைக் கொச்சைப்படுத்துதல்.

إسقاط أحكام الشريعة மார்க்க சட்டங்களை அடியோடு வீழ்த்துதல்,

اللادين மார்க்க சிந்தனைகள் அற்றவர்களாக வாழுதல், வாழவைத்தல்,

إســــــــــــقاط التكليف அல்லாஹ்வின் அடியார்களை விட்டும் மார்க்க விதிகளை இல்லாதொழித்து சமயக்கட்டுப்பாடுகளைத் தளர்த்துவதோடு, தாராண்மைவாத சிந்தனையின் மூலம் கட்டுப்பாடுகள் அற்ற சமூகத்தை உருவாக்கி, அனைத்துக்கும் பூரண சுதந்திரம் வழங்குதல்.

மார்க்கச் சான்றுகளுக்கு அல்லாஹ்வும், அவனது தூதரும் காட்டித்தராத, விளக்காத புதுப்புது விளக்கமளித்து, மார்க்கத்தை கிண்டலும் கேலியும் செய்கின்ற சமூகத்தை தோற்றுவித்தல்.

ஹராம், ஹலாலை இல்லாதொழித்து உலகம் ஓர் இன்பக் கூடாரம் என்ற மாயையை மக்கள் மனங்களில் பதித்தல் போன்ற பல வழிகேடுகளை திரைமறைவில் புதைத்து வைத்துள்ளனர்.

பாத்தினிய்யா பிரிவினரின் செயற்பாடுகளோடு சமூகத்தை சீரழிக்கும் யூத –கிறிஸ்தவ நிகழ்ச்சி நிரல்களை ஒப்பிட்டு நோக்கினால் இரண்டும் ஒரு தண்டவாளத்தில் பயணிப்பதை அறிந்து கொள்ள முடியும்.

தற்கால உலகில் முஸ்லிம் பெண்ணியம் தொடர்பாக முன்வைக்கப்படும் கருத்துக்கள், இஸ்லாம் பற்றிய தவறான விமர்சனங்கள் அனைத்தும் மேற்படி பிரிவினரின் துணை கொண்டே அரங்கேற்றப்படுகின்றன.

55

# கஸ்ஸாலி இமாம் (ரஹ்) அவர்கள் தரும் விளக்கம்

பாத்தினிய்யா சிந்தனையில் தனது காலத்தில் பெரும் பகுதியைக் கழித்த இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் இவ்வாறு விளக்குகின்றார்கள்.

وهو صرف ألفاظ الشــرع عن ظواهرها المفهومة إلى أمور باطنة لا يســبق منها إلى الأفهام فائدة كدأب الباطنية في التأويلات فهذا أيضــا حرام وضرره عظيم فإن الألفاظ إذا صرفت عن مقتضى ظواهرها بغير اعتصام فيه بنقل عن صاحب الشرع ومن غير ضرورة تدعو إليه من دليل العقل اقتضــــى ذلك بطلان الثقة بالألفاظ وسقط به منفعة كلام الله تعالى وكلام رسوله صلى الله عليه و سلم ... (إحياء علوم الدين – ( ١ / ٣٧ )

பாதினிய்யா சித்தாந்தம் என்பது, ஷரீஆவின் சொற்பிர யோகங்களை பொதுவாக விளங்கப்பட்ட அதன் வெளிப்படையான, சரியான பொருள்களை விட்டும் அகற்றி, பயன்பாடற்ற, மறைவான வேறு ஒரு விளக்கத்தின் பக்கம் திசைதிருப்பி பிழையான பொருள் வழங்குவ தாகும். <u>இதற்கு உதாரணமாக பாத்தினிய்யாக்களின் போக்கை கூறமுடியும். இந்தப் போக்கு மார்க்கத்தில் தடுக்கப்பட்டதாகும்.</u> அதன் தீங்கு மிகப் பாரியது. ஏனெனில் பொதுவாக மார்க்க சொற்பிரயோகங்கள் அவை வேண்டி நிற்கும் வெளிப்படையான பொருள்களை விட்டும் மார்க்கத்தின் காவலரான முஹம்மத் நபி (ﷺ) அவர்களின் வழியை விட்டும் திசைமாற்றப்பட்டு, தேவையில்லாத, அவசியமற்ற ஒன்றாக அது மாற்றப்படுகின்ற போது மார்க்கத்தில் கையாளப்பட்ட சொற்பிரயோகங்கள் அதன் நம்பகத்தன்மையை இழந்துவிடும். அதனால் அல்லாஹ்வுடைய

பேச்சின் உண்மையான பயனும், அல்லாஹ்வின் தூதரின் பேச்சின் பயனும் வழக்கொழிந்து போகும்...

(இமாம் கஸ்ஸாலி – அல்இஹ்யா)

**இஹ்யாவில் மற்றொரு இடத்தில்:**

ومن ادعى فهم أسرار القرآن ولم يحكم التفســـير الظاهر فهو كمن يدعي البلوغ إلى صدر البيت قبل مجاوزة الباب أو يدعي فهم مقاصد الأتراك من كلامهم وهو لا يفهم لغة الترك

(( إحياء علوم الدين – (١ / ٢٩١)

எவன் ஒருவன் அல்குர்ஆனுக்கு வெளிப்படையான தஃப்ஸீரை (விளக்கத்தை) வழுங்காது அதன் உள் மற்றும் ரகசியப் பொருள்கள் பற்றி அறிந்துவிட்டதாக வாதிடுகின்றானோ அவன், வீட்டு வாசல் வழியாக நுழையும் முன் உள்வீட்டில் இருப்பதை அறிந்ததாகக் குறிப்பிடுபவன் போன்றவனாகும். அல்லது துருக்கியர் மொழியைக் கற்காது அவர்களின் மொழி விளங்குகின்றது எனக் கூறுவதற்கு ஒப்பானதாகும். (இஹ்யா). இது இமாம் கஸ்ஸாலி அவர்களின் பாதினிய்யா சிந்தனை பற்றிய பெறுமதிவாய்ந்த வார்த்தைகளாகும்

இந்த நம்பிக்கை யாரிடம் இருக்கின்றதோ அவர்கள் அனைவரும் பாத்தினிய்யா என்ற பெயர் கொண்டு அழைக்கப் படுகின்றனர். இவர்களை இஸ்லாத்தின் பெயரால் தோற்றம் பெற்ற நாத்திகர்கள் என்றும் இஸ்லாமிய அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

**குறிப்பு:**

இமாம் கஸ்ஸாலி அவர்களின் இஹ்யா உலூமித்தீன் என்ற நூலில் அத்வைதம், இறைஞானம், மறைஞானம், மெய்ஞானம், நானும் அவனே போன்ற வழிகெட்ட அத்வைத சிந்தனைக்கு ஊக்கமளிக்கப்பட்டிருப்பது தொடர்பாக நாம் விமர்சனங்களை முன்வைத்துள்ளோம். இங்கு பாத்தினிய்யாக்கள் தொடர்பாக அவர் தரும் விளக்கங்கள் மார்க்கத்திற்கு உடன்பாடானது என்பதைக் கவனித்து அவரது கருத்துக்களை முன்வைத்தோம்.

# பாத்தினிய்யாக்களின் தோற்றம்

அகீதாவில் வழி கெட்ட பிரிவுகளின் தோற்றம் ஹிஜ்ரி 40 முதல் ஆரம்பாகின்றது. கலீஃபாக்களின் இறுதிக் காலப் பகுதியில் கவாரிஜ், ஷீஆ பிரிவுகள் தோற்றம் பெற்றன.

ஸஹாபாக்களின் இறுதிக் காலங்களில் குறிப்பாக ஜாபிர்(ﷺ) அப்துல்லாஹ் பின் அப்பாஸ்(ﷺ), இப்னு உமர் போன்ற நபித்தோழர்கள் உயிர் வாழ்கின்ற போது முர்ஜியா, கத்ரிய்யாப் பிரிவுகள் தோன்றின.

தாபியீன்களின் இறுதிக் காலம் முடிவடைந்ததோடு அப்பாஸியர் ஆட்சியில் கிரேக்க, பாரஸீக, இந்திய தத்துவங்கள் மொழியாக்கம் செய்யப்பட்ட பின்னர் ஜஹ்மிய்யாக்கள் தோற்றம் ஆரம்பாகின்றது.

கிரேக்க நூல்களின் மொழியாக்கத்திற்கும் பாத்தினிய்யா சிந்தனைக்கும் நெருங்கிய உறவு காணப்படுவதை மறுக்க முடியாது.

இப்னு ஸபஃ என்ற யூதன் ஷீஆக் கொள்கையின் சிந்தனையாளனாக அறிமுகப்படுத்தப்படுவது போன்று, எகிப்தில் பாதிமிய்யா ஆட்சியை ஸ்தாபித்த உபைதுல்லாஹ் அல்மஹ்தி என்ற பெயரில் வந்த யூதன் மிக்க முக்கிய சூத்திரதாரியாக விளங்குகின்றான்.

இது பாத்தினிய்யா பிரிவிற்கும் ஷீஆப் பிரிவிற்கும் இடையில் காணப்படும் நெருக்கமான சிந்தனை உடன்பாட்டை எடுத்துக்காட்டும் முக்கிய கட்டமாகும்.

யூத, கிறிஸ்தவ மற்றும் ஏனைய இணைவைப்பாளர்களை விட மோசமான சிந்தனை என வர்ணிக்கப்படும் பாத்தினிய்யா சிந்தனை அப்பாஸிய ஆட்சியாளரான கலீஃபா மாமூன் காலத்தில் வெளிப் பட்டாலும் அல் முஃதஸிம் என்ற ஆட்சியாளரின் காலத்தில்தான் அதன் சிந்தனைப் பிரிவு விரிவாக்கம் பெற்றது என அறிஞர்கள் குறிப்படுகின்றனர்.

அதன் தோற்றம் பற்றி ஆய்வு செய்த அறிஞர்கள், இதன் தோற்றம் பற்றிய காலப்பகுதியில் கருத்து முரண்பாடு கொள்கின்றனர்.

1.) ஈரானில் வாழ்ந்த நெருப்பு வணங்கிகளான மஜூஸிகளின் சமய சித்தாந்தங்களில் இருந்தும், கிரேக்க தத்துவங்களில் இருந்தும் இதன் கோட்பாடு தோற்றம் பெற்றுள்ளது என ஒரு சாராரும்.

2.) சிரியாவின் ஹர்ரான் தேச ஸாபியீன்கள் என்ற ஒரு மதப்பிரிவில் இருந்து இவர்களின் சிந்தனை பெறப்பட்டிருக்கலாம் என்று மற்றொரு சாராரும் குறிப்பிடுகின்றனர். அதாவது ஹிந்து மத சிந்தனைகளை உள்வாங்கி பௌத்தம் தோற்றம் பெற்றது போன்ற ஒரு கோட்பாடே அன்றி, இதற்கும் இஸ்லாத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை எனக் குறிப்பிடுகின்றனர். (பார்க்க: (இணையம்: அத்துரருஸ் ஸனிய்யா)

3.) பாத்தினிய்யா சிந்தனை ஆரம்பத்தில் மறைவாகவும் ஒழுங்கின்றியும் சிதறியும் காணப்பட்டது. அதன் சிந்தனைகளை, தன்னை அஹ்லுல் பைத்தினரில் ஒருவனாக இனம் காட்டிக் கொண்ட ஷீஆவாதியான யூதன் தைஸான் என்பவனின் பேரப் பிள்ளைகளில் ஒருவனாக இருந்த عبيد الله بن مـــــــيمون القداح என்பவன் பாத்தினிய்யா கொள்கைப் பரப்பாளனாக செயல்பட்டதன் பின்னணியில் இந்தக் கொள்கை அறிமுகமானது. இவன் ஒரு நாஸ்தீக சிந்தனை யாளனாகும் என அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். (இப்னுல் கைய்யூம்– அல்மனாருல் முனீஃப்).

4.) ஹிஜ்ரி 200, 250 காலப்பகுதிகளில் இவர்களின் தோற்றம் இருந்தது என்பதைச் சுட்டிக்காட்டும் இஸ்லாமிய வரலாற்று ஆய்வாளரான அலி முஹம்மத் ஸல்லாபி, ஹிஜ்ரி 200 இல் இவர்களின் தொடக்கம் இருந்திருக்க அதிக வாய்ப்புள்ளது என்றும், இஸ்லாம் பாரஸீகத்தில் கோலோச்சிய காலப் பகுதியில் இஸ்லாமிய உம்மத்தின் முதுகில் குத்துவதற்காக அதன் விரோதிகளான யூத, கிறிஸ்தவர்களால் இந்த உம்மத்தின் சாபக்கேடாக இவர்கள் தோற்றம் பெற்றார்கள் என்று மற்றொரு பிரிவினரும் குறிப்பிடுவதாக விளக்கி யுள்ளார்கள். (அத்தவ்லதுல் ஃபாதிமிய்யா).

5.) ஹிஜ்ரி நான்காம் நூற்றாண்டுகளில் இவர்களின் கொடுமை வானைத் தொட்டதாக வரலாற்று ஆய்வறிஞர்களால் சுட்டிக்காட்டப்படுகின்றது. அத்தோடு இந்தப் பிரிவு வழிகேட்டில் முற்றித் திழைத்தக் கேடுகெட்ட ஒரு பிரிவாகும் என்றும் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

எப்படியாயினும் பாத்தினிய்யா பிரிவின் வழிகேட்டின் வரவேற்பாளர்களாகவும் அவற்றின் நுழைவாயில்களாகவும் ஷீஆக்களே காணப்பட்டனர். இவர்களின் தோற்றத்திற்கும் ஷீஆப் பிரிவுக்கும் இடையில் நெருக்கமான கொள்கை, மற்றும் பரஸ்பர இமாமத் உறவுகள் காணப்படுகின்றன.

ஷீஆக்கள் எவ்வாறு அஹ்லுல் பைத்தினரை நேசித்தல் என்ற பெயரில் தமது கொள்கைப் பிரகடனத்தை ஆரம்பித்தார்களோ அவ்வாறே இவர்களும் தமது கொள்கைப் பிரச்சாரத்திற்கு ஷீஆப் பற்றையும், அஹ்லுல் பைத் நேசத்தையும் மக்கள் மனங்களின் பதிய வைப்பதன் ஊடாக ஆரம்பம் செய்தனர்.

நபியின் குடும்பத்தார் என்ற பெயரை வெளிப்படையில் பயன்படுத்தும் இந்தப் பிரிவினர் யூத, கிறிஸ்தவ, இணை வைப்பாளர்களை விட மோசமான கோட்பாடுகளை வகுத்துள்ளனர்.

வெளிப்படையில் பார்க்கின்ற போது அவர்களின்

நம்பிக்கைகள் பொதுமக்களின் நம்பிக்கையாகவே தென்படும். ஆனால் மறைவில் பாரிய, விசித்திரமான, விபரீதமான இறை மறுப்புக் கொள்கையை இவர்கள் கொண்டுள்ளனர் என்பதே ஆச்சரியமான உண்மையாகும். இதன் காரணமாகவே இவர்கள் பற்றி பேசும் அறிஞர்கள் ,

فإن الروافض هم الباب والوسيلة لغلو الفرق الباطنية (( أصول مذهب الشــعية الإمامية الإثني عشرية عرض ونقد – ( ١ / ١٦٣ ))

“பாத்தினிய்யா பிரிவுகளின் எல்லைமீறிய போக்கிற்கு ராபிழாக்கள் எனப்படும் ஷீஆக்கள்தாம் வாயிலாகவும், படிக்கட்டாகவும் விளங்குகின்றனர்” எனக் குறிப்பிடுகின்றனர். (நாஸிர்: அல்கிஃபாரி. உசுலு மதாஹிபிஷ்ஷீஆ) அதாவது, ஷீஆக்கள் ஊடாகவே அன்றி பாதினிய்யா சிந்தனை பரவவோ, பிரவேசிக்கவோ முடியாது.

அல்லாஹ்வின் கலாம் பேச்சாகிய குர்ஆனும், அல்லாஹ்வின் தூதரின் “சுன்னா” நடைமுறைகளும் அல்லாஹ்வின் தூதருக்கு வானவர் ஜிப்ரீல்(عليه السلام) அவர்கள் மூலமாக மார்க்கமாகக் கற்றுத் தரப்பட்டதை அல்லாஹ்வின் தூதர் அவர்கள் தனது தோழர்களுக்கு போதனை செய்தார்கள். அவை வெளிப்படையான போதனைகளாகும். அவற்றைத்தான் உலக முஸ்லிம் அறிஞர்கள் விளங்கினார்கள்; விளக்கினார்கள்.

நபி (ﷺ) அவர்களின் போதனைக்கும், அவர்களிடம் பாடம் படித்த மாணவர்களான நபித்தோழர்களுக்கும் உலக முஸ்லிம் அறிஞர்களுக்கும் வெளிப்படையில் தெரியும் விளக்கங்களுக்கு நேர்முரணான விளக்கங்களைத் தமது இமாம்கள் மாத்திரம் அறிவார்கள் என கூறிக் கொண்டு பல்லாயிரக்கணக்கான மக்களை இஸ்லாத்தின் பெயரால் காஃபிர்களாக வாழ வைப்பதோடு, அந்த வழியில் மரணிக்கவும் செய்துவிட்டனர் இந்த பாத்தினிய்யாப் பிரிவினர் என்பதை அவர்கள் பற்றிய வாசிப்பின் மூலம் அறிய முடிகின்றது.

அந்த அடிப்படையில் அஹ்லுல் பைத்தினரில் ஒருவரான அலி(رضي الله عنه) அவர்களை நேசித்தல் என்ற பெயரில் மறைந்து கொண்டு இறைமறுப்புக்கள் நிறைந்த கோட்பாடுகள் மூலம் இஸ்லாமிய மார்க்க சட்டங்களை செயலிழக்கச் செய்து, தமது செயற்பாடுகளை மறைமுகமாகவும் கச்சிதமான முறையிலும் முன்னெடுத்துள்ளனர் என்பதே உண்மை.

“<u>மார்க்கத்தின் சான்றாதாரங்களில் வெளிப்படையாக தெரிபவைகளைப் பற்றி மட்டுமே பொதுமக்கள் அறிவார்கள். ஆனால், தமது இமாம்கள் எனப்படுவோரோ மார்க்கத்தில் அகம், புறம் என்ற இரு நிலைகளை அறிவார்கள்</u>” என வாதிடும் பிரிவாக இருக்கும் இவர்கள் ராபிழாக்கள் எனப்படும் ஷீஆக்களில் இருந்து பிரிந்த ஒரு கிளைப் பிரிவாகும்.

இவர்களோடு முரண்பட்டுத்தான் இருந்துதான் பன்னிரண்டு இமாம்களை விசுவாசித்தல் என்ற ஷீஆக்களில் மோசமான பிரிவான அல் இமாமிய்யா, அல் இஸ்னா அஷ்அரிய்யா, அல் ஜஃபரிய்யா எனப்படும் இமாமிய்யா கோட்பாட்டு ஷீஆக்கள் உருவாகினார்கள்.

உபைதிய்யூன், (உபைதிய்யா), ஃபாதிமிய்யூன் (பாத்திமிய்யா), இஸ்மாயீலிய்யா, (கராமிதா, பாத்தினிய்யா, இஹ்வானுஸ்ஸஃபா, ஹஷ்ஷாஷுன், நுஸைரிய்யா, அலவிய்யூன், (அலவிய்யா), துரூஷ் போன்ற வேறு பெயர்களிலும் இவர்கள் அறிமுகப்படுத்தப்பட்டார்கள். (ஷரஹுல் அகீததித் தஹாவிய்யா)

இவர்கள் தமது சிந்தாந்தத்தின் மூலம் மார்க்கம் தடை செய்தவற்றை செய்து விட்டு, தாம் செய்தது பற்றிய உண்மையான அக ஞானம் பொது மக்களுக்களால் அறிந்து கொள்ளவோ புரிந்து கொள்ளவோ முடியாது என வாதிடுவர்.

உதாரணமாக தொழுகையை நிலை நிறுத்துங்கள், ஸகாத்தும் கொடுங்கள் என்ற இறைமறை வசனத்தை எடுத்துக் கொள்ளலாம். வெளிப்படையில் இருக்கும் நடைமுறை அர்த்தம் பொது மக்களுக்குரியது.

ஆனால், இதன் அக விளக்கம் வேறானது, ஐவேளைத் தொழுகை என்பது ஐந்து இமாம்களை நம்பிக்கை கொள்வதாகும் என்றும் ஐவேளைத் தொழுகைக்கு பொது மக்கள் அறியாத அக

சார்ந்த அர்த்தம் உண்டு என்பர். நோன்பு என்பது ரகசியங்களைப் பாதுகாத்தல், தமது இமாமின் அந்தரங்க குறைகளை மறைத்தல் என்றும், ஹஜ் என்பது தர்காக்களையும், மண்ணறை வாசிகளையும் தேவைகளை நிறைவு செய்ய நாடிச் செல்லுதல் என்றும் விளக்கம் தருவர். (அத்துவைஜிரி- ஷரஹுல் ஃபத்வா அல்ஹமவிய்யா)

இந்த சித்தாந்த வழிமுறை சூஃபிகள், மற்றும் ஷீஆக்களிடமும் உண்டு. இதன் மூலம் பாத்தினிய்யா சிந்தனையின் பரவல் என்பது வழிகெட்ட பிரிவுகள் பலதில் பரவி இருப்பதை மறுக்க முடியாது.

சூஃபிகள், மற்றும் ஷீஆக்களிடம் இது ஒரு கொள்கையாகவே கடைப்பிடிக்கப்படுகின்றது.

أن من وصل إلى درجة اليقين قد سقطت عنه التكاليف

யார் யகீன் (உறுதியான) நிலையை அடைந்தாரோ அவரை விட்டும் மார்க்க கட்டளைகள் விழுந்து விடும். அதாவது தொழுவது, நோன்பு நோற்பது, ஹஜ் செய்வது அவசியம் இல்லை என்ற நிலை. இது சூபிஸ சிந்தனைக் கோட்பாடாகும்.

அவ்வாறே, அஹ்லுல் பைத்தினர் பெயர் இடம் பெறாத குர்ஆனிய வசனங்களில் அவர்களின் பெயர்களைக் குறிக்கும் என்றும், ஃபிர்அவ்ன், ஹாமான் போன்ற சொற்கள் சுவனத்து வாரிசுகளான அபூபக்கர் ஸித்தீக், உமர் பாரூக் (ﷺ) போன்ற நல்லடியார்களை குறிப்பிடும் என்றும் ஷீஆக்கள் வலிந்து, உண்மைக்குப் புறம்பான விளக்கம் தருவதும் இந்த சிந்தனையை ஒத்ததாகும்.

இதனால்தான் இந்த கோட்பாட்டின் நிலை பற்றி விளக்குகின்ற இமாம் இப்னு தைமிய்யா(ரஹ்) அவர்கள் இமாம் அபூஹாமித் அல் கஸ்ஸாலி அவர்களின் நூலை மேற்கோள்காட்டி விளக்குகின்ற போது,

قال :ظاهر مذهبهم الرفض ، وباطنه الكفر المحض ((أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – ((٢ / ٣٦١ ))

அது வெளிப்படையில் ஷீஆக் கொள்கையாகும். ஆனால், அதன் அகத்தில் அது பச்சையான இறை நிராகரிப்பாகும் என சுட்டிக் காட்டியுள்ளார்கள். (இப்னு தைமிய்யா- அஹ்காமுல் முர்தத்)

அதாவது ஷீஆக்களின் அங்கீகாரத்தையும் அவர்களின் செல்வாக்கையும் போக்கையும் பயன்படுத்தி அவர்களை விட மோசமான கொள்கையை அஹ்லுல் பைத்தினர் பெயரால் சமூகத்தில் பரவச் செய்தனர்.

இமாம் குர்துபி(ரஹ்) அவர்கள் பாத்தினிய்யாக்கள் பற்றிக் குறிப்பிடுகின்ற போது,

فينـزلون القـرآن علـى وفق رأيهم ومذهبهم علـى أمور يعلمون قطعا أنها غير مـرادة. فهذه الفنون أحدوجهى المنع من التفسير بالرأى. تفسير القرطبي – (١ / ٣٤ )

அவர்கள் தமது கருத்துக்கும், கொள்கைக்கும் இசைவாக குர்ஆனை மாற்றி அமைப்பார்கள். உண்மையில் அவை அந்தக் கருத்தை தரவில்லை என்று அவர்கள் திட்டமாக அறிந்த போதும் (இவ்வாறு செய்வார்கள்!) இது “தஃப்ஸீர் பிர்ரஃய்” அதாவது அபிப்பிராயம் சார்ந்த வகையில் அமைந்த மார்க்கத்தில் தடை செய்யப்பட்ட ஒரு வகை தஃப்ஸீர் முறையாகும். (தஃப்ஸீர் குர்துபி).

இதே செய்தி இமாம் கஸ்ஸாலி அவர்களின் இஹ்யா உலூமுத்தீன் என்ற நூலில் வார்த்தை பிசகாது இடம் பெற்றுள்ளது.

அல்பிதாயா வந்நிஹாயாவில் ஹி: 278 வது ஆண்டு நிகழ்வு பற்றி இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்ற போது: “கராமிதா பிரிவினர்கள் இந்த ஆண்டு செயல்பட ஆரம்பித்தார்கள். அவர்கள் ஸராதஸ்த் மஸ்தக் என்பவனை நபியாக நம்பிக்கை கொள்கின்ற பாரஸீக தத்துவவியலாளர்களான நாஸ்தீகர்களில் உள்ள ஒரு பிரிவினராகும். அவர்கள், மார்க்கத்தில் தடை செய்யப்பட்டவை களை ஆகுமாக்கினார்கள். பின்னர் அசத்தியத்தின் பக்கம் அழைப்போர் ஒவ்வொருவரினதும் ஊதுகுழலாக செயல்பட்டார்கள்” எனக் குறிப்பிட்ட பின்னர்,

وقال ابن كثير في حوادث سنة (٢٧٨هـ): ...وأكثر ما ينقادون من جهة الرافضة ويدخلون إلى الباطل من جهتهم؛ لأنهم أقل الناس عقولاً ((الدولةالفاطمية – (١ / ٣٦)

ஷீஆக்கள் புத்தி குறைவுள்ளவர்களாக இருப்பதனால்தான் பாத்தினிய்யாப் பிரிவினர் தமது அசத்தியக் கொள்கையை அரங்கேற்ற இவர்களைப் பாவித்து அதிகமாக இவர்கள் வழியாக நுழைந்து கொள்கின்றனர் எனக் குறிப்பிடுகின்றார்கள். (அத்தவ்லுத்துல் ஃபாத்திமிய்யா- அல்பிதாயா வந்நிஹாயா)

ஷீஆ அல்இஸ்னை அஷரிய்யா. அலி(ரழி) முதல் அவரது குடும்பப் பரம்பரையில் வந்த பன்னிரெண்டு இமாம்களுக்கு மட்டுமே ஆட்சித் தகுதி உண்டு என்றும், கலீஃபாக்களான அபூபக்கர், உமர் உஸ்மான்(ரழி) ஆகியோரின் ஆட்சி அடாவடித்தனமானது, குளறுபடி நிறைந்தது, செல்லுபடியற்றது என்றும் நம்பிக்கை கொள்வோர்.

ஷீஆக்களிடம் இணைவைத்தல், கத்ரை மறுத்தல், அஸ்மா ஸிஃபாத்திற்கு தவறான விளக்கமளித்தல், பாதினிய்யா சிந்தனை என அனைத்து வழிகேடுகளும் தாராளமாக உண்டு. மார்க்கத்தின் சான்றுகளுக்கு உள், மற்றும் வெளி அர்த்தங்கள் உண்டு என வாதிடும் பிரிவுகளில் ஷீஆக்கள் உள்ளடங்கப்பட்டுள்ளதால் அது தொடர்பான அம்சங்கள மாத்திரம் இங்கு எடுத்துக் கொள்ளப்படும்.

சூஃபிக்களிடமும் இந்த இரு அர்த்தக் கோட்பாடு காணப் படுகின்றது. எனவே, அவர்களும் இந்த முக்கியமானவர்கள். இதன் மூலம் சூஃபிக்களுக்கும் ஷீஆக்களுக்கும் இடையில் காணப்படும் கொள்கை உறவு, முஸ்லிம் சமூகத்திற்கு எதிரான செயற்பாடுகள் என்பன பொதுவிதியாகும் என்பதைக் கவனத்திற் கொள்ள வேண்டும்.

55

# பல பிரிவுகளாகப் பிளவுபட்ட ஷீஆ மதம்

முஹம்மத் நபி (ஸல்) அவர்களின் வார்ப்பில் வளர்ந்த ஸஹாபாக்கள் வழிவந்த முஸ்லிம்கள் இன்றுவரை அஹ்லுஸ் ஸுன்னா என்ற பொதுப் பெயரில் அறிமுகப்படுத்தப்படுவதோடு, அடிப்படை அம்சங்களில் மாறாது இன்று வரை நிலையான ஒரு கொள்கையில் காணப்படுகின்றனர்.

ஆனால், அவர்களை விட்டும் பிரிந்த அனைத்துப் பிரிவுகளும் பல நூறு கிளைகளாகப் பிரிந்துள்ளன. அவர்களின் கொள்கை கோட்பாடுகளில் தெளிவற்ற நிலையும் தடுமாற்றமும், இறைமறுப்பும், நாஸ்திகமும், சமூகச் சீரழிவுகளும் பலத்த முரண்பாடுகளுமே காணப்படுகின்றன.

இதற்கு ஷீஆக்களும் விதிவிலக்கானவர்கள் கிடையாது. அஹ்லுல் பைத்தினரை நேசித்தல் என்ற கோஷத்தினை பகடையாக்கிய யூதன் இப்னு ஸபாவின் சிந்தனையில் வளர்ந்த இந்தப் பிரிவினரின் நிலையோ அந்தோ பரிதாபம். அவர்கள் பல துண்டுகளாப் பிரிந்து ஒருவரை மற்றவர் கொலை செய்யும் நிலை இன்றும் காணப்படுகின்றது.

ஷீஆக்களைப் பொறுத்தவரை தமது இமாமிய்யா கோட்பாடு நிறுவப்பட்ட பின்னர் உயிருடன் இருந்து மரணிக்கும் ஒவ்வொரு இமாமுக்குப் பின்னரும் இமாமைத் தெரிவு செய்வதில் முரண்பட்டு பல துண்டுகளாப் பிரிந்துள்ளனர். சைதிய்யா, இமாமிய்யா,

இஸ்மாயீலிய்யா என்ற முப்பெரும் பிரிவுகள் அவர்களிலிருந்து அதிக அளவில் பரவிய சிந்தனைப் பிரிவுகளாகும்.

வரலாற்றில் ஷீஆக்கள் மத்தியில் ஏற்பட்ட முக்கியத்துவம் வாய்ந்த பிளவை முக்கிய இரு கட்டங்களாக வகுக்க முடியும்.

**முதலாவது கட்டம்:**

ஷீஆக்களும் அவர்களிடம் இருந்து பிரிந்த மூஸவிய்யா, மற்றும் இஸ்மாயீலிய்யா பிரிவினர்களும் அவர்களின் ஆறாவது இமாமாகிய ஜஃபர் ஸாதிக் (ரஹ்) வரையும் இணைந்தே பயணித்தனர்.

இது வரை காலமும் ஷீஆ மதம் சிறு சிறு பிரிவுகளை சந்தித்திருந்த போதிலும் ஆறாவது இமாம் குழப்பம் அவர்கள் மத்தியில் ஏற்படும்வரை பாரிய பிளவுகளை சந்திக்கவில்லை.

ஹி: 148 இல் மரணமான ஷீஆக்களின் ஆறாவது இமாம் என நம்பப்படும் சுன்னாவாதியான ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் மரணத்தின் பின்னால் தலைமை (இமாமத்) பதவிக்கு தகுதி உடையவர் ஜஃபர் (ரஹ்) அவர்களின் இரு புதல்வர்களில் மூத்தவரான இஸ்மாயீல் பின் ஜஃபரா?, அல்லது இளையவரான மூஸா அல்காளிமா? என்பதில் அஷீஆக்கள் தமக்குள் பலமாக கருத்து முரண்பட்டனர்.

பொதுவாக இமாமத் பதவிக்கு தகுதியானவர் யார்? என்று தீர்மானிப்பதில் ஒவ்வொரு இமாமின் மரணத்தின் பின்பும் ஷீஆக்கள் மத்தியில் பலத்த முரண்பாடுகள் எழுவது இயல்பாகும். ஆனால் ஜஃபர் ஸாதிக் அவர்களின் மரணத்தின் பின்னர் அவர்கள் பல பிரிவுகளாக மாறும் நிலை காணப்பட்டது.

அவர்களில் ஒரு பிரிவினர் அலி(ﷺ) அவர்களின் புதல்வர் ஹுஸைன்(ﷺ) அவர்களின் பரம்பரையில் வந்த ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் இரண்டாம் புதல்வரான அல் காழிம் அல்லது மூஸல்காழிம் என்றழைக்கப்படும் மூஸா பின் ஜஃபருக்கும் அவரின் வழித்தோன்றல்களுக்குமே இமாமத் தகுதி உண்டு என்றனர். இதற்கு காரணம் அவர்களின் மூத்த மகன் இஸ்மாயீல் அவர்களின் தந்தை ஜஃபர் ஸாதிக்(ﷺ) அவர்கள் உயிருடன் இருக்கின்ற போது மரணித்து விட்டமையாகும். இந்தப் பிரிவினர் ,"அல்மூஸவிய்யா" என அழைக்கப்பட்டனர்.

அவர்களில் மற்றொரு சாரார் ஏலவே மரணித்த ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் மூத்த புதல்வரான இஸ்மாயீல் பின் ஜஃபருக்கே இமாமத் தகுதி உண்டு, அவர் உயிருடன் இருக்கின்ற போது அவருக்கு தந்தை வஸிய்யத் செய்திருந்தார். அவர்தான் அல்காயிம், (நிலையானவர்), அவர் மரணித்தும் உயிருடன் உள்ளார், பூமியை நீதியால் நிரப்ப மீண்டுவருவார் என வாதிட்டனர். (அதாவது ஷீஆக்களின் மறைந்து வாழும் மஹ்தி சிந்தனையை ஒத்த ஒரு சிந்தனையாகும்.) இந்தப் பிரிவினர் பிற்காலத்தில் "இஸ்மாயீலிய்யா" என அழைக்கப்பட்டனர். (இமாம்: இஹ்ஸான் இலாஹி ழஹீர்)

வரும் தொடர்களில் ஷீஆக்களில் இருந்து பிரிந்து சென்ற முக்கிய சிந்தனைப் பிரிவான இஸ்மாயீலிய்யாப் பிரிவு பற்றி எடுத்தெழுதப்படுகின்றது.

(( وُمَؤرّخو الإِسماعيلية يقولون : إن سبب انشقاق أتباع جعفر إلى هاتين الفرقتين ، أن جعفر نص علـــى أن يتولى إسماعيل الإِمامة من بعده ، ولكن إسماعيل توفي في حياة أبيه ، وبذلك انتقلت الإمامة إلى ابنه محمد بن إسماعيل بن جعفـر ، لأن الإِمامة لا تكون إلا في الأعقاب ، ولا تنتقل من أخ إلى أخيه إلا في حالة الحســن والحســين ابني علي بن أبي طالب فقط . أما الأئمة بعد الحســن والحســين فلابد أن تنتقل من أب إلى ابن وأَوَّلوا الآية الكريمة { وجعلها كلمة باقية في عقبه } (١). بأن معنى الكلمة هــي الإِمامة ، وأنها لابد أن تكون في الأعقاب دون غيرهم . هذا من ناحية ، ومن ناحية أخرى فقد كان محمد بن إسماعيل أكبر سنًا من عمه موسى الكاظم ، فبناء على التقليد الشـيعي الذي يوجب تسـلسـل الإِمامة في أكبر أهل البيت سـنًا ، كان محمد بن إسماعيل إذن أحق من عمه موســى الكاظم بالإِمامة )) (٢). (( عقيدة الدروز عرض ونقض – (١ / ١٤))

இஸ்மாயீலிய்யா தொடர்பான வரலாற்று ஆசிரியர்கள் இது பற்றி விபரிக்கின்ற போது, ஜஃபர் ஸாதிக்(ﷺ) அவர்களுக்குப் பின்னால் ஷீஆக்கள் இரு வேறு துருவங்களாக கூறுபட்டதற்கான காரணம், ஜஃபர்(ﷺ) அவர்கள் தனது மரணத்தின் பின்னால் அவரது மூத்த புதல்வர் இஸ்மாயீல் இமாமாக வரவேண்டும் எனக் குறிப்பிட்டிருந்தும், அவர் தந்தைக்கு முன்னால் மரணித்துவிட்ட காரணத்தால் இஸ்மாயீல்

என்பவரின் மகன் முஹம்மத் என்பவருக்கு இந்த இமாமத் பதவி கைமாறியது.

ஷீஆ மத நம்பிக்கையின் அடிப்படையில் இமாமத் பதவியானது ஒரு சகோதரரிடம் இருந்து உடன்பிறந்த மற்ற சகோதரருக்கு மாறுவதில்லை. ஹஸன், ஹுஸைன் ஆகிய இருவரும் தவிர்ந்த மற்றவர்களுக்கு தந்தைவழி வாரிசுகளுக்கே இமாமத் பதவி வழங்கப்படும். தந்தையின் சகோதரர்களுக்கு இமாமத் பதவி வழங்கப்படுவதில்லை. (புதல்வர்களுக்கே வழங்கப்படும்)

இந்த விதியையோ, இமாமத் முறையையோ குர்ஆன் ஹதீஸ் அடிப்படையில் அவர்கள் உருவாக்கவில்லை என்பதைத்தான் இது காட்டுகின்றது.

இஸ்மாயீல் என்பவரின் மகன் முஹம்மத் பின் இஸ்மாயீல் தனது தந்தையின் சகோதரர் அல்காழிம் என்ற மூஸா பின் ஜஃபரை விட வயதில் மூத்தவராக இருந்தார். மூத்தவர்களுக்கு இமாமத் வழங்கப்படல் வேண்டும் என்ற ஷீஆக்களின் விதியின் படி முஹம்மத் என்பவர் தனது சித்தப்பா அல்காழிமை விட உரித்தானவராக இருந்தார் என்பதைக் காரணம் காட்டிப் பிரிந்த கூட்டமே பிற்காலத்தில் இஸ்மாயீலிய்யா என அழைக்கப்படுகின்றது. மேலதிக தகவல்களுக் (( عقيدة الدروز عـرض ونقض تأليف : الدكتور محّمد أحمد الخطيب– ( ١ / ١٤)) என்ற நூலைப் பார்க்கவும்.

ஒரு இமாம் உயிருடன் இருக்கின்ற போதே தனக்கு வாரிசாக வரும் இமாம் யார் என்பது பற்றி அறிவிப்பார். அது அல்லாஹ்வின் புறத்தில் இருந்து பெறப்படும் பதவி என்றெல்லாம் தத்துவம் கூறி வந்த ஷீஆக்கள், பின் சந்ததிகள் இன்றி மரணித்த தமது பதினோராவது இமாம் ஹஸன் அல்அஸ்கரி என்பவரின் மரணத்தோடு நிலை குலைந்து போனார்கள். அதனால் மேற்படி இரு பிரிவினரையும் விட்டு வெளியேறி பன்னிரெண்டு இமாம்கள் கோட்பாட்டை நிறுவ வேண்டிய கட்டாய நிலைக்குத் அவர்கள் தள்ளப்பட்டனர். இங்குதான் கற்பனை மஹ்திக் கோட்பாடு கர்ப்பமாகிப் பிறந்தது.

ஹஸனுல் அஸ்கரியின் மரணத்தோடு ஷீஆக்களின் இமாமத் கொள்கையும் மரணத்தை தழுவியது. அவர்கள் தமக்குள் பலவாறாக முரண்பட்டுக் கொண்டனர். இந்நிலையில்தான் பன்னிரெண்டு இமாம் கோட்பாட்டை இந்தப் பிரிவினர் நிறுவினர். இவர்கள் “அஷ்ஷீஆ அல்இஸ்னா அஷரிய்யா”,“அல்இமாமிய்யா” “அஸ்ஸபயிய்யா” போன்ற பெயர்களில் அழைக்கப்பட்டனர். தற்காலத்தில் ஷீஆக்கள் என பொதுவாக அழைக்கப்படுவோர் இவர்கள்தாம்.

ஹிஜ்ரி இரண்டாம் மூன்றாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த இமாம்களாலும், அஹ்லுஸ்ஸுன்னா இமாம்களின் நூல்களிலும் ராஃபிழா, ராஃபிழீ, தஷய்யுஃ போன்ற வார்த்தைப் பிரயோகங்கள் இடம் பெற்றிருப்பதை நாம் அவதானிக்க முடிகின்றது. வரலாற்றில் மிக மோசமான பிரிவினராகக் கணிக்கப்பட்ட இப்பிரிவினர் இவ்வாறான வார்த்தைக் பிரயோகங்களால் அடையாளம் காட்டப்பட்டனர் என்பதை உறுதி செய்கின்றது.

இந்தப் பிரிவினரும் ஏனைய ஷீஆப் பிரிவுகளும் சுன்னாவாதியான ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்கள் மீது பொய்யான பல செய்திகளைத் திரித்தும் அபாண்டங்களைக் கட்டவிழ்த்தும் மக்களை இன்றுவரை வழிகெடுத்து வருகின்றனர் என்பதே அஹ்லுஸ்ஸுன்னனா அறிஞர்களின் முடிவாகும். (உசூலுல் இஸ்மாயீலிய்யா)

موسوعة شبه الرافضة والرد عليها – (١ / ١٨)

**இரண்டாவது கால கட்டம்:**
**(ஹி. 260 இல் இருந்து ஆரம்பமாகும்)**

இந்த ஆண்டில்தான் ஷீஆக்களின் நம்பிக்கையில் வந்த பதினோராவது இமாம் அல் ஹஸனுல் அஸ்கரி என்பவர் பின்வாரிசுகள் இல்லாதவராக மரணிக்கின்றார். ஒரு இமாம் உயிருடன் இருக்கும் நிலையில் தனக்குப் பின்னால் இமாமாக வருபவரை நியமிக்காது மரணிப்பதில்லை என்ற ஷீஆக்களின் அடிப்படை நம்பிக்கைக்கு மாற்றமாக நடந்த இவரது மரண நிகழ்வு ஷீஆக்களுக்கு ஒரு ஏமாற்றமாகவே அமைந்தது.

இந்நிலையில் இமாமத் பதவி யாருக்கு? எப்படி வழங்குதல்

என்ற பாரிய முரண்பாடுகள் ஷீஆக்கள் மத்தியில் எழுகின்றன. இதன் காரணமாக அவர்கள் பதினான்கு பிரிவுகளாக பிரிந்தனர் என்று சில அறிஞர்களும், பதினைந்து பிரிவுகளாகப் பிரிந்தனர் என்று மற்றும் சிலரும் குறிப்பிடுகின்றனர்.

“இமாம் ஒருவர் இன்றி பூமியானது ஒரு நிமிடமும் பொறுமை காக்காது, இமாம்தான் பூமிக்கு உத்தரவாதம்” என்றெல்லாம் பகுத்தறிவுக்குப் பொருந்தாத பொய்யான கோட்பாட்டை உருவாக்கிய இமாமிய்யாக்கள் மத்தியில் இது தலை சுற்றும் பிரச்சினையாக உருவெடுத்தது.

பின் சந்ததி இல்லாத ஒருவரை பெற்றுள்ள நிலையில் செய்தவறியாது தடுமாறிய ஷீஆக்கள் இமாம் ஒருவரை நியமித்தாக வேண்டும் என்ற நிர்ப்பந்தமான நிலைக்கு தள்ளப்பட்டனர். இதனை சமாளிப்பதற்காக இமாம் ஒருவரை கற்பனையாகப் பிறக்க வைத்தனர்.

அதற்காக முஹம்மத் பின் ஹஸன் அல்அஸ்கரி என்ற பெயரில் பொய்யான ஒரு பாத்திரத்தை கற்பனை செய்து, ஹஸன் அஸ்கரிக்குப் பிறந்த ஒருவர், மக்களை விட்டும் மறைந்து வாழ்வதாகவும், மறுமையின் அடையாளமாக நீதியை நிலைநாட்ட மீண்டும் வருவார், ஆட்சியாளர்களுக்கு அஞ்சியே அவர் பிறந்து ஐந்தாவது வருடத்தில் மறைந்துவிட்டார் போன்ற பல கற்பனைக் கதைகளை அவிழ்த்து அவரே தமது இமாம் எனக் கூறி அவருக்கு இமாமத் பதவியும் வழங்கினர்.

உலகில் பிறக்காத ஒருவருக்கு இமாமத் பதவி வழங்கிய பெருமை ஷீஆ மதப் பூசாரிகளுக்கும் அதனை உண்மை என நம்பி ஆண்டாண்டு காலம் வாழ்ந்து மரணிக்கும் ஷீஆ மத பொது மக்களுக்குமே உரித்தானது. இவர்களுக்கு வால் பிடிப்பவன் எவ்வாறான அறிவுள்ளவனாக இருப்பான் என நாம் சிந்திக்க வேண்டும்!

உலகில் கற்பனையாகப் பிறந்த அந்த மனிதர்தான் இன்றுவரை அவர்களின் இமாமாக கருதப்படுகின்றார்! அவர் ஈராக்கில் சாமிர்ரா மாகாணத்தில் “சுர்ர மன்ரஆ” என்ற இடத்தில் ஹி. 265 முதல் மறைந்து வாழ்கின்றார். அவர் ஆட்சியாளர்களின் அச்சம் காரணமாக மறைந்துவாழ்கின்றார், மறுமை நெருங்கும் போது உலகில் அநீதியை இல்லாதொழித்து நீதியை நிலைநாட்ட வருவார், புதிய சமயத்தை தோற்றுவிப்பார், அஹ்லுஸ் ஸுன்னாக்களைக் கொன்றொழிப்பார் என்றெல்லாம் அறிவில்லாத ஷீஆக்களிடம் கதை அளந்து காலம் கடத்தி வருகின்றனர்.

பருவ வயதை அடையாத வெறும் ஐந்து வயதை அடைந்த ஒருவருக்கு இமாமத் பதவி வழங்குவது ஷீஆக்களின் அடிப்படைக் கோட்பாட்டுக்கு நேர்முரணானதாகும் என்பதை இங்கு நாம் கவனத்திற் கொள்ள வேண்டும்.

எனக்கொரு சந்தேகம். இவர் வருகின்ற போது இவரின் வயது ஆயிரத்தையும் தாண்டிய நிலையில் அல்லவா இருப்பார். குர்ஆன் குறிப்பிடும் ஷைதான், நல்லடியார் நபி ஈஸா (عليه السلام) அவர்கள், ஹதீஸ் குறிப்பிடும் கொடியவன் தஜ்ஜால் போக இந்த மஹ்தியை ஷீஆக்கள் இணைத்திருப்பது என்ன அடிப்படையில் எனத்தேடினால் அவர்கள் அவரை வெறும் கற்பனையின் அடிப்படையில்தான் இணைத்துள்ளனர். இது காணல் நீர் தத்துவமாகும்.

அப்படியானால் இவரது வயதுக்கு இவர் உயிர் வாழ்வது சாத்தியமா என்ற மற்றொரு கேள்வியும் எழுகின்றது. இப்படிப் பார்க்கின்ற போது கற்பனையில் உருவாக்கியது கற்பனையாகவே கரைந்துவிடும் என்பதில் சந்தேகமில்லை.

அவ்லியா வழிபாட்டுக்காரர்களும் இவ்வாறுதான் கற்பனை அவ்லியாக்களை உருவாக்கி கப்றுகள் கட்டி வணங்குவதோடு பாமர மக்களையும் ஏமாற்றுகின்றனர். இந்த கற்பனைப் பாத்திர உருவாக்கத்தில் ஷீஆக்களோடு இவர்கள் பாரிய அளவு உடன் படுகின்றனர் என்பதே உண்மை.

ஷீஆக்கள் தமது கற்பனை இமாமை மறுமையில் தேடினாலும் அவரைக் கண்டு கொள்ள முடியாது. அவ்லியாக் காவலர்களும் அவ்வாறே!

# அல் கைபா الغيبة கோட்பாட்டின் தோற்றம்

பப

ஹி: 260 இல் மரணமான ஹஸன் அலி அஸ்கரி என்ற ஷீஆக்களின் பதினோராவது இமாமின் மரணத்தின் பின்னரே முற்றுப் பெற்ற பன்னிரெண்டு இமாம்கள் கோட்பாடும், மறைந்து வாழும் இமாம் மஹ்தி கோட்பாடும் ஷீஆக்கள் மத்தியில் தோற்றம் பெறுகின்றது.

அவரது மறைவிற்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் அதாவது ஹி: 255 இல் ஹஸன் அல்அஸ்கரிக்கு முஹம்மத் என்ற ஒரு மகன் பிறந்ததாகவும் அவர் தந்தையின் காலத்தில் ஈராக்கில் (சுர்ர மன் ரஆ) என்ற பிரதேசத்தில் தனது சிறுபராயத்தில் இருந்தே மக்களின் பார்வையில் இருந்து மறைந்து வாழ்வதாகவும், அவர் மறுமை நெருங்குகின்ற போதுதான் வெளிப்படுவார் என்றும் கதை கட்ட வேண்டிய நிலை ஷீஆக்களுக்கு ஏற்பட்டது.

இந்நிலையில், மரணித்த இமாம் அஸ்கரி அவர்கள் மரணிக்கவில்லை, மக்களின் கண்பார்வைகளை விட்டும் அவர் மறைந்து வாழ்கின்றார் போன்ற கற்பனைக் கோட்பாடுகளை முதல் கட்டமாக உருவாக்கி பின்னர் ஒரு மகனை கற்பனையாக உருவாக்கினார்கள். இதுவே ஷீஆ மதத்தில் الغـــيـــبة "அல்கைபா" மறைவுக்கோட்பாடு என அழைக்கப்படுகின்றது.

இந்தக் காலங்களில் இமாம் உயிருடன் இருக்கும் போது வழங்கப்பட்டு வந்த ஐந்தில் ஒரு பகுதி கனீமத் பொருள்களில் இருந்து ஒரு பகுதியை அவரது இடத்தில் இருந்து அவருக்குப் பிரதிநிதியாக செயல்பட்ட மத குருக்கள் பெற்று அவற்றைத் தமக்குள் பிரித்துக் கொண்டனர்.

கி.பி. 16 ஆம் நூற்றாண்டு காலத்தில் மதத்தின் பெயரால் மக்களின் சொத்துக்களை முடக்கிய பிரபுத்துவ முறைமையை இது ஞாபகப்படுத்துகின்றது.

فمنهم من قال: "إنّ الحسن بن علي حيّ لم يمت، وإنّما غاب وهو القائم، ولا يجوز أن يموت ولا ولد له ظاهر، لأنّ الأرض لا تخلو من إمام" [فرق الشّيعة: ص٩٦، المقالات والِفرَق: ص١٠٦.]. فوقفت هذه الِفرقة على الحسن العسكري وقالت بمهديته وانتظاره كما هي العادة عند الشّيعة بعد وفاة كلّ إمام تّدعي إمامته، وذهبت فرقة أخرى إلى الإقرار بموته، ولكّنها زعمت أّنه حيّ بعد موته، ولكّنه غائب وسيظهر [فِرق الشّيعة: ص٩٧، المقالات والِفرَق: ص١٠٧.]، بينما فِرق أخرى حاولت أن تمضي بالإمامة من الحسن إلى أخيه جعفر [المقالات والفرق: ص١١٠.]، وأخرى أبطلت إمامة الحسن بموته عقيًما [انظر: المقالات والفرق: ص١٠٩، فرق الشّيعة: ص ١٠٠–١٠١

أما الإثنا عشرّية فقد ذهبت إلى الّزعم بأن للحسن العسكري ولًدا "كان قد أخفى (أي الحسن) مولده، وستر أمره لصعوبة الوقت وشّدة طلب السّلطان له.. فلم يظهر ولده في حياته، ولا عرفه الجمهور بعد وفاته" [المفيد/ الإرشاد: ١٠٠٥آ+٣.]

இந்தக் கோட்பாட்டை நம்பியோர் பதினோராவது இமாமாகிய (ஹஸன் அல்அஸ்கரி) என்றழைக்கப்படும் ஹஸன் பின் அலி மரணிக்கவில்லை என்றும், அவர் மக்களை விட்டும் மறைந்துள்ளார், அவர், (القـــــــــائم அல்காயிம்) என்றும் நிலையானவர், அவருக்கு சந்ததிகள் இன்றி அவர் மரணிப்பது சாத்தியமற்றது. பூமியானது இமாமின்றி கனப்பொழுதும் நிலைத்திருக்க முடியாதல்லவா? என வாதிட்டு இவரை மறைந்து வாழும் இமாம் என முதலாவதாக நம்பிக்கை கொண்டனர்.

மற்றொரு பிரிவினர் இல்லை இல்லை, அவர் மரணித்து விட்டார், ஆனால் மரணத்தின் பின் மீண்டும் உயிர் பெற்று வரும்வரை மறைந்து வாழ்கின்றார், அவர் இமாம் காயிப் (إمـام غـائـب) மறைந்து வாழும் இமாம் ஆவார். இவர் ஒருநாள் வெளிப்படுவார் என்றனர்.

இவர்களில் அல்இஸ்னா அஷரிய்யா என்ற பன்னிரெண்டு இமாம்கள் நம்பிக்கைப் பிரிவினர் இதன் தெளிவு பற்றி விபரிக்கின்ற

போது ஹஸனுல் அஸ்கரிக்குப் பிறந்த முஹம்மத் பின் ஹஸன் என்ற மகனை அவர் மறைத்துவிட்டார், அவர் பிறந்தது பற்றிய தகவலை இமாம் அவர்கள் யாருக்கும் தெரியப்படுத்தவில்லை , ஆட்சியாளர்கள் அவரது மகனைத் தேடி வலை வீசியதன் காரணமாகவே அவரது அமைவிடம் பற்றி அவர் அறிவிக்கவில்லை என பிறக்காத ஒரு குழந்தையைக் கற்பனையாக ஹி: 255 இல் பிறக்க வைத்து அவரை ஒரு கற்பனை மஹ்தியாக இன்றுவரை நம்பி வருகின்றனர். இந்தக் கோட்பாடு ஹி: 260 இல் மரணித்த பதினொராவது இமாமுக்குப் பின்னர் நடந்ததாக ஷீஆமதப் புராணத்தில் பதிவு செய்யப்படுகின்றது.

இவரைப் பற்றி பேசுகின்ற போதும் இவரது பெயர் இடம் பெறும் போது عجل الله فـــــــــــــرجه அல்லாஹ் இவரது வருகையை அவசரப்படுத்துவானாக என்று குறிப்பிட்டு ஷீஆக்கள் பிரார்த்தனை செய்வார்கள்.

நூல்களில் இந்த இமாமின் பிரார்த்தனைக் குறியீடாக ( عـــج ) என சுருக்கமாக எழுதுவார்கள். இவ்வாறு இந்த கற்பனை இமாமை நம்பி வாழும் மதத்தினர்தான் ஷீஆக்கள்.

இவரைத்தான் ஷீஆக்கள் ஒரு மஹ்தி என்றும், அவர் மறுமையின் அடையாளமாக வருவார் என்றும், அவர்தான் அலி(ﷺ) அவர்களின் ஆட்சியை அபகரித்துக் கொண்ட கலீஃபாக்களான அபூ பக்கர் ஸித்தீக், உமர் பாறூக்(ﷺ) ஆகியோரை அவர்களின் மண்ணறைகளில் இருந்து அப்புறப்படுத்தி அவர்கள் மீது ஹத் எனப்படும் குற்றவியல் தண்டனை நிறைவேற்றுவார், சுன்னி முஸ்லிம்களைக் கொத்து கொத்தாகக் கொன்று குவிப்பார், இப்போதுள்ள இஸ்லாமல்லாத வேறு ஒரு சமயத்தை தோற்றுவிப்பார் என்றெல்லாம் நம்புகின்றனர்.

இவர் ஒரு கற்பனைப் பாத்திரம், இவர் எப்படி இன்றுவரை வரவில்லையோ அவர் இனியும் வரமாட்டார், மறுமை வரை இது நடக்கவே நடக்காது என்பது அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்களின் உறுதியான நிலைப்பாடாகும். அஹ்லுஸ் சுன்னாக்கள் நம்பும் மஹ்தி மறுமையின் அடையாளமாக இனித்தான் பிறப்பார்.

ஷீஆக்களில் மற்றொரு பிரிவினர் இவரின் இமாமத் செல்லுபடியற்றது என்றும் அவரது சகோதரர் ஜஃபருக்கே இமாமத் செல்லுபடியானது என்றும் வாதிடுவதைப் பார்க்கின்ற போது பின்சந்ததி அற்றவராக மரணித்த அல்அஸ்கரியின் மரணத்தின் பின்னால் ஷீஆக்களின் இமாமிய்யாக் கோட்பாட்டு வழிமுறையில் பாரிய முரண்பாடுகள் தோன்றியுள்ளன என்பதை அறியலாம்.

(தழுவல்: கலாநிதி: நாஸிர் அல்கிஃபாரி அவர்களின் உசூலு மதாஹிபிஷ்ஷீஆ அல் இமாமிய்யா)

أصول مذهب الشعية الإمامية الإثني عشرية عرض ونقد – (٢ / ٨٢٠)

**الغـيـبة** கோட்பாட்டின் பின்னணியை ஆராய்ந்தால் சந்ததிகள் அற்ற பதினொராவது இமாம் ஹஸன் அஸ்கரி முக்கியமானவராக விளங்குகின்றார்.

இவருக்கு சந்திகள் இருந்திருப்பின் பன்னிரெண்டு இமாம்கள் என்ற கோட்பாடு சில வேளை பதினைந்து, பதினாறு.... இமாம்கள் கோட்பாடாகவும், பரம்பரையின் பரம்பரைக் கோட்பாடாகவும் கூட நீண்டு சென்றிருக்கும் நிலை ஷீஆக்கள் மத்தியில் வளர்ந்திருக்கும். நல்லவேளை அவரோடு நிறுத்திக் கொண்டார்கள்.

1250 வருடங்களுக்கும் மேலாக ஒருவரைத் தேடி கண்டு பிடிக்க முடியாத ஷீஆக்களின் கற்பனையில் ஆரம்பித்த மஹ்திக் கொள்கை கடைசியில் காணல் நீராகவே தொடரும். கற்பனையில் ஆரம்பிக்கும் அனைத்துக் கோட்பாடுகளுக்கும் இதுவே தலைவிதியாகும்.

மஹ்திக் கொள்கை பொய்யெனத் தெரிந்தும் அதற்கு பல ஆதாரங்களை தாமாக உருவாக்கி ஒன்றும் அறியாத பாமர மக்களை 1250 வருட காலத்திற்கும் மேலாக நல்லவர்களான அஹ்லுல் பைத்தினர் பேரில் அப்பாவிகளை ஏமாற்றி வரும் ஷீஆக்கள் உண்மையில் வரலாற்றுப் பொய்யர்கள் என்பதை நிரூபிக்க இந்த மஹ்திக் கொள்கை மாத்திரம் போதுமான சான்றாகும். அதனால்தான் அறிஞர்கள், “ஷீஆ மதம் என்பது மூன்றெழுத்துக்கள் மீது கட்டமைக்கப்பட்ட வழிகேட்டுத் தத்துவமாகும்” எனக் குறிப்பிடுவார்கள்.

# الغيبة கோட்பாடு இரு நிலைகளைக் கொண்டது

**55**

ஒன்று الغيبة الصـــــــــغرى சிறிய கைபா காலப் பகுதி. இக்காலப் பகுதியில் மறைந்த இமாமின் பிரதிநிதிகளாக உஸ்மான் பின் ஸயீத் அல் உமரி, அவரது மகன் முஹம்மத் பின் உஸ்மான், மற்றும் ஹுஸைன் பின் ரூஹ் ஆகிய மூவரோடு இன்னும் சிலரும் காணப்பட்டனர்.

இக்காலப் பகுதியில் இவர்கள் பொதுமக்களின் கேள்விகள், விபரங்களை சேகரித்து இமாம் இருக்கும் இடம் சென்று அதற்கான தெளிவைப் பெற்று மக்களுக்கு சமர்ப்பித்தனராம்.

இறுதிப் பிரதிநிதியாக விளங்கிய அலி பின் முஹம்மத் அஷ்ஷம்மரி (என்பவர் ஹிஜ்ரி 329 இல் இமாமிடம் இறுதியாக ஒரு கடிதத்தைப் பெற்றதாகவும் அதில், இமாம் அவர்கள் الغيبة الكبرى أو التامة <u>அல்கைபத்துல் குப்ரா</u> அல்லது <u>அத்தாம்மா பெரிய மறைவு, பூரண மறைவு</u> பற்றி அறிவித்ததாகவும், அவர்கள் மறுமை நாளின் அடையாளமாக தான் வருவதாக அவர் அறிவித்ததாகவும் ஷீஆ மதப் புத்திசாலிகளிடம் இந்த புத்திஜீவி அறிவித்ததாக நம்புகின்றனர்.

ஹி: 329 இற்குப் பின்னால் இன்று வரையும் உள்ள காலம் இமாம் வராத நீண்ட இடைவெளிக் காலமாக இருப்பதனால் அதற்கு الغـيـــبة الكـــبرى أو الـــتامة கைபா குப்ரா என்று ஷீஆக்கள் கூறுகின்றனர். இந்நிகழ்வு வரை மறைந்த தமது இமாம் முஹம்மத் அஸ்கரியிடம் வஹியின் செய்திகளைப் பெற்றதாக அவர்கள் குறிப்பிடுகின்றனர்.

வரும் காலங்களில் நமது மஹ்தியை தீவிரவாதிகள் கடத்திச் சென்றுள்ளனர் என கதைவிடுவார்கள். அதையும் அந்த மந்தப் புத்திகள் நம்பி வாழத்தான் போகின்றனர். யாரிடம் சொல்லி அழ என்ற நிலையில் இருக்கும் இந்த மொக்குக் கோட்பாட்டைப் பாதுகாக்க எத்தனை குழப்பங்கள் உருவாக்கப்பட்டு, எத்தனை உயிர்கள் பலியாக்கப்படுகின்றன என்பது பற்றி சிந்தித்தால் யூத சதியின் யதார்த்தம் தெரிந்து விடும். மேலதிக வாசிப்பிற்காக,

أثر اليهود والنصارى والمجوس في التشيع – (١ / ٣٩٣)(السيد أبو علي المرتضى بن سالم الهاشمي

இது பற்றித்தான் குமைனி தனது பிரசங்கம் ஒன்றில்,

قد مر على الغيبة الكبرى لإمامنا المهدي أكثر من ألف عام، وقد تمر ألوف الســـنين قبل أن تقتضى المصلحة قدوم الإمام المنتظر في طول هذه المدة المديدة، (( أصول وتاريخ الفرق – (١ / ٢٧٠))

“நமது இமாம் மஹ்தியின் பெரிய கைபா மறைவு காலம் ஆயிரம் ஆண்டுகளையும் தாண்டியுள்ளது. சில போது பல்லாயிரம் ஆண்டுகளும் செல்லலாம். இவ்வாறான நீண்ட காலங்கள் (தாமதமாவது) இமாமின் வருகையில் உள்ள ஒரு நன்மைக்காகத்தான்.” (குமைனி).

## அல்கைபா கோட்பாட்டின் சூத்திரதாரி

மறைந்து வாழ்கின்ற மஹ்திக் கோட்பாட்டை உஸ்மான் பின் ஸயீத் அல் உமரி என்பவனே உருவாக்கினான் என்று சில அறிஞர்களும், பனு நுமைர் கோத்திரத்தைச் சேர்ந்த முஹம்மத் நுஸைர் என்பவர்தான் உருவாக்கினார் என்று மற்றும் சிலரும் குறிப்பிடுகின்றனர். (நாஸிர் அல்கிஃபாரி– உசூலு மதாஹிபிஷ்ஷீஆ)

சவூதி அரேபிய ஆய்வாளரான அஷ்ஷைக் சுத்ரி அவர்கள் இவ்வாறு தெளிவுபடுத்துகின்றார்கள்.

في خِضَمّ هذه الحيرة والاضطراب التي يعيشها علماء الشيعة , قام رجلٌ يُدعى ( عثمان بن سعيد العمري ) وادَّعى أن للحسن العسكري ولدًا في الخامسة من عمره , مختفيًا عن الناس لا يظهر لأحد غيره , وهو الإمام بعد أبيه الحسن , وأنَّ هذا الطفل الإمام قد اتخذه وكيلاً عنه في قبض الأموال , ونائبًا يجيب عنه في المســـائل الدينية ، ولما مات عثمان بن سعيد ( سنة ٢٨٠ ) ادَّعى ابنه محمد بن عثمان نفس دعوى أبيه. ولما توفي محمد ( ســـنة ٣٠٥ ) خلفه الحسـين بن روح النوبختي في نفس الدعوى , ولما توفي ( سنة ٣٢٦ ) خلفه أبو الحسـن علي بن محمد السمري ( سنة ٣٢٩ ) وهو آخر المدَّعين للنيابة عند علماء الشيعة الإمامية , ولما كثر المدَّعون للبابية من أجل الأرصدة الباهرة من الأموال , قال علماء الشــــيعة بانقطاع البابية ووقوع الغيبة الكبرى بوفاة الســمري (عقائد الشـيعة الاثنى عشـرية ١٣٣ سؤالاً وجوابًا تأليف \ عبد الرحمن بن سعد الشثري ))

ஷீஆக்கள் இமாம் இன்றி தடுமாற்றத்திலும் குழப்பத்திலும் இருந்து கொண்டிருந்த போது ஷீஆ ஆலிம் என்று அறியப்பட்ட உஸ்மான் பின் ஸயீத் அல்அம்ரி என்பவன் ஹஸன் அஸ்கரி இமாமுக்கு ஐந்து வயது மகன் ஒருவர் இருந்ததாகவும், அவர் மக்களின் கண் பார்வைகளை விட்டும் மறைந்து வாழ்வதாகவும் அந்தச் சிறுவனே மக்கள் தன்னிடம் கொண்டு வரும் பணங்களை சேகரிக்க தன்னை அவனுக்கு பிரதிநிதியாக எடுத்துள்ளதாகவும் மார்க்க விவகாரங்களில் எழுகின்ற பிரச்சினைகளுக்கு பதில் சொல்லப் பணித்துள்ளதாவும் கதை பரப்பி செயல்பட்டு வந்தான். இவன் ஹி: 280 இல் மரணித்ததும் அவனது மகன் முஹம்மத் என்பவன் தனது தந்தையின் அதே வாதத்தை முன்னிலைப் படுத்தினான். அவன் ஹி: 305 இல் மரணித்த போது ஹுஸைன் அந்நவ்பக்தி என்பவன் செயல்பட்டான். அவனும் ஹி: 326 மரணித்ததும் அபுல் ஹஸன் அஷ்ஷம்மரி என்பவன் இமாமின் பிரதி நிதியாக தன்னை நிலை நிறுத்தினான். அவன் ஹி: 329 இல் மரணித்த போது தன்னிடம் இமாம் ஒரு கடிதத்தை ஒப்படைத்து இமாம் அவர்கள் மறுமையின் அடையாளமாக வருவதாகக் கூறியதாக கதைவிட்டான். இவனது மரணத்தோடு மறைந்த இமாமின் பிரதி நிதிகள் என்ற முறைமை முடிவுக்கு வந்தது.

وكان هؤلاء النواب عن الإمام يَتلَّقون أسئلة الســـــفهاء , كما يتلقفون أموالهم !! ويأتون بأجوبتها وإيصـــالها من الإمام المنتظر ويســـمونها ( توقيعات ) وهي خطوط إمامهم المنتظر بزعمهم (١٢٧ ) اعتقاد الشيعة الاثنى عشرية سؤال وجواب – (١ / ٣ )

இந்த மறைந்த மஹ்தியின் பிரதி நிதிகளாக செயல்படுவோர் பொதுமக்களின் கேள்விகளை இமாம் மஹ்தி மறைந்திருக்கும் இடத்திற்கு எடுத்துச் செல்வார்கள், அவரது பங்குப் பொருட்களை சேகரித்துக் கொள்வார்கள். இமாமிடம் இருந்து கேள்விகளுக்கான பதில்களை கற்பனை மஹ்தி இமாமிடமிருந்து பெற்று மக்களுக்கு சேர்ப்பிப்பார்கள். அதற்கு அவர்கள் –தவ்கீஆத் – ஒப்பங்கள்– என அழைத்துக் கொள்வார்கள். அவர்களின் நம்பிக்கைப் படி அவை அவர்களின் இமாம்களின் கையெழுத்துக்களாகும். அது அவரது ஒப்புதல்கள், அங்கீகாரங்களை குறிப்பதாகும். இந்தக் காலம் ஷீஆ மத சிந்தனையில் الغيبة الصـــغرى என்று அழைக்கப்படுகின்றது. இதற்கு பின்னர் ஆரம்பாகியதுதான் الغيبة الكبري / التامة காலப் பகுதியாகும். (அஸ்ஸுத்துரி)

இது பற்றி விபரிக்கும் டாக்டர் அல்கிஃபாரி அவர்கள்: ஹிஜ்ரி மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஷீஆக்களின் பேரிறிஞர்கள் என அழைக்கப்படும் "அந்நவ்பஹ்தி, அல்கும்மி ஆகிய இருவரின் காலப்பகுதியாகும். மஹ்தி பற்றிய இவர்களின் தகவல்கள் இங்கு முக்கியத்துவம் பெறுகின்றன. கலாநிதி அல்கிஃபாரி அவர்கள் ஷீஆக்களின் மூல நூல்களில் இருந்தே இந்தக் கருத்துக்களை பதிவு செய்துள்ளார் என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.

மறைந்து வாழும் மஹ்தி பற்றி இமாம் தஹபி (ரஹ்) அவர்களை மேற்கோள்காட்டி ஷேக் அல்வான் அவர்கள் இவ்வாறு பதிவிட்டுள்ளார்கள்.

والله وهم في انتظاره من أربع مئة وسبعين سنة، ومن أحالك على غائب لم ينصفك فكيف بمن أحال على مستحيل والإنصاف عزيز، فنعوذ بالله من الجهل والهوى ( أحاديث يحتج بها الشيعة – ١ / ٦٧ )

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! மறைந்த தமது இமாமுக்காக ஷீஆக்கள் பல நூறு வருடாங்கள் காத்துக் கொண்டிருக்கின்றனர்.

பொதுவாக மறைவான ஒன்றின் பக்கம் உனக்கு வழிகாட்டுபவனையே உன்னால் நம்பமுடியாதிருக்கின்ற போது, சாத்தியமற்ற ஒன்றின் பக்கம் உனக்கு வழிகாட்டுபவனை எப்படி நம்ப முடியும்? மனோ இச்சை, மற்றும் மடமையில் இருந்து அல்லாஹ் நம்மைப் பாதுகாக்கட்டும்."

(ஷேக் அல்வான்)

ஹஸன் அல் அஸ்கரி என்ற இமாம் மலராக இருந்து மரணித்த காரணத்தால் அவருக்குப் புதல்வர் இருந்தார், மறைந்து வாழ்கின்றார் போன்ற கூப்பாடுகள் ஷீஆக்கள் எதிர்பார்க்கின்ற மஹ்தி வெறும் கற்பனைக் கதைகளாகும் என்பதே இஸ்லாமிய வரலாற்று ஆராய்ச்சியாளர்களின் முடிவாகும்.

கற்பனையான ஒன்றை உள்ளது போல் நம்பி வழி கெட்ட ஷீஆக்களின் பின்னால் செல்லும் இலங்கை ஷீஆக்களின் மூளைகள் இயங்கும் விகிதம் பற்றி என்ன கூறலாம்?



UU

# பாத்தினிய்யா வழிகேட்டை நியாயப்படுத்த ஒரு ஹதீஸ்

பொதுவாக வழி கெட்ட பிரிவினர்கள் தமது வழிகேட்டை நியாயப்படுத்திட தமக்குச் சாதகமாகத் தெரிகின்ற குர்ஆன் மற்றும் ஹதீஸ் வசனங்களை திரிபுபடுத்தி விளக்கமளிப்பது இயல்பாகும்.

இதில் பாதினிய்யாக்களும் விதிவிலக்கில்லை என்பதை நிரூபிக்கும் முகமாக அபூஹுரைரா(ரலி) அவர்கள் அறிவிக்கின்ற பின்வரும் ஹதீஸை தமது வழிகேட்டிற்கு ஆதாரமாகக் கொள்வார்கள்.

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ حَفِظْتُ مِنْ رَسُولِ اللهِ صلى الله عليه وسلم وِعَاءَيْنِ فَأَمَّا أَحَدُهُمَا فَبَثَثْتُهُ ، وَأَمَّا الآخَرُ فَلَوْ بَثَثْتُهُ قُطِعَ هَذَا الْبُلْعُومُ. صحيح البخاري

"அல்லாஹ்வின் தூதரிடம் இருந்து இரண்டு பொதிகளை நான் மனனம் செய்தேன். அதில் ஒன்றை (மக்கள் மத்தியில்) பரப்பி விட்டேன். மற்றொன்று நான் பரப்ப முனைந்தால் எனது நாடி நரம்பு தறிக்கப்படும்" என்றார்கள். (நூல்: புகாரி)

மேற்படி ஹதீஸின் இரண்டாம் பகுதியில் இடம் பெறும் வாசகத்தை பாதினிய்யாக்கள் தமது கொள்கைக்கு துணையாக எடுத்துக் கொண்டனர். இதன் உண்மை நிலை என்ன என்பது பற்றி இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் பின்வருமாறு விளக்கமளிக்கின்றார்கள்.

قال بن المنير جعل الباطنية هذا الحديث ذريعة إلى تصـــــــحيح باطلهم حيث اعتقدوا أن للشريعة ظاهرا وباطنا وذلك الباطن إنما حاصله الانحلال من الدين قال وإنما أراد أبو هريرة

بقوله قطع أي قطع أهل الجور رأسه إذا سمعوا عيبه لفعلهم وتضليله لسعيهم ويؤيد ذلك أن الأحاديث المكتوبة لو كانت من الأحكام الشـــــرعية ما وسعه كتمانها فتح الباري – ابن حجر – (١ / ٢١٧)فتح الباري – ابن حجر

பாதினியாக்கள் தமது அசத்தியக் கொள்கையச் சரிகாண மேற்படி ஹதீஸை ஆதாரமாகக் கொள்கின்றனர். அவர்கள் மார்க்கத்தில் வரும் சான்றுகளுக்கு உள், வெளிப் பொருள்கள் உண்டென வாதிடுகின்றனர். அந்த உட்பொருள் மற்றும் வெளிப் பொருள் தத்துவம் என்பது மார்க்கத்தை விட்டும் முழுமையாக நீங்குவதுதான்.

அபூஹுரைரா(ﷺ) அவர்கள் எனது நாடி நரம்பு தறிக்கப்பட்டு விடும் எனக் கூறியது பாதினிய்யாக் கொள்கையை அல்ல. மாற்றமாக தீய அரசர்கள், கெட்ட மன்னர்கள் போன்றோர் பற்றி வந்துள்ள, அவர்களின் செயற்பாடுகள் இப்படித்தான் அமையும் என்பதாக அறிவிக்கப்பட்டுள்ள அவர்களுக்கு எதிரான செய்திகளை அறிவிக்கின்ற போது அரசர்களால் தனக்கு கொடுமை நேர்வதைத்தான் சொன்னார்கள்.பாதினிய்யா சிந்தனையை அல்ல என இமாம் இப்னுல் முனீர் குறிப்பிடுவதாக இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள். (ஃபத்ஹுல் பாரி)

فالجواب أن هذا الذي كتمه ليس من أمر الشـــــريعة فإنه لا يجوز كتمانها وقد كان أبو هريرة يقول لولا آية في كتاب الله ما حدثتكم وهـــي قوله (إِنَّ الَّذِينَ يَكْتُمُونَ مَا أَنْزَلْنَا مِنَ الْبَيِّنَاتِ وَالْهُدَى مِنْ بَعْدِ مَا بَيَّنَّاهُ لِلنَّاسِ فِي الْكِتَابِ أُولَئِكَ يَلْعَنُهُمُ اللَّهُ وَيَلْعَنُهُمُ اللَّاعِنُونَ [البقـــرة : 159فكيف يظن به أن يكتم شيئا من الشريعة بعد هذه الآية وبعد أمر رسول الله {صلى الله عليه وسلم} أن يبلغ عنه وقد كان يقول لهم (( ليبلغ الشاهد منكم الغائب ))

மற்றொரு பதில்: அபூஹுரைரா(ﷺ) அவர்கள் மறைத்ததாகக் கொள்ளப்படும் அம்சங்கள் ஷரீஆ தொடர்பான விஷயங்கள் அல்ல. அவற்றை மறைக்க முடியாது.

‘எவர்கள் நாம் இவ்வேதத்தில் இறக்கிய அத்தாட்சிகளை நேர்வழியை நாம் தெளிவுபடுத்திய பின்னர் அவற்றை மனிதர்களிடம் யார் மறைக்கின்றார்களோ நிச்சயமாக அவர்களை அல்லாஹ்வும், சாபிமிடுவோரும் சபித்து சாபமிடுகின்றனர். அவனது வசனங்களை மறைப்பது மாபெரும் குற்றமாகும்.’ (அல்பகரா: 159)

என்ற வசனமும்,

“உங்களில் வந்திருப்பவர் வராதவர்களிடம் எற்றிவைக்கவும் என்ற ஹதீஸின் கட்டளையும் வந்திருக்கின்ற போது எவ்வாறு மறைப்பார்கள்.?! நம்பமுடியாது” என இமாம் இப்னுல் ஜவ்ஸி (ரஹ்) அவர்கள்,

كشف المشكل من حديث الصحيحين – (١ / ١٠١٤)

என்ற நூலில் கேள்வி எழுப்புவது பற்றி சிந்திக்க கடமைப்பட்டுள்ளோம்.

அபூ ஹுரைரா(ﷺ) அவர்களை மதம் மாறிய ஒருவராக கதை அளக்கும் பாதினியாக்கள் தமது கொள்கைக்கு சாதகமாக அவர் அறிவிக்கின்ற இந்த செய்தியில் உரிய ஆதாரம் இல்லாமல் இருந்தும் அதனை ஆதாரமாகக் கொள்வது உண்மையில் நகைப்புக்கு இடமான ஒன்றுதான்.

# பாத்தினிய்யாக்களின் உட்பிரிவுகள்

**பொதுவான பார்வை:**

பாதினிய்யா சிந்தனை யாரிடம் இருக்கின்றதோ அவர்கள் அனைவரும் பாதினியாக்கள் என்றே அழைக்கப்படுவர். அந்தவகையில் ஷீஆ, கராமித்தா, இஸ்மாயீலிய்யா, துரூஷ், நுஸைரிய்யா, பஹாயிய்யா, சூஃபிய்யா தரீக்காக்கள், உபைதிய்யா, ஸஃபவிய்யா, ஆகாகானிய்யா, காதியானிய்யா போன்ற அனைத்து பிரிவுகளும் பாத்தினிய்யா பிரிவோடு இணைக்கப்பட்டு பேசப்படுகின்றன.

இஸ்லாத்தின் பெயரால் தோன்றிய பிரிவுகள் எனும் நூலில் நாம் விரிவாக எழுதிய பிரிவுகள் தவிர இஸ்மாயீலிய்யா, நுஸைரிய்யா, கராமித்தா, துரூஷ், உபைதிய்யா போன்ற பாத்தினிய்யா பிரிவுகள் பற்றி பின்வரும் தொடர்களில் விரிவாக விளக்க இருக்கின்றோம். இன்ஷா அல்லாஹ்.

இஸ்லாத்தில் தோன்றிய பாத்தினிய்யாப் பிரிவுகள் மறைமுகமான யூத சதியுடனோ அல்லது பகிரங்க ஆதரவுடனோ தமது கொள்கைகளை முன்னெடுப்பது முடிவு செய்யப்பட்ட நிகழ்வாகும் என்பதை நீங்கள் பின்னர் அறிந்து கொள்வீர்கள்.

# “இஸ்மாயீலிய்யா” பிரிவு ஓர் அறிமுகம்

ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் மூத்த புதல்வரான இஸ்மாயீல் பின் ஜஃபருக்கே இமாமத் தகுதி உண்டு என்று வாதிட்டதோடு அவருக்கு துணையாகவும் செயற்பட்ட இந்தப் பிரிவினர் “இஸ்மாயீலிய்யா” என பிற்காலத்தில் அழைக்கப்பட்டனர்.

**இஸ்மாயீலிய்யாக்கள் பற்றி சில குறிப்புக்கள்.**

அறிஞர் ஜஃபர் ஸாதிக் (رضي الله عنه) அவர்களின் மரணத்தின் பின்னால் இமாமாக இமாமத் பதவிக்குத் தகுதியானவர் அவரது மூத்த முதல்வராகிய இஸ்மாயீல் என்பவரா? அல்லது மூஸா அல்காழிமா என்ற ஷீஆக்களுடான வாதப் பிரவாதத்தில் முரண்பட்டுக் கொண்டு இஸ்மாயீலே தகுதியானவர் எனக் கூறிப் பிரிந்த குழுவே இஸ்மாயீலிய்யாப் பிரிவினர்.

இவர்களது நம்பிக்கை தொடர்பாக சில குறிப்புகள் இங்கு தரப்படுகின்றது. எல்லாக் காலத்திற்கும் இறைவெளிப்பாடாக விளங்கும் மறைவான ஞானம் உள்ள ஒரு இமாம் இருந்து மக்களுக்கு ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்த்து அவசியமாகும். அவரே மார்க்கத்தில் அகம், புறம் என்ற இரு நிலைகளையும் அறிந்த வராகவும், ஷரீஆவின் அகச் சான்றுகளின் அறிவுப் பொக்கிஷ மாகவும், அல்லாஹ்வின் வெளிப்பாடாகவும் விளங்குவார்.

ஆதம் நபி முதல் இறுதியாக வந்த முஹம்மத நபி ஸல் அவர்கள் வரையான ஏழு வெளிப்பாட்டாளர்கள் தொடரில் அலி (رضي الله عنه) அவர்கள் ஏழாவது வெளிப்பாடும் இமாமாகும்.

எனவே, அலி (ﷺ) அவர்களில் இருந்து கடத்தப்பட்ட , அவர்களது பரம்பரையில் வரும் ஒருவரே இமாமத் என்ற தூய அந்த உயர் பதவிக்கு தகுதி பெற்றவர்.

அவரது பரம்பரையில் இமாம் பதவிக்கு வருபவர் மறைவான ஞானம் உள்ள மக்கள் மனங்களில் உள்ளதை அறிபவராக இருப்பார். இமாம் இறைவனின் வெளிப்பாடாக இருப்பதால் அவருக்கு குனிந்து மரியாதை செய்வதும், அவருக்கு சுஜூத் செய்வதும் கடமையாகும். சகோதரிகளை, பெண்மக்களை திருமணம் செய்வது, வட்டி உண்பது போன்ற இஸ்லாம் தடை செய்திருக்கும் காரியங்கள் இவர்களின் சமயத்தில் ஆகுமானதே!

**இஸ்மாயிலிய்யாவின் பிரிவுகள்:**

கதைக்குள் கதை என்று கூறுவது போன்று பிரிவுக்குள் பிரிவுகள் என்பது எழுதப்பட்ட விதியாகிவிட்டது. ஷீஆக்களில் இருந்து பிரிந்த இஸ்மாயீலிய்யாக்கள் பல பிரிவுகளாக பிளவுபட்டனர் என்பதே வரலாறு. இவர்கள் உபைதிய்யா ஆட்சியாளர்கள் என்றும் அறியப்படுகின்றனர்.

உபைதிய்யா கலீஃபாவான அல்முஸ்தன்ஸிர் என்பவர் ஹிஜ்ரி 407 ஆம் ஆண்டு மரணித்ததோடு, ஆட்சிக்கு தகுதி யார் என்ற முதலாவது கருத்து முரண்பாடு இஸ்மாயீலிய்யாக்களின் பிளவின் ஆரம்பம் எனச் சுட்டிக்காட்டப்படுகின்றது.

இவரது மூத்த புதல்வரான நஸார் என்பவரை அவர் தீர்த்துக் கட்டுவதன் மூலம் அவரை ஆட்சியில் இருந்து ஓரம்கட்டி அல்முஸ்தஃலீ என்று புனைப் பெயரில் அழைக்கப்படும் அவரது இளைய புதல்வரான அபுல்காலிம் அஹ்மத் என்பவரை அடுத்த ஆட்சியாளராக தெரிவு செய்தது முரண்பாட்டிற்கான அடிப்படைக் காரணமாகக் கூறப் படுகின்றது.

இந்த அடிப்படையில் இஸ்மாயீலிய்யாக்கள் நஸாரிய்யா, இஸ்மாயீலிய்யா முஸ்தஃலிய்யா என்றும் இரு பிரிவுகளாக தமக்குள் பிளவுபட்டனர். நஸாரிய்யா என்போர் மூத்த புதல்வரின் இமாமத்தை நம்பிக்கை கொண்டனர், முஸ்தஃலிய்யாப் பிரிவினர் அல்முஸ்தஃலி என்பவரின் இமாமத்தைச் சரி கண்டனர். இந்த முஸ்தஃலிய்யாப் பிரிவில் இருந்து சுலைஹிய்யூன் என்ற பிரிவு எமனில் தோற்றம் பெற்றது என்பது இன்னொரு குறிப்பாகும்.



UU

## முஸ்தஃலிய்யா பிரிவின் பிளவு

முஸ்தஃலிய்யாப் பிரிவில் இருந்து இரு பிரிவுகள் தற்போதைய எமனில் தோற்றம் பெற்றது.

1. **அத்தாவூதிய்யா:**
   இவர்கள் அழைப்பாளராக இருந்த தாவூத் குதுப் ஷாஹ் என்பவரின் ஆதரவாளர்கள்.
2. **சுலைமானிய்யா:**
   இவர்கள், சுலைமான் பின் ஹஸன் என்பவரைப் பின் தொடர்வோர்.

தாவூதிய்யாக்கள் இந்தியாவில் உள்ள போராக்களின் தலைமைத்துவத்திற்கு தமது கட்டுப்பாட்டை வழங்கும் பிரிவாகும். இவர்கள் பற்றி எழுதும் அறிஞர்கள், وهم أشـــد تطرفًا وأكثر قبورية எமனிலும் இந்தியாவிலும் பஹ்ரா (போரா) என அழைக்கப்படும் இந்தப் பிரிவினர் எல்லைமீறிய மோசமான தீவிர போக்குள்ளவர்களும் அதிகமதிகம் கப்று வணக்கம் புரிவோரும் என்று முஹம்மத் அல்கதீப் தனது ஆய்வில் குறிப்பிடுவது சிந்திக்க வேண்டியதாகும். சுலைமானிய்யா என்ற பிரிவினர் செல்வாக்கு குறைந்த பிரிவாகும்.

பின்வரும் நூல்களில் இருந்து அதிகப்படியான தரவுகளைப் பெற்றுக் கொள்ள பயனுள்ளதாக அமையும்.

القبورية في اليمن \\ تأليف : الدكتور مّحمد أحمد الخطيب
مجموع مؤلفات تاريخ الرافضة \\ المكتبة الشاملة
البهرة \\د.سلمان العتري ))

UU

# பிரித்தாளும் வழியில் யூதர்களின் பங்கு

ஷீஆக்களை தோற்றுவிப்பதில், அவர்களின் கோட்பாடுகளை நிறுவுவதில் யூதக் கைக்கூலியான உஸ்மான்(ரழி) அவர்களின் ஆட்சியில் வெளிப்படையில் இஸ்லாத்தை ஏற்ற குழப்பவாதி அப்துல்லாஹ் பின் ஸபஃ என்பவனுக்கு பிரதான பங்கிருப்பது போன்று பாத்தினிய்யாப் பிரிவுகளில் ஒன்றான இஸ்மாயீலியாக்களை தோற்றுவிப்பதில் யூத மதவாதியான((ميمون بن ديصـــــان الْقَدّاح))மற்றும் அவனது புதல்வன் உபைதுல்லாஹ் பின் மைமூன் அல்கத்தாஹ் ((عـبـيد الله بن مـيمون القداح)) ஆகிய இரு யூதர்களுக்கும் இடையில் காணப்பட்ட இறுக்கமான பரம்பரை உறவு முறை காரணமாக இந்தப் பிரிவுகள் எகிப்தில் பாரிய செல்வாக்குச் செலுத்தியதாக இது தொடர்பாக ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

عبيد الله أبو محمد، أول من قام من الخلفاء الخوارج العبيدية الباطنية الذين قلبوا الاسـلام، وأعلنوا بالرفض، وأبطنوا مذهب الاسماعيلية (٢)، وبثوا الدعاة، يستغوون الجبلية والجهلة. وادعى هذا المدبر، أنه فاطمي من ذرية جعفر الصادق (٣)، فقال: أنا عبيد الله بن محمد بن عبد الله بن ميمون بن محمد بن إسماعيل بن جعفر ابن محمد. ((سـير أعلام النبلاء. تحقيق الأرنؤوط – (١٥ / ١٤١))

அபூ முஹம்மத் என அழைக்கப்படும் உபைதுல்லாஹ் மைமூன் அல்கத்தாஹ் உபைதிய்யா பிரிவைப் பிரதானப்படுத்தும் பாத்தினிய்யாக் கொள்கையை முதல் முதலாக பரவச் செய்யத உபைதிய்யா கலீஃபாக்களில் முதலாமவன். இவர்கள் ஷீஆக் கொள்கையை வெளிப்படுத்தியதோடு இஸ்லாத்தை தலைகீழாக மாற்றி அமைத்தார்கள். மறைமுகமாக இஸ்மாயீலிய்யாக் கொள்கையை பின்பற்றினார்கள். மலைப் பிரதேச மக்களையும் மடயர்களையும் வழிகெடுப்பதற்காக அழைப்பாளர்களை அனுப்பி வைத்தனர். பிரதான இந்த சூத்திரதாரி தன்னை ஒரு ஃபாதிமி அதாவது ஃபாதிமா (ரழி) அவர்களின் பரம்பரையில், ஜஃபர் ஸாதிகில் வழித்தோன்றலில் வந்தவன் என்றும், நான் முஹம்மத் என்பவரின் மகன், எனது தந்தையின் தந்தையர்கள் முஹம்மத் பின் இஸ்மாயீல் பின் ஜஃபர் பின் முஹம்மத் என்றும் வாதிட்டான். (இமாம் தஹபி– ஸியர்)

இந்தப் பரம்பரையை சோடித்து உபைதுல்லாஹ் என்பவனால் முன்னெடுக்கப்பட்ட பிரச்சாரம் வெற்றி காண்கிறது. பிற்காலத்தில் உபைதிய்யா என்ற அரசு மொரோக்கா மற்றும் ஆஃபிரிக்க நாடுகளில் தோற்றம் பெற்று பல நூறு ஆண்டுகள் ஆட்சி செய்தனர் என்பது இவர்கள் பற்றிய வரலாறு.

இவன் உண்மையில் ஒரு யூதனின் மகன், அவனது பெயர் ஸயீத் பின் மைமூன் அலகத்தாஹ் என்பதாகும்.

(இமாம் தஹபி – அஸ்ஸியர்)

தந்தையும் மகனுமாகிய இருவரும் தாம் இஸ்மாயீல் பின் ஜஃபரின் பரம்பரையில் வந்தவர்கள் எனக் கூறிய பொய் பிரச்சாரத்தின் நிமித்தமாக ஷீஆக்களில் இருந்து பிரிந்த இஸ்மாயீலிய்யாப் பிரிவினர் அவர்களைப் பின் தொடர்ந்தனர்.

ஷீஆக்களின் ஆறாவது இமாம் எனப்படும் ஜஃபர் ஸாதிக்(றஹ்) அவர்களின் புதல்வாரன இஸ்மாயீல் பின் ஜஃபர் என்பவரது இமாமத்தை இப்பிரிவினர் நம்புவதோடு, அந்த இமாமத் மறைந்துவாழும் அவரது வாரிசுகளான (கற்பனைப்) பிள்ளைகளுக்கும் கடத்தப்படுவதுடன், பின்னர் அல்மஹ்தி என்றழைக்கப்பட்ட உபைதுல்லாஹ் வரை வந்த இமாம்களையும் வந்தடைந்தது என நம்பிக்கை கொள்வோர் இஸ்மாயீலிய்யா என அழைக்கப்படுகின்றனர்.

மேலதிக தகவல்களுக்காக:

صلاح الدين الأيوبي وجهوده في القضاء على الدولة الفاطمية وتحرير بيت المقدس
المؤلف : د. علي محمد محمد الصَّلاَّبي

இஸ்மாயீலிய்யாப் பிரிவினர் சுன்னாவாதியான ஜஃபர் ஸாதிக் (ரழி) அவர்களின் மூத்த புதல்வர் இஸ்மாயீல் என்பவரின் பெயருடன் இணைத்துப் பேசப்படும் ஒரு பிரிவாக இருப்பது யூதர்களின் மற்றொரு சதியாகும்.

இமாம் அப்துல் காதிர் அல்பக்தாதி அவர்கள் பின்வருமாறு அறிமுகப்படுத்துகின்றார்கள்.

قال عبد القاهر البغدادي في شأن الإسماعيلية: «وهؤلاء ساقوا الإمامة على جعفر وزعموا أن الإمام بعده ابنه إسماعيل» الدولة الفاطمية – (١ / ٣٢)

இவர்கள் ஜஃபர் ஸாதிக் அவர்களுக்கு இமாமத்தை வழங்கினர். அவரைத் தொடர்ந்து அவரது மகன் இஸ்மாயீலுக்கு வழங்கினர். இவர்கள்தாம் இஸ்மாயீலியாக்கள்.

(கலாநிதி: ஸல்லாபி, அத்தவ்லதுல் ஃபாதிமிய்யார்)



## ٥٥

# பாத்தினிய்யாப் பிரிவின் அறிமுகப் பெயர்கள்

முஸ்லிம் அறிஞர்களால் பாத்தினிய்யாக்கள் என அழைக்கப்படும் பெயர்கள் பற்றி இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்ற போது: “இவர்கள் (மலாஹிதா) - நாஸ்தீகர்களான கராமிதா, பாதினிய்யா, இஸ்மாயீலிய்யா, நுஸைரிய்யா, ஹுரமிய்யா, முஹம்மரா” போன்ற பெயர்களால் அழைக்கப்படுவார்கள் என சுட்டிக்காட்டுகின்றார்கள். (பார்க்க: இப்னு தைமிய்யா– இகாமதுத் தலீல்)

பாத்தினிய்யாப் பிரிவின் முக்கிய தலைமைப் பிரிவான இஸ்மாயீலிய்யாக்கள் உலக அளவில் பின்வரும் பெயர்கள் கொண்டு அழைக்கப்படுகின்றனர்.பெயர்கள் மாறுபடுவதால் நம்பிக்கை கோட்பாடு மாறுபடும் என்ற பொருள் கொள்ள முடியாது.

மாற்றமாக, “குஃப்ரியத்” என்ற இறை நிராகரிப்புச் சிந்தனை என்பது இந்தப் பிரிவுகளில் காணப்படும் ஒருமித்த சிந்தனைதான் என்பதைத் தெரிந்து கொள்ள உலக அளவில் அவர்கள் என்னென்ன பெயர்களில் சர்வதேச அளவில் அடையாளப்படுத்தப்படுகின்றனர் என்பது பற்றிய தெளிவும் தரப்படுகின்றன.

- ☞ பலஸ்தீன் – பாஹாயிய்யா
- ☞ எகிப்து – பாத்திமிய்யா, உபைதிய்யா, ஷீஆ.
- ☞ ஈராக், பஹ்ரைன் – கராமிதா, பாத்தினிய்யா, ஷீஆ
- ☞ குவைத் – அல்பஹ்ரா– போரா, போரி

☞ எமன் – சுலைமானிய்யா, மகாரிமா, தாவூதிய்யா, இஸ்மாயீலிய்யா

☞ குராஸான் – மைமூனிய்யா.

☞ எமன் – யாமிய்யா.

☞ ஷாம் தேசம் – நுஸைரிய்யா, அலவிய்யா, துரூஸ், ஸனானிய்யா, தயாமுனா, நஸாரிய்யா,.

☞ இந்தியா – இஸ்மாயீலிய்யா, போரா, அந்நஸ்ஸாரிய்யா,

☞ பாகிஸ்தான் – போரா, ஆஹாகானிய்யா, ஹஷ்ஷாஷீன்

☞ இலங்கை, தென்னிந்தியா – போராபாய்.

☞ அம்மான் – பஹாஹிய்யா, பாபிய்யா

இவை அகீதா தொடர்பான நூல்களைத் தழுவி எழுதப்பட்டவை.



# பாத்தினிய்யா சித்தாந்தம் பற்றி அறிஞர்களின் தீர்ப்புக்கள்

ՍՍ

**இமாம் கஸ்ஸாலி**

இமாம் கஸ்ஸாலி சூஃபித்துவத்திலும் பாத்தினிய்யா சிந்தனையிலும் தனது வாழ்நாளில் பெரும் பகுதியைக் கழித்தவர். பாத்தினியாக்கள் தொடர்பாகவும் அவர்களின் கொள்கை முரண்பாடுகள் தொடர்பாகவும் நிரப்பமான அறிவுள்ளவர். பாத்தினிய்யாக்களின் சீர்கேடுகள் என்ற கருத்தில் அமைந்த நூல் மூலம் இவர்களின் வண்டவாளங்களை முஸ்லிம் உலகுக்கு அறிமுகப் படுத்தியவர்.

இவரது இஹ்யா என்ற நூலில் கஷ்ஃபுடைய அறிவு, வஹ்ததுல் வுஜூத், மற்றும் பல அகீதா தொடர்பான வழிகேடான கருத்துக்கள் இருப்பினும் அதில்தான் பாத்தினிய்யாக்கள் என்ற வழிகேட்டு குழுவின் கருத்துக்களையும் மறுத்துள்ளார். அதில் இருந்துதான் பாத்தினிய்யா தொடர்பான கருத்துக்கள் முன்வைக்கப் படுகின்றன.

وهو صرف ألفاظ الشـــرع عن ظواهرها المفهومة إلى أمور باطنة لا يســـبق منها إلى الأفهام فائدة كدأب الباطنية في التأويلات فهذا أيضـــا حرام وضرره عظيم فإن الألفاظ إذا صرفت عن مقتضى ظواهرها بغير اعتصام فيه بنقل عن صاحب الشرع ومن غير ضرورة تدعو إليه من دليل العقل اقتضـــــى ذلك بطلان الثقة بالألفاظ وسقط به منفعة كلام الله تعالى و كلام رسوله صلى الله عليه و سلم فإن ما يســـبق منه إلى الفهم لا يوثق به والباطن لا ضبط له بل تتعارض فيه الخواطر ويمكن تنزيله على وجوه شتى وهذا أيضـــا من البدع الشـــائعة العظيمة الضرر وإنما قصد أصحابها الإغراب لأن النفوس مائلة إلى الغريب ومستلذة له وبهذا الطريق

توصل الباطنية إلى هدم جميع الشـــريعة بتأويل ظواهرها وتنزيلها على رأيهم كما حكيناه من مذاهبهم في كتاب المستظهر المصـــنف في الرد على الباطنية (( إحياء علوم الدين – (١ / ٣٧))

இமாம் கஸ்ஸாலி அவர்கள் இவ்வாறு விளக்குகின்றார்கள்.

"பாதினிய்யா சிந்தாந்தம் என்பது, ஷரீஆவின் சொற் பிரயோகங்களை விளக்க அதன் வெளிப்படையான பொருள்களை விட்டும் பயன்பாடற்ற மறைவான வேறு ஒரு விளக்கத்தின் பக்கம் அவைகளைத் திருப்பி பிழையான பொருள் வழங்குவதாகும். இதற்கு உதாரணமாக பாத்தினிய்யாக்களின் போக்கைக் கூற முடியும். இது ஹராமான போக்காகும். அதன் தீங்கு மிகப் பாரியது. ஏனெனில், பொதுவாக சொற் பிரயோகங்கள் அவை வேண்டி நிற்கும் வெளிப்படையான பொருள்களை விட்டும் மார்க்கத்தின் காவலரான முஹம்மத் நபி(ﷺ) அவர்களின் விளக்க அடிப்படையிலான அனுமதி இன்றி திசைமாற்றப்பட்டு, தேவையில்லாத, அவசியமற்ற ஒன்றாக அது மாற்றப்படுகின்ற போது, இதனால் மார்க்கத்தில் கையாளப்பட்ட சொற் பிரயோகங்கள் அதன் நம்பகத்தன்மையை இழந்துவிடும். அதனால் அல்லாஹ்வுடைய பேச்சின் பயனும், அல்லாஹ்வின் தூதரின் பேச்சின் பயனும் இல்லாதொழிந்து போகும்..."
(இமாம் கஸ்ஸாலி — அல்இஹ்யா)

இஹ்யா என்ற நூலில் மற்றொரு இடத்தில்,

ومن ادعى فهم أسرار القرآن ولم يحكم التفســـــير الظاهر فهو كمن يدعي البلوغ إلى صدر البيت قبل مجاوزة الباب أو يدعي فهم مقاصـد الأتراك من كلامهم وهو لا يفهم لغة الترك (( إحياء علوم الدين – (١ / ٢٩١))

"எவன் ஒருவன் அல் குர்ஆனுக்கு வெளிப்படையான தஃப்ஸீரை வழங்காது, அதன் உள் மற்றும் இரகசியப் பொருள்கள் பற்றி அறிந்துவிட்டதாக வாதிடுகின்றானோ அவன் வீட்டு வாசல் வழியாக நுழைவதற்கு முன்னர் அந்த வீட்டின், உள் இருப்பதை அறிந்ததாகக் குறிப்பிடுபவன் நிலை போன்றதாகும். அல்லது துருக்கியர் மொழியைக் கற்காது அவர்களின் மொழி விளங்குகின்றது எனக் கூறுவதற்கு ஒப்பானதாகும். (இஹ்யா). இது இமாம் கஸ்ஸாலி அவர்களின் பாத்தினிய்யா சிந்தனை பற்றிய பெறுமதிவாய்ந்த வார்த்தைகளாகும்."

**இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்:**

இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்களின் காலத்தில் மறுமைவரை வரவிருக்கும் பிரிவுகளையும் அவர்களின் கோட்பாடு களையும் அனுபவ ரீதியாகக் கண்டும், விவாதித்தும் இருந்தார்கள் என்று கூறும் அளவு வழிகேட்டு சிந்தனைகளின் ஊற்றுக்கள் புறப்படும் இடம் பற்றி ஆழமாக அறிந்திருந்தார்கள்.

பாத்தினிய்யாப் பிரிவினர் பற்றி குறிப்பிடும் தனது நூல் ஒன்றில் இமாம் அவர்கள் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்.

هؤلاء [ الدرزية ] و [ النصـــيرية ] كفار باتفاق المســـــلمين، لا يحل أكل ذبائحهم، ولا نكاح نسائهم، بل ولا يقرون بالجزية؛ فإنهم مرتدون عن دين الإسلام، ليسوا مسلمين؛ ولا يهود، ولا نصاري، لا يقرون بوجوب الصلوات الخمس، ولا وجوب صوم رمضان، ولا وجوب الحج، ولا تحريم ما حرم الله ورسوله من الميتة والخمر وغيرهما . وإن أظهروا الشـهادتين مع هذه العقائد فهم كفار باتفاق المسلمين .((أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – (٢ / ٣٩٠)

"இவர்கள் அதாவது துரூஸ், மற்றும் நுஸைரிய்யாக்கள் அனைவரும் உலக முஸ்லிம்களின் ஏகோபித்த கருத்தின் படி காபிர்களாகும். அவர்களால் அறுக்கப்பட்டவற்றை உண்ணுவதோ அவர்களின் பெண்மக்களைத் திருமணம் முடிப்பதோ கூடாது. ஏனெனில் அவர்கள் இஸ்லாமிய மார்க்கத்தை விட்டும் மதம் மாறியவர்கள். அவர்கள் முஸ்லிம்கள் அல்லர்; யூதர்களும் அல்லர்; கிரிஸ்தவர்களும் அல்லர். இவர்கள் ஐவேளைத் தொழுகைகள் கடமை என்பதை அங்கீகரிப்பதில்லை, ரமழான் நோன்பு கடமை என்பதை ஏற்பதில்லை, ஹஜ் ஒரு கடமை என்பதை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அல்லாஹ்வும் அவனது தூதரும் ஹரமாக்கிய செத்த பிராணி, சாராயம் (மது) இன்னும் பலவற்றை அவர்கள் ஹராமாகக் கொள்வதில்லை. இவர்கள் (பெயரளவில்) கலிமாவை மொழிந்திருப்பினும் இந்த நம்பிக்கைகளோடு இவர்கள் காபிர்களாகவே இருப்பர்." (இப்னு தைமிய்யா– அஹ்காமுல் முர்தத்)

((أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – (٢ / ٣٩٠)).

**இமாம் இப்னுல் கையிம் (ரஹ்):**

இமாம் இப்னு தைமிய்யாவின் உலகப் பிரசித்தி பெற்ற மாணவர்களில் ஒருவர்தான் இமாம் இப்னுல் கைய்யிம் (ரஹ்) அவர்கள். பாத்தினியாக்கள் பற்றி அவரது பின்வரும் பதிவு முக்கியமானதாகும்.

الباطنية الذين هم من جميع الأديان منســلخون و الرافضــة الذين هم بحبائل الشــيطان متمســكون و من حبل الله منقطعون و على مسـبة أصحاب رسول الله عاكفون و للسـنة و أهلها محاربون و لكل عدو لله و رسوله و دينه مسالمون و كل هؤلاء عن ربهم محجوبون و عن بابه مطرودون أولئك أحزاب الضـــلال و شيعة اللعين و أعداء الرسول و حزبه ((حادي الأرواح إلى بلاد الأفراح – (١ / ١٩٦))

பாத்தினிய்யாப் பிரிவினரும், ஷைதானின் கயிறுகளைப் பற்றிக் கொண்டவர்களான ஷீஆ என்ற ராபிழாக்களும் அனைத்து மதங்களில் இருந்தும் வெளியேறியவர்கள். இவர்கள் அல்லாஹ்வின் கயிற்றில் இருந்து அறுந்துவிட்டவர்கள்,

நபித்தோழர்களைத் திட்டுவதில் தொடர்ந்தும் குறியாக இருப்பவர்கள், சுன்னாவையும் அதன் வழியாளர்களையும் எதிர்த்துப் போராடுபவர்கள், அல்லாஹ்வுடையவும், அவனுடைய தூதருடையவும் அவனது மார்க்கத்தினதும் விரோதிகளோடு சமாதானமாக நடப்பவர்கள்.

இவர்கள் அனைவரும் தமது இரட்சகனை விட்டும் பார்வைகள் மறைக்கப்பட்டவர்கள். அவனது வாசலை விட்டும் விரட்டப்பட்டவர்கள், இவர்கள்தாம் வழிகேட்டின் கூட்டத்தினர், சபிக்கப்பட்ட (ஷைத்தானின்) அணியினர், இத்தூதரினதும் அவரது அணியினரதும் பரம எதிரியினர். (இப்னுல் கைய்யும் – ஹாதில் அர்வாஹ்)

பாத்தினிய்யாக்கள் காஃபிர்கள் எனக் குறிப்பிட்ட இமாம்கள் மற்றும் நூல்களின் சில:



இமாம்: கஸ்ஸாலி – நூல்: (فضائح الباطنية،

இமாம்: இப்னு ஹஸ்ம். ابن حزم – நூல் المحلى

இமாம்: அத்தைலமி الديلمي بيان مذهب الباطنية وبطلانه

இமாம் இப்னு தைமிய்யாவின் பின்வரும் நூல்கள்:

١) أسباب رفع العقوبة لشيخ الإسلام ابن تيمية

٢) مجموع فتاوي لشيخ الإسلام ابن تيمية

٣) إقامة الدليل لشيخ الإسلام ابن تيمية

٤) أحكام المرتد لشيخ الإسلام ابن تيمية

இமாம் இப்னுல் கைய்யிம்:
நூல்கள்:

١) حادي الأرواح إلى بلاد الأفراح لابن القيم –

٢) إغاثة اللهفان لابن القيم

நவீன கால ஆய்வு நூல்கள்:

الإسماعيلية لإحسان إلهي ظهير،

أصول الإسماعيلية للدكتور سليمان السلومي،

طائفة النصيرية للدكتور سليمان الحلبي

# அல் உபைதிய்யா ஆட்சிக் காலம் (ஹி. 299 – 773)

## ஸ்தாபகர் அறிமுகம்

UU

**உபைதிய்யா ஆட்சியின் ஸ்தாபகர் அறிமுகம்:**

பிறப்பு: عبيد الله بن ميمون القدّاح உபைதுல்லாஹ் பின் மைமூன் அல் கத்தாஹ் என்ற உபைதுல்லாஹ் ديصـــــان القداح தைஸான் அல் கத்தாஹ் என்ற ஒரு யூதனின் பரம்பரையில் ஈராக்கின் நகரங்களில் ஒன்றான கூஃபாவில் ஹி: 260 ஆவது வருடம் பிறந்தான். இவனது பெயரில் தொடங்கப்பட்ட ஆட்சிதான் உபைதிய்யா, பாத்திமிய்யா ஆட்சி என்ற பெயரில் பொய்யாக அழைக்கப்படுகின்றது.

உபைதுல்லாஹ் தன்னை அஹ்லுல் பைத்தினரில் உள்ளவர்களான அலி, மற்றும் பாத்திமா(ﷺ) ஆகியோரின் பரம்பரையில் வந்தவனாகப் பொய்ப் பிரச்சாரம் செய்து வெற்றி கண்டதன் பயனாக அவர்களின் ஆட்சியின் பெயரை பாத்திமிய்யா என்றும் அழைத்துக் கொண்டனர். சுன்னத் வழி நடக்காதோர் கொடிய ஷிர்க்கையும், பித்அத்துக் களையும் செய்து கொண்டு தமக்கு அஹ்லுல் பைத்தினர் என்றும், மௌலானாப் பரம்பரை என்றும், சுன்னத் ஜமாத் என்றும் பெயர் நாமம் சூட்டிக் கொண்டது போன்று அஹ்லுல் பைத்தினர்களில் உண்மையான வழியில் நடக்காத இவர்கள் இணைவைப்புக்களையும், நாஸ்தீகத்தையும் பரப்பிக் கொண்டு தம்மை பாத்திமிய்யாக்கள் என்று அழைத்துக் கொண்டனர்.

அஹ்லுல் பைத்தினர் பரம்பரை தொடர்பான உபைதுல்லாஹ் வின் பிரச்சாரம் அரேபிய மொரோக்கோவில் மக்களிடம் எடுபட்டது. மார்க்கம் தொடர்பான அறிவு குறைந்தவர்களான ஷீஆக்களின் வழி வந்தவர்கள் இந்தப் பிரச்சாரத்தால் அதிகம் ஈர்க்கப்பட்டனர்.

அதனை சந்தர்ப்பமாகப் பயன்படுத்திய உபைதிய்யாக்கள் தமது நச்சுக் கருத்தை விதைக்க இனம்காணப்பட்ட ஒரு கூட்டமாக ஷீஆக்கள் காணப்பட்டனர். இவர்கள் ஆரம்பத்தில் மொரோக்கோ விலும், பின்னர் வட ஆபிரிக்காவில் சில காலங்களும் தமது ஆட்சியை ஸ்தாபித்து ஆட்சி செய்தனர்.

பின்னர், எகிப்துக்கு அதனைக் கொண்டு சென்று அங்கும் 200 வருடங்கள் வரை ஆட்சி செய்தனர். இறுதியில் சுல்தான் மாவீரர் ஸலாஹுத்தீன் அல் அய்யூபியிடம் தோல்வியைத் தழுவினர். இவர்களின் ஆட்சி ஹி: 299 இல் தொடங்கி ஹி: 567 இல் முடிவடைந்தது. ஆபிரிக்காவில் மூவரும், எகிப்தில் பதினொரு பேரும் மொத்தமாக 14 பெயர்கள் ஆட்சி செய்தனர். உபைதுல்லாஹ் அல்மஹ்தி என்பவன் இவர்களின் முதல் ஆட்சியாளராகவும் அல்ஆளித் என்பவன் இவர்களின் இறுதி ஆட்சியாளராகவும் பதிவு செய்யப்பட்டுள்ளனர்.

இஸ்லாமிய உம்மத்தின் எதிரிகளோடு இன்றுவரை மறைமுகமாகச் செயற்பட்டு வரும் இந்தக் குழுக்கள் பற்றிய ஆழமான அறிவும் அவை பற்றிய தெளிவும் சுன்னாவாதியாக இருக்கும் ஒரு முஸ்லிமிடம் இருப்பது பர்ழ் ஐன் என்ற நிலையில் கொள்ளப்படும் என்று நினைக்கின்றேன்.

இவர்கள் பற்றிய தேடலில் இவ்வாறான பிரிவுகள் சமகாலத்தில் இஸ்லாத்தினுள் காணப்படுவதை இனம் காணவும், அதன் அந்தரங்க எதிரிகளை அறியவும் வழி செய்யும் என்பதில் சந்தேகமில்லை.

இஸ்லாத்தின் எதிரிகள் இஸ்லாத்தை அழிப்பதற்காக மஸ்ஜிதுள் ளிராரைத் தொடக்கியது போன்று இன்றும் பல அமைப்புக்களை இயக்கி வருகின்றனர். தூய இஸ்லாமிய சிந்தனை வாதிகளை பயங்கரவாதிகளாகவும், சமூக விரோதிகளாகவும் சித்திரிப்பதோடு, வழிகேட்டு சிந்தனைசார் இயக்கங்களைப் போஷித்து வளர்ப்போராகவும் இருக்கின்றனர்.

அந்த வகையில் ஒரு முஸ்லிமிடம் இவை பற்றிய தெளிவு பர்ழ் ஐன் நிலையில் பார்க்கப்படல் வேண்டும் என்பது எமது பார்வையாகும். (அல்லாஹ்வே மிக அறிந்தவன்)

# உபைதிய்யா ஆட்சி ஸ்தாபகர் தொடர்பாக இமாம்களின் கருத்துக்கள்

55

ஒரு முஸ்லிம் ஆய்வாளன் இஸ்லாமிய உம்மத்தின் மறைமுக எதிரிகள் யார்? அதன் வெளிப்படை எதிரிகள் யார்? அவர்களின் வழிகேடுகள் என்ன? என்பது பற்றி எல்லாம் இஸ்லாத்திற்காக தமது வாழ்வை அர்ப்பணித்த சுன்னா அறிஞர்கள் தமக்காக தொகுத்தளித்த நூற்றுக்கணக்கான வரலாற்று நூல்களில் இருந்து முன்வைப்பதன் மூலம் வழிகேடுகளில் இருந்து பொது மக்களைப் பாதுகாக்க முயற்சிக்க வேண்டும்.

அதனை விடுத்து அவசியமற்ற ஆய்வுகள் செய்வதால் இந்த உம்மத்தின் உண்மையான எதிரிகளை அவனாலோ, முஸ்லிம் பொது மக்களாலோ இனங்காண முடியாது போகும். அப்போது ஆய்வாளன் என்று போற்றப்படும் அவனும் முஸ்லிம் சமூகமும் வழிகேட்டில் பயணிப்பதை தடுக்க முடியாது போகும். அதைக் கருத்தில் கொண்டுதான் அறிஞர்களின் கருத்துக்கள் இங்கு எடுத்தெழுதப் படுகின்றன.

உபைதிய்யா ஸ்தாபகராக உபைதுல்லாஹ் பற்றிக் குறிப்பிடும் இமாம் தஹபி (ரஹ்) அவர்கள்:

أَوَّلُ مَنْ قَامَ مِنَ الْخُلَفَاءِ الخَوارِج العَبِيْدِيَّة الباطــــنِيَّةِ الَّذِيْنَ قَلَبوا الإِسْلَامَ، وَأَعْلَنوا بِالرَّفض، وَأَبطُنوا مَذْهَبَ الإِسْمَاعِيلِيَّة (٢) ،وَبَثُّوا الدُّعَاةَ، يَسْتَغوون الجَبَلِيَّةَ وَالجَهَلَة. ســــير أعلام النبلاء – (١٥ / ١٤١)

பாத்தினிய்யா சிந்தனையாளர்களான உபைதிய்யா வம்ச ஆட்சியாளர்களில் (அப்பாஸிய இஸ்லாமிய ஆட்சிக்கு எதிரான) கவாரிஜ்களின் வழி வந்த கலீஃபாக்களில் முதன்மையானவன்.

இவர்கள் இஸ்லாத்தை தலைகீழாகப் புரட்டினர், ஷீஆ மதத்தைப் பிரகடனப்படுத்தினர், இஸ்மாயீலிய்யா மத்ஹபுக்குள் மறைந்து கொண்டனர். பிரச்சாரகர்களை அனுப்பி மலைப்பிரதேச மக்களையும் மடையர்களையும் வழிகெடுத்தனர்." (அஸ்ஸியர்)

இஸ்மாயீலிப் பிரிவின் சிந்தனை ஸ்தாபகர் உபைதுல்லாஹ் யூதனா, சூஅஹ்லுல் பைத்தினரில் ஒருவனா? ஹிஜ்ரி 322 இல் மரணமான الملحد عبيد الله بن ميمون القداح( ت 322 هـ)

அப்துல்லாஹ் பின் மைமூன் அல்கத்தாஹ் என்ற நாஸ்தீகன் ஆபிரிக்க மொரோக்கோவில் தான் அஹ்லுல் பைத்தினரின் பரம்பரையில் வந்தவன் எனக் கூறி உபைதிய்ய ஆட்சியை நிறுவும் வரையில் இஸ்மாயீலிய்யாப் பிரிவினர் ஆரம்பக் கட்டமாகச் சிதறிய நிலையிலேயே காணப்பட்டனர்.

## யார் அந்தக் கத்தாஹ்?:

இவனே பாதினிய்யாக் கொள்கையின் பிரதான சூத்திரதாரி. அப்துல்லாஹ் (உபைதுல்லாஹ்) பின் மைமூன் அல்கத்தாஹ் என்ற பெயரில் அறியப்பட்ட இவன் தைசான் என அறியப்படும் யூதன் ஒருவனின் பேரப்பிள்ளையாகும்.

இவன் الشــــــــــــــــلعلع அஷ்-ஷல்அலஃ என்ற ஒரு யூதப் பரம்பரையில் வந்த மத குரு ஒருவனின் புதல்வனாகும் . இந்த அப்துல்லாஹ்வின் தந்தை இறந்த பின்னால் அவனது தாய் அஹ்லுல் பைத்தினர்களின் பரம்பரையில் வந்தவர் என சொல்லப்படுகின்ற அல்/ஹுஸைன் الحسين என்வரைத் திருமணம் செய்திருந்தார்.

இந்த அப்துல்லாஹ் தனது தாயிடம் இருந்த போது அவனது தாயின் கணவராகிய அல்ஹுஸைன் இவனை வளர்த்தார். இவனிடம் காணப்பட்ட அபரிமிதமான அறிவு , மதி நுட்பத்தைக் கண்ட ஹுஸைன் அவனை மிக்க அன்பாக நடத்தியதோடு தனது காரியங்களைச்

செய்யவும் பயன்படுத்தினார். இதனால் அவர்களின் பிள்ளைகளில் ஒரு பிள்ளை போன்று இவன் மாறினான்.

உபைதுல்லாஹ் தனது பருவ வயதை அடைந்த போது இஸ்மாயீல் பின் ஜஃபர் அவர்களது பரம்பரைக்கு நகைகளைத் தயாரிக்கும் ஒரு தொழிலாளியாகவும் இருந்து வந்தான்.

அவனது தாயின் கணவர் ஹுஸைனின் அழைப்புப் பணி தொடர்பான சகல அணுகுமுறைகளையும் கண்டறிந்து கொண்ட உபைதுல்லாஹ் காலப் போக்கில் தானும் அஹ்லுல் பைத்தினரில் வாரிசான முஹம்மத பின் இஸ்மாயீலின் பிள்ளைகளில் ஒருவன் என்று பொய்ப் பிரச்சாரத்தை முன்னெடுத்தான். இவனது தாய் அஹ்லுல் பைத்தினரில் உள்ள ஹுஸைனைத் திருமணம் செய்தது இவன் தானும் அஹ்லுல் பைத்தினரில் ஒருவர் எனப் பிரச்சாரம் செய்ய ஏதுவாக அமைந்தது.

இவனது பிரச்சாரம் தொடர்பாக அறிந்த அப்பாஸிய கலீஃபா அல்முஃதஸிம் இவனைத் தேடி வலைவிரித்தார். அது பற்றி அறிந்த உபைதுல்லாஹ் அங்கிருந்து ஆபிரிக்க மொரோக்கோவிற்கு எகிப்து வழியாகத் தப்பிச் செல்ல முயன்ற போது எகிப்தில் வைத்துக் கைது செய்யப்பட்டு, அங்கு சில ஆண்டுகள் சிறையில் அடைக்கப்பட்டு, பின்னர் விடுதலை செய்யப்பட்டான். அதன் பின்னர் அவன் மொரோக்கோ சென்று அங்கு ஸயீத் என்ற தனது இயற்பெயரை உபைதுல்லாஹ் என்று மாற்றி தான், அஹ்லுல் பைத்தினரில் ஒருவன் என்றும் வாதிட்டான்.

பொதுமக்களில் உள்ள மடையர்கள் அவனது பொய்ப் பிரச்சாரத்திற்கு அடிமையாகி அவனை அமைச்சராக்கினர். மக்களின் அறியாமையைப் பயன்படுத்திய அவன் அங்கு தான் ஒரு மஹ்தி என்று வாதிட்டதோடு, அங்கு மஹ்திவிய்யா கூடங்களை நிறுவினான். (ஷீஆக்களின் ஹுஸைனிய்யா போன்று).

அஹ்லுல் பைத்தினர் பெயரை விற்று அங்கு உபைதிய்யா என்ற பெயரில் கொடிய ஷீஆ ஆட்சி ஒன்றை தோற்றுவித்து வெற்றி கண்டதன் பயனாக எகிப்திலும் அதன் தாக்கம் பரவி அங்கும் பொய்யர்களான ஃபாதிமிக்கள் ஆட்சி மலர்ந்தது.

**குறிப்பு: இவன் ஆரம்பமாக ஸயீத் என்பதாக இருந்த தனது பெயரை மொரோக்கோ சென்ற பின்பே அப்துல்லாஹ் என மாற்றி தனது விஷமப் பிரச்சாரத்தை முன்னெடுத்தான் என்பது ஊர்ஜிதமான வரலாறாகும்.**

## உபைதிய்யா பாத்திமி பொய்ப் பரம்பரை, ஆட்சியாளர்கள் தொடர்பாக அறிஞர்களின் கருத்துக்கள்.

### இமாம் அபூபக்கர் அல்பாகில்லானி (ரஹ்):

**قال القاضي أبو بكر الباقلاني : ( كان المهدي عبيد الله باطنياً خبيثاً ، حريصـــاً على إزالة ملة الإســـــــلام ، أعدم العلماء والفقهاء ، ليتمكن من إغواء الخلق ، وجاء أولاده على أسلوبه : أباحوا الخمور والفجور ، وأشاعوا الرفض )**

உபைதுல்லாஹ் தீய பாதினிப் பிரிவின் கேவலமான ஒருவனாகும். அவன் இஸ்லாமிய மார்க்கத்தை இல்லாதொழிப்பதில் ஆர்வமாக இருந்தான். தனது தீய கொள்கையால் மனிதர்களை வழிகெடுக்க வாய்ப்பைத் தேடி மார்க்க அறிஞர்கள், சட்ட வல்லுனர்கள் பலரை தூக்கிலிட்டுக் கொலை செய்தான். இவனது மரணத்தின் பின்னால் வந்த அவனது பிள்ளைகள் அதே தோரணையில் (அப்பனுக்குத் தப்பாது) பிறந்து வந்தனர். மதுவையும், மங்கையையும் ஆகுமாக்கினர். கொடிய ஷீஆக் கொள்கையைப் பரப்பினர்.

இமாம் அல்- பாகில்லானி ரஹ் மேலும் குறிப்பிடுகின்ற போது,

وقال القاضـــي الباقلاني عنهم : (( هم قوْمٌ يظهرون الرفض ، ويبطنون الكُفر المحض ، والله – ســبحانه – أعلم ))(٣) . أهـ .

அவர்கள் ராஃபிழா என்ற கொடிய ஷீஆக் கொள்கையை வெளிப்படுத்தி, தெளிவான குஃப்ரை மனங்களில் ஏந்தியவர்களாக இருக்கின்ற ஒரு கூட்டமாகும் எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

### இமாம் அத்தஹபி (ரஹ்) அவர்கள்:

وقال الذهبي : ( كان القائم بن المهدي شراً من أبيه ، زنديقاً ملعوناً ، أظهر سب الأنبياء
( وقال : ( وكان العبيديّون شراً من التتار على ملة الإسلام )

உபைதுல்லா அல்-மஹ்தியின் மகன் அல்காயிம் என்பவன் தனது தந்தை உபைதுல்லாஹ்வை விடவும் படு மோசமான பேர்வழியும், சபிக்கப்பட்ட ஒரு மார்க்கத் துரோகியுமாவான். நபிமார்களை பகிரங்கமாகத் திட்டினான். கொடிய தாத்ததாரியர்களை விட இஸ்லாமிய மார்க்கத்திற்கு எதிராக படுமோசமான முறையில் நடந்து கொண்டார்கள். (இமாம் அத்தஹபி)

**அபுல் ஹஸன் அல் காப்ஸீ (ரஹ்),**

وقال أبو الحسـن القابسـي : (( إن الذين قتلهم عبيد الله وبنوه من العلماء والعّباد – أربعة آلاف رجل ، ليرّدوهم عن الّترضي عن الصحابة ، فاختاروا الموت )

நபித்தோழர்களை பொருந்திக் கொள்வோராக அறியப்பட்ட உலமாக்கள் மற்றும் வணக்கசாலிகள் என்போரை உபைதுல்லாஹ்வும் அவனது பிள்ளைகளும் கொலை செய்த வர்களின் எண்ணிக்கை நாலாயிரத்தை எட்டியிருந்தது .

(இமாம் அபுல் ஹஸன் அல் காப்ஸீ (ரஹ்).

**இமாம் இப்னு கஸீர் ரஹ் அவர்கள்:**

இமாம் இப்னு கஸீர் ரஹ் அவர்கள் ஹிஜ்ரி 402 வது ஆண்டு நிகழ்வு தொடர்பாக விளக்கும் வரலாற்றுக் குறிப்பில்,

وقال الحافظ ابن كثير – رحمه الله – في أحداث سـنة ٤٠٢ هـ : ((وكتب جماعة من العلماء، والقضاة، والأشراف ، والعدول ، والصالحين ، والفقهاء ، والمحدثين ، وشهدوا جميعًا أن الفاطميين ملوك مصـر كُفّار فُسّاق فجّار ملحدون ، زنادقة معطّلون ، وللإسلام جاحدون ، ولمذهب المجوسـية والثنوية معتقدون ، قد عطّلوا الحدود ، وأباحوا الفروج ، وأحّلوا الخمر ، وسفكوا الدماء ، وسّبوا الأنبياء ، ولعنوا السلف ، وادّعوا الرُبوبية )

உலமாக்களில் உள்ள அறிஞர் பெருமக்கள், உச்ச நீதிமன்ற நீதிபதிகள், சிறந்த ஆழுமைகள், நீதமான மனிதர்கள், நன்மக்கள், சட்டத்துறை அறிஞர்கள், (ஃபுகஹாக்கள்) ஹதீஸ் கலை விற்பன்னர்கள் (முஹத்திஸீன்கள்) என்போர் அனைவரும் கூறும் செய்தி என்னவென்றால், எகிப்தை ஆட்சி செய்த ஃபாதிமிக்களான உபைதிய்ய கலீஃபாக்கள் அனைவர்களும் தீய காஃபிர்கள், கெட்ட நாஸ்தீகர்கள், இஸ்லாமிய நெறிகளைப் பாழாக்கிய மார்க்கப் புல்லுருவிகள், இஸ்லாத்தை கருவறுக்கும் கயவர்கள், பாரஸீக நெருப்பு வணங்கிகளான மஜூஸ் மற்றும் தனவிக்களின் கலாச்சாரத்தை நம்பி உயிர்ப்பித்தவர்கள், இஸ்லாமிய சட்டங்களை பாழ்படுத்தினார்கள், மதுவையும், மங்கையர் மறுமஸ்தானங்களை ஆகுமாக்கினார்கள். இரத்தங்களைச் சிந்தி, நபிமார்களைத் திட்டினார்கள், முன்னோர் (ஸலஃப்)களை சபித்தார்கள். இறைத் தன்மைகள் தம்மிடம் இருப்பதாக வாதிட்டார்கள். (இப்னு கஸீர்- அல்பிதா வந்நிஹாயா)

**இமாம் சுயூத்தி (ரஹ்),**

وقال السيوطي في (( تاريخ الخلفاء )) : ( ولم أورد أحدًا من الخلفاء العبيديين ، لأن إمامتهم غير صحيحة ، لأمور : * منها : أنهم غير قرشيين ،وإنما سّمتهم بالفاطميين جهلة العوام ، وإلا فجدّهم مجوسي

உபைதிய்யா ஆட்சியாளர்கள் ஒருவரையும் நான் கலீஃபாக்கள் வரிசையில் குறிப்பிடவில்லை . ஏனெனில் அவர்களின் பதிவி ஏற்பு பின் வரும் காரணிகளின் அடிப்படையில் அங்கீராமற்றதாகும். அதாவது, அவர்கள் குரைஷியப் பரம்பரையில் வந்தவர்கள் இல்லை. விபரமற்ற பொது மக்கள் தாம் அவர்களுக்கு ஃபாதிமிக்கள் என அழைத்துக் கொண்டனர். இல்லை எனில் அவர்களது பாட்டனார் யூதப் பரம்பரையில் உள்ளவராகும்.

(இமாம் சுயூத்தி ரஹ்- தாரீகுல் குலஃபா)

**இமாம் காழீ இயாழ் (ரஹ்),**

قال القاضـي عياض : (( سـئل أبو محمد القيرواني الكيزاني ، من علماء المالكية ، عّمن أكرهه بنو عبيد – يعني مصر – على الدخول في دعوتهم ، أو يقتل ؟ قال : يختار القتل ، ولا ُيعذر أحُد في هذا الامر )) .

உபைதிய்யா ஷீஆக்கள் தமது கொள்கையை ஏற்க மறுத்த அனைவரையும் கொலை செய்வதை வழிமுறையாகக் கொண்டார்கள் என மாலிக் மத்ஹப் இமாம்களில் ஒருவரான இமாம் முஹம்மத் அல்கைரவானி அவர்கள் கூறியதாக காழீ இமாழ்(ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள் .

**இஸ்மாயீலிக் கொள்கையின் ரகசியம்:**

உபைதிய்யா ஆட்சியின் ஸ்தாபகர் உபைதுல்லாஹ் தான் இஸ்மாயீலிக் கொள்கைக்கு வித்திட்டவன் என்பதை புரிய இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் குறிப்பிடும் பின்வரும் தகவலைப் படியுங்கள்.

وقال شيخ الإسلام ابن تيمية –رحمه الله – : (( إن طوائف ادعى كلٌ منهم أنه المهدي المبشـــــر به ، مثل مهدي القرامطة الباطنية ، الذي أقام دعوتهم بالمغرب ، وهم من ولد ميمون القدّاح ، وادعوا أن ميمونًا هذا من ولد محمد بن إسماعيل وإلى ذلك انتسبت الإسماعيلية ، وهم ملاحدة في الباطن ، خارجون عن جميع الملل ، أكفر من الغالية ، كالنصـيرية ، ومذهبهم مركّب من مذهب المجوس ، والصـائبة ، والفلاسفة مع إظهار التشـيع ، وجدّهم رجلٌ يهوديٌّ كان ربيبا لرجل مجوسي ، وقد كانت لهم دولة وأتباع ، وقد صنّف العلماء كُتبًا في كشـف أسرارهم ، وهتك أستارهم ، مثل : كتاب القاضي أبي بكر الباقلاني ، والقاضي عبد الجبار الهمداني ،وكتاب الغزالي ، ونحوهم (١) .

பிறக்க விருக்கும் மஹ்தி வாதத்தை உலகில் பல குழுக்கள் முன்வைத்தன. அதில் கராமித்தாக்களின் மஹ்தி என்று அறியப்பட்ட யூதன் மைமூன் அல்கத்தாஹின் பேரனும் ஒருவன். இந்த மைமூன் முஹம்மத் பின் இஸ்மாயீலின் பரம்பரையில் வந்தவன் என்பதாகப் பொய்யான பரம்பரையை தயாரித்தனர்.

இவர்கள் உள்ளரங்கத்தில் கொடிய நாஸ்தீகர்கள். அனைத்து சமய சிந்தனைகளில் இருந்தும் வெளியேறியவர்கள். எல்லை மீறி நுஸைரிய்யா அலவிக்களை விடவும் கொடியவர்கள். இவர்களின் சித்தாந்தம் நெருப்பு வணங்கிகள், இயற்கை வணங்கிகள், தத்துவவியலாளர்கள் என்போரது சிந்தனைகள் கலந்த ஷீஆ வேஷம் தரித்த ஒரு கலப்பு சித்தாந்தாகும். இவர்களின் பாட்டன் ஒரு யூதன். அவன் ஒரு நெருப்பு வணங்கியின் வளர்ப்புப் பிள்ளையாக இருந்தான். இவர்களுக்கென தனியான நாடும் ஆதரவாளராகளும் இருந்தனர்.

உலமாக்கள் இவர்களின் அந்தரங்க உண்மைகள் பற்றி தெளிவுபடுத்தி பல நூல்களை வெளியிட்டுள்ளனர். அல்காழீ அபூபக்கர் அல்பாகில்லானி, அல்காழீ அப்துல் ஜப்பார் அல்ஹமதானி, இமாம் கஸ்ஸாலி மற்றும் பல அறிஞர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.
(இப்னு தைமிய்யா).

**சுருக்கம்:**

(1) இஸ்மாயீலிக்களின் ஸ்தாபகர் மைமூன் அல்கத்தாஹின் என்ற ஒரு யூதனின் பரம்பரையைச் சேர்ந்த உபைதுல்லாஹ் தன்னை அஹ்லுல் பைத்தினரில் ஒருவரான முஹம்மத் பின் இஸ்மாயீலின் பரம்பரையில் வந்தவன் என்ற பொய்ப் பரம்பரை வாதத்தைச் சரிகண்டதனால் அவர்கள் இஸ்மாயீலிய்யா என்ற பெயரில் அறிஞர்களால் அடையாளப்படுத்தப்பட்டனர்.

உண்மையில் இவர்கள் கத்தாஹிய்யா என்றோ மைமூனிய்யா என்றோ அழைக்கப்படுவதே பொருத்தமானதாகும்.

(2) ஷரீஆவின் நேரடியான சான்றுகள் ظاهـــــر / باطن உள், மற்றும் வெளி என்ற இரு அர்த்தப் பகுதிகளைக் கொண்டது . அவற்றில் உள்ளரங்கமான பகுதிகளில் உள்ள அர்த்தங்களைத் தமது இமாம்கள் மாத்திரமே புரிவார்கள் என்ற புதிய கோட்பாட்டை தோற்றுவித்ததை ஏற்றுக் கொண்டு செயல்பட்டவர்கள் இஸ்மாயீலிக்களாகும். அது பாத்தினி சிந்தனை என அழைக்கப்படும். அவர்களும் அவர்கள் வழியில் யாரெல்லாம் பயணிக்கின்னார்களோ அவர்கள் அனைவரும் பாத்தினிக்கள் என்றே அழைக்கப்படுவர் .

والله أعلم بالصواب

**குறிப்பு:**

**மாவீரர் ஸலாஹுத்தீன் அய்யூபி (ரஹ்) அவர்களைக் கொலை செய்த பல முறை முயற்சி செய்து தோல்வி கண்ட இந்த சதிகாரர்களின் கொடுமைகளில் இருந்து முஸ்லிம் சமூகத்தை அல்லாஹ் அய்யூபி மூலம் பாதுகாத்தான் என்பது ஷீஆ புகழ்பாடிகளில் எத்தனை பேர் அறிவார்கள் ?**

தகவல் தளம் :

http://al3wasem.ahlamontada.com/t283-topic

நூல்கள்:

الانحراف العقدي في أدب الحداثة / د سعيد الغامدي
أصول الإسماعيلية د سليمان بن عبد الله السلومي.

# υυ உபைதிய்யா ஸ்தாபகரின் அஹ்லுல் பைத்தினர் பரம்பரை வாதம் மெய்யானதா?

உபைதிய்யாக்கள் என்ற ஷீஆ மத ஆட்சியாளர்களின் ஸ்தாபகரான உபைதுல்லாஹ் அல்மஹ்தி என்பவன் அஹ்லுல் பைத்தினர் பெயரில் பொய்யான பரம்பரைத் தொடர் ஒன்றை உருவாக்கி தன்னை அவர்களில் ஒருவனாக அறிமுகம் செய்த போது மக்கள் அவனைத் தலைவனாக ஏற்று அவனுக்கு பைஅத் செய்தனர்.

உண்மையில் அவன் ஒரு சாதாரண முஸ்லிமாகக் கூட இருக்கவில்லை, அவன் ஒரு யூதன், அவன் தனது பெயரை மொரோக்கோ சென்று மாற்றிக் கொண்டவன் அங்கு ‘அஹ்லுல் பைத்தினர்’ பேரில் ஆட்சியைத் தொடங்கிய வேளையில்தான் தனது பரம்பரை அஹ்லுல் பைத்தினரோடு தொடர்பானது என வாதிட்டான் என்பதே வரலாறு.

அதன் பயனாக அங்கு உபைதிய்யா ஆட்சி தொடக்கம் பெற்றது. பின்னர் அது எகிப்துக்கும் விரிவடைந்தது. இவனது பரம்பரையின் உண்மைத் தன்மை பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள் இங்கு எடுத்தெழுதப்படுவதன் நோக்கம் யூதர்கள் நபி(ﷺ) அவர்களின் பரம்பரையை எப்படி எப்படியெல்லாம் தமது தீய நோக்கங்களுக்காக பலியாக்கினார்கள் என்பது பற்றி அறிவதற்காகவே!

இமாம் அபூ ஷாமா அல்மக்திஸி(ரஹ்) அவர்கள் உபைதிய்யாக்களின் கலீஃபாவான மைமூன் அல்கத்தாஹ் என்பவன் தன்னை அலி(ﷺ) அவர்களின் பரம்பரையில் வந்தவனாக புனைந்துரைத்த, பொய்யான அந்தப்பரம்பரை விபரம் தொடர்பான விமர்சனத்தில் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்.

ورحمة الله على القاضي أبي بكر محمد بن الطيب، فإنه كشف في أول كتابه، المسمى بكشف أسرار الباطنية، عن بطلان نسب هؤلاء إلى علي رضي الله عنه، وأن القدّاح الذي انتسبوا إليه دَعيٌّ من الأدعيتء، ممخرق كذاب، وهو أَضَلّ دعاة القرامطة لعنهم الله.
( الروضتين في أخبار النورية و الصلاحيةالمؤلف : أبو شامة المقدسي– (١ / ٢١٦ )

இமாம் அபூபக்கர் முஹம்மத் அத்தீப் அவர்களுக்கு அல்லாஹ் அருள் செய்வானாக! அவர்கள் பாத்தினிய்யாக்களின் உள்ரகசியங்களை வெளிப்படுத்தும் நோக்கில் எழுதிய كشف أسرار الباطنية ”கஷ்ஃபு அஸ்ராரில் பாத்தினிய்யா” பாத்தினிய்யாக்களின் ரகசியங்களை வெளிக் கொணர்தல்” என்ற பொருளில் அமைந்த அவர்களின் நூலில் இப்படி விமர்சனம் செய்கின்றார்கள்.

இந்த மைமூன் அல்கத்தாஹ் என்ற யூதன், அலி (ﷺ) அவர்களின் பரம்பரையில் வந்தவன் என்பது வெறும் புரளியாகும். அந்தப் பரம்பரை தொடர்பாக அவனது கருத்துரைகள் அனைத்தும் புனையப்பட்ட வடிகட்டிய பொய்யாகும்.

அவன் மாபெரும் பொய்யன், அத்தோடு அவனே, கராமித்தா பிரிவில் வந்த அழைப்பாளர்களை விடவும் வழிகெட்டவன். அல்லாஹ் அவர்களை சபிப்பானாக! (இமாம் அபூ ஷாமா– அர்ரவ்ளதைன்)

நபியின் பரம்பரை ஒன்றை பொய்யாக சோடித்து, உலகில் அவர்களின் வழிமுறை கொலை, கொள்ளை, அநீதி போன்ற தீய பண்பாடுகள்தான் என இவர்கள் உலகுக்கு காட்டுவதால், நபி (ﷺ) அவர்கள் ஒரு கொள்ளையர், பெண்களை பாலியல் துஷ்பிரயோகம் செய்பவர், அநீதியாளர் என்றெல்லாம் நபியைப் பற்றி தவறான அணுகுமுறை ஒன்றை மறைமுகமாக உலகுக்கு வழங்கிடும் இந்த யூத வழித் தோன்றல்களான ஷீஆக்கள் எவ்வாறான சதிகாரர்கள் என்று சிந்தித்துப் பாருங்கள்!!!

இவர்கள் தம்மை பாத்திமிய்யா, ஷுரஃபா, ஷரீஃப் போன்ற

சிறப்புக்குரிய பெயர்களில் அழைத்துக் கொண்டது பற்றி இமாம் அபூஷாமா அவர்கள் விமர்சிக்கின்ற போது

يعني بذلك بني عبيد المستخلفين بها، أظهروا للناس أنهم شرفاء فاطميون، فملكوا البلاد، وقهروا العباد. وقد ذكر جماعة من أكابر العلماء أنهم لم يكونوا لذلك أهلا ولا نسبهم صحيحا، بل المعروف أنهم بنو عبيد إن والد عبيد هذا من نسل القداح الملحد المجوسي، وقيل كان والد عبيد هذا يهوديًا من أهل سَلَمْية من بلاد الشام،وكان حدادا؛ وعبيد هذا كان اسمه سعيدًا، فلما دخل المغرب تسمى بعبيد الله، وزعم أنه علويّ فاطميّ، وادعى نسبًا ليس بصحيح، لم يذكره أحد من مصنفي الأنساب العلوية، بل ذكر جماعة من العلماء بالنسب خلافه (( الروضتين في أخبار النورية و الصلاحية –
(١ / ٢١٥\\ ابو شامة المقدسي ))

ஆட்சிக்கு வந்த பனூ உபைத் (உபைதுல்லாஹ்வின்) பரம்பரையினர் தாம் பாத்திமா(ﵥ) அவர்களின் பரபம்ரையில் வந்தவர்கள், உயர்ந்தவர்கள், மதிப்புக்குரியவர்கள் என்றெல்லாம் மக்களுக்கு வெளிப்படையாகக் காட்டிக் கொண்டனர்.

அவர்கள் பல பிரதேசங்களை தமது ஆட்சியின் கீழ் கொண்டு வந்ததோடு, அடியார்களை அடக்கி வாழ்ந்தனர். கற்றறிந்த உலமாக்களில் பெரியவர்கள் இந்தப்பரம்பரைக்கு இவர்கள் தகுதி அற்றவர்கள் என்றும், அவர்களின் பரம்பரை விபரம் சரியானது அல்ல என்றும் சுட்டிக்காட்டி உள்ளார்கள். உண்மையில் இவர்களின் பரம்பரை வழிமுறை அவர்கள் குறிப்பிடுவது போன்று அல்ல.

மாற்றமாக! அவர்கள் பனூ உபைத் அதாவது உபைதின் மக்கள் அல்லது பரம்பரையினர் என்றே அறியப்பட்டனர். இந்த உபைதின் தந்தை நெருப்பு வணங்கியாக அறியப்பட்ட நாஸ்தீகன் அல்கத்தாஹ் என்பவனாகும். இவனது தந்தை ஷாம் தேச ஸல்மிய்யா என்ற நகரத்தில் பிறந்த ஒரு யூதன் என்று சொல்லப்படுகின்றது. இவன் ஒரு கொல்லனாக இருந்தான்.

இந்த உபைதின் பெயர் ஸயீத் என்பதாகும். இவன் மக்ரிப் என்று அழைக்கப்படும் மொரோக்கோ மற்றும், வடஆபிரிக்கா சென்றிருந்த சமயம் தனது பெயரை உபைதுல்லாஹ் என் அழைத்துக் கொண்டான்.

இதனால் தான் ஓர் அலவி, பாத்திமி என்றும் சொல்லிக் கொண்டான். இவன் தனக்கு உரிமையில்லாத, பொய்யான ஒரு பரம்பரைப் பெயரை தனக்குரியதாக உருவாக்கி பொய்யாக வாதிட்டான்.

பரம்பரைகள் தொடர்பான அறிவியலாளர்கள் இவனைப் பற்றிய எந்த தகவலையும் வெளியிடவில்லை. அது மாத்திரமின்றி அதற்கு மாற்றமான செய்திகளையே அவர்கள் வெளியிட்டுள்ளனர். (பார்க்க: الروضتين في أخبار النورية و الصلاحية – (١ / ٢١٥\\ ابو شامة المقدسي )

பாத்திமா(ﵥ) அவர்களின் பெயரில் ஆட்சிக்கு வந்த இவர்களின் பாத்திமிய்யா, அலவிய்யா பரம்பரை வாதம் பொய்யானது என்பதை இது தெளிவு படுத்துகின்றது.

இலங்கை, இந்தியா, இந்தோனேசியா, மலேசியா போன்ற நாடுகளில் அஹ்லுல் பைத்தினரில் இருந்து வந்தவர்களின் பரம்பரை என வருகை தரும் மவ்லானாக்கள், தங்கள்மார், வாப்பா நாயகங்கள் போன்றோரின் நிலையும் இவ்வாறுதான் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

இமாம் அபூ ஷாமா (ரஹ்) அவர்கள் இந்த உபைதுல்லாஹ் வைப் பற்றி மேலும், குறிப்பிடுகின்ற போது இவ்வாறு விளக்குகின்றார்கள்,

كان زنديقًا خبيثًا عدوًّا للإسلام، متظاهرًا بالتشيع متسترًا به، حريصًا على إزالة المّلة الإسلامية؛ قتل من الفقهاء والمحدثين والصالحين جماعة كثيرة، (( الروضتين في أخبار النورية و الصلاحية ١ / ٢١٦ )) \ لمؤلف : أبو شامة المقدسي ))

அவன் ஷீஆவாக தன்னைக் காட்டிக் கொண்டு, அதற்குள் மறைந்து கொண்டு ஒரு ஸின்தீக் (சமூகத்தில் ஒரு கறுப்பு) ஆடாகவும், இஸ்லாத்தின் பரம எதிரியாகவும் இருந்தான். இஸ்லாமிய மார்க்கத்தை அழித்தொழிப்பதில் அவன் களம் இறங்கி செயற்பட்டான்.

புகஹாக்கள், ஹதீஸ்கலை இமாம்கள், நல்லடியார்கள் எனப் பெரும்பகுதி மக்களை அவன் கொலை செய்தான் (அபூஷாமா– அல்மக்திஸி– அர்ரவ்ழதைன்).

وقدذكر ذلك جماعة من العلماء الأكابر أنهم لم يكونوا لذلك أهلاً، ولا نسبهم صحيح، بل المعروف أنهم بنو عبيد.وكان والد عبيد هذا من نسل القداح الملحد المجوسي ((

“இவர்கள் பாத்திமிய்யா என்ற பெயருக்கே அருகதை அற்றவர்கள் என்றும், ஏற்றுக் கொள்ள முடியுமான பரம்பரை என்பது அவர்களுக்கு இல்லை என்றும் பெரும் பெரும் அறிஞர் பெருமக்கள் தீர்ப்பாகக் கூறிவிட்டனர்.” (அபூஷாமா அல்மக்திஸி– அர்ரவ்ளதைன்)

இமாம் அபூஷாமா(ரஹ்) அவர்களின் கருத்தை இமாம் தஹபி அவர்கள் தனது تاريخ الإســــــــــــــلام للإمام الذهبي என்ற நூலிலும் குறிப்பிட்டுள்ளார்கள்.

இமாம் இப்னு தைமிய்யா அவர்கள் இது பற்றிக் குறிப்பிடுகின்ற போது:

وهؤلاء [ بنو عبيد القداح ] مازالت علماء الأمة المأمونون علمًا ودينًا يقدحون في نســـبهم ودينهم، لا يذمونهم بالرفض والتشـــــيع، فإن لهم في هذا شركاء كثيرين، بل يجعلونهم من [ القرامطة الباطنية ] الذين منهم الإسماعيلية والنصيرية ((أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – (٢ / ٣٦٣))

இந்த பனூ உபைத் அல்கத்தாஹ் பரம்பரையினர் தொடர்பாக இந்த உம்மத்தில் அறிவால், மார்க்கத்தால் சிறந்தவர்களாக அறியப்பட்ட நம்பிக்கைக்குரிய இமாம்கள் அனைவரும் அவர்களின் பரம்பரை, மற்றும் சமயக் கோட்பாடுகள் தொடர்பான விடயங்களில் பாரிய விமர்சனங்களை முன்வைத்தே வந்துள்ளனர்.

இவர்கள் ஷீஆக்களான ராபிழாக்களாக இருப்பது பற்றி அலட்டிக் கொள்ளவில்லை. காரணம் அவர்களைப் போன்று இன்னும் பல பிரிவினர் ஷீஆக்களாக இருக்கின்றனர். இருப்பினும், இவர்களை பாத்தினிய்யாக் கொள்கை உடைய கராமிதாக்களாகவே நோக்கு கின்றனர். இந்த பாத்தினியாக்களில் இஸ்மாயீலிய்யா, நுஸைரிய்யா போன்ற பிரிவும் உள்ளடங்கும்.”

(இமாம் இப்னு தைமிய்யா– அஹ்காமுல் முர்தத்)

அபூஷாமா(ரஹ்) அவர்களின் அர்ரவ்ளதைன் என்ற பொக்கிஷம், அறிஞர்களான இப்னு கஸீர், தஹபி மற்றும் பலரும் குறிப்பிடும் அளவு நூறுத்தீன் ஸின்கி, ஸலாஹுூத்தீன் அய்யூபி(ரஹ்) ஆகிய இரு மன்னர்களின் வரலாறுகளையும் மிகத் துல்லியமாக எடுத்துச் செல்லும் நூலாகும். அதில் பின்வரும் செய்தியும் பதிவு செய்யப் பட்டுள்ளது.

(بنو عبيد) يدعون الشرف ونسبتهم إلى مجوسي أو يهودي، حتى أشتهر لهم ذلك بين العوام فصاروا يقولون الدولة الفاطمية والدولة العلوية، وإنما هي الدَّولة اليهودية أو المجوســـــية الباطنية الملحدة. ومن قحتهم أنهم كانوا يأمرون الخطباء بذلك على المنابر، ويكتبونه على جدران المســـاجدوغيرها. ((الروضتين في أخبار النورية و الصلاحية – (١ / ٢١٦ )

பனூ உபைத் என்போர் சிறப்பானவர்கள், சங்கையானவர்கள் என தம்மைப் பற்றி வாதிடுகின்றனர். ஆனால், அவர்களின் பரம்பரை ஒன்று, நெருப்பு வணங்கி ஒருவன் பக்கம் அல்லது ஒரு யூதனின் பக்கம் இணைத்துப் பேசப்படும் யூதப் பரம்பரையாகும்.

இவர்கள் அதனை மறைத்து பாத்திமிய்யாப் பெயரில் அறிமுகமாகிய பாதிமிய்யா ஆட்சி, அலவிய்யா ஆட்சி என்று கூறிக் கொண்டதனால் பொதுமக்கள் மத்தியிலும் அவ்வாறு அது பிரசித்தி பெற்றது. உண்மை என்னவெனில் அது யூத, மற்றும் நெருப்பு வணங்கிகளின் நாஸ்தீக, பாத்தினிய்யாக்களின் ஆட்சியாகும். மிம்பர் மேடைகளில் கலீஃபாக்களைத் தாக்கிப் பேசும்படி கதீப்மார்களுக்கு கட்டளையிடுவதும், சாபத்திற்குரிய வாசகங்களைப் பள்ளிகளின் சுவர்களிலும், மதில்களிலும் எழுதி காட்சிப்படுத்துவதும் இவர்களின் குரோதங்களின் உச்சத்தைக் காட்டுகின்றது.

(அபூஷாம அல்மக்திஸி – அர்ரவ்ளதைன்)

இமாம் அபூ ஷாமா(ரஹ்) அவர்கள் பகுத்தறிவுச் சிந்தனை யாளரான அல்காழி அப்துல் ஜப்பார் என்பவரின் கருத்தை இவ்வாறு பதிவு செய்துள்ளார்கள்.

ذكر عبد الجبار القاضي أن الملقب بالمهدي، لعنه الله، كان يتخذ الجهال ويسلطهم على أهل الفضل؛ وكان يرسل إلى الفقهاء والعلماء فيذبحون في فُرشهم؛ وأرسل إلى الروم وسلطهم على المسلمين؛ وأكثر من الجور واستصفاء الأموال وقتل الرجال. وكان له دعاة يضلون الناس على قدر طبقاتهم، فيقولون لبعضهم: " هو المهدي ابن رسول الله صلى الله عليه وسلم وحجة الله على خلقه " . ويقولون: " هو رسول الله، صلى الله عليه وسلم وحجة الله " . ويقولون لطائفة أُخرى: " هو الله الخالق الرازق. لاإله إلا الله وحده لاشريك له " تبارك سبحانه وتعالى عما يقول الظالمون علوا كبيرا " .

( الروضتين في أخبار النورية و الصلاحية أبو شامة المقدسي – (١ / ٢١٧ )

மஹ்தி என்ற புனைப் பெயரில் அழைக்கப்பட்ட இந்த உபைதுல்லாஹ்வை அல்லாஹ் சபிப்பானாக! இவன் அறிவற்றவர் களைத் தேர்ந்தெடுத்து, அவர்களில் சிறந்த மக்கள் மீது அதிகாரம் செலுத்தும்படி செய்வான்.

ஃபுகஹாக்கள், உலமாக்கள் என்போர் மீது இந்த மடையர்கள் கூட்டத்தை ஏவி அவர்களைப் படுக்கையில் வைத்தே அவன் படுகொலை செய்தான். ரோமாபுரி கிறிஸ்தவர்களை முஸ்லிம்களுக்கு எதிராகத் தூண்டிவிட்டு முஸ்லிம் பிரதேசங்களை அவர்கள் ஆக்கிரமிக்கச் செய்தான்.

அட்டூழியம் புரிதல், சொத்துக்களை சூறையாடி கையகப் படுத்துதல், ஆண்களைக் கொலை செய்தல் போன்ற அனைத்து விதமான அக்கிரமங்களும் அவனால் அதிகமதிகம் புரியப்பட்டது. மக்களின் தரத்திற்கு ஏற்றவாறு அவர்களை வழிகெடுக்கின்ற அழைப்பாளர்களும் அவனிடம் (கூலிப்படைகள்) போன்று இருந்தனர்.

அவர்கள் மாறி மாறி அவன் புகழைத் துதிபாடிக் கொண்டும், அவர் அல்லாஹ்வின் தூதரின் பேரப்பிள்ளை என்றும், அவரை அல்லாஹ் தனது படைப்புக்களுக்கு ஓர் அத்தாட்சியாக அனுப்பி உள்ளான் என்றும் பேசிக் கொள்வர்.

இன்னும் ஒரு சாரார் இல்லை, இல்லை. அவர் ஒரு தூதர், அல்லாஹ்வினால் தரப்பட்ட ஆதாரமான இமாம் என்பர். மற்ற சாராரோ, இவர்தான் தமது படைப்பாளனாகிய அல்லாஹ் என்றும், இவரே உணவளிப்பவர், வணக்கத்திற்கும் உரித்தானவர், யாருக்கும் தன்னிகரற்ற ஒருவரும் என்பர்.

இவருக்கு, இணை துணை, இல்லை, இவர், ஒரு (மனித) தெய்வமும் கூட. இவரைஅன்றி வேறு ஒருவரும் கடவுள் தமக்கில்லை என்றும் பேசிக் கொள்வர்" என இமாம் அபூ ஷாமா (ரஹ்) அவர்கள் மேற்கண்டவாறு விளக்கிய பின்னர் "இந்த அநியாயக்காரர்கள் கூறுகின்ற இவ்வாறான பொய்களை விட்டும் அல்லாஹ் தூயவன், உயர்ந்தவன் என்ற வசனத்தைக் கூறி முடித்துள்ளதைப் பார்க்கின்றோம். (இமாம் அபூஷாம் அல்மக்திஸி– அர்ரவ்ளதைன்)

உபைதிய்யா பரம்பரையின் ஆரம்பம் பற்றிக் குறிப்பிடும் இமாம் தஹபி (ரஹ்) அவர்கள் இவர்கள் அடிப்படையில் தைஸான் பின் ஸயீத் அல்குர்ரமி என்ற ஒரு யூதனின் பரம்பரையாக இருந்தனர் என்று குறிப்பிடுவதைப் பார்க்கின்றோம்.

மொரோக்கோவில் இவர்களுக்கென தனியாட்சி உருவாக்கம் பெற்ற போது இவர்களின் பாட்டனாக இருந்த யூதன் தைஸான் என்பவன் மொரோக்கோ நாட்டுக்கு சென்றிருந்தான் அங்கு தனது பெயரை உபைதுல்லாஹ் என மாற்றிக் கொண்ட அவனால் அங்கிருந்தே உபைதிய்யா ஆட்சி என்று அறிமுகம் செய்யப்பட்டது.

பின்னர் அது ஆபிரிக்கா எங்கும் பரவியது. ஆஃபிரிக்க நாடுகளில் ஷீஆக்களின் பெயர் உபைதிய்யா என்றே அறியப் படுகின்றது. காலப் போக்கில் எகிப்து பிரதேசத்தில் அந்த ஆட்சி விரிவாக்கம் நடைபெற்ற போது அது ஃபாதிமிய்யா (பாத்திமா (ؓ) பெயரில் வந்த) ஆட்சி என்பதாக பொய்யாக பரப்புரை செய்யப்பட்டது. இந்தப் பெயரால் பாமர மக்கள் மனங்களை தம் பக்கம் ஈர்ப்பது அவர்களின் இலக்காக இருந்தது.

வரலாற்றில் உபைதிய்யா, பாத்திமிய்யா போன்ற பெயர்களில் இடம் பெறும் பெயர்கள் அறியப்பட்ட ஆட்சியாளர்கள் ஷீஆக்களின் மிக மோசமான ஆட்சியாளர்களாக அறியப்பட்டனர். சுல்தான்

ஸலாஹுத்தீன் அய்யூபி (ரஹ்) அவர்கள் போன்ற மாவீரர்கள் எகிப்தில் முதலாவது களை எடுத்தது இந்த ஷீஆ பாதிமிய்ய ஆட்சியைத்தான் என்கிறார்கள் இஸ்லாமிய வரலாற்று அறிஞர்கள்.

இவனைப் பற்றி குறிப்பிடும் இமாம் தஹபி (ரஹ்) அவர்கள் உபைதுல்லாஹ் என்ற பெயரில் தன்னை அறிமுகப்படுத்திய அந்த தைஸான் தன்னை ஃபாத்திமா(﵂) அவர்களின் பரம்பரையில் வந்ததாகவும், தான் ஜாஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் உறவுக்காரர் என்றும் அறிமுகப்படுத்தினான்.

இவன் தனது பரம்பரை பற்றிக் குறிப்பிடும் போது: "நான் முஹம்மதின் மகன் உபைதுல்லாஹ், அவரது தந்தை அப்துல்லாஹ், அவரது தந்தை மைமூன், அவரது தந்தை முஹம்மத் பின் இஸ்மாயீல், இஸ்மாயீலின் தந்தை இமாம் ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்கள் என பொய்யான பரம்பரை ஒன்றைப் புணைந்து கூறினான்" எனக் குறிப்பிடுகின்றார்கள். (அஸ்ஸியர்) .

பாதினிய்யாக் கொள்கையின் பிரதம தந்தை என்றழைக்கப் படும் மைமூன் அல்கத்தாஹ் தொடர்பாக ஆய்வாளர் அல்ஹம்மாதி அல்யமானி அவர்கள்,كشــف أسرار الباطنية– للحمادي اليماني என்ற தனது நூலில் பின்வரும் தகவல்களைப் பதிவு செய்திருப்பதை அறிய முடிகின்றது. அது பற்றி இங்கு சுருக்கமாக நோக்குவோம்.

من هو ميمون القداح؟
جاءذكره في بعض الكتب التاريخية؛ ومن أبرزها كتاب (كشـــــــف أسرار الباطنية) للحمادي اليماني([٤]):

மைமூன் அல்கத்தாஹ் ஷாம் தேச நகரமான ஸலமிய்யாவில் பிறந்த ஒரு யூதன். இவன் யூதமதகுருவாக இருந்தான். ஜஃபர் ஸாதிக் (﵁) அவர்களின் சபைக்கு வந்து செல்லும் வழக்கமுள்ளவனாக இருந்ததனால் இவன் ஜஃபர் (﵁) அவர்களின் ஷீஆவாக (குழுவில் உள்ளவனாக) தன்னை அறிமுகம் செய்து கொண்டான. (தற்போதைய ஷீஆ அல்ல)

இஸ்லாம் என்ற அல்லாஹ்வின் உயர் நெறியை தகர்க்க வேண்டும் என்ற குரோதத்தை அல்லாஹ் யூதர்களில் வைத்துப் படைத்துள்ளதனால் இவனும் இஸ்லாத்தை இல்லாதொழிக்க திரைமறைவில் திட்டங்கள் தீட்டி செயல்பட்டான்.

இதற்காக தனி மனிதர்களை உருவாக்குவதை விட அஹ்லுல் பைத்தினரை நேசித்தல் என்ற வேஷம் இவனுக்கு சரியான வழியாகப் பட்டது. இவன் கராமித்தா சிந்தனைச் சிப்பியான கர்மத் என்பவனின் காலத்தில் வாழ்ந்ததனால் இருவருமாக ஒன்று சேர்ந்து திரை மறைவில் திட்டங்கள் தீட்டினர்.

கண்களில் படரும் வெண்படலத்தை சிகிச்சையளித்து நீக்குவதனால் மைமூன் என்ற பெயரோடு அல்கத்தாஹ் القـــــداح என இணைத்துப் பேசப்பட்டான்.

இந்த வரலாற்று அடிப்படையில் நோக்குகின்ற போது உபைதிய்யா ஆட்சியாளர்கள் உபைதுல்லாஹ் என்ற கத்தாஹின் மகனோடு இணைத்துப் பேசப்படுகின்றனர் என்ற இஸ்லாமிய வரலாற்று ஆய்வாளர்களின் கருத்து மிகச் சரியானதாகும்.

இவர்களின் ஆட்சிக் காலத்தில் எகிப்தில் உருவாக்கப்பட்ட ஐந்து மௌலிதுகள் என்ன அடிப்படையில் உருவாக்கப்பட்டிருக்கும் என நிதானமாக சிந்திக்கும் முஸ்லிம்கள், மௌலவிகள் நிச்சயமாக தெளிவு பெறுவர்.

**பிரச்சாரம் ஆரம்பம்:**

இவன் தன்னை அபூஷாகிர் என்ற பிணைப்பெயருடன் அறிமுகப்படுத்தி தான் இஸ்மாயீல் என்பவரின் மகன் என்ற தனது பொய்ப் பிரச்சாரத்தை மேற்கொண்டான்.

இஸ்மாயீல் அவர்கள் திருமணம் செய்யாத நிலையில் குழந் தைகள் இன்றி சிறுபருவத்திலேயே மரணித்தார் என்பதே வரலாறு.

அப்படி இருந்தும் அப்பாஸிய கலீஃபா மன்சூரின் காலத்தில் சிறையில் அடைக்கப்பட்டு பின்னர் விடுதலை செய்யப்பட்டான்.

சிறையில் இருந்து விடுதலை செய்யப்பட்ட பின்னால் தன்னை முஹம்மத் பின் இஸ்மாயீல் பின் ஜஃபர் ஸாதிக் அவர்களின் வாரிசாகப் பிரகடணம் செய்து தனது பிரச்சாரத்தை முன்னெடுத்தான்.

மைமூன் மற்றும் கர்முத் அல்பக்கார் ஆகிய இருவரின் சதிவலையில் அகப்பட்ட ஒன்பது குழப்பவாதிகள் புறப்பட்டுச் சென்று மக்களிடம் பிரச்சாரத்தை முன்னெடுத்தனர். இவர்களில் கூஃபாவில் தனது தந்தையோடு தங்கிப் பிரச்சாரம் செய்து வந்த உபைதுல்லாஹ்,

علي بن الفضل الجدني اليماني، وأبو القاسم الحسن بن حوشب المُسمى بالمنصور

அலி பின் அல்ஃபழ்ல் அல் யமானி, அல்மன்சூர் என்றழைக்கப்படும் அபுல் காஸிம் அல்ஹஸன் பின் அல்ஹவ்ஷப் ஆகிய இருவரும் எமனில் பிரதான பாதினி அழைப்பாளர்களாக செயல்பட்டார்கள்.

أبو سعيد الجنابي صاحب الأحساء والبحرين،

அல் அஹ்ஸா, மற்றும் பஹ்ரைன் பிரதேச அழைப்பாளர்களாக அபூஸயீத் அல்ஜுனாபிஹி என்வனும், أبو عبد الله الشيعي அபூ அப்தில்லாஹ் அஷ்ஷீயி என்பவன் ஆபிரிக்க நாடுகளின் அழைப்பாளராகவும், المُقّنع عطاء الخراساني فيما وراء النهر من خراسان அதா அல்குராஸானி யூப்ரடீஸ், டைக்ரீஸ் நதிகளுக்கு அப்பாலுள்ள குராஸான் பிரதேசங்களின் அழைப்பாளர்களாகவும் நியமிக்கப்பட்டு செயற்பட்டு வந்தனர்.

அபூ ஷாகிர் மைமூன் பின் தைஸான் என்பவன் இஸ்லாமிய விரோதச் செயலுக்கு துணை நின்றவன் எனக் குறிப்பிடும் இப்னுல் அஸீர் (ரஹ்) அவர்கள் மைமூன் மற்றும் அவனது ஸஹாக்களின் கோட்பாடு பற்றி விபரிக்கின்ற போது,

وقال عن عقيدة ميمون وأصحابه: "ألقوا إلى من وثقوا به أنّ لكلّ شيء من العبادات باطنًا، وأنّ الله تعالى لم يوجب على أوليائه، ومن عرف الأئمة والأبواب، صلاة، ولازكاة، ولا غير ذلك، ولا حرّم عليهم شيئًا، وأباحوا لهم نكاح الأمهات والأخوات، وإنّما هذه قيود للعامّة ساقطة عن الخاصّة،

அவர்களை நன்கு நம்பியவர்களிடம் வணக்கங்களில் ஒவ்வொன்றுக்கும் உள்ளரங்க அர்த்தம் சார்ந்த ஒரு பொருள் உண்டு என அவர்கள் அவனிடம் கூறிவிடுவார்கள்.

மேலும், அல்லாஹ் அவனை நம்பிய (அவ்லியா) இறை நேசர்கள் மற்றும் ஷீஆக்களின் இமாம்களை நன்கு அறிந்தவர்கள், அவர்களைச் சென்றடைய வாயில்களாக விளங்குவோர் யார் மீதும் தொழுகை, ஸகாத், நோன்பு போன்ற வணக்கங்கள் எதையும் கடமையாக்கவுமில்லை, அவர்கள் மீது எதையும் –ஹராம்– தடை விதிக்கவுமில்லை. அவர்கள் தமது தாய்மார்கள், மற்றும் சகோதரி களைத் திருமணம் செய்து கொள்ள அனுமதி உண்டாம். இது பொது மக்கள் மீது போடப்பட்ட கட்டுப்பாடுகளே அன்றி, மெய்ஞான ஆன்மீக ஞானிகள் மீது போடப்பட்டவை அல்ல.

இதை உண்மை என நம்ப வைக்க என்ன வழி பரிகாரம் இதோ கேழுங்கள்.

وكانوا يظهرون التشيّع لآل النبيّ، صلى الله عليه وسلم، ليستروا أمرهم، ويستميلوا العامّة، وتفرّق أصحابهم في البلاد، وأظهروا الزهد والعبادة، يغرون الناس بذلك وهم على خلافه”

இவ்வாறான தமது சமூகச் சீர்கேடுகளை பொதுமக்கள் பார்வையில் இருந்தும் மறைத்துக் கொள்வதற்காகவும், பாமரர்களை தம் பக்கம் ஈர்ப்பதற்காகவும், நபி (ﷺ) அவர்களின் குடும்பத்தாரை நேசித்தல் என்ற வெளிக் கோஷத்தை மக்கள் முன் வெளிப்படுத்தி னார்கள்.

அவனது அழைப்பாளர்கள் மக்களை ஏமாற்றுவதற்காக துறவிகள் கோலத்தில் வணக்கசாலிகள் போன்று உலகில் நாலா திசைகளிலும் பரந்து சென்றார்கள். ஆனால், அந்தரங்கத்தில் அவர்கள் அதற்கு மாற்றமாக இருந்து கொண்டே இதைச் செய்தார்கள்.

அடப்பாவிளா? முஹம்மத் நபி (ﷺ) அவர்கள் மரண தருவாயிலும் சிரமத்தோடு தொழுதார்கள் என ஆதாரபூர்வமான ஹதீஸ்கள் வந்துள்ளனவே என்று கொஞ்சமாவது உங்கள்

மூளையை இயக்கனீர்களா ?

உங்கள் சாதாத்துகள், வலிமார்கள், பெரியார்கள் என்போர் அல்லாஹ்வின் தூதர் அண்ணல் நபி (ﷺ) அவர்களை விடவுமா உயர்ந்தவன்?

இதைத்தான் இந்த யூதன் மறைமுகமாக உங்கள் மனங்களில் பாதினிக் கோட்பாட்டின் பெயரில் விதைத்துள்ளான் என்பதை நீங்கள் எப்போது அறியப் போகின்றீர்கள்?

நபி (ﷺ) அவர்களின் மார்க்கத்தில் ஒரு மூலையிலும் இல்லாத இந்த யூதச் சித்தாந்தம் ஈரானிய தலைப்பாகைக்குள்ளும், கப்று வணங்கும் சூஃபிக்கள், தரீக்கா முல்லாக்களின் தொப்பி, தலைப் பாகைக்குள்ளும் இந்த நம்பிக்கைதானே மறைந்து, புதையுண்டு காதப்படுகின்றது. இதை இஸ்லாம் என்பதா? சர்வதமதக் கலவை என்பதா ?

**மேலதிக வாசிப்பிற்காக: www.alarsed.com**

இவனது பரம்பரை ஒரு பொய்யான இட்டுக்கட்டப்பட்ட பரம்பரை என இமாம்களான அல்பாகில்லானி, இப்னு கல்தூன், அல்மிக்ரீஸி, சுபூத்தி போன்றோர் குறிப்பிடுகின்றனர்.

இந்தப் பரம்பரைப் பொய்யனே தன்னை அலி மற்றும் பாத்திமா(﵂) அவர்களின் பரம்பரையில் வந்தவன் என வாதிட்டவன். இவனே உபைதிய்யா ஆட்சியின் சூத்திரதாரியும் ஸ்தாபகரும் என அறிஞர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். உபைதிய்யாக்கள் என்ற ஷீஆ மத ஆட்சியளார்களின் ஸ்தாபகரான உபைதுல்லாஹ் அல்மஹ்தி என்பவன் அஹ்லுல் பைத்தினர் பெயரில் பொய்யான பரம்பரைத் தொடர் ஒன்றை உருவாக்கி தன்னை அவர்களில் ஒருவனாக அறிமுகம் செய்த போது மக்கள் அவனைத் தலைவனாக ஏற்று அவனுக்கு பைஅத் செய்தனர். அந்தப் பரம்பரையே பிற்காலத்தில் உபைதிய்யா, உபைதிய்யூன் ஃபாத்திமிய்யா என அறியப்பட்டனர்.



ՈՈ

# உபைதிய்யா ஆட்சித் தோற்றமும் ஆட்சியாளர்களும்.

**உபைதிய்யா ஆட்சித் தோற்றம்.**

ஹிஜ்ரி மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் அப்பாஸிய கலீஃபா அல்முக்ததிரின் ஆட்சிக் காலத்தில் அப்பாஸியர் ஆட்சி சற்று பலவீனம் அடைந்திருந்த போது ஈராக்கில் அறியப்பட்ட கத்தாஹிய்யா பரம்பரையில் வந்த கராமிதாப் பிரிவில் உபைதிய்யாக்கள் மொரோக்கோவில் தோற்றம் பெற்றனர்.

உபைதிய்ய ஆட்சியின் ஆரம்பம் பற்றிக் குறிப்பிடும் இமாம் இப்னு ஹல்லிகான் அவர்கள்:

وكان ابتداء الدولة العبيدية بإفريقية والمغرب في ذي الحجة سنة تسع وتسعين ومائتين، وأول من ظهـــــر منهم المهدي أبو محمد عبيد الله وبنى المهدية وملك إفـــــريقية كلها " ((وفيات الأعيان – (٧ / ١٥٨))

ஆபிரிக்கா நாடுகள் மற்றும் மொரோக்கோ பிரதேசங்கள் முழுவதும் உபைதிய்யாக்களின் ஆட்சி ஹி: 299 முதல் ஆரம்பாகி கிட்டத்தட்ட 266 ஆண்டுகள் நிலைத்திருந்தது என்றும்,

ஷத்ராதுத் தஹப் என்ற நூலின் ஆசிரியர் இமாம் அப்துல் ஹை அல்ஹன்பலி அவர்கள் ஹி: 322 வது வருட நிகழ்வு பற்றிய தகவல் பரிமாற்றத்தில்:

وفيها المهدي عبيد الله والد الخلفاء الباطنية العبيدية الفاطمية افترى أنه من ولد جعفـــــر الصادق وكان بسلمية فبعث دعاته إلى اليمن والمغرب وحاصل الأمر أنه استولى على مملكة

المغرب وامتدت دولته بضـــعا وعشـــرين سنة ومات في ربيع الأول بالمهدية التي بناها وكان يظهر الرفض ويبطن الزندقة (( شذرات الذهب – (٢ / ٢٩٤)

இந்த ஆண்டில்தான் பாத்திமிய்யா பாதினிய்யாக்களின் கலீஃபாக்களின் தந்தை என அறியப்பட்ட உபைதுல்லாஹ் என்பவன் தன்னை ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் மகன் என வாதிட்டான். இவன் அப்போது ஈராக் ஸல்மிய்யாவில் இருந்தான். தனது அழைப்பாளர்களை ஏமன் மற்றும் மக்ரிப் எனப்படும் மொரோக்கோ பகுதிகளுக்கு அனுப்பிவைத்தான்.

இறுதியில் இவன் மொரோக்கோவின் ஆட்சி அரியாசனம் ஏறினான். இவனது ஆட்சி கிட்டத்தட்ட 20 ஆண்டுகள் நீடித்தது. இவன் கட்டிய மஹ்தவிய்யா என்ற கட்டிடத்தில் ஒரு ரபீயுல் அவ்வலில் மரணித்தான். இவன் ஷீஆக் கொள்கையை வெளிப்படையாக செயல்படுத்தினான். அத்தோடு, இவன் “ஸின்தீக்” -நாசகாரி- இஸ்லாமியத் துரோகி, என்றும் அறியப்பட்டான். எனக் குறிப்பிடுகின்றார்கள். (شذرات الذهب)

பின்னர், அங்கிருந்து எகிப்து தேசத்திற்கு அவர்கள் தமது சிந்தனைகளை நகர்த்தினர். அங்கும் கிட்டத்தட்ட 208 வருடங்கள் ஆட்சி செய்தனர். இவர்களின் ஆட்சியை சுல்தான் ஸலாஹுத்தீன் அய்யூபி (ரஹ்) அவர்களே முடிவுக்கு கொண்டு வந்தார்கள்.

இதுவரை காலமும் நபித்தோழர்களைத் திட்டித்தீர்த்த மிம்பர் மேடைகள் அஹ்லுஸ்ஸுன்னாக்களின் கைக்கு அதாவது அல்முஸ்தளீஃ பிஅம்ரில்லாஹ் என்ற அப்பாஸியர் ஆட்சியாளருக்கு ஆட்சி கைமாறியது. இது ஹி: 567 இல் நடந்ததாக இமாம்கள் குறிப்பிடுகின்றனர்.

இந்தக் காலப்பகுதிக்கு அண்மித்த காலத்தில்தான் கடுமையான பித்அத்வாதிகளான பனூபுவைஹ் என்ற ஒரு பிரிவினர் பாரஸீகத்தில் தோன்றினர்.

இவர்களின் வழி வந்த முயிஸ்ஸுத் தவ்லா என்பவன் ஈராக்கின் நஜஃப் பிரதேசத்தில் மண்ணறை ஒன்றைக் காட்டி இதுதான் அலி (ரழி) அவர்களின் மண்ணறை என்றுக் கூறி அவர்கள் பெயரில் முதல்முதலாக அந்தக் கப்ரைக் கட்டினார்கள். இதற்கு முன்னர் முஸ்லிம்கள் மத்தியில் கப்று கட்டும் பழக்கம் இருந்ததில்லை என இமாம் இப்னு தைமிய்யாவின் கூற்றை சுட்டிக்காட்டுகின்றார் அறிஞர் ஸல்லாபி அவர்கள். பார்க்க:

استشهاد الحسين . رضي الله عنه . بين الحقائق والأوهام لمحمد صلابي –

## உபைதிய்யா ஆட்சியாளர்கள் விபரம்:

இரு நூறு வருட காலப் பகுதியில் பின்வரும் பதின்நான்கு உபைதிய்யா ஆட்சியாளார்களான மன்னர்கள் ஆட்சி செய்திருக்கின்றனர்.

المهدي والقائم والمنصور والمعز والعزيز والحاكم والظاهر والمستنصر والمستعلي والآمر والحافظ والظافر والفائز والعاضد آخرهم ((وفيات الأعيان – (٧ / ١٥٨ )

**பெயர்கள் விபரம்:**

1. அல்மஹ்தி – உபைதுல்லாஹ்–
2. அல்காயிம் பிஅம்ரில்லாஹ்
3. அபூ அலி அல்மன்சூர்
4. அல்முயிஸ்ஸு
5. அல்அஸீஸ்
6. அல்ஹாகிம்
7. அள்ளாஹிர்
8. அல்முஸ்தன்ஸிர்
9. அல்முஸ்தஃலி
11. அல்ஆமிர்
12. அள்ளாஃபிர்
13. அல்பாயிஸ்
14. அல் ஆளித் இறுதியானவர்.

(ஆதார நூல் : وفيات الأعيان - ) ١٥٨ / ٧)

# உபைதிய்யாக்கள் பற்றிய சுருக்கக் குறிப்பு

உபைதிய்யாக்களின் ஆட்சி மொரோக்கோவில் தொடங்கி வட ஆபிரிக்கா வரை விரிவடைந்து இறுதியாக எகிப்தில் வீழ்ச்சி அடைந்தது. அவர்களின் ஆட்சி உபைதுல்லாஹ் என்பவனோடு தொடங்கி இறுதி ஆட்சியாளன் அல்ஆளித் என்பவனாடு முடிவுற்றது. அதனால் அதன் ஸ்தாபகரான உபைதுல்லாஹ்வின் பெயருடன் இணைத்து 'உபைதிய்யா' எனப் பேசப்படுகின்றது. இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் பின்வரும் தகவலைப் பதிவு செய்துள்ளார்கள்.

واستمرت دولة الفاطميين قريبا من ثلاثمائة سنة حتى كان آخرهم العاضد الذي مات بعد الستين وخمسمائة في اللولة الصلاحية الناصرية القدسية،وكانت عدة ملوك الفاطميين أربعة عشر ملكا متخلفا، ومدة ملكهم تحريرا من سنة سبع وتسعين ومائتين إلى أن توفي العاضد سنة بضع وستين وخمسمائة (( البداية والنهاية – (١٣ / ٢٣٩ ))

பாத்திமிய்யா (உபைதிய்யா )க்களின் ஆட்சி கிட்டத்தட்ட 300 ஆண்டுகள் வரை நீடித்தது. அவர்களின் ஆட்சியின் இறுதி மன்னர் அல்ஆளித் என்பவனாகும். அவன் ஹிஜ்ரி 560 ன் பின் எகிப்தில் மரணித்ததோடு, பாதிமிய்யா பெயரில் தொடங்கப்பட்ட பொய்யாட்சி முடிவுக்கு வந்தது. இவர்கள் மொத்தம் பதினான்கு அரசர்கள் வரை ஒருவர் பின் ஒருவராக ஆட்சி செய்தனர். இவர்களின் ஆட்சி ஹிஜ்ரி 299 இல் ஆரம்பமாகி அல்ஆளித் என்பவனின் மரண வருடமாகக் கொள்ளப்படும் ஹிஜ்ரி 560கள் வரை நீடித்திருந்தது. (அல் பிதாயா வன் நிஹாயா: இப்னு கஸீர்(ரஹ்)



# உபைதிய்யாக்களின் அரசியல், மார்க்க விரோத செயற்பாடுகள்

இவர்கள் தமது அரசியல் இலக்குகளை அடைவதற்காக யூதர்களோடும், மேற்கத்தைய இஸ்லாமிய பிரதேச ஆக்கிரமிப்பாளர் களோடும் மறைமுகமாகக் கைகோர்த்தே தமது திட்டங்களை செயல்படுத்துகின்றனர் என்பதை பாமர முஸ்லிம்கள் அறிவதில்லை.

தமது மார்க்க விரோதப்போக்கினை மக்கள் அறிந்து கொள்ளாதவிதமாக, இஸ்லாம் அனுமதிக்காத ஆன்மீகம் தொடர்பான பல விஷயங்களை முஸ்லிம்களின் விருப்பத்திற்குரிய அஹ்லுல் பைத்தினர் பேரில் தொடங்கி பல்லாண்டு காலமாக முஸ்லிம்களை வழிகெடுத்துவருகின்றனர்.

فالخوارج أعداء المسلمين، وأما العبيدية الباطنية، فأعداء الله ورسوله. سير أعلام النبلاء. تح الأرنؤوط – (١٥ / ٣٧٣ )

கவாரிஜ்கள் முஸ்லிம்களின் வெளிப்படை எதிரிகளாகும். ஆனால், பாத்தினிய்யா உபைதிய்யாக்களோ அல்லாஹ்வுடையவும் அவனது தூதருடையவும் எதிரிகள். (இமாம் அத்தஹபி). எனவே, இவர்களின் செயற்பாடுகள் பற்றி சுருக்கமாக இங்கு பார்க்கவுள்ளோம்.

**ஸஹாபாக்களை முர்தத்களாகவும் கலீஃபாக்களான அபூபக்கர் ஸித்தீக், உமர் ஃபாரூக் (ﷺ) அவர்களை ஆட்சி அபகரிப் பாளர்களாகவும் சித்தரித்தல்.**

அல்முஃபீத் என்ற ஷீஆ மத அறிஞர் தனது அல் இஹ்திஸாஸ்

என்ற நூலில் குறிப்பிடும் செய்தி:

أخرج الشيخ المفيد في كتابه الاختصاص بسنده: (( عن محمد بن الحسن الصَّفار عن محمد بن الحسين عن موسى بن سعدان عن عبد الله بن القاسم الحضرمي عن عمرو بن ثابت: قال: سمعت أبا عبد الله – عليه السلام – يقول: إن النبي صلى الله عليه وآله لما قُبِضَ ارتد الناس على أعقابهم كفارا إلا ثلاثا: سلمان والمقداد و أبوذر الغفاري، (( مجموع مؤلفات عقائد الرافضة والرد عليها – (١٢٣ / ٢٢))

நபி(ﷺ) அவர்கள் மரணித்ததோடு ஸல்மான், மிக்தாத், அபூதர் அல்கிஃபாரி ஆகிய நபித்தோழர்கள் மூவரைத் தவிர மற்ற மனிதர்கள் அனைவரும் மதம் மாறி காபிர்களாக மாறினர் என்ற செய்தியை, முஹம்மத் பின் ஹஸன் அஸ்ஸஃபார் என்ற ஷீஆவின் ஊடாக, அபூ அப்தில்லாஹ்(عليه السلام) அவர்களின் செய்தியாக ஒரு மாபெரிய பொய்யை அறிவித்துள்ளார். இச்செய்தியை ஷீஆக்களின் பல நூல்களில் காண முடிகின்றது.

الوشيعة في كشف شنائع عقائد الشيعة (١ / ١١٧) عقيدة الشيعة وتاريخهم الأسود (١ / ٨)

ஷீஆக்களின் முக்கிய அறிஞர்களில் ஒருவர்தான் நிஃமதுல்லாஹ் அல்ஜஸாயிரி என்பவர். அவர் கலீஃபாக்கள், மற்றும் சுன்னா முஸ்லிம்கள் பற்றிக் குறிப்பிட்டுள்ளதைப் பாருங்கள்.

: "لم نجتمع معهم على إله ولا نبي ولا على إمام، وذلك أنهم يقولون: إن ربهم هو الذي كان محمد صلى الله عليه وسلم نبيه، وخليفته بعده أبو بكر، ونحن لا نقول بهذا الرب ولا بذلك النبي، بل نقول إن الرب الذي خليفته نبيه أبو بكر ليس ربنا ولا ذلك النبي نبينا" [الأنوار النعمانية: ٢/٢٧٩]. أصول مذهب الشيعة الإمامية الإثني عشرية عرض ونقد – (٢ / ٧٢٠)

ஷீஆக்களாகிய நாம் அல்லாஹ், நபி, இமாம் ஆகிய எவர்கள் விடயத்திலும் அவர்களோடு (சுன்னா மக்களோடு) ஒன்று சேர்ந்தவர்கள் அல்லர். ஏனெனில், முஹம்மத் நபி(ﷺ) அவர்கள் யாரை ரப்பாக எடுத்து, அவர்களின் கலீஃபா அபூபக்கராகவும் இருந்த அந்த ரப் (இரட்சகன்) நமது இரட்சகன் அல்ல. நாம் அந்த அந்த ரப்பை ரப்பாகச் சொல்லவும் மாட்டோம், அந்த நபியை அங்கீகரிக்கவும் மாட்டோம். (நிஃமதுல்லாஹ் அல்ஜஸாயிரியின் மூல நூலில் இருந்து ஷேக் நாஸிர் அல்ஃகிஃபாரி அவர்கள்).



55

# கலீஃபாக்களான அபூபக்கர் சித்தீக், உமர் ஃபாரூக்(رضي الله عنهما), அவர்களை காஃபிர்களாக நம்புதல், போதித்தல்.

ஷீஆக்கள் தமது மஹ்தியின் வருகையின் போது நடைபெறும், அவர்கள் கற்பனை மஹ்தி நடத்தவிருப்பதாக நம்பிக்கை கொள்ளும் பல செய்திகளை பரப்புரை செய்துள்ளனர். கலீஃபாக்களான அபூபக்கர் ஸித்தீக், உமர் ஃபாரூக்(رضي الله عنهما) ஆகிய இருவரையும் அவர்களின் மண்ணறைகளை விட்டும் அப்புறப்படுத்தி, அவர்களை கழுமரத்தில் ஏற்றி, அவர்களுக்கு குற்றத் தண்டனை நிறைவேற்றுவதும் அவற்றில் முக்கியானவையாகும்.

يُخرِج أبا بكر وعمر م من قبريهما ، ويصلبهما ويحرقهما. (الأنوار النعمانية ٢ /٨٥)

அவர் அபூபக்கர் ஸித்தீக், உமர்(رضي الله عنهما) ஆகிய இருவரையும் அவர்களின் மண்ணறைகளை விட்டும் வெளியேற்றுவார். அவ்விருவரையும் கழு மரத்தில் ஏற்றி, அவ்விருவரையும் அவர் தீயினால் எரிப்பார் என்று ஒரு அறிவிப்பிலும், மற்றோர் அறிவிப்பில்:

ففي "بحار الأنوار" (٥٣ | ١٠٤):أن منتظرهم يقول: "وأجيء إلى يثرب، فأهدم الحجرة، وأخرج من بها وهما طريان، فآمر بهما تجاه البقيع، وآمر بخشبتين يصلبان عليهما، ((طعون الشيعة في آل بيت النبوة – (١ / ٤٨) ((مهذب كتاب – بذل المجهود في إثبات مشابهة الرافضة الشيعة لليهود )) – (١ / ٢٦)

மஹ்தியாகிய நான் யத்ரிப் (மதீனா) நோக்கி வருவேன், அந்த அறையை உடைப்பேன், அங்குள்ள இருவரும் செழிப்பான நிலையில் இருக்கும் நிலையில் அவர்களை வெளியில் எடுப்பேன். பின் அவ்விருவரையும் பகீஃ பக்கமாகக் கொண்டு செல்லுமாறு

உஸ்மானியர் ஆட்சியின் வீழ்ச்சிக்கான காரணிகள் பற்றி மற்றொரு இடத்தில் குறிப்பிடுகின்ற போது, நாட்டின் மூலை முடக்குகளெல்லாம் கட்டப்பட்ட கப்ருகள் பரவிக்காணப்பட்டன என்றும் இதற்கு உஸ்மானியர்கள் ஊக்கமளித்தனர் என்றும் குறிப்பிடுகின்றார்.

அவர் மேலும் குறிப்பிடுகின்ற போது :

والأضرحة المنتشرة في العالم الإسلامي فمثلاً أعفت الدولة أهالي البصرة من الرسوم والتكاليف، احتراماً لصاحب الحضرة الشريفة، يعني الزبير بن العوام رضي الله عنه، وأن العثمانيين بنوا على ضريحه مسجداً، وقامت والدة السلطان عبدالعزيز بترميم القبب، وتكبير المسجد، وفي سنة ١٢٩٣هـ ورد أمر من السلطان عبدالحميد الثاني بتعمير هذه المراقد الشريفة على نظارة والي البصرة ( ناصر باشا السعدون ). ثم في سنة ١٣٠٥هـ أمر السلطان عبدالحميد أيضاً بتبييض القبب وتعمير المسجد، وأمر أيضاً بكسوتين للضريحين ( الزبير وعتبة بن غزوان ) من الحرير الأحمر المفتخر المطرز بالفضة وأمر أيضاً بوضع مباخر وقماقم من الفضة عند الضريحين الكريمين و كانت جميع الأقاليم الإسلامية، في الحجاز واليمن وافريقيا ومصر والمغرب العربي والعراق والشام وتركيا وإيران، وبلاد ماوراء النهر والهند وغيرها تتسابق في بناء الأضرحة والقباب وتتنافس في تعظيمها والاحتفاء بها، إذ البناء على القبور هو مادرج عليه أهل ذلك العصر، وهو الشرف الذي يتوق إليه الكثيرون. لقد أولع العثمانيون في عصورهم المتأخرة بالبناء على كل ما يعظمه الناس في ذلك العصر سواء أكان ما يعظمونه قبوراً أو آثار لأنبياء أو غير ذلك. أصبحت تلك المشاهد والأضرحة محلاً للاستغاثة والاستعانة بأصحابها وانتشرت عقائد شركية كالذبح لغير وجه الله والنذر للأضرحة، والاستشفاء وطلب البراء من الأضرحة والاعتصام بها، وأصبحت الأضرحة والقبور تهيمن على حياة الناس (( الدولة العثمانية عوامل النهوض وأسباب السقوط – (٢ / ١٦٧ ) (( الدولة العثمانية عوامل النهوض وأسباب السقوط – (٢ / ١٦٦ )

இஸ்லாமிய உலகில் தர்காக்கள் மலிந்து காணப்பட்டன. உதாரணமாக ஸுபைர் பின் அல்அவ்வாம்(رضي الله عنه) அவர்கள் பஸராவில் அடங்கப்பட்டிருந்ததை கண்ணியப்படுத்தும் நோக்கில் பஸரா மக்களிடம் துருக்கி அரசு தொழில் வரிவிதிப்பதைத் தள்ளுபடி செய்ததோடு அவர்கள் மீது வேறு வரிகளையும் தள்ளுபடி செய்திருந்தது. அந்த கப்ர் இருக்கும் இடத்தில் உஸ்மானியர்கள் ஒரு பள்ளியையும் நிருவினார்கள்.

பின்னர் ஹி: 1305 இல் துருக்கி சுல்தான் அப்துல் ஹமீத் அவர்கள் குப்பாக்களை வெள்ளை நிறமாக்கும்படியும் அந்தப் பள்ளியை புணர் நிர்மாணம் செய்யும் படியும் பணிப்புரை விடுத்தார்கள். அத்தோடு ஸுபைர் பின் அவ்வாம், மற்றும் உத்பா பின் கஸ்வான்(رضي الله عنه) ஆகிய நபித்தோழர் இருவரின் தர்காக்களிலும் செந்நிற, தரம் உயர்ந்த, வெள்ளி நிறத்தினால் அலங்காரம் செய்யப்பட்ட இரு பட்டுச் சீலைகளை அவற்றின் மேல்போர்த்தும் படியும் பணித்திருந்தார்.

மேலும், அவ்விரு மண்ணறைகளின் வாசனைக் கிண்ணத்தையும் அதன் குப்பைக் கூடைகளையும் வெள்ளியினால் வைக்கும்படி பணித்தார். துருக்கியின் ஆழுகையின் கீழ் இருந்த இஸ்லாமிய மாநிலங்களான ஹிஜாஸ், ஏமன், அரேபிய மொரோக்கோ, எகிப்து, மற்றும் ஈராக், ஷாம், துருக்கி, ஈரான், யூப்பிரட்டீஸ் நதிக்கு அப்பால் உள்ள நாடுகள், மற்றும் சிந்து தேசம் (இந்தியத் துணைக் கண்டம்) என அனைத்து பிரதேசங்களிலும் மண்ணறைகள் மேல் தர்காக்கள் கட்டுவதிலும், அவற்றின் மேல் குப்பாக்கள் அமைப்பதிலும் அவற்றை கண்ணியப்படுத்துவதிலும், அங்கு விழாக்கள் எடுப்பதிலும் மக்கள் போட்டி போட்டுக் கொண்டு ஒருவரை மற்றவர் முந்திக் கொண்டனர்.

மண்ணறைகள் மீது கட்டடங்கள் கட்டுவது அக்கால மக்களின் அன்றாட பழக்கமாகிப் போனது. மக்களில் அதிகமானோர் அதனை தமது மனங்களுக்கு விருப்பமானதாகக் கண்டனர். அக்காலத்தில் மக்கள் கண்ணியப்படுத்தி வந்த சாதாரண பெரியார்களின் மண்ணறைகளும் சரி, அல்லது நபிமார்கள் தொடர்பானவை என நம்பப்படும் வரலாற்றுத் தடயங்களாயினும் சரி, அவற்றை உஸ்மானிய சுல்தான்கள் முக்கியத்துவம் வழங்கி நிர்வாகம் செய்து அவற்றைக் கட்டிக் காப்பதில் கூடிய கரிசனை காட்டினார்கள். அந்த தர்காக்கள் மற்றும் கட்டப்பட்ட மண்ணறைகளில் அங்கு அடங்கப்பட்டுள்ளவர்களிடம் தேவைகளை வேண்டவும், அவர்களிடம் உதவிகள் கேட்கவும் அவற்றில் மண்டியிடவும் அவை பாவிக்கப்பட்டன.

உஸ்மானியர் ஆட்சியில் அல்லாஹ் அல்லாதோருக்காக அறுத்துப் பலியிடுதல், கப்ராளிகளுக்காக நேர்ச்சை செய்தல் போன்ற இணைவைப்பு காரியங்கள் பரவியதோடு, தர்காவாசிகளிடம் பாதுகாப்புத்தேடி கஷ்டங்களின் போது ஒதுங்கும் நிலையும் ஏற்பட்டது. அந்த அளவுக்கு மனித வாழ்வில் தர்காக்களும், கப்ருகளும் மனித வாழ்வில் செல்வாக்குச் செலுத்தும் நிலை காணப்பட்டது.

(( الدولة العثمانية عوامل النهوض وأسباب السقوط \ علي محمد الصلابي

## 55

# முஸ்லிம் நாடுகளை ஆக்கிரமிக்க இஸ்லாமிய விரோதிகளோடு கைகோர்த்தல்

இது இஸ்லாமிய உள் எதிரிகளான ஷீஆக்களோடும், பாத்தினிக் குழுக்களோடும் ஒட்டிப் பிறந்த ஒரு பிறவிக் குணமாகும். ஆரம்ப காலம் முதல் இன்று வரை இவ்வாறான இழி செயல்களில் அவர்கள் ஈடுபடுகின்றனர். அது பற்றி சில குறிப்புக்கள் இங்கு பகிரப்படுகின்றன.

ஷீஆக்கள் தொடக்க காலங்களில் தமது அரசியல் மற்றும் மத நோக்கங்களை அடைந்து கொள்வதற்காகவும், பண்டைய நெருப்பு வணக்க பாரஸீகத் தலைமைத்துவத்தை தக்கவைத்துக் கொள்வதற்காகவும் யூத கிறிஸ்தவர்கள், மற்றும் இஸ்லாமிய பிரதேச ஆக்கிரமிப்பாளர் களான தாத்தாரியர், சிலுவைப்போராளிகளோடு கைகோர்த்தும் முஸ்லிம் சமூகத்தைக் காட்டிக் கொடுப்பதிலும், அதனை பலவீனப் படுத்துவதிலும் முஸ்லிம் கலீஃபாக்களையும் அஹ்லுஸ்ஸுன்னா மக்களையும் கொலை செய்வதிலும் குறியாக இருந்து செயல்பட்டனர்.

சிலுவைப் போராளிகள், தாத்தாரியர், பிரஞ்சுப் ஆக்கிரமிப்பாளர்களோடு இணைந்து பலஸ்தீன், எகிப்து, ஈராக், பக்தாத் போன்ற பிரதேசங்களை இஸ்லாமிய எதிரிப்படைகள் ஆக்கிரமிக்க துணை நின்று களம் அமைத்துக் கொடுத்தனர் என்பது இஸ்லாமிய அரசுகளின் வீழ்ச்சிக்கான காரணிகள் பற்றி வாசிக்கின்ற போது அறிய முடிகின்றது. அவற்றில் சில நிகழ்வுகள் இங்கு எடுத்தெழுதப்படுகின்றன.

## 55

# பாக்தாத் மீதான தாத்தாரியரின் தாக்குதலுக்கு களம் அமைத்துக் கொடுத்த ஷீஆக்கள்

பக்தாத் மீதான தாத்தாரியர் படை எடுப்பு மற்றும் மிகப் பிரமாண்டமான அப்பாஸிய இஸ்லாமிய அரசின் வீழ்ச்சிக்கு களம் அமைத்துக் கொடுத்தவன் ஷீஆ மதச்சார்பாளனாக அறியப்பட்ட இப்னுல் அல்கமி என்பவன் என்பது இமாம்களாகன இப்னு தைமிய்யா, இப்னு கஸீர், இப்னுல் அஸீர் போன்ற இஸ்லாமிய உலகில் பிரசித்தி பெற்று விளங்கிய அறிஞர்களின் முடிவாகும். எதிரிகளின் கரங்களில் பக்தாத் வீழ்வதற்குப் பிரதான சூத்திரதாரியாக செயல்பட்டவன் இவனே என சுட்டிக் காட்டும் இஸ்லாமிய வரலாற்று ஆய்வாளர்களின் பின்வரும் கருத்துக்கள் பற்றி நாம் சிந்திக்க வேண்டும்.

كيفْ انهارتْ هذِهِ الدولُةَ الإسلاميةُ العظيمةُ ؟!! لقد كانَ سببَ سقوطَها على يدِ وزير باطني رافضـــي خبيثٍ وقصـــةُ ذلك أن آخرَ الخلفاءِ كانَ ضعيفَ الرأيِّ.. محبًا للأموالِ متبعًا للشــهواتِ ومن غفلتِه اتخذ وزيرًا باطنيًا رافضــيًا خبيثًا هو محمدُ بنُ العلقمي فائتمنُه على شئونِ الدولةِ .. فأخذَ الوزيرُ الخبيثُ يصرفُ الجنودَ من حولِ الخليفةِ شيئًا فشيئًا حتَّى إنُه لم يبقَ حولَ الخليفةِ في العاصمةِ العباسيةِ حينئذٍ بغدادْ، لم يبقَ فيهَا إلا عشــرةَ آلافِ فارس، ثم أخذَ محمدُ بنُ العلقميّ يكاتبُ التتارَ حتى إذا أقبلتْ جيوشُ التتارِ متلاحمةً كالبحارِ أقبلتْ إلى بغدادَ وليسَ فيهَا حولَ الخليفةِ إلا تلكَ القوةِ الضــعيفةِ من الجندِ زَيَّنَ الوزيرُ بنُ العلقميّ إلى الخليفةِ أن يخرجَ إلى هولاكو قائدِ التتارِ من أجلِ التفاوضِ على الصلحِ فخرجَ الخليفةُ من غفلتِه ومعُه سبعمائةٍ من الأعيانِ والقضـــاةِ والعلماءِ فقتلهُم التتارُ عن بكرةِ أبيهمْ وقُتلَ الخليفةُ المستعصمُ بينَ يديْ هولاكو صبرًا ومعُه سبعةَ عشرَ من خواصِه منهمْ ثلاثُةٌ من أبنائِه ذكر المؤرخونَ أنَّ عدوَ اللهِ هولاكو التتريُّ الوثنيُّ تَهَيَّبَ في بادئِ الأمرِ من قتلِ الخليفةِ لما يعلمُ من مكانتِه في قلوبِ المســلمينَ، فأخذَ ابنُ العلقميُّ الوزيرُ الخائنُ الرافضــيُّ الخبيثُ يُهَوِّنُ عليهِ ذلكَ ويُزَيِّنُهُ لَه حتى قتلُه، وابنُ العلقميّ يتفرجُ علــى ذلكَ. ثُمَّ دخلَ التتارُ بغدادَ ..وقدْ

فتحَ أبوابَها الوزيُر ابنُ العلقميُّ ..فدخُلوا يقتلونَ وينهبونَ ويأســـــرونَ ويدمرونَ ويحرقونَ أربعينَ يومًا حتى أصبحتْ بغداُد التي كانتْ حين ذاكَ زهرةَ مدائنِ الدنيا أصبحتْ خرابًا يبابًا ..تنعقُ فيهَا البوُم، وقُتلَ فيهَا كما يذكُر ابنُ كثيرٍ في تاريخِه حوالي ألفي ألفَ إنســانٍ أي حوالي مليونينِ من المسـلمينَ والوزيُر الرافضـيُ الخبيثُ ابنُ العلقمي يتفرُج على تلكَ الكارثِةِ الهائلةِ التي حلتْ بالمسـلمينَ وسقطتْ تلكَ الدولُة العباسيُة الإسلاميُة العظيمُة، التي استمَّر ملكها أكثَر من خمسمائِة سنةْ ..ولا حولَ ولا قوةَ إلا باللهِ .

அந்தப் பெரும் இஸ்லாமியப் பேரரசின் வீழ்ச்சி பாத்தினிய்யா கடும்போக்குவாதிகளாலும், ஷீஆ வெறி பிடித்த ஒருவனது சூழ்ச்சியாலும் நடந்தேறியது. இஸ்லாமிய அரசின் கலீஃபா நிர்வாகத்திறன் குறைந்தவராக, பலவீனமான கருத்துக் கொண்டவராக, செல்வங்களில் ஆசைப்பட்டவராக, கடமைகளில் பொடுபோக்காளராக, வீண் கேளிக்கைகளுக்கும் ஆசைகளுக்கும் அடிமைப்பட்டவராக நிர்வாகத் திறன் குறைந்தைவராக இருந்ததன் விளைவாக நாட்டின் நலன்களைக் கவனிக்க ராபிழிய்யா ஷீஆ ஒருவனைத் தேர்வு செய்திருந்தார். அவனே, محمد بن العلقمي முஹம்மத் பின் அல்அல்கமி.

இவன், நாட்டின் பாதுகாப்பு படைகளில் முதலாவதாக கை வைத்தான். அவர்களை கொஞ்சம் கொஞ்சமாக குறைத்துக் கொண்டு வந்தான். இறுதியில் பக்தாதில் குதிரை வீரர்கள் பத்தாயிரம் பேர்கள் மாத்திமே மீதமிருந்தனர். பின்னர் இப்னுல் அல்கமி தாத்தாரியர்களோடு ரகசிய கடிதத் தொடர்புகளை ஏற்படுத்தினான். அவர்கள் பக்தாத் நோக்கி கடல் அலைகள் போன்று ஊடுருவிய போது பலவீனமான நிலையில் இருந்த அந்தப் படையினர் மாத்திரமே கலீஃபாவைச் சூழ நின்று கொண்டிருந்தனர். இதற்குள் இப்னுல் அல்கமி தாத்தாரியர்களிடம் கலீஃபாவின் சமரஸ முயற்சியை புறக்கணிக்கும்படி மறைமுகமாக வேண்டிக் கொண்ட நிலையில் அவன், இந்த நேரத்தில் அவர்களிடம் சமரஸத்தை வெளிப்படுத்தும் நோக்கில் ஹோலாகுஹானை சந்தியுங்கள் என கலீஃபாவிடம் வேண்டி, இன்னொரு தந்திரத்தையும் கையாண்டான்.

இவனது ஆலோசனையை கேட்ட கலீஃபா சமஸரப் பேச்சுவார்த்தைக்காக தன்னோடு தனது விஷேட அதிதிகள், மற்றும் நீதிபதிகள், ஆலிம் உலமாக்கள் என முக்கிய பிரமுகர்களை அழைத்துக் கொண்டு சென்றார்.

அவர்கள் அனைவரையும் அவன் அந்த இடத்தில் பதறப்பற கலீஃபாவின் கண்முன் கொலை செய்தான். கலீஃபா அல் முஸ்தஃஸிமும் அவரது மூன்று ஆண்மக்களும் ஹோலாகோஹான் முன்னிலையில் கைது செய்யப்பட்டுக் கொலை செய்யப்பட்டனர். இதன் பின்னர்தான் தாத்தாரியப் படை பக்தாதினுள் நாலா திசைகள் வழியாகவும் பிரவேசித்தனர்.

அதற்காக இப்னுல் அல்கமி பக்தாதின் பிரதான எல்லை வாயில்களை திறந்து கொடுத்தான். அவர்கள் அங்கு பிரவேசித்து மக்களைக் கொன்று குவித்து, பொருட்களைக் கொள்ளையடித்து சூறையாடினர். இவ்வாறு நாற்பது நாட்கள் வரை இந்தக் கொடுமைளை அரங்கேற்றி பசுமையான பக்தாத் நகரை சுடுகாடாக்கினான்.

சிலை வணங்கியான ஹோலாகுஹான் என்ற தாத்தாரியன் முஸ்லிம் மக்களின் மனங்களில் பீதியை உண்டு பண்ணவே கலீஃபாவையும் அவரது முக்கியஸ்தர்களையும் ஆரம்பமாகக் கொலை செய்தான்.

500 அண்டுகள் கோலோச்சிய இஸ்லாமியப் பேரரசொன்றை வீழ்த்திட வழியமைத்துக் கொடுத்தவன் ஒரு ஷீஆ மதவாதியே! இந்தத் துயர நிகழ்வை ஹி: 656 (கி.பி. 1258) இல் அரங்கேற்றியுள்ளான் என்றால் ஷீஆக்களின் நவீன கால சூழ்ச்சிகள் பற்றிப் பேசவா வேண்டும்? அல்லாஹ்வே போதுமானவன்.

மேலதிகத் தகவல்களுக்கு,

موسوعة الرد على المذاهب الفكرية المعاصرة\ جمع وإعداد : علي بن نايف الشحود

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் தாத்தாரியர் ஆக்கிரமிப்பால் பக்தாத் நகரில் எட்டு லட்சத்திற்கும் அதிகமான முஸ்லிம் மக்கள் கொலை செய்யப்பட்டதாகவும், ஷீஆ மதவாதியான இப்னுல் அல்கமி என்ற சமூக விரோதியே இதற்கு முழுமையாக களம்

அமைத்துக் கொடுத்தவன் என்றும், அவனே இந்தப் பேரழிவுக்கான அடிப்படை சூத்திரதாரி என்றும் சுட்டிக்காட்டியுள்ளார்கள்.

தாத்தாரியர் அரங்கேற்றிய கொடூரம் பற்றி அறியும் நீங்கள், ஷீஆக்கள் வரலாறு நெடுகிலும் இந்த பண்புடையவர்களாக இருந்துள்ளார்கள். என்பதையும் அறிந்து கொள்ள கடமைப் பட்டுள்ளீர்கள்.

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் ஹிஜ்ரி 656 வது ஆண்டு வரலாற்றுக் குறிப்பில் பின்வருமாறு விளக்குகின்றார்கள்.

ثم دخلت سنة ست وخمسين وستمائة فيها أخذت التتار بغداد وقتلوا أكثر أهلها حتى الخليفة، وانقضت دولة بني العباس منها ... وكان قدوم هلاكو خان بجنوده كلها، وكانوا نحو مائتي ألف مقاتل – إلى بغداد في ثاني عشر المحرم من هذه السنة، وهو شديد الحنق على الخليفة بسبب ما كان تقدم من الامر الذي قدره الله وقضاه وأنفذه وأمضاه

...... ووصل بغداد بجنوده الكثيرة الكافرة الفاجرة الظالمة الغاشمة، ممن لا يؤمن بالله ولا باليوم الآخر، فأحاطوا ببغداد من ناحيتها الغربية والشرقية، وجيوش بغداد في غاية القلة ونهاية الذلة، لا يبلغون عشرة آلاف فارس، وهم وبقية الجيش، كلهم قد صرفوا عن إقطاعاتهم حتى استعطى كثير منهم في الاسواق وأبواب المساجد، وأنشد فيهم الشعراء قصائد يرثون لهم ويحزنون على الاسلام وأهله، وذلك كله عن آراء الوزير ابن العلقمي الرافضي، وذلك أنه لما كان في السنة الماضية كان بين أهل السنة والرافضة حرب عظيمة نهبت فيها الكرخ ومحلة الرافضة حتى نهبت دور قرابات الوزير، فاشتد حنقه على ذلك، فكان هذا مما أهاجه على أن دبر على الاسلام وأهله ما وقع من الامر الفظيع الذي لم يؤرخ أبشع منه منذ بنيت بغداد، وإلى هذه الأوقات،

ஹிஜ்ரி 565 ஆம் ஆண்டு நுழைகின்றது. இவ்வாண்டுதான் தாத்தாரியர் பக்தாதைக் கைப்பற்றினர். கலீஃபா உட்பட அங்குள்ள மக்கள் அனைவரையும் அவர்கள் கொலை செய்தனர். இத்தோடு அப்பாஸியர் ஆட்சிக்கு முடிவு கட்டப்பட்டு விட்டது எனக் கூறிய பின்னர்,

முஹர்ரம் பன்னிரெண்டாம் நாளன்று தாத்தாரியர்கள் இரண்டு லட்சம் படைகளுடன் பக்தாதிற்குள் பிரவேசித்தனர். தாத்தாரியத் தலைவன் ஹோலாகுஹான் அப்பாஸிய கலீஃபாவின் ஆரம்ப கால நடவடிக்கைகள் தொடர்பாக அவருடன் கடுமையான கோபத்தில் இருந்தான்...

அவன் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொள்ளாத, இறைமறுப்பாளர்களான, அநியாயக்கார, ஈவிரக்கமற்ற தனது படை பட்டாளங்களோடு பக்தாதில் பிரவேசித்தான். அவர்கள் பாக்தாதை, அதன் மேற்கு மற்றும் கிழக்குத் திசைகளால் முழுமையாக சூழ்ந்து கொண்டனர். பத்தாதில் உள்ள முஸ்லிம்களின் படைகள் பத்தாயிரத்தையும் தாண்டாத, மிகவும் அற்பமான எண்ணிக்கையினராக இருந்தனர்.

இவர்களும் ஏனைய படைகளும் பல மாதங்கள் இப்னு அல்கமியின் சம்பளக் குறைப்பால் அவதியுற்றுக் கொண்டிருந்தனர். அவர்களில் பலர் பள்ளிவாயில்களிலும் சந்தைகளிலும் பிச்சை எடுக்கும் அளவுக்கு பாரிய பொருளாதார நெருக்கடிக்கு உள்ளாகினார்கள்.

கவிஞர்கள் இவர்களின் நிலையை உணர்த்தி, இஸ்லாத்திற்காகவும் முஸ்லிம்களுக்காகவும் இஸ்லாத்தின் கதியை வர்ணித்தும் இரங்கல், மற்றும் துன்பக்கவி பாடினார்கள். இவை அனைத்தும் ஷீஆ மதவாதியான இப்னுல் அல்கமி மூலமே நடந்தது.

அப்பாஸியர் ஆட்சியில் இடை இடையே சுன்னா முஸ்லிம்களுக்கும் ஷீஆக்களுக்கும் இடையில் ஏற்பட்ட போரால் ஷீஆக்களின் கடைத் தொகுதிகள், மற்றும் அவர்களின் கூடாரங்கள் கொள்ளையிடப்பட்டதில், கலீஃபாவின் ஆலோசகரான இப்னுல் அல்கமி என்ற ஷீஆ அமைச்சரின் உறவினர்களின் வீடுகளும் உள்ளடங்கி இருந்ததற்கு பழிதீர்க்கும் முகமாக இதனை அவன் அரங்கேற்றினான் என வர்ணிக்கின்ற இமாம் அவர்கள் இஸ்லாமிய வரலாற்றில் இவ்வாறானதொரு சோக நிகழ்வு நடந்ததில்லை எனக் குறிப்பிட்டுள்ளார்கள்..

முஸ்லிம் சமூகத்தின் துரோகிகளான ஷீஆக்கள் இஸ்லாமிய அரசுக்கு எதிராக எவ்வாறு சதி செய்து இஸ்லாமிய ஆட்சியை வீழ்த்தினார்கள் என்பதற்கு ஹி:656 வது வருடத் துரோகம் உலகம் அழியும் வரையும் போதுமானதாகும்.

# தாத்தாரியர் அரங்கேற்றிய கொடுமைகள் பற்றி வர்ணிக்கின்ற இப்னு கஸீர்(ரஹ்)

55

ومالوا على البلد فقتلوا جميع من قدروا عليه من الرجال والنســـاء والولدان والمشـــايخ والكهول والشبان ودخل كثير من الناس في الآبار وأماكن الحشوش، وقنى الوسخ وكمنوا كذلك أياما لا يظهـــرون وكان الجماعة من الناس يجتمعون إلى الخانات ويغلقون عليهم الابواب فتفتحها التتار إما بالكســر وإما بالنار، ثم يدخلون عليهم فيهربون منهم إلى أعالي الامكنة فيقتلونهم بالاســـطحة، حتى تجري الميازيب من الدماء في الازقة، فإنا لله وإنا إليه راجعون.

நாட்டினுள் பிரவேசித்த தாத்தாரியர்கள் தங்கள் முன் அகப்பட்ட ஆண்கள், பெண்கள், சிறுவர்கள், இளைஞர்கள், வயோதிபர்கள், மூதாட்டிகள் என அனைவரையும் மூர்க்கத்தனமாகக் கொலை செய்தனர்.

அவர்களில் பலர் பாழ் கிணறுகள், கழிவறைகள், குப்பைத்தொட்டிகள் போன்ற இடங்களில் ஓடி ஒளிந்து கொண்டு அங்கிருந்து பல நாட்கள் வெளியில் வராமல் தம்மை தற்காத்துக் கொள்வதற்காக மறைந்து வந்தார்கள்.

அவர்களில் ஒரு குழுவினர் ஒரு கட்டிடத்தினுள் புகுந்து அதற்கு தாழ்ப்பாள் இட்டுக் கொண்டதை அவதானித்த தாத்தாரியர் அதை உடைத்தும், தீ வைத்து சேதப்படுத்தியும் அவர்களைக் கொலை செய்தனர். இவர்களுக்கு அஞ்சி மலை உச்சியின் மீது ஏறி ஒளிந்து கொண்டவர்களைத் தேடி அழிக்கும் பொருட்டு அவர்களைக் கைது செய்து மலை உச்சியில் இருந்தே அவர்களைக் கீழே தள்ளிவிட்டனர்.

ஒரு கட்டடத்தில் நீர்வடிய வேண்டிய பீலிகளால் இரத்தங்கள் வழிந்தோடியது என்பதை மனவேதனையுடன் தரும் இமாமவர்கள்,

فإنا لله وإنا إليه راجعون

“நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள், அவன் பக்கமே மீளக்கூடியவர்கள்” என்ற சோகத்தின் போது கூறப்படும் இஸ்திர்ஜா வார்த்தைகளால் முடித்து விட்டு, மேலும் விபரிக்கின்ற போது:

அவ்வாறுதான் ஐங்காலத் தொழுகைக்குரிய மஸ்ஜிதுகள், ஜும்ஆப் பள்ளிகள், தொடர்பாடல் நிலையங்கள் என அனைத்து இடங்களிலும் மிலேச்சத்தனமாக கொலைகள் தாராளமாக நடந்தேறின.

முஸ்லிம் அல்லாத யூத, கிரிஸ்தவ சிறுபான்மை இனத்தவர், மற்றும் கொடியவன் இப்னுல் அல்கமியின் செயலகத்தில் பாகாப்பு வேண்டி ஒதுங்கிக் கொண்டவர்கள், மற்றும் தமது செல்வங்களை (அரச காரியாலங்களில்) வழங்கிய போது தமக்கும் தமது பொருளா தாரத்திற்குமான பாதுகாப்பு உத்தரவாதம் உறுதிப்படுத்தப்பட்ட வர்த்தகர்கள் சிலரைத் தவிர ஏனையோர் அனைவரும் கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்டனர்.

இவ்வளவு காலமும் செழிப்புற்று விளங்கிய பக்தாத் நகரம் விரல் விட்டு எண்ணக் கூடிய குறிப்பிட்ட சில மனிதர்கள் வாழும் பாழடைந்த சோக நகரமாக மாறியது. பசி, பட்டினியுடன் மக்கள் துன்பத்திற்கு ஆளானார்கள். அவர்களின் மனங்களில் பயம், பீதி அதிகரித்தது.

பக்தாத் கலீஃபாவின் பிரதமர் அந்தஸ்தில் இருந்து வந்த இப்னுல் அல்கமி, அல்-முஸ்தன்ஸிர் பில்லாஹ்வின் காலத்தில் ஒரு இலட்சத்திற்கும் அதிகமாக இருந்த படையினரை தினந்தோறும் தனது தந்திர புத்தியால் பன்மடங்காகக் குறைத்தது மட்டுமின்றி, படைகளின் பெயர்களையும் பதிவு இடாப்புக்களில் இருந்தும் நீக்கி இருந்தான்.

அவர்களின் எண்ணிக்கை பத்தாயிரம் வரை குறைக்கப்

பட்டதும் ஹமதானில் முகாமிட்டிருந்த தாத்தாரியர்களுடன் திரை மறைவில் கள்ள உறவை ஏற்படுத்தி அவர்களுக்கு செங்கம்பள வரவேற்பளித்து, நாட்டின் அந்தரங்க இரகசியங்களை கசியவிட்டு, காட்டிக் கொடுத்த இந்தத் துரோகியின் சதியால் பல இலட்சம் உயிர்கள் பதறப் பதறப் பறிக்கப்பட்டன.

அல்லாஹ்வின் விரோதிகளுடன் கைகோர்த்த இவனது துரோகம் இன்றுவரை பேசப்படுகின்றது என்றால் வரலாற்றில் இதைவிடவுமா துரோகம் வேண்டும்?

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்களின் மற்றொரு செய்தி:

وقتل الخطباءُ والأئمةُ ، وحملةُ القرآنِ ، وتعطلت المساجدُ والجماعاتُ والجمعاتُ مدة شهورٍ ببغداد [البداية والنهاية : ١٣/٢٠٣ ]

தாத்தாரியத் தலைவன் கதீப்மார்கள், இமாம்கள், குர்ஆனைச் சுமந்த ஹாபிழ்கள் எனப் பலரைப் படுகொலை செய்தான். பள்ளிகள் அனைத்தும் ஜமாத் மற்றும் ஜும்ஆ தொழுகைகள் நடைபெறாமல் பல மாதங்கள் பாழாகிக் கிடந்தன. (இமாம் இப்னு கஸீர்- அல்பிதாயா வந்நிஹாயா).

இதனைத் தொடர்ந்து விளக்கும் இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள்:

وكان هدفُ ابنِ العلقمي " أن يزيلَ السـنةَ بالكليةِ وأن يظهرَ البدعةَ الرافضـة ، وأن يعطلَ المساجدَ والمدارسَ ، وأن يبني للرافضةِ مدرسةً هائلةً ينشرون بها مذهبهم فلم يقدرُه الله على ذلك ، بل أزال نعمتَه عنه وقصف عمره بعد شهورٍ يسيرةٍ من هذه الحادثةِ ، وأتبعه بولدِه " [ البداية والنهاية : ١٣/٢٠٢ – ٢٠٣ ]

இப்னுல் அல்கமியின் நோக்கம் சுன்னாக்களை முழுமையாக ஒழித்துக் கட்டி, ஷீஆ ராபிழாக்களின் பித்அத்துக்களை மேலோங்கச் செய்து, சுன்னத் ஜமாஅத் பள்ளிகள் மற்றும் கல்லூரிகளைப் பாழாக்கி அதற்குப் பதிலாக பாரிய ஷீஆக் கல்லூரி ஒன்றை நிறுவி அந்த மதச் சிந்தனையைப் பரப்புவதாகும். அல்லாஹ் அவனது திட்டத்துக்கு வாய்ப்பளிக்காது பக்தாத் வீழ்ச்சி அடைந்து சில ஆண்டுகளில் அல்கமி மரணித்தான். அவனது மரணித்தின் பின் அவனது மகன் அவனது இடத்தைப் பொறுப்பேற்றான் (இமாம் இப்னு கஸீர்- அல்பிதாயா வந்நிஹாயா).

البداية والنهاية (من المكتبة الشاملة)

https://www.saaid.net/Doat/Zugail/336.htm.

முஸ்லிம் உலகில் போர் தொடுப்பதற்குத் துணையாக செயல்படுபவர்கள் ஷீஆக்கள் என்பது இன்று நேற்றல்ல. பல வருடங்களாக இதே கதைதான்.

இன்றைய சிரியா, ஈராக்கில் நடந்தேறிய கொலைக் களங்களின் பிரதான சூத்திரதாரிகள் இந்தக் ஈரானியக் கயவர்களே என்பதை மிகவிரைவில் உலக முஸ்லிம்கள் புரிந்து கொள்வார்கள்.

**குறிப்பு:** சிரியாவில் 2013 ஆம் ஆண்டு ஏற்பட்ட மக்கள் கிளர்ச்சி 2018 தொடங்கியும் முடிந்தபாடில்லை. இந்தக் கிளர்ச்சியை அடக்க ஈரான் ரஷ்யாவுடன் இணைந்து தனது குடியரசுப் படையையும் அதன் தளபதிகளையும் வழங்கி உதவி செய்தது. ஹிஸ்புல்லாக்களும் அதற்கு பக்க பலமாக ஈரானிய ஷீஆக்களும் செயற்பட்டனர். அவர்கள் இந்தப் போரில் பல நூறு உயிர்களை இழந்தனர்.

இறுதியில் சிரியா ஜனாதிபதி பஷ்ஷார் அல்-அஸத் ரஷ்யாவோடு தனது போர் உதவிகளை சுருக்கிக் கொண்டு ஈரானை 2018.01.20 காலப் பகுதியில் கை கழுவினான். பல்லாயிரணக்கான டொலர்களை சிரியாவில் இழந்த ஈரான், தனது போர்ப் பங்கு கிடைக்காததைக் கண்டித்து 21.01.2018 அன்று அறிக்கையும் வெளியிட்டது தொடர்பாக பல ஊடகங்கள் செய்தி வெளியிட்டன.

# தாத்தாரியர் அரங்கேற்றிய கொடூரம் பற்றிய இமாம் இப்னுல் அஸீரின் மற்றொரு பதிவு

௫௫

பிரபல இஸ்லாமிய வரலாலற்றாசியரான இமாம் இப்னுல் அஸீர்(ரஹ்) அவர்கள் தாத்தாரியர் அரங்கேற்றிய வன்கொடுமைகள் பற்றி விபரிக்கின்ற போது இவ்வாறு பதிவு செய்கின்றார்கள் :

لقد بقيت عدة سنين معرضًا عن ذكر هذه الحادثة استعظامًا لها، كارهًا لذكرها، فأنا أقدم إليه رجلًا وأؤخر أخرى، فمن الذي يسهل عله أن يكتب نعي الإسلام والمسلمين، ومن الذي يهون عليه ذكر ذلك؟ فيا ليت أمي لم تلدني، ويا ليتني مت قبل حدوثها وكنت نسيًا منسيًا، إلا أني حثني جماعة من الأصدقاء على تسطيرها وأنا متوقف، ثم رأيت أن ترك ذلك لا يجدي نفعًا، فنقول: عمت الخلائق، وخصت المسلمين، فلو قال قائل: إن العالم مذ خلق الله سبحانه وتعالى آدم، وإلى الآن، لم يبتلوا بمثلها؛ لكان صادقًا، فإن التواريخ لم تتضمن ما يقاربها ولا ما يدانيها.

இந்நிகழ்வின் கொடூரம் பற்றிய தாக்கத்தால் அது பற்றி நான் எதுவும் எழுதாமல், பேசாமல் பல ஆண்டுகள் அலட்சியமாக இருந்தேன். ஒரு காலை முன்னால் வைப்பதும், மறுகாலைப் பின்னால் வைப்பதுமாக எனது நிலை ஒரு தடுமாற்றத்தில் இருந்தது.

இஸ்லாத்திற்கும், முஸ்லிம் உம்மத்திற்கும் ஏற்பட்ட இந்த சோக நிகழ்விற்கு மரண அறிவித்தல் சொல்ல யார்தான் இருக்கின்றனர்? அது யாருக்குத்தான் எளிதானதாகத் தெரியும்? எனது தாய் என்னை இதற்கு முன்னரே பெற்றெடுத்திருக்கக் கூடாதா? என் கைசேதமே! நான் இந்த நிகழ்வுக்கு முன்னால் மரணித்து, மறக்கடிக்கப்பட்ட மனிதர்களில் ஒருவனாக இருந்திருக்க வேண்டாமா? என தனது ஆழ்மனதின் கவலையை வெளிப்படுத்தும் இமாம் அவர்கள் மேலும் குறிப்பிடுகின்ற போது:

நான் இது பற்றி எதுவும் பேசாது இருந்து கொண்டிருந்த வேளை எனது நண்பர்கள் சிலர் என்னிடம் இதைப் பதிவு செய்யும்படி ஆர்வமூட்டினர். பின்னர், இதை பதிவு செய்யாது விட்டுவிடுவது பயனற்றது எனக் கண்டேன். அதன் பின் அதனைப் பதிந்தேன்.

நாம் சொல்வது என்னவெனில், படைப்பினங்களை முழுமையாகப் பிடித்துக் கொண்ட அந்த சோகம், முஸ்லிம்களை குறிப்பாக்கிக் கொண்டது. உலகில் ஆதம்(அலை) அவர்கள் படைக்கப் பட்ட நாள்முதல் இன்றுவரை இவ்வாறான ஒரு குரூர நிகழ்வைக் கொண்டு அவர்கள் சோதிக்கப்படவில்லை என ஒருவர் கூறினால் அவர் உண்மையாளரே!

ஏனெனில், வரலாற்றில் இதற்கு நெருக்கமானதொரு நிகழ்வு முன்னர் இடம் பெறவில்லை. வரலாற்றில் பாரியதொரு நிகழ்வாக **'புஹ்த் நஸ்ர்'** என்ற கிறிஸ்தவ அரசனின் பின்வரும் கொலை நிகழ்வு பதியப்படுகின்றது எனக் குறிப்பிட்ட பின்னர்,

ومن أعظم ما يذكرون من الحوادث ما فعله بخت نصر ببني إسرائيل من القتل، وتخريب البيت المقدس، وما البيت المقدس بالنسبة إلى ما خرب هؤلاء الملاعين من البلاد، التي كل مدينة منها أضعاف البيت المقدس، وما بنو إسرائيل بالنسبة إلى من قتلوا، فإن أهل مدينة واحدة ممن قتلوا أكثر من بني إسرائيل، ولعل الخلق لا يرون مثل هذه الحادثة إلى أن ينقرض العالم، وتفنى الدنيا، إلا يأجوج ومأجوج. وأما الدجال فإنه يبقي على من اتبعه، ويهلك من خالفه، وهؤلاء لم يبقوا على أحد، بل قتلوا النساء والرجال والأطفال، شقوا بطون الحوامل، وقتلوا الأجنة، فإنا لله وإنا إليه راجعون، ولا حول ولا قوة إلا بالله العلي العظيم.

**'புஹ்த் நஸ்ர்'** என்பவன் பனூ இஸ்ரவேலர்களைக் கொடுமைப் படுத்தினான். பல கொலைகள் நடந்தது. ஆம்! பைத்துல் முகத்தஸ் பாழடிக்கப்பட்டது. பைத்துல் முகத்தஸைப் பொறுத்தவரை அது ஒரு நகரம்தான் பாழ்போனது. இவர்கள் மில்லியன் கணக்கான ஊர்களை அல்லவா பாழாக்கினர். (ஊர்மக்களைக் கொலை செய்தனர்).

பனூ இஸ்ரவேலர்களில் கொலை செய்யப்பட்டவர்களின் எண்ணிக்கை இவர்களின் எண்ணிக்கையுடன் ஒப்பிட்டுப்பாரக்கின்ற போது சாதாரணமான எண்ணிக்கையினர்தான். உலகம் அழியும் வரை மனிதர்கள் இவ்வாறானதொரு நிகழ்வைக் கண்டிருக்க மாட்டார்கள். அவ்வாறு நிகழும் வேளை உலகம் முடிவுறும்.

வேண்டுமானால் வரப்போகும் காலங்களில் கொடியவர்களான “யஃஜூஜ் – மஃஜூஜ்” கூட்டத்தினரின் குழப்பத்தைக் காணலாம். தஜ்ஜால் கூட தன்னைப் பின்பற்றியவர்களை அழிக்காது, மற்றவர்களைத்தான் அழிப்பான். இவர்களோ ஒருவரைக் கூட விட்டுவைக்கவில்லை. அது மட்டுமின்றி, ஆண்கள், பெண்கள், சிறுவர்கள், வயோதிபர்கள் என அனைத்து தரப்பாரையும் அவர்கள் கொலை செய்தார்கள். கர்ப்பிணிகளின் வயிறுகளைக் கிழித்து, சிசுக்களை ஈவிரக்கமின்றி (வெளியில் எடுத்து)க் கொலை செய்தார்கள்.

இமாமவர்கள் தமது இறுதி வசனத்தை சோதனைகளின் போது அல்லாஹ்வின் பக்கம் மீளவேண்டிய ,

فإنا لله وإنا إليه راجعون، ولا حول ولا قوة إلا بالله العلي العظيم.

“நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள், அவன் பக்கமே மீளக் கூடியவர்கள், நன்மை செய்யவும் தீமையில் இருந்து ஒதுங்கிக் கொள்ளவும் மகத்துவம் மிக்கவனும் மிக்க உயர்ந்தவனுமாகிய அல்லாஹ்வின் நாட்டத்தைக் கொண்டே அன்றி நடந்தேறாது” என்ற ஆறுதல் தரும் ஆன்மீக வாசகத்தைக் கொண்டு முடிக்கின்றார்கள். (இப்னுல் அஸீர்– அல்காமில் ஃபித்தாரீஹ்).

ابن الأثير: الكامل في التاريخ – (٥ / ٣٠٤) ذكر خروج التتر إلى بلاد الشام

உஸ்மானியர் ஆட்சிக்கு குழி பறிக்கும் வேலையை வரலாறு நெடுகிலும் செய்து வந்த ஷீஆக்களுக்கு சற்றும் சளைத்தவர்கள் இல்லை என்பதை நிரூபிக்கும் பல சதிகளை ஷீஆமதப் பிரிவான ஸஃபவிக்கள் என்போர் செய்துள்ளனர் என்பதை இஸ்லாமிய வரலாறு பதிவு செய்துள்ளது.

உஸ்மானியர் ஆட்சிக்கு எதிராக செயல்பட்ட சமூகத் துரோகிகளாக இந்த ஷீஆக்கள் பற்றி ஆய்வாளர் ஸல்லாபி அவர்கள் இவ்வாறு பகிர்ந்து கொள்கின்றார்கள்.

في الماضي كانوا أكبر عون للتتار والصـليبيين ضد المسـلمين، وهاهم يسـيرون على نفس المنهج الممزوج بالخيانة والتآمر لحساب أعداء الأمة وقد مر بنا في هذا الكتاب دور الصفوية الأثنى عشرية الشيعة في محاربة الدولة العثمانية على مر عصورها، وحين احتل الفرنسيون سوريا وانطلقت الحركات الجهادية ضدهم كان الاسماعيلية في سليمة وغيرها يقاتلون جنباً الى جنب مع الفرنسـيين كما فعلوا مع المجاهد (ابراهيم هنانو) ومن معه من المجاهدين (( الدولة العثمانية عوامل النهوض وأسباب السقوط – (٢ / ١٧)

பிரான்ஸ் ஆக்கிரமிப்பாளர்கள் சிரியாவை ஆக்கிரமித்த போது இஸ்லாமியப் போராளிக் குழுக்கள் அவர்களுக்கு எதிராகப் போராடச் சென்றனர். சுலைமிய்யாப் பிரதேசத்திலும், வேறு நகரங்களிலும் இஸ்மாயீலிய்யா ஷீஆக்கள் பிரான்ஸ் படைகளோடு இரண்டரக் கலந்து முஜாஹிதீன்களுக்கு எதிராகப் போராடினார்கள். அதாவது இப்ராஹீம் ஹனானோ மற்றும் அவரது சக போராளிகளுக்கு எதிராக நடந்து கொண்டது போல, முஜாஹிதீன்களைக் காட்டிக் கொடுப்பதில் இவர்கள் ஈடுபட்டனர் என்கிறார் ஆய்வாளர் முஹம்மத் ஸல்லாபி.

அந்த நிகழ்ச்சித் திட்டத்தின் தொடரில் அமெரிக்கா, ரஷ்யா போன்ற வல்லரசு நாடுகள் முஸ்லிம் நாடுகளையும் அவர்களின் பிரதேசங்களையும் ஆக்கிரமிக்கவும், பயங்கவாதத்தின் பெயரால் அவற்றின் வளங்களை சுரண்டவும், ஈரான் இன்றும் ரகசிய படை நகர்வுகளைச் செய்து வருவதோடு பல ரகசிய ஒப்பந்தங்களையும் செய்து செயல்பட்டு வருகின்றது.

அமெரிக்கா ஆப்கானிஸ்தானை ஆக்கிரமித்து அதன் வளங்களைக் கொள்ளையடித்து அங்குள்ள முஸ்லிம்கள் பட்டினிச் சாவால் காவு கொள்ளப்பட ஏகாதிபத்திய அமெரிக்காவுக்கு துணை நின்றவர்கள் நெருப்பு வணங்கிகளான இந்த ஷீஅக்களே என்பதை அவர்களின் மதப் பெரியார்கள், ராணுவ கட்டளைத் தளபதிகள் போன்றோரின் வாக்கு மூலங்கள் மூலம் அறிய முடிகின்றது. அது பற்றிய சுருக்கத்தை இங்கு கவனியுங்கள்.

# ஆப்கானிஸ்தானை ஆக்கிரமிக்க களம் அமைத்துக் கொடுத்த நவீன ஈரானிய ஷீஆக்கள்.

UU

பக்தாதை அமெரிக்கா தாக்குவதற்கு முன்னர் அமெரிக்கா, ஈரான் உயர் மட்ட, மூடப்பட்ட அறைகளுக்குள் நடந்த இரகசியப் பேச்சு வார்த்தையில் பின்வரும் ஆவணங்கள் மீது கைச்சாத்திடப் பட்டது.

**முதலாவது ஆவணம் :**

அமெரிக்கர்களாகிய நீங்கள் பக்தாதினுள் நுழைவதற்கான மறைமுக ஆதரவை நாம் உங்களுக்கு வழங்குவோம். அங்கு பிரவேசித்ததும் இரண்டு காரியங்களை உடனடியாக செய்ய வேண்டும்.

***முதலாவது அம்சம்:***

அரச, மற்றும் சிவில் அலுவலகங்களில் காணப்படும் சுன்னா முஸ்லிம்கள் தொடர்பான அனைத்துவிதமான தொடர்பாடல் ஆவணங்களும் எரிக்கப்படல் வேண்டும். ஏனெனில் நாம் பதினைந்து லெட்சம் ஈரானியர்களை பக்தாதில் குடியமர்த்த திட்டமிட்டுள்ளோம்.

***இரண்டாவது அம்சம்:***

சுன்னாக்களின் அனைத்து நூலகங்களையும் நீங்கள் எரித்து விடவேண்டும். அங்கு ஃபிக்ஹ், உசூல், தஃப்ஸீர் என எந்த ஒரு நூலும் காணப்படக் கூடாது. அதற்குப் பதிலாக நமது ஷீஆ நூல்களே அங்கு வைக்கப்படல் வேண்டும்.

وأما الوثيقة الثانية : فبعد شكره لأعضـاء فيلق الغدر على ما قاموا به من الأمرين الســابقين في الوثيقة الأولى؛ يطلب منهم اغتيال وتصـــفية جميع رموز الســـنة؛ من علماء وأساتذة جامعيين ووجهاء ومفكرين ورجال أعمال،... الخ ,

**இரண்டாவது ஆவணம்:**

இந்த ஒப்பந்த முடிவில் மோசடிக்காரன், ஈரானியக் கட்டளைத் தளபதி அமெரிக்காவுக்கு நன்றி தெரிவித்த பின்னர் சுன்னாக்களின் முக்கிய புள்ளிகளான ஆலிம்கள், பல்கலைக்கழக விரிவுரையாளர் கள், சிந்தனையாளர்கள், புத்திஜீவிகள், தொழிலதிபர்கள், சமூக முன்னோடிகள் என அனைவரையும் திட்டமிட்டு கொலை செய்து, அவர்களை முழுமையாகத் துடைத்தெறிய வேண்டும் எனக் கோரிக்கை வைத்திருந்தான். அதுவும் நிறைவேற்றப்பட்டது.

ஆப்கானிஸ்தான் மீதான அமெரிக்க ஆக்கிரமிப்புக் காலத்தில் ஜோர்ஜ் புஷ்ஷின் நாய்க் குட்டி என வர்ணிக்கப்பட்ட கொலின் பவுள் அந்நாட்டின் வெளிவிவகார அமைச்சராக இருந்தார். ஈரான் அமெரிக்காவுக்குச் செய்த இஸ்லாமிய துரோக சேவைகளுக்கு அவர் இப்படி நன்றி தெரிவித்திருந்தார்.

إن أمريكا تشـــكر إيران ، على ما بذلته لنا ، فلولا إيران ما استطعنا دخول أفغانســـتان ، ولم نتمكن من إجراء الانتخابات فيها (كول امباول )وزير الخارجية الأمريكية (( أثر اليهود والنصارى والمجوس في التشيع – ( ١ / ٤ )

ஈரான் தமது நாட்டுக்காக செலவளித்த முயற்சிகளுக்கு நிச்சயமாக அமெரிக்கா, நன்றி சொல்கின்றது. ஏனெனில் ஈரான் மாத்திரம் இல்லாதிருந்தால் எம்மால் ஆப்கானிஸ்தானில் நுழைந்திருக்க முடியாது. அங்கு தேர்தல்கள் நடத்தி இருக்கவும் மாட்டோம். (கொலின் பவுள் அமெரிக்க வெளிவிவகார அமைச்சர்)

ஈரானியர்களுக்கும் அமெரிக்க ராஜ தந்திரிகளுக்கும் இடையில் டியூனிஷியாவில் நடை பெற்ற மற்றொரு இரகசியப் பேச்சுவார்த்தையில் ஹஸன் ரூஹானி இப்படிக் கூறினார்.

بعد اجتماع سري في تونس مع بعض المســـؤولين الأمريكان. قال عرّاب إيران [حســـن روحاني] : على أمريكا ألّا تنســى فضــل إيران ، فلولا نحن ما استطاعوا دخول العراق ، ولا استطاعوا إجراء الانتخابات في العراق .

ஈரானின் வெகுமதி மிக்க செயலை அமெரிக்கா ஒரு போதும் மறக்கலாகாது. ஈரானியரான நாம் இல்லை என்றால் ஈராக்கில் அவர்களால் நுழைந்திருக்கவோ, ஆப்கானிஸ்தானில் தேர்தல் நடத்தி இருக்கவோ முடியாது.

(ஹஸன் ரூஹானி– ஈரானிய ஆன்மீகத் தலைவர்)

ஈராக்கிய ஷீஆ மத அநியாயக்காரத் தலைவர்களில் ஒருவனாகிய முக்ததா அஸ்ஸத்ர் என்பவன் அமெரிக்காவின் ஈராக் ஆக்கிரமிப்புக் காலப் பகுதியில் ஈரான் சென்றிருந்த போது அங்கு நடந்தது பற்றி இப்படிக் கூறினார்.

لقد ذهبتُ إلى إيران ، والتقيت بالمراجع الدينية ، فوافقوا على إبادة النواصـــــب. أي أهل السنة. ((المجرم الموسوم بمقتدى الصدر))

நான் ஈரான் சென்றிருந்தேன். மார்க்க உயர் பீட அதிகாரிகளையும் சந்தித்தேன். ஈராக்கில் வாழும் அஹ்லுஸ் ஸுன்னாக்களை அடியோடு ஒழிப்பதில் அவர்கள் அனைவரும் ஒன்றுபட்டிருந்தனர். (முக்ததா அஸ்ஸத்ர்– ஷீஆமதப் போதகர்– ஈராக்)

ஈரானியர்களின் இந்த திட்டத்தினால் ஒரு ஷீஆ கூட இல்லாதிருந்த ஈராக்கிய பல நகரங்களில், இன்று ஷீஆக்கள் பெரும்பான்மையினராக வாழ்கின்றனர் என்பது ஷீஆக்களின் இலங்கைக் கழுதைகளாக இருப்போர் கவனிப்பதில்லை.

மன்னர் ஷாவின் காலத்தில் குமைனி ஈரானை விட்டும் தப்பியோடி ஈரானியப் புரட்சியின் பின்னர் மீண்டும் ஈரானை வந்தடைந்து, ஆட்சிப் பொறுப்பை ஏற்ற போது அவனை சந்தித்த ஈராக்கின் முக்கிய ஷீஆப்பிரமுகர்களிடம் அவன் இவ்வாறு குறிப்பிட்டான்.

قال الخميني الهالك لعنه الله , وعامله الله تعالى بعدله. بعد وصوله إلى طهران من فرنســـــا وتسلُّمه مهام الأمور ، قال لبعض زوّاره من الشـيعة في العراق ممن يثق به : آن الأوان لتنفيذ وصايا الأئمة ، سنسفك دماء النواصب [أهل السنة] نقتل أبناءهم ، ونستحيي نساءهم ، ولن نترك أحدًا منهم يفلت من العقاب ،... وســـنمحو مكة والمدينة من وجه الأرض ، وأن تكون كربلاء قبلَةً للناس في الصلاة ،... ((أثر اليهود والنصارى والمجوس في التشيع – (١ / ٥))

நமது ஷீஆ இமாம்களின் கட்டளைகளை நடைமுறைப் படுத்தும் நேரம் வந்து விட்டது. நமது எதிரிகளான சுன்னிக்களின் இரத்தத்தை நாம் ஓட்டுவோம். அவர்களின் ஆண் மக்களைக் கொலை செய்வோம், அவர்களின் பெண்மக்களை கேவலப்படுத்துவோம், (கற்பழிப்போம்), அவர்களில் ஒருவன் கூட நம்மில் இருந்து தப்பிக்க முடியாது. வரும் காலங்களில் மக்கா, மதீனா நகரங்களில் வரைபடத்தையும் அழித்தொழிப்போம், கர்பலாவை மனிதர்களின் தொழுகைக்கான கிப்லாவாக மாற்றுவோம். (குமைனி– ஈரானின் தலைவர்)

இவனது இந்த உரையின் பின்னர் சுன்னா முஸ்லிம்கள் ஆயிரக்கணக்கில் கொல்லப்பட்டனர், பல நூறு ஆலிம் பெரு மக்கள் தூக்கிலிடப்பட்டனர். இன்றும் அங்கு இதே கொடுமைதான் நடை பெறுகின்றது.

சிரியாவில் கலவரம் மூண்ட நாள் முதல் இன்றுவரை உத்தியோகபூர்வ கணக்கெடுப்பின் படி 3,50,000 பேர் கொலை செய்யப்பட்டுள்ளனர் என்றும் உத்தியோகபூர்வமற்ற கணக்கெடுப்பின் படி 600,000 பேர்வரை கொல்லப்பட்டுள்ளனர் என்றும் செய்திகள் தெரிவிக்கின்றன. இதற்குக் களம் அமைத்துக் கொடுத்த கொடியவர்கள் ஈரானிய ஷீஆக்களே!

முஸ்லிம்களின் விரோதிகளான யூதன் கூட பயன்படுத்தாத சொற்பிரயோகங்களை தலைப்பாகை ஆசாமியான குமைனி கலீஃபாக்கள், நபித்தோழர்கள், சுன்னா முஸ்லிம்கள், மற்றும் புனித மக்கா, மதீனா தொடர்பாக பயன்படுத்தியுள்ளான். இவனை முஸ்லிம் என்பதா? அல்லது யூதன் என்பதா? என்று அவனை மத்திய கிழக்கின் மாவீரனாக சித்தரிக்கும் முஸ்லிம் சமூகத்தின் கறுப்பாடுகள் தாம் சிந்திக்க வேண்டும்.

# பாத்தினிய்யா கராமித்தாக்கள் புனித கஃபாவில் அரங்கேற்றிய கொடுமைகள்

55

மினாவில் புனித ஹஜ் கடமையில் ஈடுபட்டுக் கொண்டிருந்த ஹாஜிகள் 2016 ஆம் ஆண்டு ஈரானிய ஷீஆக்களால் விசவாய்வு பரப்பப்பட்டு 2000 க்கும் அதினமானவர்கள் ஷஹீதான வரலாறு பற்றி நாம் அறிவோம்.

சுன்னா முஸ்லிம்களை திட்டமிட்டுக் கொலை செய்தல் என்பது முஸ்லிம் உலகில் பொதுவாக ஷீஆக் குழுக்களினால் திட்மிட்டு அரங்கேற்றப்படும் நிகழ்ச்சி நிரல்களில் இதுவும் ஒன்றாகும்.

பாத்தினிய்யாப் பிரிவினர்களில் மிகவும் மோசமான பிரிவான கராமித்தா என்ற ஷீஆ பிரிவின் சவூதி கிழக்குப் பிராந்திய தலைமை அமீராக இருந்த அபூதாஹிர் அல் ஜுனாபி என்பவன் புனித ஹரம் ஷரீபில் அரங்கேற்றிய கொடுமை பற்றிய தகவலை இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் ஹிஜ்ரி 317 ஆம் ஆண்டு நிகழ்வில் பின்வருமாறு விரிவாக விபரித்துள்ளார்கள்.

ذكر أخذ القرامطة الحجر الأسود إلى بلادهم فيها خرج ركب العراق وأمير هم منصـــــور الديلمي فوصـلوا إلى مكة سـالمين، وتوافت الركوب هناك من كل مكان وجانب وفج، فما شعروا إلا بالقرمطي قد خرج عليهم في جماعته يوم التروية، فانتهب أموالهم واستباح قتالهم، فقتل في رحاب مكة وشعابها وفي المسـجد الحرام وفي جوف الكعبة من الحجاج خلقا كثيرا، وجلس أمير هم أبو طاهر لعنه الله على باب الكعبة، والرجال تصرع حوله، والسيوف تعمل في الناس في المسجد الحرام في الشهر الحرام في يوم التروية، الذي هو من أشرف الايام، وهو يقول: أنا الله وبالله، أنا أنا أخلق الخلق وأفنيهم أنا.
فكان الناس يفرون منهم فيتعلقون بأسـتار الكعبة فلا يجدي ذلك عنهم شـيئا .بل يقتلون وهم كذلك، ويطوفون فـيقـتلون في الطواف، وقد كان بعض أهل الحديث يومـئذ يطوف، فلما قضـى طوافه أخذته السـيوف، فلما وجب أنشـد وهو كذلك: ترى المحبين صرعى في ديارهم *كفتية الكهف لا يدرون كم لبثوا فلما قضـــى القرمطي لعنه الله أمره وفعل ما فعل بالحجيج من الافاعيل القبيحة، أمـر أن تدفن القتلـى في بئـر زمـزم، ودفن كثيرا منهم في أماكنهم من الحرم، وفي المسجد الحرام.
(البداية والنهاية – (١١ / ١٨٢)

ஹி: 317 ஆம் ஆண்டுதான் கராமித்தாக்கள் ஹஜருல் அஸ்வத் கல்லை அஹ்ஸா என்ற தமது பிரதேசத்துக்கு எடுத்துச் சென்றனர். அவ்வாண்டு ஈராக் மக்கள் வரும் வழியில் எவ்வித ஆபத்துக்களும் இன்றி புனித ஹஜ் கடமையை நிறைவேற்ற தமது தலைவர் மன்சூர் அத்திலைமி என்பவர் தலைமையின் கீழ் புனித மக்காவை வந்தடைந்து சமதரை, மலைக் குன்றுகள், மலை மேடுகள் என அங்கும் இங்குமாக அனைத்து இடங்களிலும் பரவலாகத் தங்கினர்.

இதன் போது கராமிதாக்களின் தலைவனாக இருந்த கொடியவன் அபூதாஹிர் மூலம் தமக்கு வரவிருக்கும் மோசமான பின்விளைவுகள் பற்றி அந்த அப்பாவிகள் எதுவும் அறிந்திருக்க வில்லை.

ஹிஜ்ரி 317 ஆம் வருடம் துல் ஹஜ் பத்தாம் நாள் அன்று இவன் தனது கூட்டத்தோடு புறப்பட்டுச் சென்று (முதலாவதாக) ஹாஜிகளின் பொருட்களைக் கொள்ளை அடித்தான். பின், அவர்களைக் கொலை செய்வதை ஆகுமாக்கினான்.

மக்காவின் முற்ற வெளி, மற்றும் மஸ்ஜிதுல் ஹராம் பள்ளி வெளிப்பகுதி, கஃபாவின் உட்பகுதி என அனைத்து இடங்களிலும் நின்று கொண்டிருந்த அல்லாஹ்வின் விருந்தாளிகளான ஹாஜிகளைத் தாறுமாறாகத் தாக்கி கொலை செய்தான்.

அவர்களின் அமீர் அபூதாஹிர் மீது– அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டுமாக– அவன், கஃபாவின் வாசலில் அமர்ந்து கொண்டிருந்தான். மக்கள் அவனைச் சுற்றிலும் கொலை செய்யப்பட்டு வீழ்ந்து மரணித்துக் கொண்டிருந்தனர்.

சிறப்பான அந்த நாளின் மகிமையும் பாராது (முஸ்லிம்களின் புனிதமான இரத்தங்களையும் பொருட்படுத்தாது) அவனே இந்தக் கொடுமைகளைத் தலைமை தாங்கி நடத்தினான்.

அப்போது அவன், “நானே அல்லாஹ்! அல்லாஹ்வில் இருந்தே நான் (அவதாரம் எடுத்துள்ளேன்) நான் படைப்புக்களைப் படைப்பேன், அவர்களை நானே அழிப்பேன்” என கூறிக் கொண்டவனாகவே இந்தக் கொடூரங்களை அவன் அரங்கேற்றினான்.

மக்கள் இதில் இருந்து தம்மை தற்காத்துக் கொள்ள அபயம் தேடி புனித கஃபாவின் திரைச் சீலையில் பிடித்துக் கொண்டு தொங்கியதையும் பொருட்படுத்தாது அவன் தனது இந்த பஞ்சமா பாதகச் செயலைச் செய்து முடித்தான்.

அம்மக்கள் அங்கு அமர்ந்திருந்த நிலையிலும் அவன் அவர்களைக் கொலை செய்தது போன்று, தவாஃப் கடமையில் ஈடுபட்டுக் கொண்டிருந்தோரையும் தவாஃப் செய்த நிலையிலும் கொலை செய்தான்.

ஹதீஸ் துறை அறிஞர்களில் சிலர் தமது தவாஃபை முடித்ததும் வாள் அவர்களை நோக்கி வருவதை அவதானித்தனர். அவர்களில் ஒருவர்,

ترى المحبين صرعى في ديارهم *كفتية الكهف لا يدرون كم لبثوا

முஹிப்பீன்கள்(கஃபாவின் நேசர்கள்) தமது இல்லங்களில் கொலையுண்டு கிடப்பதை காண்கின்றீர், குகைவாசிகளான இளைஞர்கள் போன்று. அவர்கள் எத்தனை ஆண்டுகள் அதில் தங்கி இருந்தனர் என்பது பற்றி அவர்கள் அறியார்” எனக் கவிபாடினராம்.

இந்த இறை நேசர்கள் எவ்வாறான இடத்தில்? நாளில்? எப்படி எப்படிக் கொலை செய்யப்பட்டார்கள்? என்றெல்லாம் விபரிக்கும் இமாம் அவர்கள்

ويا حبذا تلك القتلة وتلك الضجعة، وذلك المدفن والمكان، ومع هذا لم يغسلوا ولم يكفنوا ولم يصل عليهم لانهم محرمون شهداء في نفس الامر.

ஆஹா அவ்வாறான நன்மை தரும் அந்தக் கொலை, அந்தப் சாய்ந்த படுக்கை! புனிதமிகு அந்த அடக்கஸ்தலம், அந்தப் புனித இடம்! இதுவெல்லாம் யாருக்குத்தான் கிடைக்கும் எனக் குறிப்பிட்ட பின்னர், இத்துடன் அவர்களில் ஒருவரும் குளிப்பாட்டப்படவுமில்லை, கஃபன் இடப்படவுமில்லை, அவர்கள் மீது தொழுகை நடத்தப்படவுமில்லை. அதே நேரத்தில் அவர்கள்தாம் இஹ்ராம் அணிந்த ஷஹீத்களாச்சே! என விபரித்த பின்னால் அவனது கொடுமை பற்றி மேலும் விபரிக்கின்ற போது

وهدم قبة زمزم وأمر بقلع باب الكعبة ونزع كسوتها عنها، وشققها بين أصحابه، وأمر رجلا أن يصعد إلى ميزاب الكعبة فيقتلعه، فسقط على أم رأسه فمات إلى النار.
فعند ذلك انكف الخبيث عن الميزاب، ثم أمر بأن يقلع الحجر الاسود فجاءه رجل فضربه بمثقل في يده وقال: أين الطير الابابيل، أين الحجارة من سجيل ؟ ثم قلع الحجر الاسود وأخذوه حين راحوا معهم إلى بلادهم فمكث عندهم ثنتين وعشرين سنة حتى ردوه، كما سنذكره في سنة تسع وثلاثين وثلثمائة فإنا لله وإنا إليه راجعون.
ولما رجع القرمطي إلى بلاده ومعه الحجر الاسود وتبعه أمير مكة هو وأهل بيته وجنده وسأله وتشفع إليه أن يرد الحجر الاسود ليوضع في مكانه، وبذل له جميع ما عنده من الاموال فلم يلتفت

பின்னர் அவன் ஸம்ஸம் கிணற்றில் மேல் அமைக்கப்பட்ட குப்பாவை உடைத்தான், கஃபாவின் கதவை பிடுங்கும் படியும் அதன் திரைச் சீலையை அதை விட்டும் அகற்றும் படியும் உத்தரவிட்டான், அதனைக் கிழித்து தனது தோழர்களுக்கு மத்தியில் பங்குவைத்தான்.

கஃபாவின் மீஸாப் (பீலி) மீதேறி அதனை பிடுங்கும்படி ஒருவனைப் பணித்தான், அவன் ஏறியதும் உடனே தலைகீழாக மேலிருந்து தலைகீழாக விழுந்து ஸ்தலத்திலே அவன் நரகவாதியாக மாண்டான்.

இத்தோடு தீய இந்தக் கயவன் மீஸாபுக்கு எதுவும் தீங்கு செய்யாது நிறுத்திக் கொண்டான். பின்னர், ஹஜருல் அஸ்வத் கல்லைக் கழற்றி எடுக்கும் படி கூற அதைக் கழற்ற அவர்கள் முன்வந்த

போது (சுன்னா முஸ்லிம்களில் ஒருவர் அதனைத் தடுத்திட முன்வந்தார், அவரது கையில் பாரமான ஒரு இரும்புச் சம்மட்டியால் அவன் அடித்து விட்டு,

أين الطير الأبابيل، أين الحجارة من سجيل ؟

அந்த அபாபீல் பறவைகள் எங்கே? சூடேற்றப்பட்ட அந்தக் கற்கள் எங்கே ? (எனக் கேலியும் கிண்டலும்) செய்து கேட்டான்.

பின்னர் ஹஜருல் அஸ்வத் கல்லைக் கழற்றிய அந்த கராமித்தா ஷீஆக் குழு, தாம் செல்லும் போது தம்முடன் (அவர்களின் பிரதேசமான அல்அஹ்ஸாவுக்கு) அதனை எடுத்துச் சென்றனர். அது அவர்களிடம் 22 ஆண்டுகள் வரை இருந்தது. இது பற்றி 339 ஆம் ஆண்டு நிகழ்வு பற்றிய செய்தி தொடர்பாகவும் நாம் சுட்டிக்காட்டுவோம் எனக் குறிப்பிடும் இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள், فإنا لله وإنا إليه راجعون. "இன்னா லில்லாஹி, வஇன்னா இலைஹி ராஜிஊன்" என்ற வரிகளைக் கூறி மன ஆதங்கத்துடன் தனது பதிவை முடித்துக் கொள்கின்றார்கள்.

குறிப்பு: இவ்வாறு கொலை செய்யப்பட்ட ஹாஜிகளின் எண்ணிக்கை 30,000 முப்பதாயிரத்துக்கும் அதிகம் என சில அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

இஸ்லாமிய வரலாற்றில் சிறப்புத் தேர்ச்சி பெற்ற மாமேதை இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்களின் வீரியமிக்க இந்த வைர வரிகளால் கொடிய ஷீஆக்களிடம் புரையோடிப் போய்க் கிடந்த நீண்ட நெடிய பல்லாண்டு கால கொடுமைகள் நமக்கு பல விஷயங்களைப் புலப்படுத்துகின்றன.

அவர்கள் தமது மூதாதையர்களான கராமிதாக்களுக்கு தாம் இப்போதும் சற்றும் சளைத்தவர்கள் அல்லர் என்பதை இன்று ஈரான், ஈராக், சிரியா, எமன் போன்ற சுன்னி முஸ்லிம்கள் வாழும் நாடுகளில் தமது கூலிப்படைகள் மூலம் அரங்கேற்றிக் கொண்டிருக்கின்ற கொடுமைகள் பற்றி ஊடகங்கள் வாயிலாக நாம் அறிய முடிகின்றது.



ƲƲ

# ஈரானிய சுன்னா முஸ்லிம்களைக் கொன்றொழித்த ஸஃபவிக்கள்

ஹிஜ்ரி 907 கி.பி. – 1501 ஈரானில் இஸ்மாயில் ஸஃபவி என்பவனால் தொடங்கப்பட்ட கொடிய ஆட்சியின் பெயர் ஸஃபவிக்கள் ஆட்சி. இது ஒன்பது நூற்றாண்டுகள் சுன்னா வழியில் பயணித்த ஈரானின் சாபக்கேட்டின் ஆரம்பமாகும். இவர்கள் அரங்கேற்றிய பல கொடுமைகள் உண்டு. இவர்களின் ஆட்சியில் பத்து மில்லியன் சுன்னா முஸ்லிம்கள் படுகொலை செய்யப்பட்டதாக இஸ்லாமிய வரலாற்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். இப்பிரிவினர் அரங்கேற்றிய கொடுமைகள் பற்றி சுருக்கமாகத் தருப்படுகின்றது.

**ஈரானிய சுன்னா முஸ்லிம்களைக் கொன்றொழித்த ஸஃபவிக்கள்:**

ஈரான் என்ற பாரஸீகம் கிட்டத்தட்ட ஒன்பது நூற்றாண்டுகளாக தூய இஸ்லாமிய தேசத்தின் பூமியாக மிளிர்ந்தது. அது 500 ஆண்டுகளாகத்தான் தனது திசையை மாற்றி ஷீஆக்களின் மதப் பூமியாகப் பயணித்துக் கொண்டிருக்கின்றது.

அதன் உண்மையான ரகசியம் பற்றியும் ஸஹாபாக்களின் வழி வந்த அஹ்லுஸ்ஸுன்னாக்கள் அங்கு திட்டமிட்டு நாளாந்தம் தூக்கிலிடப்படுவது, கொல்லப்படுவது, பொய்க் குற்றச்சாட்டுக்களின் பெயரில் சிறைபிடிக்கப்படுவது, பிரசித்தி பெற்ற அறிஞர்கள் மற்றும் உலமாக்கள், மாணவர்கள் திட்டமிட்டு கொலை செய்யப்படுவது பற்றியும் சுன்னாவாதியான ஒரு முஸ்லிம் அவசியம் அறிந்திருக்க வேண்டும்.

அஹ்லுல் பைத்தினர் பெயரில் யூதர்களின் துணையோடு தோற்றுவிக்கப்பட்ட ஈரான் இஸ்லாமிய குடியரசு என்ற குஃப்ர் குடியரசின் சர்வதேச இஸ்லாமிய சமூகத்திற்கு எதிரான சதிகளை இனம் காண்பதற்கு இவ்வாறான தேடுதல்கள் துணையாக அமையும்.

# பாரசீக ஈரான்

## ஒரு பன்முகப் பார்வை




## அமைவிடம்:

ஈரான் மேற்கு ஆசியாவில் அமைந்துள்ள மத்திய கிழக்கு நாடுகளில் இரண்டாவது பெரிய நாடாகும். அது மேற்கு, மத்திய, தெற்காசிய நாடுகள் சந்திக்கின்ற மையப் புள்ளியாகும். வடக்கால் அர்மேனியா, அஸர்பைஜான், துர்க்மெனிஸ்தான் ஆகிய நாடுகளையும், கிழக்கால் பாகிஸ்தான், ஆப்கானிஸ்தானையும், தெற்கால் அரேபிய மற்றும் அம்மான் கடல்களையும், மேற்கால் ஈராக்கையும், வடமேற்கால் துருக்கியையும் எல்லையாகக் கொண்டு விளங்குகின்றது. (விக்கிபீடியா)



# ஈரானின் பண்டைய காலப் பெயர்

UU

சசானிய மன்னர்கள் அதனை ஆட்சி செய்த காலம் முதல் இஸ்லாத்திற்கு முற்பட்ட காலத்தில் இருந்து ஆரியர் தேசம் என்றும், பாரசீகம் (பெர்சியா) என்றும், பாரஸீக மொழியில் (ஷாஹான்ஷாஹ்) மன்னர்களின் தேசம் என்றும் அழைக்கப்பட்ட தற்போதைய ஈரான் இஸ்லாத்திற்கு முன்னர் பொதுவாக பாரஸீக வல்லரசு என்றே அறியப்பட்டது.

இஸ்லாத்திற்கு முன்னால் பண்டைய ஜாஹிலிய்யாவில் அரேபிய தீபகற்பத்தின் வடகிழக்கில் அமைந்த நெருப்பு வணங்கிகளின் தேசமாக அறியப்பட்டிருந்த ஈரானின் மாகாணங்கள் வரலாற்றில் பாரஸீகப் பேரரசு என்றும், ஷாஹான் ஷாஹ் மாமன்னர் ராச்சிய தேசம் என்றும் அழைக்கப்பட்டது.

1979 ஈரானியப் புரட்சியின் பின் ஈரான் பல சமய சீர் திருத்தங்களை உருவாக்கியது. 1981 ஆம் ஆண்டிலிருந்து نظام الفقيه என்ற ஒழுங்கை அறிமுகம் செய்வதன் மூலம் ஆன்மீகத் தலைவரின் ஷீஆக் குடியரசாக மீண்டும் மாறியதோடு, ஸஃபவிக்கள் போன்று சுன்னா முஸ்லிம்களைக் கொன்றொழிப்பதில் மேற்கு நாடுகளுடன் கைகோர்த்து திரை மறைவில் காலம் கடத்தும் தேசமாக மாறியது.

தினந்தோறும் சுன்னா முஸ்லிம்களைக் கொன்றொழிப்பதை இலக்காகக் கொண்டு செயற்படும் ஈரானிய தேசம் சர்வதேச முஸ்லிம்களின் தலைமைக்கு தகுதி வேண்டி பிரச்சாரம் செய்வதை நியாயப்படுத்துவோர் வெட்கித் தலை குனிய வேண்டும்.

# இஸ்லாத்திற்கு முன்னர் பாரஸீகத்திற்கான நபி(ﷺ) அவர்களின் தூதுத்துவ அழைப்பு

UU

**பாரஸீகம் பற்றி:**

தற்போதைய ஈரானின் மத்தியில் அமைந்துள்ள அஸ்ஃபஹான் மாகாணத்திற்கு தெற்கால், ஈரான் அரசால் கி.பி. 1924 ஆம் ஆண்டு ஆக்கிரமிக்கப்பட்ட அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்களின் தேசமான அஹ்வாஸ் மாகாணத்தில் அமைந்துள்ள பிரதேசங்கள் பாரஸீகப் பிரதேசங்கள் என்று அழைக்கப்பட்டன. அரேபியாவின் வடமேற்கில் அமைந்துள்ள இந்த நாடு மஜூஸிகள் எனப்படும் நெருப்பு வணங்கிகளின் தேசமாகக் காணப்பட்டது. அதன் ஆட்சி அதிகாரம் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் சசானிய மன்னர்களின் கீழ் இருந்தது.

கி.பி. 1935 இற்குப் பின்னர் ஈரான் என்று அழைக்கப்பட்டு வந்த நவீன ஈரான், பாரஸீக ஈரானிய மன்னர்களில் ஒருவரான ஷாஹ் அல் பஹ்லவி என்பவரின் பரம்பரையில் வந்த ஷாஹ் ரிழா பஹ்லவி என்பவரால் கி.பி. 1941 ஆம் ஆண்டு ஈரான் என்று உத்தியோக பூர்வமாக பெயர் மாற்றம் செய்யப்பட்டது.

தற்போதைய ஈரானாக விளங்கும் ஷீஆத் தேசத்தின் இஸ்லாமிய வெற்றிக்கு முற்பட்ட பாரஸீகம், பைஸாந்தியப் பேரரசை விடப் பலம் பொருந்தியதாகவும், சக்திவாய்ந்த வல்லராசாகவும் அறியப்பட்டிருந்தது. பாரஸீகப் பண்பாடு, ஈரானியப் பண்பாடு ஆகிய இரண்டும் இன்று வரை ஒன்றாகவே பார்க்கப்படுகின்றது. தற்போதைய ஈரான், துருக்கி, ஈராக், ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான், அர்மேனியா, அஸர்பைஜான், துர்க்குமேனிஸ்தான், அரபு வளைகுடா ஆகிய நாடுகளுடன் எல்லைகளைக் கொண்டிருக்கின்றது.

**பாரஸீக மாகாணங்கள்:**

தெற்கு ஈரானில் அமைந்துள்ள பாரிஸ், பூஷஹ்ர், பூபர் அஹ்மத், கஹ்கீலவைஹி, ஈரான் கிழக்கில் அமைந்துள்ள ஹுரிஸ் தான், மேற்கில் அமைந்துள்ள ஹுர்முஸ்கான் மாகாணங்கள் பாரஸீக மாகாண எல்லைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளதோடு, அஸ்ஃபஹான், கிர்மான், யஸ்த் போன்ற மாகாணங்கள் அவற்றுடன் இணைத்துக் கூறப்படுகின்றன.

நவீன கணக்கெடுப்பின் படி 7.4 மில்லியன் மக்கள் தொகையைக் கொண்ட ஈரான் நிலப் பரப்பளவில் உலகில் பதினெட்டாவது நாடாக விளங்குகின்றது. அதன் மொத்த பரப்பளவு 1648195 கி.மீ.களாகும். மேற்கு ஆசியா, மத்திய ஆசியா, தெற்கு ஆசியா என ஆசியாக் கண்டத்தின் மூன்று துருவங்கள் இந்த நாட்டில் சந்திக்கின்ற அதன் பூகோள அமைவிடத்தைக் கவனித்து அந்த நாடு கேந்திர, முக்கியமான சிறப்பான ஒரு இடத்தை உலகில் பெறுகின்றது.

**நபி (ﷺ) அவர்களின் தூதுத்துவ அழைப்பு.**

ஹிஜ்ரி ஆறாம் ஆண்டு (கி.பி.628) நபி (ﷺ) அவர்களுக்கும், மக்காவாழ் இணைவைப்பாளர்களுக்கும் இடையில் எட்டப்பட்ட ஹுதைபியா சமாதான உடன்படிக்கையின் பின் முஹம்மத் நபி(ﷺ) அவர்கள் அபீஸீனியா, எகிப்து, ரோம், பெர்ஸியா (பாரஸீகம்) போன்ற வெளிநாட்டு மன்னர்களுக்கு இஸ்லாமிய அழைப்பைத் தாங்கிய கடிதங்கள் அனுப்பி அவர்களை இஸ்லாத்தின் பக்கமாக வருமாறு அழைப்பு விடுத்தார்கள்.

சிலர் அந்தக் கடிதங்களை இன்முகத்தோடு பெற்று நபி(ﷺ) அவர்களுக்கு நன்கொடைகள் அனுப்பி வைத்தனர். மற்றும் சிலரோ அதனைக் கிழித்தெறிந்தனர். அவ்வாறு கடிதத்தை உதாசீனப்படுத்தி, கிழித்தெறிந்தவர்களில் பாரசீக மன்னன் கிஸ்ரா (கெஸ்ரோ)வும் ஒருவன். அவன் முஹம்மத் நபி(ﷺ) அவர்களின் கடிதத்தைப் பெருமையாகவும், கீழ்த்தரமாகவும் அகங்காரமகாவுமே கிழித்து வீசினான் என்பது வரலாறாகும். ஈரான் அப்போது சஸானியர்களான பாரஸீக மன்னர்களின் கீழ் இருந்தது. இந்த சஸானியர்களை ஆரியர்கள் என்றும் சிலர் குறிப்பிடுகின்றனர்.

**மேலதிகத் தகவல்களுக்கு:** (www.marefa.org / www.islamveb.net)

# ரோம், பாரசீக வீழ்ச்சி பற்றிய முன்னறிவிப்பு

௨௨

உலகில் தனது மரணத்திற்குப் பின்னால் நடைபெறவிருக்கும் பல நிகழ்வுகளை முன்னறிவிப்புச் செய்த முஹம்மத் நபி (ﷺ) அவர்கள் ரோம், பாரஸீக மன்னர்களின் தோல்வி பற்றியும் முன்னறிவிப்புச் செய்திருந்தார்கள்.

عَنْ جَابِرِ بْنِ سَمُرَةَ ،رَضِيَ اللَّهُ عَنْهُ ، قَالَ : قَالَ رَسُولُ اللِه صلى الله عليه وسلم : إِذَا هَلَكَ كِسْرَى فَلاَ كِسْرَى بَعْدَهُ وَإِذَا هَلَكَ قَيْصَرُ فَلاَ قَيْصَرَ بَعْدَهُ وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لَتُنْفَقَنَّ كُنوزُهُمَا فِي سَبِيلِ اللهِ. ((أخرجه البخاري، برقم: ٣١٢٢ ( ومسلم ، برقم : ٧٥١٤)

கிஸ்ரா அழிந்து விட்டால் அவருக்குப் பின் (மீண்டும் புதிய) ஒரு கிஸ்ரா மன்னன் வரப்போவதில்லை, (ரோமாபுரி மன்னன்) கைஸர் (சீஸர்) அழிந்துவிட்டால் அவருக்குப் பின் (மீண்டும் புதிய) ஒரு சீஸர் வரப் போவதில்லை. அவ்விருவரின் செல்வக்குவியல் களையும் அல்லாஹ வின் பாதையில் நீங்கள் செலவு செய்வீர்கள் என நபி (ﷺ) அவர்கள் முன்னறிவிப்புச் செய்தார்கள். அறிவிப்பாளர்கள் ஜாபிர் பின் ஸமுரா, அபூ ஹுரைரா (رضي الله عنه) அவர்கள். (ஆதாரம் புகாரி: 3122, முஸ்லிம்: 7514)

மேற்படி நபிமொழி நபி(ﷺ) அவர்களின் தோழர்களான ஸஹாபாக்கள் இஸ்லாமிய ஆட்சியை உலகெங்கும் பரவச் செய்வார்கள் என்பதையும் ஷீஆக்கள் கூறுவது போன்று அவர்கள் மதம் மாறமாட்டார்கள் என்றும் நவீன ஷீஆக்களின் நெருப்பு வணங்கி தேசத்தை இஸ்லாத்தின் காலடியில் ஒருநாள் மண்டியிட வைப்பார்கள் என்றும் உணர்த்துகின்றது.

இந்த மாவீரர்கள்தாம் இஸ்லாமிய வெற்றியின் வீரதீரப் புருசர்கள். இவர்களே இந்த நபிமொழியைத் தமக்கு உரித்தாக்கிக் கொண்டார்கள். ஈரானிய ஷீஆக்களின் கூற்றுக்களைப் பொய்ப்பிக்கும் முகமாக கலீஃபாக்களான அபூபக்கர் ஸித்தீக், உமர் ஃபாரூக், உஸ்மான் பின் அஃப்பான் (ரழி) ஆகியோரின் ஆட்சியில் பாரசீகம் முழுமையாக வெற்றி கொள்ளப்பட்டது.

ஷீஆக்கள் உளறுவது போன்று நபி(ﷺ) அவர்களின் மரணத்தோடு கலீஃபாக்கள், நபித்தோழர்கள் அனைவரும் மதம்மாறினர் என்றால் பாரஸீகத்துக்கு சாவுமணி அடித்த அந்த தோழர்களின் நடவடிக்கைகள் மூலம் இந்த நபிமொழி பொய்யாகி விடும். எனவே, அந்த முன்னறிவிப்பு எவ்வாறு உண்மைப்படுத்தப் படுகின்றது என்பது பற்றிய வரலாற்று உண்மையை அறிவது சுன்னாவாதியாக இருக்கும் ஒவ்வொரு முஸ்லிமினதும் கடமையாகும்

## பாரஸீகத்தை நோக்கி நகரும் முஸ்லிம் படைகள்:

முஹம்மத் நபி(ﷺ) அவர்களின் மேற்படி முன்னறிவிப்புக்கு அமைவாக இறுதித்தூதரின் மரணத்தின் பின்னர் நபியின் தோழர்களால் முதலாவது குரைஷிய வம்சத்து கலீஃபா என்று ஏகமனதாகத் தெரிவு செய்யப்பட்ட நபித்தோழர், அபூ பக்கர் ஸித்தீக்(رضي الله عنه) அவர்களின் ஆட்சியில் அதற்கான படை நகர்வுகள் ஆரம்பமாகியது.

அதற்காக அல்லாஹ்வின் வாள் என்ற சிறப்புப் பெயருக்குரிய மாவீரர், காலித் பின் வலீத் (ரழி) அவர்களின் தலைமையில் பலமான முஸ்லிம் படை அணி ஒன்று தயார் செய்யப்பட்டு ஈராக்கை நோக்கி அனுப்பப்பட்டது.

அவர்கள், ஈராக் முழுவதையும் ஹிஜ்ரி 11 இல் (கி.பி. 633) வெற்றி கொண்டாலும், பாரஸீகப் படைகளின் தொடர் தாக்குதலால் வெற்றி கொள்ளப்பட்ட பிரதேசங்களை முஸ்லிம்கள் மீண்டும் இழக்க நேரிட்டது. அதன் பின்னர் இரண்டாம் கலீஃபா உமர்(رضي الله عنه) அவர்களின் ஆட்சியில் முஸ்லிம்களால் மீண்டும் அந்தப் பிரதேசங்கள் கைப்பற்றப்பட்டன.

முதலாவது கலீஃபாவின் ஆட்சியின் இறுதிக் காலத்தில் ஷாமில் (டமஸ்கஸில்) சில பிராந்தியங்களும், பெர்ஸியா என்ற

(பாரஸீக ஈரான்) பிரதேசத்தின் கேந்திர முக்கியம் வாய்ந்த சில பிராந்தியங்களும் வெற்றி கொள்ளப்பட்டன என்பது வரலாற்றுக் குறிப்பாகும்.

பின்னர், இரண்டாம் கலீஃபா உமர் பின் கத்தாப்(رضي الله عنه) அவர்கள் ஸஃத் பின் அபீவக்காஸ்(رضي الله عنه) அவர்களின் தலைமையில் மீண்டும் இரண்டாவது படை நகர்வுகளைத் தொடங்கி வரலாற்றுச் சிறப்பு மிக்க போர்களில் ஒன்றான காதிஸியாப் போரில் முதலாவது கலீஃபாவின் ஆட்சியில் ஈராக்கில் இழந்த எஞ்சிய பிரதேசங்கைள ஹிஜ்ரி: 14 இல் (கி.பி. 636) முழுமையாகக் கைப்பற்றி, பாரஸீகத்தின் மேற்குப் பகுதியால் வரும் பாரிஸீக சசானிய படை எடுப்புகளுக்கு எதிராக முடிவு கட்டினார்கள்.

முஸ்லிம்களால் வெற்றி கொள்ளப்பட்ட பிரதேசங்கள் மீது சசானியனர்கள் தொடர்ந்தும் தாக்குதல் நடத்தி, அச்சுறுத்திக் கொண்டிருந்ததன் காரணமாக பாரஸீகக்கத்தை முழுமையாக வெற்றி கொள்வதன் மூலமே அதன் ஸ்திரத்தன்மை சாத்தியப்படும் என்பதைக் கவனித்தில் கொண்ட அமீருல் முஃமினீன் கலீஃபா உமர்(رضي الله عنه) அவர்கள் அதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும் என உறுதி பூண்டார்கள்.

அதன் காரணமாக முதலாம் கலீஃபாவின் காலத்தில் தொடங்கப்பட்ட இஸ்லாமியப் படை நகர்வுகளை, அவரது பிரதிநிதியாகவும், முஸ்லிம்களின் தலைவராகவும் நியமிக்கப்பட்ட இரண்டாம் கலீஃபா உமர் பின் கத்தாப் (رضي الله عنه) அவர்கள் பாரஸீகத்திற்கு எதிராக தளபதி ஸஃத் பின் அபீவக்காஸ்(رضي الله عنه) தலைமையில் தனியான படைஅணி ஒன்றை அமைக்கும்படி பணித்தார்கள்.

அவரது பணிப்புரையின் பேரில் ஸஃத் பின் அபீவக்காஸ்(رضي الله عنه) அவர்களின் தலைமையில் அமைக்கப்பட்ட படைகள் காதிஸிய்யா, யர்மூக் போன்ற வரலாற்றுப் புகழ்மிக்க பல போர்களை சிரியா மற்றும் ஈராக் பிரதேசங்களில் மிக மும்முரமாக முன்னெடுத்துச் சென்று இறுதியாக ஹிஜ்ரி. 21 இல் (கி.பி.642) நஹாவாந்து என்ற பிரதேசத்தில் நடை பெற்ற உக்கிரமான போரில் முஸ்லிம்கள் வெற்றி பெற்றனர். இந்தப் போர்தான் இஸ்லாமிய வரலாற்றில் فتح الفتوح மாபெரும் வெற்றி என்று பிரஸ்தாபிக்கப்படுகின்றது.

இந்தப் போருடன், 416 ஆண்டுகள் ஈரானை ஆண்டு வந்த பாரஸீகப் பரம்பரைகளின் ஆட்சிக்கு முடிவு கட்டபட்டு மக்கள் சாரை சாரையாக இஸ்லாத்தில் நுழைந்தனர். மேற்படி போர் முடிந்து இரண்டு வருடங்களில் ஹி: 23 (கி.பி. 664) ஈரான், பாரஸீகம் முழுவதும் இஸ்லாமிய பிரதேசமாக மாறியது.

இதன் மூலம் பாரஸீகத்தின் பெரும்பாலான பிரதேசங்கள் இஸ்லாமிய ஆளுகையின் கீழ் மிகக்குறுகிய காலத்தில் கொண்டு வரப்பட்டதுடன், வெற்றி பெற்ற பிரதேசங்கள் மீதான பாரஸீக சசானியப் பேரரசின் தொடர் தாக்குதல்களுக்கும் முற்றுப் புள்ளி வைக்கப்பட்டன.

கலீஃபா உமர் பின் கத்தாப்(رضي الله عنه) அவர்களின் மரணத்தோடு மூன்றாம் கலீஃபாவாகத் தெரிவு செய்யப்பட்ட நபித்தோழர் அஷ்ஷஹீத் உஸ்மான் பின் அஃப்பான்(رضي الله عنه) அவர்கள் பாரஸீகத்தின் எஞ்சி இருந்த ஏனைய பாரஸீகப் பிரதேசங்கள் அனைத்தையும் வெற்றி கொண்டார்கள்.

சசானிய பாரஸீக மன்னர்களில் இறுதி மன்னனாக இருந்த யஸ்தஜிர்த் ஹிஜ்ரி. 31 இல் கொலை செய்யப்பட்டதோடு, சசானியர்களின் பாரஸீகத் தேசமான ஈரான் முழுவதும் (கி.பி. 542) இல் இஸ்லாமிய தேசமாக பிரகடனப்படுத்தப்பட்டு சசானியர்களின் ஆட்சிபீடங்களுக்கு மூடு விழா கொண்டாடப்பட்டது.

இதன் மூலம் ஈரானின் மதம் இஸ்லாமாகவும் அதன் கொள்கை நபித்தோழர்களின் வழிவந்தோர் கொள்கையாகவும் அறிமுகமானது என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

**ஈரானில் வாழும் சுன்னா முஸ்லிம்கள்:**

ஈரானில் வாழும் சுன்னா முஸ்லிம்கள் பற்றிய பக்கச் சார்பற்ற உண்மையான கணிப்பீடுகளில் அவர்கள் 15% , 20%, 25% என்று மாறுபட்ட கருத்துக்கள் காரணம் வெளிவரக் காரணம் அவர்கள் பற்றிய உத்தியோகபூர்வமான அரசசார் நிறுவணங்களின் கணக்கெடுப்புக்கள் வெளியிடப்பாததாகும்.

**சுன்னாக்கள் வாழும் பிரதேசங்கள்:**

ஈரானிய சுன்னா முஸ்லிம்கள் அதிகமானோர் ஷாஃபி மத்ஹபையும், குறிப்பிட்ட அளவினர் ஹனஃபி மத்ஹபையும் பின்பற்றுவோராக உள்ளனர். சுன்னாக்களாக அடையாளப்படுத்தப் பட்டுள்ள குர்த் இனத்தவர்களில் பெரும்பாலானோர் ஈரான்–குர்திஸ்தானில் அஹ்வாஸ் அர்மேனியா மாகாண எல்லைகளில் இருந்து துருக்கி வரையான எல்லைவரை வாழ்கின்றனர். அவர்கள் செறிவாக வாழும் மாகாகணங்களாக பின்வரும் பிரதேசங்கள் காணப்படுகின்றன.

1) குராஸான். இது வட ஈரானின் துர்குமான், மற்றும் ஆப்கானிஸ்தானின் எல்லைப் புறமாக பக்கமாக உள்ள பிரதேசமாகும்.
2) துருக்குமன் பாலைவனப் பகுதி. இது வட ஈரானில் உள்ளது. கஸ்பியன் கடல் முதல் தெற்கு துர்க்குமெனிஸ்தான் எல்லைகள் வரை இது நீண்டு செல்கின்றது.
3) பலூஷிஷ்தான். இது தென்மேற்கு ஈரானில் உள்ளது. இது குராஸானில் இருந்து அம்மான் கடல் வரை நீண்ட எல்லைகள் இருப்பது போன்று பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான் ஆகிய இரு நாடுகளும் எல்லைகளாக காணப்படுகின்றன.
4) குர்திஸ்தான் . இது மேற்கு ஈரானின் ஷீரீன் கோட்டையில் இருந்து துருக்கிய எல்லை வரை உள்ளது.
5) தவாலீஷ், அன்பரான். இது கஸ்பியன் கடலுக்கு மேற்காக உள்ளது.
6) பன்தர் அப்பாஸ். அம்மான் கடலை மற்றும் அரேபிய வளைகுடாவையும் அண்டி உள்ளது .
7) புஷஹ்ர், ஈராக் எல்லைக்கு சமீபமாகவும் அரேபிய வளைகுடாவிலும் அமைந்துள்ளது.
8) பாரிஸ். (பாரஸீகம்). இது, அவழ், குல்லாதார், ஹஞ், பைஷ்ர் ஆகிய பிரதேசங்களைப் பிரதிபலிக்கும் .
9) எர்தபீல் தாலுக்கா. இது ஹல்ஹால் மாகாண வெளிகளை உள்ளடக்கியது.

Sunnioneline
Sahab.net com.

நபி (ﷺ) அவர்களால் ரோம், பாரசீக மன்னர்களுக்கு இஸ்லாத்தின் பால் அழைப்பு விடுத்து எழுதப்பட்ட கடிதங்களின் இரு மாதிரிகள்.





**குறிப்பு:**

மேற்படி தேசங்களை வெற்றி கொண்ட நபித்தோழர்கள் அப்பிரதேச மக்களை சுன்னா முஸ்லிம்களாகவே வார்த்தெடுத்தார்கள் என்பது வரலாறாகும். ஈரான் நவீன ஷீஆ தேசம் என்பது வரலாற்றில் பல மோசடிகளையும் வரலாற்றுத் திரிபுகளையும், பல கொடுமைகளை யும் அரங்கேற்றிய பின்பு நிறுவப்பட்ட நாடாகும்.

# சுன்னா தேசமாகப் பரிணமித்த இஸ்லாமிய ஈரான்

UU

நபித்தோழர்களால் வெற்றி கொள்ளப்பட்ட பாரஸீக ஈரானிய தேசத்தில் சுன்னா வழி வந்த அறிவுச் சுடர்களின் வருகை அந்த தேசத்தின் பெருமையையும், பெறுமதியையும் உணர்த்தி நிற்பதோடு, இப்படியான உயர்ந்த தேசம் பிற்காலத்தில் நம்மை விட்டும் கைநழுவிச் சென்றது மட்டுமின்றி, நல்லோர்களான நபித்தோழர்கள், மற்றும் நமது இமாம்களையும், சுன்னா வழி நடக்கும் முஸ்லிம்களையும், இஸ்லாத்தில் இல்லாதவர்களாகவும், நஜீஸ்களாகவும், நம்மைத் திட்டித் தீர்க்கும் தேசமாகவும் மாறியது எப்படி ? என்பது பற்றி நாம் சிந்திக்க வேண்டும்!

பிரகாசிக்கும் பல நூறு இஸ்லாமிய முத்துக்கள் உதிர்ந்துள்ள பாரஸீக பூமி, அதனை கண்ணியமிக்க நபித்தோழர்கள் வெற்றி பெற்ற காலம் முதல், ஷீஆ மதக்கோட்பாட்டில் தீவிர(முத)வாதிகள் என அடையாளப்படுத்தப்பட்ட ஸஃபவிக்கள் என்போர் வரையான ஒன்பது நூற்றாண்டுகள் வரை சுன்னா ஒளி வீசும் தீபமாகவே இருந்து வந்தது.

ஸஃபவிக்கள் கி.பி. 501 இல் ஆட்சியைக் கைப்பற்றிய பின்னால் அங்கு ஷீஆ மதக்கோட்பாட்டை வலுக்கட்டாயமாகத் திணித்து, ஆயிரக்கணக்கான சுன்னா முஸ்லிம் களைப் படுகொலையும் செய்து அவர்களின் வரலாற்றுத் தடயங்களை திட்டமிட்டு அழித்தொழிக்கும் துக்கதினம் வரை அந்த நாடு சுன்னா அறிஞர்களின் வதிவிடமாவும், புகலிடமாகவும், அறிவியல் பொக்கிஷங்களால் நிரம்பிய தேசமாகவுமே மிளிர்ந்துள்ளது என்பதே வரலாற்று உண்மை!

## முன்மாதிரிமிக்க சுன்னா அறிஞர்களின் தேசம்

பாரஸீக தேசம் என்பது நபித்தோழ்ர்கள், தாபியீன்கள், அவர்களின் பின்னால் அறிவைச் சுமந்தவர்கள் போன்ற நல்ல முன்மாதிரிகள் மனிதர்களுக்கு கல்வி புகட்டிய அறிவுத் தேசமாகும். அவர்களின் காலத்தில் அங்கு சுன்னா வழிமுறைக்கு மாற்றமான பித்ஆ சிந்தனைகளைப் போதிக்கவோ, வளரவோ இடமளிக்கப் படுவதில்லை.

அந்த தேசத்தில்தான் இமாம்களான முஸ்லிம், அல்ஹாகிம் அந்நைஸாபூரி, இமாம் தபரி, இமாம் கஸ்ஸாலி, இமாம் அல்ஃபக்ருர் ராஸி, அஸ்ஸர்ஹஸி, அல்பைரூனி, அஷ்ஷஹ்ருஸ்தானி, அல்ஃபாராபி, சீபவைஹி மற்றும் இஸ்லாமிய வரலாற்றில் இடம் பிடித்த பல நூறு அறிஞர்கள், இமாம்கள் வாழ்ந்தனர். இவ்வாறான முன்மாதிரிகளைப் பெற்றெடுத்த உன்னத தேசமே அன்றைய ஈரான்.

இவர்களில் அதிகமானோர் ஈரானின் கிழக்குத் தேசமான குராஸானிலும், அதனை அண்டிய பிரதேசங்களிலும் இருந்து வந்தவர்கள் என்பது இதன் மற்றொரு சிறப்பம்சமாகும்.

அந்த நாட்டின் கிழக்குப் பிராந்தியம் என அறியப்பட்ட பிஸ்த், ஹராத், நஸா, பல்க், புகாரா, ஸமர்கந்து, மரூ, ஜுர்ஜஜான், நைஸாபூர், ஸர்ஹஸ், ஷஹ்ருஸ்தான், அர்ரை, தூஸ், மற்றும் பல நகரங்கள் அறிவின் கோட்டைகளாகவும், ஹதீஸ்களை அறிவிக்கின்ற அறிவிப்பாளர் நிலையங்களில் முக்கிய கேந்திர நகரங்களாகவும் பரினமித்தன.

முஸ்லிம் உலகில் அறியப்பட்டுள்ள தப்ஸீர், ஹதீஸ், வரலாறு, ஃபிக்ஹ், ஹதீஸ் கலை வரலாறு, அகீதா போன்ற நூல்கள் இப்பிரதேச ஆளுமைகளின் முயற்சியால் பிரசவித்தவைகளாகும்.

## சிறப்பம்சம்

ΌΌ

மேற்படி நகரங்கள் கி.பி. 19 ஆம் நூற்றாண்டில் சுன்னாவின் மத்திய கலாநிலையங்களாக விளங்கின. ஹதீஸ் மற்றும் அதனோடு தொடர்பான கலைகளை போதிப்பதிலும், ஆவணப்படுத்துவதிலும், எழுத்துருப்படுத்துவதிலும் முன்னணி நகரங்களாக அவை திகழ்ந்ததோடு குறித்த அந்த நகர இமாம்கள் தமது துறைக்கு பாரிய பங்களிப்பும் நல்கினர்.

இஸ்லாமிய உலகில் காணப்பட்ட ஏனைய நகரங்கைள விடவும் இந்த நகரங்கள் விதிவிலக்கின்றி அறிவில் முன்னோடி நகரங்களாகக் கணிக்கப்பட்டன. மேற்படி நகரங்களில் இருந்துதான் பெரும்பாலான ஹதீஸ் தொகுப்பாக்கங்கள், ஹதீஸ் அறிவிப்பாளர் திறனாய்வு, ஹதீஸ் விமர்சனக் கலை போன்ற பலதுறைகளையும் உள்ளடக்கிய அறிவுக் கலைகளைக் கொண்ட அதிகமான நூல்கள் வெளிவந்தன.

## உலகப் பிரசித்தி பெற்ற இமாம்களின் புண்ணிய தேசம்.

ΌΌ

முஸ்லிம் உலகில் ஹதீஸ் துறையில் பிரசித்தி பெற்ற இன்றும் பிரகாசிக்கும் பல இமாம்கள் இந்த தேசத்தில் பிறந்து மறைந்துள்ளனர். அவர்களில் முன்னணி அறிஞர்கள் எனப்படுவோர் இந்த தேசத்தவராக இருக்கின்றார்கள் என்பது இந்த பிரதேசத்தின் சிறப்பாகும்.

புகாரி, முஸ்லிம், சுனன் என்றழைக்கப்படும் சுனன் அபூதாவூத், அந்நஸயி, ஜாமிவுத் திர்மிதி, சுனன் இப்னு மாஜா ஆகிய ஆறு ஹதீஸ் கிரந்தங்களின் நூலாசிரியர்கள், ஸஹீஹ் இப்னு ஹுஸைமா, ஸஹீஹ் இப்னு ஹிப்பான், மற்றும் முஃஜம் என அழைக்கப்படும் இமாம் தபரானி அவர்களின் மூன்று முஃஜம் கிரந்தங்கள் போன்ற பெறுமதிவாய்ந்த நபிமொழிப் பேழைகள் இந்த பிரதேசத்தின் அதி திறமைவாய்ந்த அறிஞர்களின் ஆக்கப் பதிவுகளாகும்.

இது அக்காலத்தில் அந்த நகரங்களில் காணப்பட்ட அறிவியல் பண்பாட்டு எழுச்சியை உணர்த்தும் சான்றுகளாகத் திகழ்கின்றன. 170 கோடி உலக முஸ்லிம்களின் மனங்களில் இன்னும் இடம்பிடித்துள்ள இந்த பெருந்தகைகளின் கிரந்தங்கள் போதிக்கப்படுகின்றன என்றால் அவர்களில் அறிவியல் பயணத்தின் தூய்மையின் உச்ச நிலை பற்றி நாம் பேசத் தேவையில்லை.

UU

# ஈரான் பயணித்த சுன்னாக்களின் இஸ்லாமிய ஆட்சி

ஏற்கனவே நாம் சுட்டிக்காட்டியது போன்று ஈரான் ஒன்பது நூற்றாண்டுகள் நபித்தோழர் உமர் பின்கத்தாப் (ﷺ) அவர்களின் ஆட்சி முதல் பல சுன்னா ஆட்சியாளர்களைக் கடந்து ஹிஜ்ரி 907 ஆம் ஆண்டு ஷீஆ கடும்போகக்காளர்கள் என அறியப்பட்ட ஷீஆ ஸஃபவிக்கள் என்போர் இமாமிய்யா, இஸ்னா அஷரிய்யா என்ற பன்னிரெண்டு இமாம்கள் நம்பிக்கைச் சிந்தாந்த வழிமுறையை கி.பி. 1501 இல் ஈரானின் தமது அரச மற்றும் சமய மற்றும் பொதுக் கொள்கையாகப் பிரகடனப்படுத்தும் வரை அது சுன்னா வழியில் பயணித்தது. அதுவே, இஸ்லாமிய ஈரானின் காலப் பகுதியாகும்.

கலீஃபாக்களின் பின்னால் ஆட்சிக்கு வந்த (ஹிஜ்ரி 132- 657) வரையான அப்பாஸியர்களின் ஆட்சிகாலத்தில் சுன்னா வழியில் பயணித்த ஈரானில் அப்பாஸிய முதலாவது கலீஃபாவான அஸ்ஸஃப்பாஹ் முதல் அப்பாஸிய கலீஃபா ஐந்தாம் மன்னர் ஹாரூன் ரஷீதின் காலம் (அதாவது ஹி: 132-187) பாரசீக ஈரானியர்கள் அரை நூற்றாண்டு காலம் குறிப்பாக டமஸ்களில் இருந்து பக்தாதிற்கு ஆட்சித் தலைமையகம் கி.பி. 750 இல் மாற்றப்பட்டதன் பின்னால் பல உயர்பதவிகள் வகித்தனர்.

கலீஃபா மஃமூனின் சகோதரருக்கு எதிரான தனது அரசியல் நடவடிக்கைகளுக்கு தனக்குத் பக்கபலமாக நின்ற ஷீஆத் தளபதி தாஹிர் பின் அல்ஹுஸைன் என்பவனுக்கு மன்னர் ஹாரூன் ரஷீத் அவர்கள் கௌரவிக்கத் தீர்மானித்து குராஸான் மாகாண ஆளுனராக அவனை ஹிஜ்ரி 205 இல் நியமனம் செய்தார். இதனை சந்தர்ப்பமாகப் பாவித்த துரோகி தாஹிர் அங்கு ஒரு சிற்றரசை நிறுவி, அதற்கு தாஹிரிய்யா என்று பெயரும் வைத்தார். அந்த அரசு ஹிஜ்ரி 305- 359 வரை ஐம்பது ஆண்டுகள் குராஸான் மாநிலத்தில் நிலை பெற்றிருந்தது என்பது கவனிக்கத் தக்கதாகும்.



UU

# பாரசீக ஈரானின் ஏக்கம்.

ஷீஆக்கள் ஆட்சிக்காக ஏங்குவது என்பது ஹுஸைன்(ﷺ) அவர்களின் மரணம் முதல் இருந்து வரும் ஒரு அவாவாகும். அவர்கள் கலீஃபாக்களின் இஸ்லாமிய கிலாபத்தையே குறை கண்டவர்கள் என்றால் உமையா, அப்பாஸிய, சல்ஜுக்கிய மற்றும் உஸ்மானியர் கிலாபத்தை விட்டு வைப்பார்களா என்ன?

ஈரான் அரபு சுன்னாக் கொள்கையில் இருந்து விடுபட்டு தனித்து இயங்க வேண்டும் என்று ஹிஜ்ரி 01 ஆம் நூற்றாண்டு முதல் ஏங்கிக் கொண்டும், அதற்கான பிரயத்தனங்களை மேற்கொண்டும் இருந்த வேளையில்தான் தாஹிரிய்யா அரசின் உருவாக்கம் நடந்தது. அதன் பின்னர், சாமானிய்யா, ஸஃபாரிய்யா, கஸ்னவிய்யா போன்ற தனியான சிற்றரசுகளும் குருநில மன்னர்களும் உருவாக வழியமைத்துக் கொடுத்தது எனலாம்.

இருப்பினும் அப்பாஸியர் ஆட்சிகாலம் முழுவதும் தேசிய அடையாளமான சுன்னா வாழ்வியல் முறை மக்களின் சகலவிதமான நடவடிக்கைகளிலும் பெரும்பாலாக மேலோங்கிக் காணப்பட்டது. அங்கு ஷீஆ மத சிந்தனைப் பரவலுக்கு எவ்வித முக்கியத்துவமும் அளிக்கப்படவில்லை என்பதே இதன் உண்மையாகும்.

# ஈரானில் பலவீனம் அடையத் தொடங்கிய அப்பாஸியர் ஆட்சி கி.பி. 750 - 1258

55

இஸ்லாமிய ஆட்சிக் காலம் அல் அஹ்துல் ராஷிதி அல் அஹ்துல் உமவி, அல் அஹ்துல் அப்பாஸி, அல் அஹ்துல் உஸ்மானி போன்ற கால கட்டங்களைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது.

அப்பாஸியர் ஆட்சி அப்துல் முத்தலிபின் பேரர் அப்பாஸ்(ரலி) அவர்களோடு இணைத்துப் பேசப்படுவதால் அப்பாஸியர் ஆட்சி என அறிமுகப்படுத்தப்படுகின்றது. இது அபுல் அப்பாஸ் என்பவருடைய பெயரில் தொடங்கப்பட்டது. அது மூன்று காலகட்டங்களைக் கொண்டது.

1. முதலாம் காலகட்டம் ஹி. 132-232 (கி.பி. 750-847)
2. இரண்டாம் காலகட்டம் ஹி. 232-334 (கி.பி. 847-947)
   இக்காலகட்டத்தில் அப்பாஸியர் ஆட்சி துருக்கியரிடம் கைமாறியது.
3. மூன்றாம் காலகட்டம் ஹி. 334-596 (கி.பி. ...............???) *?
   இக்காலகட்டத்தில் துருக்கியரிடம் இழந்த பிரதேசங்கள் போக பக்தாத்தையும் அதைச் சூழவுள்ள பிரதேசங்களையும் உள்ளடக்கியிருந்தது.

இவற்றில் அப்பாஸிர் ஆட்சிக் காலம் என்பது மூன்றாவது காலம் என அறியப்படுகின்றது. அவர்கள் மாத்திரம் 508 ஆண்டுகள் ஆட்சி செய்தனர். இதுவும் இரண்டு கட்டங்களாக நோக்கப்படும்.

தொடக்கம்: ஹி. 132-656 (750-1258) வரையாகும். ஹி. 232-590 வரை துருக்கியர் காலமாகப் பார்க்கப்படுகின்றது. இரண்டாம் காலப் பகுதி கி.பி. 861-1250 வரை வீழ்ச்சிக் காலமாகப் பார்க்கப்படுகின்றது. மொத்தம் 37 கலீஃபாக்களில் முதலாவது கலீஃபாவாக அபுல் அப்பாஸ் அஸ்ஸஃபாஹ் என்பவரில் தொடங்கி இறுதி கலீஃபா மங்கோலிய, தாத்தாரியப் படைகளால் கொலை செய்யப்பட்ட அல் முஸ்தஃஸிம் என்பவரோடு அப்பாஸியர் ஆட்சி முடிவடைகின்றது.

அப்பாஸியர் ஆட்சியின் 500 ஆண்டு காலப் பகுதிக்குள் பின்வரும் பல சிற்றரசுகள் தோற்றம் பெற்றன. அது அப்பாஸியர் ஆட்சியாளர்களின் பலவீனத்தையும், அசமந்தப் போக்கையும் எடுத்துக் காட்டுகின்றது.

| ஆட்சி பெயர் | | | காலம் |
|---|---|---|---|
| தாஹிரிய்யா | - | தாஹிரிய்யூன் | 821 - 873 |
| ஸஃபாரிய்யா | - | ஸஃபாரிய்யூன் | 867 - 1186 |
| ஸாமானிய்யா | - | ஸாமானிய்யூன் | 873 - 999 |
| ஸயாரிய்யா | - | ஸயாரிய்யூன் | 929 - 1007 |
| புவைஹியர் | - | புவைஹிய்யூன் | 945 - 1055 |
| கஸ்னவிக்கள் | - | கஸ்னவிய்யூன் | 962 - 1186 |
| ஸலாஜிகா | - | ஸல்ஜுக்கியர் | 1038 - 1153 |
| குவாரிஸ்மிக்கள் | - | குவாரிஸ்மிய்யா | 1153 - 1220 |

**குறிப்பு :**

(1) கஸ்னவிக்கள் ஷீஆ மதத்தைப் பிழை காணாத துருக்கிய இனத்தவர்களாகும். மங்கிப்போய் கிடந்த பாரஸீகப் நெருப்பு வணங்கியர் பண்பாடுகளையும் விழுமியங்களையும் அவர்கள் உயிர்ப்பித்தனர் என்பது குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

(2) குவாரிஸ்மிக்கள் - குவாரிஸ்மிய்யா ஆட்சியாளர்களின் காலத்தில் நெருப்பு வணங்கிகளான பாரஸீகக் கலை என்றுமில்லாதவாறு எழுச்சி பெற்றது. (www.aljazeera.net)

## அப்பாஸியர் ஆட்சியில் இருந்து பிரிந்த சிற்றரசுகள் பற்றிய தெளிவு:

ஹிஜ்ரி 259 இல் குராஸானில் யஃகூப் பின் அல்லைஸ்

அஸ்ஸஃபாரி என்பவரால் புதிய ஒரு அரசு தோற்றுவிக்கப்பட்டது. அது ஸஃபாரிக்கள் ஆட்சி என அறியப்பட்டது. அவரது மரணத்தின் பின்னாலும் ஹிஜ்ரி 279 வரை அவரது புதல்வர்கள், மற்றும் பேரப்பிள்கைகள் மூலம் அது நிலைநாட்டப்பட்டது.

ஹிஜ்ரி 279 இல் ஸஃபாரிய முகாமுக்கும், சாமானிய்யா முகாமுக்கும் இடையில் ஏற்பட்ட அதிகாரப் போரினால் சாமானியர் வெற்றி பெற்றனர். அதன் பயனாக அவர்களிடம் இருந்து ஆட்சியை முழுமையாகக் கைப்பற்றிய சாமானிக்கள் கிழக்கு ஈரானில் புதியதொரு ஆட்சியை நிறுவினார்கள். அது பிற்காலத்தில் சாமானிய்யா அரசு என அறியப்பட்டது. இஸ்மாயீல் அஸ்ஸாமானி, மற்றும் அவரது பிள்ளைகள், பேரப்பிள்ளைகள் மூலம் அந்த ஆட்சி நடத்தப்பட்டது. அவர்கள் குராஸானையும் கோகாஸியா (மத்திய ஆசியா)வின் முக்கிய மாநிலங்களையும் சுமார் அரை நூற்றாண்டுகள் (அதாவது: 279 – 389 வரை) தமது ஆழுகையின் கீழ் வைத்திருந்தனர்.

சாமானிய்யா அரசு அதன் மன்னர்களில் ஒருவரான நஸ்ர் பின் அஹ்மத் அஸ்ஸாமானி என்பவரின் காலத்தில் பொருளாதார, அபிவிருத்திப் பணிகளில் பாரியளவு எழுச்சி கண்டது. அவர்கள் குராஸான், ஸிஜிஸ்தான், தபரிஸ்தான், அர்ரை, மரூ, கிர்மான் போன்ற முக்கிய மாவட்டங்களைக் கைப்பற்றியதோடு செத்துக்கிடந்த நெருப்பு வணங்கிகளான ஈரானியரின் புராதன, தொன்மைக் கலாசார விழுமியங்கள் பலதையும் உயிர்ப்பித்தனர்.

இருப்பினும் இவர்கள் அப்பாஸிய கலீஃ.பாவின் கட்டுப்பாட்டில் இருந்து தம்மை விலக்கிக் கொள்ளவில்லை. அதன் தலைமைத் துவத்தில் உள்ள உயிரோட்டத்தை விளங்கி அவர்கள் நன்கு மதித்து நடந்ததோடு, தமது அசியல் நலனுக்காக அவர்களின் கட்டுப்பாட்டில் இருந்தும் தம்மை விலக்கிக் கொள்ளவில்லை.

இவர்கள் வெளிப்படையில் சுன்னா மத்ஹபுப் போக்கில் வாழ்ந்ததன் காரணமாக, மத்திய ஆசியா (கவ்காஸியா) வில் உள்ள அறிஞர்கள் இவர்களுக்கு பக்கபலமாக இருக்கவும், அவர்களுக்கு உதவி செய்யவும் அது காரணமாக அமைந்தது. இவர்கள் துருகிஸ்தானுக்கு எதிராக போர் தொடுத்து வெற்றி கொண்ட பின்னர், துருக்கியர்கள் சிலர் சாமானிய்யா ஆட்சியில் நுழைந்தனர். காலப் போக்கில் சாமானிய அரசை அவர்கள் வீழ்த்தினர்.



பப

# ஈரானில் தற்கால துருக்கிய பரம்பரையினரின் ஆட்சி

அப்பாஸியர் ஆட்சியில் துருக்கியர் 92 வருடங்கள் தமது ஆட்சியைத் தொடர்ந்தனர். இதற்கு அரபுக்களை இராணுவப் பிரிவில் உயர் பதவியில் அமர்த்தாது துருக்கியர்களை அமர்த்தியது காரணமாகக் கூறப்படுகின்றது.

சாமானிக்கள் (சமானியர்) ஆட்சியை துருக்கியர் இனத்தைச் சேர்ந்த தஸ்னவிக்கள் வீழ்த்தி, இஸ்லாமிய ஈரானில் சக்திமிக்கதோர் பலமான ஆட்சியை நிறுவி, அங்கு தமது செல்வாக்கை நிலை நிறுத்தினர். இஸ்லாமிய நடவடிக்கையினால் உலக வரலாற்றிலும், அது இஸ்லாமிய ஈரானிலும் தனியான அந்தஸ்தைப் அவர்களுக்குப் பெற்றுக் கொடுத்தது. அதாவது ஈரானில் சுன்னாசார் கொள்கைக்கு மீண்டும் புத்துயிர் ஊட்டிய பெருமைக்குரியவர்கள் என்ற சிறப்பை அவர்கள் அடைந்தனர். அதனை ஈரானின் சுன்னா தேசத்தின் பொற்காலம் எனப் வர்ணிக்க முடியும்.

அப்பாஸிய கலீஃபாக்கள் கலீஃபா அல்முஃதஸிம் பின் மஃமூனுடைய காலம் முதல் துருக்கியர்களிடம் உதவி கோரும் வழக்கமுடையோராக இருந்தனர். இதற்கு முஃதஸிமின் தாய் துருக்கிப் பெண்ணாக இருந்ததும், அப்பாஸியர் அவர் ஆட்சிக்குக் கட்டுப்பட்டு நடந்ததும் காரணமாகும் என வராலாற்று ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். கஸ்னவிக்களின் ஆட்சிகாலத்தில் முஸ்லிம்கள் வீரம் நிறைந்த தமது போர் தந்திரங்களால் பல பிரதேசங்களை வெற்றி கொண்டனர். இது இஸ்லாமிய ஈரான் சுன்னா வழியில் நீண்ட தூரம் பயணிக்க உதவியாக இருந்தது.

# அப்பாஸியர் வீழ்ச்சியின் பின்னரான ஈரானின் நிலை

55

உமைய்யா ஆட்சியாளரான ஹிஷாம் பின் அப்துல் மலிகின் மரணத்தின் பின்னால் உமையாக்கள் மத்தியில் அரசியல் குழப்பமும் பாரிய ஆட்சிப் பிளவுகளும் ஏற்பட்டன. அதனால் உமையா ஆட்சி பலவீனம் அடைந்தது. ஆட்சியைத் தொடர்ந்து நடத்திச் செல்ல மக்கள் ஹாஷிமி கோத்திரத்தில் உள்ள ஒருவரை எதிர்பார்த்தனர். அந்த வகையில் குறைஷியப் பரம்பரையில் வந்த அபுல் அப்பாஸ் என்பவர் அப்பாஸிய ஆட்சி நிறுவனராக அறிமுகம் செய்யப்பட்டார். அதன் அடிப்படையில் அவர்கள் அப்பாஸிர் என அறியப்பட்டனர்.

உமைய்யா ஆட்சி அப்பாஸியர்களால் முழுமையாக ஹி. 131 இல் வீழ்த்தப்பட்டதோடு, அவர்களைப் பழிதீர்க்கும் முகமாக கூஃபா நகரில் அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப்(ரலி) அவர்கள் பேரில் கி.பி 750 ஆம் ஆண்டு நிறுவிய ஆட்சியை அப்பாஸியர் ஆட்சி எனக் குறிக்கும். அது எழுச்சிக்காலம், பொற்காலம், வீழ்ச்சிக்காலம் என்ற மூன்று காலகட்டங்களைக் கடந்து பயணித்தது.

அப்போதைய அதன் நிலப்பரப்பின் சதுர பரப்பளவு 10,000,000 கி.மீ. என்றும், மக்கள் தொகை 50,000,000 என்றும் கூறப்படுகின்றது. அப்பாஸியர் ஆட்சி இஸ்லாமிய ஆட்சியாகவும், அரபு மொழியை தேசிய மொழியாகவும் கொண்டு விளங்கியது.

## அப்பாஸியர் ஆட்சியின் தலை நகரங்கள்.

கி.பி 750 இல் தொடங்கப்பட்டு கி.பி 766 வரை ஸஃத் பின் அபீ வக்காஸ் (ரலி) அவர்கள் நிர்மானித்த கூஃபா நகர் அதன் தலைநகராக விளங்கியது. முதலாவது நகரமாக ஈராக்கின் கூஃபா நகர் விளங்கியது. ஈராக்கின் ஸாமிர்ரா நகரம் கி.பி. 836-892 வரை அதன் தலைநகராக விளங்கியது. பின்னர அங்கிருந்து கி.பி. 892 இல் பக்தாத் நகருக்கு அது மாற்றப்பட்டது.

பின்னர் அங்கிருந்து பக்தாத் நகருக்கு அது மாற்றப்பட்டு கி.பி 892 வரை இயங்கிய வந்தது.

இக்காலகட்டத்தில் ஈராக்கின் ஸாமிர்ரா நகரம் அதன் தலை நகரமாகவும், பக்தாத் மத்திய நிலையமாகவும் விளங்கியது.

கி.பி. 892-1258 வரை பக்தாத் அதன் தலைநகராக விளங்கியது. பக்தாத் வீழ்ச்சியின் பின் கி. பி. 1261 முதல் 1517 வரை எகிப்தின் கைரோ நகரம் அப்பாஸியர் ஆட்சியின் நிர்வாக நகராகவும், தலைமை நிருவாக நகரமாகவும் விளங்கியது.

அப்பாஸியர் ஆட்சி முழுமையாக வீழ்ச்சி அடைவதற்கு முன்னர் தகுதி அற்ற கலீஃபாக்கள் அங்கு பதவி ஏற்றதும் ஷீக்களுக்கு அளவுக்கதிகமாக உரிமைகள் வழங்கியதும் காரணமாக பலவீனத்தை தழுவியது.

# அப்பாஸியர் ஆட்சி வீழ்ச்சிக்கான காரணிகள்

06

ஹி. 132-232 வரை அப்பாஸியரின் பொற்காலம் என வர்ணிக்கப்படுகின்றது. அக்கால ஆட்சியாளர்கள் இறையச்சம், இஸ்லாமியப் பற்று, நாட்டைக் கட்டியெழுப்புதல், நாட்டுப் பிரஜைகளின் உணர்வுகளுக்கு மதிப்பளித்தல் போன்ற முன்மாதிரிகளைக் கடைப்பிடித்து வாழ்ந்ததன் காரணமாக அது அவர்களின் பொற்காலம் என வர்ணிக்கப்படுகின்றது.

ஹி. 232-656 வரையான அப்பாஸியர் ஆட்சிக் காலம் வீழ்ச்சி சிதைவை நோக்கிப் பயணித்த காலமாக வர்ணிக்கப்படுகின்றது. அதன் காரணிகளை பின்வருமாறு நோக்கலாம்.

1. **ஈரானிய பாரசீகர்கள் கலீஃபாக்களிடம் தாம் இழந்த அரச அதிகாரத்தை மீண்டும் உருவாக்கிக் கொள்ள சகல விதமான சதிகளையும் மேற்கொண்டதோடு அதற்காக பொதுமக்கள் மத்தியில் குழப்பங்களை தோற்றுவித்து பிரிவினைகளையும் உருவாக்கியமை.**

2. **துருக்கிய இராணுவம் கலீஃபாவை ஆக்கிரமித்தமை.**

கலீஃபாவின் நேரடி கண்காணிப்பின் கீழ் ஆட்சி இருக்கின்ற போதுதான் ஒரு அரசு பலம் பொருந்தியதாகவும், பாதுகாப்பு மிகுந்ததாகவும் இருக்கும். முப்படைகளின் அதிகாரங்கள், கலீஃபாவின் நேரடியான பார்வையில் இருந்து அமைச்சர்களிடம் பரவலாக்கல் செய்யப்பட்டதால் ஆட்சிக்கு எதிரான பல சிற்றரசுகள் தோற்றம் பெற்றன.

அதுமட்டுமின்றி, துருக்கி ராணுவத்திடம் பாதுகாப்பு தொடர்பான விடயங்கள் ஒப்படைக்கப்பட்டதன் காரணமாக கலீஃபாவின் தலைமைக் காரியாலயத்தை அவர்கள் தமது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவருவதற்கான சாதகமான ஒரு நிலையை அது தோற்றுவித்தது.

3. **சமூக, பண்பாட்டு வீழ்ச்சியும், மன்னர்களின் சுகபோக வாழ்க்கையும்.**

ஆரம்பகால அப்பாஸிய கலீஃபாக்களின் அயராத வெற்றியின் பயனாக விஞ்ஞானம், மருத்துவம், இலக்கியம் என அனைத்துத் துறைகளிலும் எழுச்சியின் உச்சத்தைத் தொட்ட சமூகம் பிற்பட்ட காலங்களில் செல்வச்செருக்கிலும், களியாட்டங்களிலும் ஈடுபட்டு தனது இலக்கைத் தொலைத்தது.

இந்நிலையில் மக்கள் அங்கு இரு வர்க்கத்தினர்களாக பிளவுபட்டனர். ஒரு குழு, வீண் கேளிக்கைகள், கூத்து, டான்ஸ், நடனம், இசை, ஆடல், பாடல் போன்ற தேவையற்ற காரியங்களில் தமது காலத்தைக் கழித்துக் கொண்டிருந்தது.

இரண்டாவது குழுவினர் இவற்றைத் தடுத்து நிறுத்தி, மன்னர்களையும், மக்களையும், சீர் செய்வதற்குப் பதிலாக இவை அனைத்தையும் விட்டும் ஒதுங்கி துறவறத்தின் பக்கமும், உலகப் பற்றற்ற வாழ்வின் பக்கமும் மக்களை அழைத்தனர். இதனால் அவர்கள் தமக்குள் பல கூறுகளாப் பிரிந்தனர்.

4. **அரபி, அரபி அல்லாதவர்கள் (அஜமி) என்ற குரோத உணர்வு வளர்ந்தமை.**

அப்பாஸியர் ஆட்சியில் அரபுக்கள் அல்லாத மக்களின் தொகை அதிகமாக இருந்தது. அதனால் அவர்கள் அரபு வழிவந்த அப்பாஸியர்களை வெறுத்தனர்.

குறிப்பாக, தாம் இவர்களின் அடிமைகளாக நடத்தப்படுவது போன்ற குரோத உணர்வுகள் மக்கள் மனங்களில் பதிந்ததன் காரணமாக அவர்கள் மத்தியில் இருந்த ஐக்கியம் சிதைந்து

வேற்றுமை உணர்வு வளர்ந்தது.

### 5. பொருளாதார வீழ்ச்சி.

பொருளாதார செருக்கிலும், செல்வச் செழிப்பிலும் வாழ்ந்த பிற்கால அப்பாஸிய மன்னர்களால் கீழ் மட்டத்தில் உள்ள மக்கள் பாரிய பொருளாதார நெருக்கடிக்கு உள்ளாகினர்.

குறிப்பிட்ட சாரராரிடம் செல்வம் குவிந்து, அவர்கள் மாத்திரம் சுகபோகவாழ்வை அனுபவித்துக் கொண்டிருந்த போது அவர்களில் உள்ள பல்லாயிரக் கணக்கானோர் பசி, பட்டினியில் வாடினர். நாட்டு மக்களின் பசி தீர்க்காத, வேலையில்லாத் திண்டாட்டத்தில் கவனம் செலுத்தாத அப்பாஸியர் ஆட்சியின் வீழ்ச்சியை தீர்மானிப்பதில் இதுவும் முக்கியமான பங்காற்றியது.

### 6. சிற்றரசுகளின் தோற்றமும்

அப்பாஸிய கலீஃபாக்களில் ஆட்சிப் பொறுப்பேற்றவர்கள் பலவீனமானவர்களாக இருந்ததனாலும் தமது ஆட்சியின் போது பாரிய நிலப்பரப்பை வெற்றி கொண்டதனாலும், தாம் வெற்றி கொண்ட அனைத்து பிரதேசங்களையும் தமது நேரடி நிருவாகத்தின் கீழ் கொண்டு வருவதிலும் ஒரு வகையில் தோல்வி கண்டனர் என்றே நோக்க வேண்டி உள்ளது. அதனால் நாட்டு நிலை வருவாய்களில் பாரிய வீழ்ச்சி ஏற்பட்டது. அது மக்களின் வறுமை ஒழிப்பில் பாரிய தாக்கத்தை உண்டு பண்ணியது.

அடுத்தது, அப்பாஸியர்கள் தாம் வெற்றி கொண்ட பிரதேசங் களில் பிரதிநிதிகளாக நிறுத்தப்பட்டவர்கள் நிருவாகத் திறமை அற்றவர்களாகவும், வெளிநாட்டு சதிகளை முறியடிக்கின்ற வலிமை அற்றவர்களாகவும் இருந்தனர்.

அதனால் நெருப்பு வணங்கிகளான தாத்தாரியர்கள் அந்தப் பிரதேசங்களை ஆக்கிரமிக்க அவர்களுக்கு வழியமைத்துக் கொடுத்தது போன்றதொரு நிலையை அது உருவாக்கிக் கொடுத்தது.

### 7. ஷீஆ அமைச்சராக இருந்த இப்னுல் அல்கமியின் சதி:

அப்பாஸிய கலீஃபாவின் இரகசிய ஆலோசகராகவும், பிரதமர் அந்தஸ்திலும் இருந்த ஷீஆ மதவாதியான இப்னுல் அல்கமி அப்பாஸிய கலீஃபாவுக்கு எதிராக திரைமறைவில் சதி செய்தான்.

அவன் தாத்தாரியப் படைத்தளபதி (தைமோஜீன்) என்ற ஜன்கீஸ்கான் உடன் மறைமுகமாக ஏற்படுத்திக் கொண்ட கள்ளத் தொடர்புகளால் அப்பாஸி கலீஃபா அல்முஃதஸிம் உட்பட, அவரோடு இருந்த அமைச்சர்கள், ஆலோசகர்கள், ஆலிம்கள் எனப் பலர் தாத்தாரியர்களால் கைது செய்யப்பட்டு கொடூரமாகக் கொல்லப்படவும், பக்தாதில் பல இலட்சம் முஸ்லிம்கள் ஈவிரக்கமின்றிக் கொன்றொழிக் கப்படவும், மனித உதிரத்தால் பக்தாத் மாநகரில் இரத்த ஆறு ஓடவும் காரணமாக இருந்தது என்பது உண்மைப்படுத்தப்பட்ட இஸ்லாமிய வரலாறாகும்.

ஈரான், மற்றும் ஈராக் நாடுகளை ஆட்சி செய்த குவாரிஸ்மிக்களின் ஆட்சியின் வீழ்ச்சியும் பக்தாத் மீதான படை எடுப்பை மங்கோலியத் தாத்தாரியர்களுக்கு இலகுபடுத்தியதாக ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

இந்த ஷீஆவின் சூழ்ச்சியால் அப்பாஸியரின் ஆட்சிக்கு முடிவு கட்டப்பட்டு, அப்பாஸிய கலீஃபாவும் அவரது அரண்மனையில் கொலையும் செய்யப்பட்டு, மங்கோலியத் தாத்தாரியர் பக்தாதைக் கைப்பற்றியதன் மூலம் பக்தாதில் காணப்பட்ட சுன்னாக்களின் பாரம்பரிய இஸ்லாமிய கலாசார பண்பாடுகள் அழிக்கப்பட்டன என்பது பொருள் அல்ல.

மாற்றமாக பக்தாத் வீழ்ச்சியின் பின்னரும் பல்லாண்டுகள் அவை உயிர்வாழ்ந்தன; நீடித்து நிலைத்தன. இஸ்லாமிய பண்பாட்டின் தாக்கத்தினால் முஸ்லிம் அல்லாத மங்கோலிய ஆக்கிரமிப்பாளர்களே தமது ஆடைகளையும் வழக்கங்களையும் இஸ்லாமிய பாரம்பரியங்களுக்கும், பண்பாடுகளுக்கும் அமைவாக மாற்றிக் கொள்ள நிர்ப்பந்திக்கப்பட்டனர்.

இவ்வாறு அவர்களின் ஆட்சி வீழ்ச்சி அடைந்த பின்னரும் இஸ்லாத்தின் தனித்துவத்தையும் அடையாளத்தையும், அதன் தடயங்களையும் அவர்களால் அழிக்க முடியாத அளவு மக்கள் மனங்களில் அவை அன்றாட வாழ்வியல் நெறிகளாகக் கலந்து சுமார் ஒன்றரை நூற்றாண்டுகள் வரை நீடித்து காணப்பட்டன.

ஷீஆக் கடும் போக்காளர்களான ஸஃபவிக்களின் ஆட்சியின் பின்னரே சுன்னாக்கள் என்ற நாமம் திட்டமிட்டு இல்லாதொழிக்கப் பட்டது என்றால் ஷீஆக்களுக்கு சிலை வணங்கிகளான தாத்தாரியக் காபிர்கள் மத சுதந்திரம் வழங்கி இருக்கின்றனர் என்று சுட்டிக்காட்ட முடியும். இது இன்றும் சர்வதேச அளவில் மேற்கொள்ளப்படும் சதிகளில் ஒன்றாகும்.

### ஈரானிய சுன்னா தேசத்திற்கு நடந்த கதி என்ன?

ஹிஜ்ரி 21- 907 ( கி.பி. 642 -1497 ) வரையான காலப்பகுதிவரை ஒன்பது நூற்றாண்டுகள் நபித்தோழர்கள் வழி வந்த சுன்னா முஸ்லிம்களின் புண்ணிய தேசமாக இஸ்லாமிய சுடர் வீசிக் கொண்டிருந்த பாரஸீக ஈரானியப் பூமி, எவ்வாறு இருளடைந்த ஷீஆத் தேசமானது? முத்ஆ விபச்சார நடைமுறைக்கும் நபித்தோழர்களைக் காபிர்களாக நோக்கும் நிலைக்கும் எவ்வாறு சென்றது?என்ற ஆச்சரியமான கேள்விக்குப் பதில் காண்பது சுன்னா முஸ்லிம்களின் மீதுள்ள கடமையாகும் என்ற வகையில் அது பற்றிய சுருக்கம் பின்னால் அளிக்கப்படுகின்றது.



UU

## இமாமிய்யாக் கோட்பாடு ஈரானின் தேசிய மதமாகின்றது

இது ஸஃபவிக்களின் ஆட்சியில் நடந்தேறிய கொடுமைகளில் ஒன்றாகும். அது ஸஃபிய்யுத்தின் அல் அர்தபீலி (கி.பி. 1252-1334) என்பவரது பெயருடன் இணைத்துப் பேசப்படுகின்றது. அவர் அதர்பைஜான் மாகாணத்தில் அர்தபீல் நகரில் சூஃபிஸ தரீக்காவை நிறுவி அதன் ஊடாக அரசியல் இயக்கத்தை துவக்கினார். பின்னர் அவர், அர்தபீல் நகரை அரசியல், சமய பிரதான நகரமாக தேர்வு செய்திருந்தார். இவர், பாத்தினிய்யா கொள்கையில் ஊறிப்போன, ஷீஆ இஸ்னா அஷரிய்யா மதச் சார்பாளராகவும், சூஃபியாக்களின் தரீக்கா வழிவந்தவராகவும் இருந்தார்.

ஸஃபவிக்கள் சூஃபி ஸஃபியுத்தீனின் பரம்பரையில் வந்ததனால் ஸஃபவிய்யூன்- ஸஃபவிய்யா என்று அழைக்கப் படுகின்றனர். அவர்கள் கி.பி. 1501- 1722 வரை ஈரானில் ஆட்சி செய்தனர்.

இவரது பேரப்பிள்ளைகளில் ஒருவரான இஸ்மாயீல் மிர்ஸா அஸ்ஸஃபவி, அல்லது ஷாஹ் இஸ்மாயீல் அஸ்ஸஃபவி (1487-1524) என்பவர் ஸஃபவிக்கள் ஆட்சியின் முதன்மை நிறுவனராகப் பார்க்கப்படுகின்றார். அவர் கி.பி. 1494 முதல் ஆட்சி செய்தார்.

இஸ்மாயீல் அஸ்ஸஃபவி ஷீஆ மத ஈடுபாட்டில் கடும்போக்காளராக இருந்தார். இவர் திப்ரீஸ் மாகாணத்தின் மீது படை எடுத்து அங்குள்ள கோத்திரங்களை வெற்றி கொண்டதோடு, ஷீஆ

இஸ்னா அஷரிய்யா என்ற இமாமிய்யா சமயத்தை புதிதாகப் பிரகடனம் செய்தார். திப்ரீஸ் மாகாண முற்றுகையன்று மாத்திரம் 1,40,000 சுன்னாக்களைக் கொன்றொழித்தார் என்பது இவரது வரலாற்றில் கறை படிந்த முக்கிய பக்கமாகும்.

பின்னர் ஷாஹ் அப்பாஸ் (கி.பி1587- 1629) என்பவர் திப்ரீஸ் மாகாண ஷீஆ ஆட்சியை அஸ்ஃபஹான் மாகாணத்திற்கு மாற்றினார். ஆப்கானிஸ்தானைச் சேர்ந்த பாரஸீகக் கோத்திரத் தலைவர் மஹ்மூத்கான் கஸ்னவி அவர்கள் அஸ்பஹான் மீது போர் தொடுத்ததன் காரணமாக ஸஃபவிக்களின் ஆட்சி கி.பி. 1722 முடிவுக்கு வந்தது.

**குறிப்பு:**

**உஸ்மானிய கலீபா சுல்தான் ஸலீம் அவர்கள் ஹி. 920 - கி.பி. 1514 இல் உலமாக்கள் மற்றும் அரச பிரதிநிதிகளோடு கூடிய கூட்டத்தில் ஈரானிய அரசு தமக்கெதிராக செயற்படுவதற்கு தூய ஜிஹாத் பிரகடனம் செய்தார். இது அப்போதைய உஸ்மானிய கலீஃபாக்களின் வீரமிக்க செயற்பாடாகும். தற்போதைய துருக்கியின் தலைவர் ஈரானோடு தேநிலவு கொண்டாடுவது பற்றி அனைவரும் அறிவார்கள்.**



UU

# ஸஃபவிக்களின் சாபத்துக்குரிய செயற்பாடுகள்

ஷாஃபி மத்ஹப் பற்றாளரான சூஃபிகளின் வழி வந்த ஸஃபிய்யுத்தீன் அல்அர்தபீலி உடைய பேரர்தான் இஸ்மாயீல் அஸ்ஸஃபவி என்பவர்.

- ☞ இவர் ஷீஆக்களின் இமாம்களின் வரிசையில் இடம் பெறும் இமாம் காழிம் என்பவரின் ஏழாவது பரம்பரையில் வந்தவர் என்று தன்னைப் பற்றி பொய்ப் பிரச்சாரம் செய்து கொண்டு ஹிஜ்ரி 907 இல் (கி.பி. 1501) ஸஃபவிய்யா ஆட்சியை ஈரானில் தோற்றுவித்தார். இவரே ஈரானின் ஷீஆ இமாமிய்யா மதத்தைப் பிரகடனப்படுத்தியவர்,
- ☞ இவர் தனது ஆட்சியில் உலகில் நாலாதிசைகளிலும் வாழ்ந்து வந்த ஷீஆ மத போதகர்களுக்கு ஈரானில் புகலிடம் அளித்து, அவர்கள் ஷீஆ மதத்தைப் பரப்பவும், போதிக்கவும், நிலைநாட்டவும், பிரச்சாரம் செய்யவும் பாடசாலைகள், அறநெறிக் கல்லூரிகள் அமைத்து செயற்படவும் வசதிகள் செய்து கொடுத்தார். இவர் அஹ்லுல்பைத்தினர் பெயரில் நாணயம் அடித்தும் வெளியிட்டார்.
- ☞ ஷீஆ இமாமிய்யா மதத்தில் கடும்போக்காளர்களில் ஒருவராக இருந்த இவர், ஈரானிலும் அதன் சுற்றுப் புறங்களிலும் பல்லாயிரக் கணக்கான சுன்னா முஸ்லிம்களைக் கொன்றொழித்ததோடு அவர்களின் பாடநூல்களைத் தீயிட்டுக் கொழுத்தினான்.

- ☞ ஹிஜ்ரி பத்தாம் நூற்றாண்டில் ஷீஆ மதம், வஹ்தததுல் வுஜூத் எல்லாம் அவனே, உள்ளமை ஒன்றே என்ற அத்வைத வழிகேட்டுக் கோட்பாட்டில் கொடி கட்டிப் பறந்தது.
- ☞ இதன் மூலம் ஷீஆக்களுக்கும், அத்வைத வழிகேடர்களுக்கும் இடையில் காணப்படும் கொள்கைத் தொடர்பு, இறுக்கமான உறவு பற்றி உணர்ந்து கொள்ள முடியும்.
- ☞ இஸ்மாயீல் ஸஃபவி ஆட்சிக்கு வந்து மிகக்குறுகிய காலத்தில், ஈரானின் பல மாநிலங்களைக் கைப்பற்றி அங்கெல்லாம் வலுக்கட்டாய மாகவோ, அல்லது நிர்ப்பந்தமாகவோ ஷீஆ மதத்தை மக்கள் அங்கீகரிக்க முழுமையான முஸ்தீபுகள் மேற்கொண்டார். திட்டமிட்டு சுன்னாக்கள் ஷீஆக்களாக மாற்றப்பட்டனர்.
- ☞ ஸஃபவிக்கள் ஈரானில் தமது பாதுகாப்பை ஸ்திரப் படுத்தியதோடு, ஈராக்கில் தமக்குரிய புனிதஸ்தலங்கள் என நம்பப்படும் நஜஃப், கர்பலா போன்ற இடங்களைக் கைப்பற்ற படை நகர்வுகளைத் தொடங்கினர். இதனால் உஸ்மானிய துருக்கியர்கள் தாம் தெற்காலும், கிழக்காலும் அச்சுறுத்தப்படுவதை உணர ஆரம்பித்தனர்.
- ☞ குத்பாப் பேருரைகளில் மூன்று கலீஃபாக்களைத் திட்டுடமாறும் ஷீஆக்களின் 12 இமாம்களையும் புகழுமாறும் பணிப்புரை விடுத்த இஸ்மாயீல் அஸ்ஸஃபவி சுன்னாவாதியான ஒரு முஸ்லிமை தனிமையில் சந்தித்து கலீஃபாக்களை திட்டுமாறு ஏவவான். அதனை அவர் செய்ய மறுக்கும் பட்சத்தில் ஸ்தளத்திலேயே அவரைக் கொலை செய்துவிடுவான்.
- ☞ இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களின் மஸ்ஜிதை உடைத்தெறிந்து ஹனஃபிக்களின் மார்க்கப் போதனை நிலையங்களை தகர்த்து தரைமட்டமாக்கினான். இது ஈராக்கிலும் சிரியாவிலும் தற்போது ஈரானியர்களால் அரங்கேற்றப் படுகின்றது.

(மேலதிகத் தகவல்களுக்கு: www.dd-sunnah.net)



# 55 ஸஃபவிக்கள் தமது இலக்குகளை எவ்வாறு எட்டினர்?

ஈரான் எப்போதும் உமைய்யா, அப்பாஸியா, மற்றும் உஸ்மானிய அரசுகளுடன் முட்டி மோதிக் கொண்டுதான் வந்துள்ளது. இதற்குக் காரணம் சுன்னா, ஷீஆ மத சிந்தனை வேறுபாடும், பாரஸீக மேலாதிக்க, தனித்துவ வாஞ்சையுமாகும்.

ஈரானியர்கள் சுன்னாக்களான அப்பாஸிய ஆட்சியாளர்களின் பலவீனத்தைப் பயன்படுத்தி தமக்கு சாதகமான, தனியான சிற்றரசுகளை ஆரம்பத்தில் உருவாக்கி அதில் வெற்றியும் கண்டது போன்று, அதனை வெளிநாட்டு சக்திகளுக்கு காட்டிக்கொடுத்து அவர்கள் மூலம் இஸ்லாமிய அரசுகளை வீழ்த்துவதிலும் ஷீஆக்கள் பாரிய பங்காளிகளாக விளங்குகின்றனர். இன்றும் அதே பல்லவிதான்.

ஸஃபவிக்கள் உஸ்மானியர்களின் ஆட்சியோடு தொடர்ந்தும் சமரில் ஈடுபட்டுக் கொண்டும், தமது கொள்கையை நிலைநாட்டு வதிலும் இடைவிடாது முயற்சித்தது போன்று, இரண்டாம் கலீஃபா உமர்(ரழி) அவர்களால் ஒழித்துக்கட்டப்பட்ட பாரஸீக சாம்ராஜ்யத்தை மீண்டும் உருவாக்கப் படாதபாடு பட்டனர். அதற்காக ஷீஆ மதத்தை யும் நெருப்பு வணங்கிகளின் பண்பாட்டு, கலாசார விழுமியங்களை வளர்ப்பதிலும் உயிர்ப்பிப்பதிலும் அயராது உழைத்தனர்.

இந்தத் தரீக்கா மற்றும் வழிகெட்ட சூஃபி அமைப்புக்களோடு மறைமுகமாகக் கைகோர்த்து காய் நகர்த்தினர். சூஃபிகளும் அதற்குப் பக்கபலமாக இருந்து தமது ஆதரவையும் நல்கினர்.

# UU ஸஃபவிக்கள் ஷீஆ மதத்தைப் பரப்பிய வழிமுறைகள்

இவ்வளவு காலமும் சுன்னாவின் வழியில் பயணித்த பாரஸீக ஈரானில் பின்வரும் வழிகளைப் பின்பற்றி இஸ்மாயீல் அஸ்ஸஃபவி ஷீஆ மதத்தைப் பரப்ப தனது கவனத்தை செலுத்தினார்.

1. வீதிகளில் நபித்தோழர்களையும் மூன்று கலீபாக்களையும் திட்டும் நடைமுறையைப் பிரகடனம் செய்தனர்.
2. ஈரானின் தேசிய சமயமாக ஷீஆ மதத்தைப் பிரகடனம் செய்ததோடு, மக்களும் அந்த சமயத்தைப் பின்பற்றியாக வேண்டும் என்று வலுக்கட்டாயப்படுத்துதல்.
3. ஷீஆ மதத்தை ஏற்க மறுத்த பல்லாயிரக்கணக்கான சுன்னா முஸ்லிம் மக்களை கொன்றொழித்தல், அல்லது அண்டைய நாடுகளுக்கு நாடுகடத்துமாறு பணித்தல்.
4. ஷீஆ மதத்தைப் போதிக்க அரசமயப்படுத்தப்பட்ட கல்விக் கூடங்களை உருவாக்குதல்.
5. அஹ்லுல் பைத்தினர் பேரில் நாணயங்கள் அச்சுட்டு வெளியிடுதல்.
6. சுன்னா முஸ்லிம்களின் பள்ளிவாயில்களை தகர்த்துத் தரை மட்டமாக்கி, அதன் அடையாளங்களை இல்லாதொழித்தல்.
7. கலீஃபாக்களான அபூபக்கர், உமர், உஸ்மான்(ﷺ) ஆகியோரை ஜும்ஆக்களில் திட்டவும், சபிக்கவும் கதீப்களுக்கு பணிப்புரை வழங்கி, அமுல் நடத்துதல்.
8. தமது ஆட்சி அதிகாரத்தின் கீழ் உள்ள அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்களின் அசையும், அசையா சொத்துக்கள் அனைத்தை யும் அரசுடமையாக்குதல்.
9. அஹ்லுஸ்ஸுன்னாக்களைக் கண்ட இடங்களில் கொலை செய்தல், அவர்களின் சொத்துக்களை சூறையாடுதல், அவர்களின் உடமைகளை தீயிட்டுக் கொழுத்துதல், அல்லது அழித்தொழித்தல், அவர்களின் மஸ்ஜிதுகளையும், மண்ணறைகளையும் அசிங்கப்படுத்துதல், அடையாளம் தெரியாது அழித்தல்.
10. வாள்முனையில் ஷீஆ மதத்தைப் பரப்புதல், முரண்படு வோரைக் கொலை செய்தல்.
11. சுன்னா ஆலிம் உலமாக்களை திட்டமிட்ட அடிப்படையில் கடத்திக் கொலை செய்தல்.
12. பொதுச் சந்தைககள், கடைத் தெருக்கள். பிரதான வீதிகள் என்பவற்றில் கலீஃபாக்களையும் அவர்களை நேசிக்கின்ற அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்களையும் திட்டுவதற்கு வழிவகை செய்தல்.
13. கி.பி. 1501 ஆம் ஆண்டு சர்வதிகாரி இஸ்மாயீல் அஸ்ஸஃபவி ஈரானுக்கு வெளியில் வாழும் ஷீஆக்கள் தமது பாதுகாப்பை உறுதி செய்து கொள்ளும் பொருட்டு தனது ஆட்சியின் கீழ் உள்ள ஈரானில் வந்து குடியேறுமாறு வேண்டிக் கொண்டான்.

    அந்த அழைப்புக்கு பதில் அளிக்கும் வகையில் லெபனான், ஈராக் போன்ற அண்டை நாடுகளில் உள்ள ஷீஆ மதகுருக்கள் ஈரானில் அரச மரியாதையுடன் குடியேறி தமது வழிகெட்ட ஷீஆ மதத்தைப் போதனை செய்தனர்.

    இந்தப் பிரச்சாரத்தின் பிரதிபலனாக கி.பி 1722 ஆம் ஆண்டு பாரஸீகத்தில் உள்ளோர் அனைவரும் ஷீஆக்களாக மாற வேண்டும் என்று முடிவு செய்தனர். அவ்வாண்டு ஸஃபவிக்களின் ஆட்சியும் முடிவடைந்தது.

14. அப்பாஸ் அல்கபீர் என்ற ஆட்சியாளன் இமாம்களான அபூ ஹனீஃபா, அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) போன்றவர்களின் கப்றுகளைத் துவம்சம் செய்த பின்னர், அவற்றை குப்பைத் தொட்டியாக மாற்றினான் என வரலாறு குறிப்பிடுகின்றது.

இப்படிப் பல கேடுகெட்ட, தீய வழிமுறைகள் மூலம் ஷீஆ மதம் ஈரானையும் அதனை அண்டிய பிரதேசங்களிலும் பரப்பப்பட்டது. இதற்காக மறைந்து வாழும் கற்பனை மஹ்தியின் அனுமதி பெறப்பட்டதாகவும் அவன் பிரச்சாரம் செய்தான். இவ்வாறு பார்க்கின்ற

போது சுன்னா வழிவந்த இஸ்லாமிய சிந்தனையின் தேசமாகப் பரிணமித்த ஈரான், கட்டம், கட்டமாக திட்டமிட்ட முறையில் ஷீஆக் கொள்கைக்கு உள்வாங்கப்பட்டிருப்பது தெளிவாகின்றது. தற்போதைய ஈரானில் வாழும் சுன்னா முஸ்லிம்களுக்கு எதிராக நாளாந்தம் இழைக்கப்படும் கொடுமைகளுக்கும் ஸஃபவியருக்கும் இடையில் எவ்வித வேறுபாடுகளும் கிடையாது.

ஈரான் நாளாந்தம் 100 இற்கும் அதிகமான சுன்னா இளைஞர்கள் பயங்கரவாகக் குற்றங்கள் சோடிக்கப்பட்டு தூக்கிலிடப்படுகின்றனர். இது ஈரானின் அனைத்து மாகாணங்களிலும் பரவலாக சர்வ சாதாரணமாக நடைபெறும் நிகழ்வாகும். சுன்னா முஸ்லிம்களை கடுமையாக வதைத்துத் தூக்கிலிடும் முதலாவது நாடாக ஷீஆக்களின் தற்போதைய ஈரான் முதல் இடத்தை வகிப்பது பற்றி ஆச்சரியமான தகவல்கள் வெளியிடப்பட்டுள்ளன. இது பற்றி சர்வ(தே)ச மனித உரிமைகள் ஆணையகம் மௌனியாக இருப்பது ஈரானுக்குக் கிடைத்த பகிரங்க அங்கீகாரமாகும்.

நவீன காலத்தில் சுன்னா இளைஞர்களுக்கு எதிராகவும் அங்கு வாழும் புத்திஜீவிகள், கல்விமான்களுக்கு எதிராகவும் ஈரான் நாளாந்தம் அரங்கேற்றி வரும் கொடுமைகள் பற்றி ஈரானுக்காக வரிந்து கட்டிக் கொண்டு நிற்கும் சமூகவலைத்தளப் போராளிகளிடம் எவ்வாறான பதில்களை எதிர்பார்க்கலாம்.




**சுன்னா முஸ்லிம்கள் தூக்கிலிடப்படும் காட்சி**



# பஹ்லவிக்களின் ஆட்சி (கி.பி. 1925 - 1941)

கி.பி. 1907 இல் மன்னர் ‘முளஃப்பர் தீன் ஷா’ வின் மரணத்தைத் தொடர்ந்து அவரது மகன் முர்ஷா முஹம்மத் அலி என்பவர் ஈரானில் ஆட்சியில் அமர்ந்தார். இவர் தீவிர ரஷ்யா ஆதரவாளராகும் என்பது குறிப்பிடத்தக்க வரலாறாகும்.

தற்போதைய ஈரானின் அரசியல் வரலாற்றில் 1979 ஆம் ஆண்டு ஆட்சிக்கு வந்த கொமைனியின் ஆட்சிக்கு முற்பட்ட காலத்தில் இருவர் முக்கியமானவர்களாகப் பார்க்கப்படுகின்றனர். ஒருவர் ஷாஹ் ரிழா கான் பஹ்லவி, மற்றவர் அவரது மகன் முஹம்மத் ரிழா பஹ்லவி. இவர்களின் பெயரால் அறியப்பட்ட ஆட்சி பஹ்லவிக்கள் ஆட்சி என அழைக்கப்படுகின்றது.

ஷாஹ் ரிழா கான் பஹ்லவி கி.பி. 1878 இல் மாசிந்தரான் மாகாணத்தில் பிறந்து 1944 இல் மரணமானார். ஈரான் தலை நகர் தெஹ்ரானில் சாதாரண ஹோட்டல் வெயிட்டர் தொழிலாளியாகப் பணி புரிந்த ரிழா கான் அல்பஹ்லவி கி.பி 1893 ஆம் ஆண்டு ஈரான் படையில் தனது 15வது வயதில் சாதாரண ஒரு சிப்பாயாக இணைந்தார்.

சிறந்த போர் வியூகம், நுட்பமான திட்டமிடல், போர்த் திறமைகள் என்பவற்றால் சிறந்து விளங்கிய அவர் காலப் போக்கில் இராணுவத்தில் பல பதவி உயர்வுகள் பெற்று, இறுதியில் கி.பி. 1921 இல் போர்களுக்குப் பொறுப்பான அமைச்சராக நியமிக்கப்பட்டார். அப்போது காஜாரி இனத்தவர் ஈரானை ஆட்சி செய்து கொண்டிருந்தனர். இதனை சந்தர்ப்பமாகப் பயன்படுத்திய அவர் ராணுவப் புரட்சி செய்து, கி.பி 1925ல் ஈரானின் பிரதமந்திரியானார்.

உஸ்மானியப் பேரரசுடன் வல்லரசு நாடுகள் தொடுத்த முதலாவது உலகமகா யுத்தம் (1914-1918 ) மற்றும், இரண்டாம் உலக மகாயுத்தம் (1939-1945) ஆகிய இரண்டு பாரிய போர்களும் ஈரானைப் படாதபாடு படுத்தி இருந்தது. 1917 - 1919 வரையான இரு ஆண்டுகள் உள்நாட்டு உற்பத்திக் குறைவு, பண வீக்கம், ஏற்றுமதிப் பொருட்களுக்கான வெளிநாட்டு வரிகள் போன்ற காரணிகளால் ஈரானில் பாரிய மனிதப் பேரவலமும் பசியும் பட்டினியும் பரவிக் காணப்பட்டது.

இது ஈரானின் அனைத்து மாகாணங்களிலும் பரவலாகக் காணப்பட்டது. நாட்டு மக்கள் தொகையில் 25% வீதமானோர் செத்து மடிந்தனர். அவர்கள் 8-10 மில்லியன் எனக் கூறப்படுகின்றது. நாட்டு மக்களின் பிரதான பகல் உணவாக நாய்கள் காணப்பட்டதாக வரலாறுகள் சுட்டிக்காட்டுகின்றன. ஈரான் தலை நகர் தஹ்ரானில் பசிக் கொடுமையினால் பல்லாயிரக்கணக்கான மக்கள் செத்து மாண்டனர். இதற்கு ஈரான் பிரிட்டனோடு கைகோர்த்ததும், பெற்றோலிய வளங்களை பிரிட்டன், ரஷ்யா போன்ற நாடுகள் ஆக்கிரமித்துக் கொண்டதும் மற்றொரு காரணமாகும் எனச் சுட்டிக் காட்டப்படுகின்றது.

இந்தப் போர்ச் சூழலில் ஈரான் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய தேவையும் இருந்தது. பாரஸீகம், மற்றும் ஈரானில் காணப்பட்ட பெரும் தொகை அளவிலான எண்ணெய் வளம், உலகில் இராணுவ ஆதிக்கத்தால் மேலோங்கி இருந்த ஈரான் பக்கம் பிரித்தானியாவின் கவனத்தையும் ரஷ்யாவின் கவனத்தையும் ஈரத்தது. இனி அதனை எப்படியாவது உறிஞ்சிக் கொள்ள வேண்டும் என பிரிட்டனும் ரஷ்யாவும் ஈரானின் எண்ணை வழங்களைக் கொள்ளையடிப்பதில் குறியாக இருந்ததனால் ஈரான் எப்போதும் போர்கள் நிறைந்த ஆடுகளமாய் காட்சியளித்தது. பிரிட்டன் வடமேற்கு ஈரானின் ஹோஸ்தான் மாகாணத்தைப் பெற்றோல் வயல்களுக்கும் ரஷ்யா பாக்கோ மற்றும் கஷ்பியன் கடலில் உள்ள எண்ணை வருவாய்களுக்கும் தமது நலனுக்காக பாதுகாப்புத் தருவதாகக் கூறி பஹ்லவி ஆட்சிக்கு முன்னால் ஆட்சி செய்த காஜாரிய அரசோடு ஒப்பந்தங்கள் செய்து கொண்டான்.

கி.பி 1919 முதல் ஈரானுக்கு பிரிட்டன் இராணுவ மற்றும் துறைமுக பாதுகாப்பு, நெடுஞ்சாலைகள் அமைத்தல் போன்ற ஒப்பந்தம் ஒன்றும் நடைமுறையில் இருந்ததைக் காரணம் காட்டி, ஈரானில் ஊடுருவும் நோக்குடன் ஈரான் தனது எண்ணெய் வளத்தில் ஒரு பங்கை பிரிட்டனுக்கு வழங்குவதன் நிபந்தனையின் பேரில், ஈரானுக்கு தம்மால் இராணுவப்பாதுகாப்பு அளிக்கப்படுகின்றது என்ற காரணத்தை முன்வைத்து, பிரிட்டன் ஈரானில் நுழைந்தது.

இந்நிலையில் ஈரானின் தேசிய வளமான பெற்றோலிய வளத்தை அந்நிய சக்திகள் சுரண்டி ஏப்பமிடுவதாகவும் பலஸ்தீன பூமியைப் போன்று ஈரானும் ஆக்கிரமிக்கப்பட்டு அதன் வளங்களை பிரிட்டன் உண்டு கழிக்க நாட்டு மக்கள் பசி, பட்டினியால் செத்து மடிகின்றனர் என்பதை காரணமாக முன்வைத்து பிரிட்டனோடு காஜாரி மன்னர்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தை செல்லுபடியற்றதாக ஆக்கக் கோரி மக்கள் புரட்சி ஒன்று வெடித்தது.

இறுதியில் காஜாரிய மன்னர் ஷா கி.பி. 1920 இல் பதவி விலக நிர்ப்பந்திக்கப்பட்டார். அதைத் தொடர்ந்து பிரித்தானியாவின் துணையுடன் புதிய அமைச்சுக்கள் அறிமுகம் செய்யப்பட்டு நாட்டின் வறுமை ஒழிப்பில் அவைகளும் தோல்வி கண்டன. அமைச்சர்களும் தெரிவாகினர்.

கி.பி. 1921 ஆம் ஆண்டு ஆறு மாதங்களில் ஒன்பது அமைச்சர்கள் மாற்றப்பட்டு புதிய அமைச்சர்கள் நியமனம் பெற்றும் நாட்டின் முன்னேற்றத்தில் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை யென்றும் மக்கள் போராட்டத்தை சமாளிக்கும் ஒரு ஆளுமை தேவை என்றும் அப்போதைய பிரிட்டன் தூதுவர் தனது நாட்டுக்கு எச்சரிக்கைக் கடிதம் ஒன்றை அனுப்பி வைத்தார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இந்நிலையில், பிரிட்டனின் ராணுவ சவால்களை முறியடிக்கும் நோக்கில் மோஸ்கோவில் நடைமுறையில் காணப்படும் இராணுவ ஆட்சி அனுசரணையில் ஈரானிலும் திடீரென இராணுவப் புரட்சி ஒன்று வெடித்தது.

இந்த சந்தர்ப்பத்தைக் கவனித்து தனது நண்பனாகிய ஈரானின் உயர் இராணுவ அதிகாரியாக இருந்த ஷாஹ் ரிழா பஹ்லவியின் தயவில் ஈரானில் கஸ்பியன் மாகாணத்தின் ஊடாக தனது நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளும் நோக்குடன் பிரிட்டன்

தெஹ்ரானுக்குள் 2500 இராணுவ சிப்பாய்களுடன் ஈரானிய ராணுவ எதிர் நடவடிக்கைகள் எதுவும் இன்றி 1921 இல் பெப்ரவரி மாதம் ஊடுருவியது. மக்கள் ஆதரவு பெற்ற சிறந்ததொரு ஆளுமையை நியமிப்பதால் மாத்திரமே மக்கள் புரட்சியை முடிவுக்குக் கொண்டு வர முடியும் என இறுதியில் பிரிட்டன் உணர்ந்தது.

அப்போது ஆட்சியில் இருந்த அஹ்மத் மிர்ஸா காஜாரியின் சர்வாதிகார ஆட்சியை அதிரடியாகப் பிரகடனம் செய்ததன் மூலம் நாட்டில் அசாதாரண சூழ்நிலை ஏற்பட்டது. பின்னர் 1920 ஜூன் மாதம் அஹ்மத் மிர்ஸா தானாகவே பதவி விலக நிர்ப்பந்திக்கப்பட்டார்.

கி.பி. 1920 இல் அவரின் பதவி விலகலின் பின்னர் ஷாஹ் ரிழா கான் பஹ்லவி இராணுவப் புரட்சியின் மூலம் தன்னை ஈரானின் மன்னராக ஒருதலைப்பட்சமாக பிரகடனம் செய்தார்.

துருக்கி ஜனாதிபதி கமால் அதாதுர்க்கின் ஆட்சியைப் போன்று ஈரானின் பஹ்லவிக்கள் ஆட்சியையும் மதச்சார்பற்ற ஒரு நாடாக கி.பி 1925 இல் அவர் பிரகடனம் செய்தார். இவர் தனது இருபது ஆண்டு கால ஆட்சியில் குர்த், பலூஷ் மற்றும் பல்லினக் குழுக்களை அடக்கி ஒடுக்கி வாழ்ந்தார். ஆரம்ப கால மன்னர்களைப் போன்று இவராலும் மக்களை வெல்ல முடியவில்லை என்பதே உண்மை.

இருப்பினும், மார்க்க அறிஞர்கள் மதச்சார்பற்ற நாடு என்ற யோசனையைக் கைவிட்டு விட்டு, நாட்டின் பொது நிறைவேற்று ஜனாதிபதியாக இருக்குமாறு பணித்ததன் பேரில் அந்த யோசனையை அங்கீகரித்து அவர் நாட்டின் மன்னராக இருந்தார். அன்று முதல் அவர் மன்னர் ஷாஹ் பஹ்லவி என்றே அழைக்கப்பட்டார்.

இவரது ஆட்சிக் காலத்தில் நாட்டில் சகல துறைகளிளும் முழுமையான இராணுவ அதிகாரிகளைக் கொண்டு விளங்கியதால் மக்கள் சகிக்க முடியாத சர்வாதிகாரம் நிறைந்ததாகவும், சிறுபான்மையினரையும், அவர்களின் சமய சிந்தனையாளர் களையும் அடக்கி, ஒடுக்கி, அவர்களின் உரிமைகளை நசுக்கக் கூடியதாகவும் இருந்ததோடு நாட்டில் காணப்பட்ட அரசியல் சமூக சீர்திருத்த கட்சிகள், மற்றும் தமது எதிரணியினர் என அனைவரையும் பழிவாங்குவதாகவும் இருந்தது.

இவர் தனது ஆட்சியில் இராணுவத்தையே முழுமையாக நம்பி இருந்தார். ஈரானில் காணப்பட்ட அரசியல், சமய நிலைகளைக் கருத்திற் கொண்ட ஷீஆ மதப் பெரியார்கள் இவரது ஆட்சிக்கு நவீன துருக்கி எனப் பெயர் சூட்டினர். சுருக்கமாகச் சொல்லப் போனால் மன்னர் ஷாவை சின்ன அதாதுர்க் என்றோ குட்டி ஹிட்லர் என்றோ குறிப்பிட முடியும்.

**இந்த ரிழா கான் என்பவனே சுன்னா முஸ்லிம்களின் பிரதேசமான அரபுஸ்தான் எனப்படும் அஹ்வாஸ் மாகாணத்தை கி.பி. 1925 இல் ஆக்கிரமித்து அதன் வளங்களைக் கொள்ளையடித்து அங்கு வாழும் முஸ்லிம்களை அன்று முதல் இன்று வரை ஈரானிய மன்னர்களால் அவர்கள் அடிமைகளாக ஆக்கப்பட்டுள்ளனர்.**

ஹிட்லரின் நாஸிப் படைகள் முதலாவது உலக மகா யுத்தத்தின் போது தாம் ஈட்டிய யுத்த வெற்றி காரணமாக ஷாஹ் ரிழாக அவர்கள் ஹிட்லருக்கு பெற்றோல் நிரப்பும் வசதி செய்து கொடுத்ததைப் பழிவாங்கும் நோக்குடன் ஈரானை 1941 ஆம் ஆண்டு ஆக்கிரமித்த நேசநாடுகள் மன்னர் ரிழா ஷாஹ் தனது ஆட்சியில் இருந்து பதவி விலக வேண்டும் என வற்புறுத்தியது. உடனே பதவி விலகிய மன்னர் ஷாஹ், தென்னாபிரிக்காவில் தனது அரசியல் சிறைவாசக காலத்தில் 1944 ஜூலை மரணித்தார்.

இவரது மரணத்தின் பின்னால் அவரது மகன் ஷாஹ் முஹம்மத் ரிழா அல்பஹ்லவி சிறுவயதில் ஈரானின் ஆட்சிக்கு வந்தார். அவரே ஈரானின் மன்னர் ஷாஹ் என்று பொதுவாக அறிமுகம் செய்யப்படுகின்றார். இவர் பிரிட்டன் தலைமையிலான படைகள் ஈரானில் தாராளமாகத் தங்க தாராள அனுமதி வழங்கினார். அது பற்றிய விபரம் கீழே தரப்படுகின்றது.

மன்னர் ரிழா பஹ்லவியின் தன்னிச்சையான சர்வதிகார போக்கு தமது நலன்களுக்கு ஆபத்தானது என்பதாகக் கருதிய சோவியத் ரஷ்யா, பிரித்தானியா, அமெரிக்கா ஆகிய வல்லரசு நாடுகள் இவரை 1941 இல் வலுக்கட்டாயமாக பதவி விலக வைத்தன. அவரது வாரிசாக அவரது மகன் நியமிக்கப்பட்டார். இந்த ரிழா கான் தென்னாபிரிக்கா சென்று கி.பி. 1944 இல் மரணமானார்.

55

# மன்னர் ஷாஹ் முஹம்மத் ரிழா பஹ்லவி (1919 - 1980)

## ஆட்சிக் காலம் (1941-1979)

இவர் ஈரான் தலை நகர் தெஹ்ரானில் 1919 இல் பிறந்தார்.இவர் ஈரானை (1925- 1941) வரை ஆட்சி செய்த ஷாஹ் ரிழா பஹ்லவியின் மூத்த மகனும், நேசநாடுகளின் வற்புறுத்தலின் பேரில் கி.பி. 1941 ஆம் ஆண்டு ஈரானின் தலைமைப் பதவியை ராஜினாமா செய்த மன்னர் ஷாஹ் ரிழா பஹ்லவியின் பரம்பரையில் இறுதியான வருமாவார்.

ஈரானை ஆட்சி செய்த இறுதி மன்னர் என்ற பெயர் இவருக்கே உண்டு. இவர், தனது தந்தைக்குப் பின் ஆட்சியின் வாரிசாக வருவது பற்றி செப்டம்பர் 1941 ஆம் ஆண்டு வல்லரசு நாடுகளால் அறிவிக்கப் பட்டார். அது அப்போதைய ஈரான் பாராளுமன்றத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இவர் தனது சிறுபருவக்கல்வியை சுவிட்சர்லாந்தில் லார்ஸீ நகரில் ஒரு தேசிய கல்லூரியில் முடித்தார். பின்னர் ஈரானின் போர்ப் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்து தனது கல்வியை 1935 இல் முடித்தார்.

இவரது ஆட்சி 1941- 1979 வரை நிலைத்திருந்தது. 1979 ஆம் ஆண்டு ஈரானிய மக்கள் புரட்சியோடு மன்னர் ஷா ஈரானை விட்டும் தப்பி ஓடினார். இவரது பெயர் ஷாஹான்ஷா- மன்னாதி மன்னன் என்றும் அறியப்பட்டது.

இரண்டாம் உலக மகா யுத்தத்தின் (1939- 1945) போது இவரது தந்தை ரிழா பஹ்லவி ஜேர்மனிய ஓல்ஃப் ஹிட்லருக்கு பெற்றோல் வழங்கி உதவினார் என்ற குற்றச்சாட்டு முன்வைக்கப் பட்டதால் இவரது தந்தை ரழா பஹ்லவி பிரிட்டன் மற்றும் ரஷ்யாவின் நேச நாடுகளின் அழுத்தம் காரணமாக தனது பதவியைத் துறந்து நாட்டை விட்டும் வெளியேற நிர்ப்பந்திக்கப்பட்டு இறுதியில் தென்னாபிரிக்காவில் அரசியல் சிறைவாசம் அனுபவித்து அங்கு மரணிக்க நேர்ந்தது.

அதன் பின்னர் பிரிட்டனும், ரஷ்யாவும் ஈரானின் தமக்குரிய எண்ணை வளப் பிரதேசங்களை ஆக்கிரிமித்துக் கொண்டன. பின்னர் அவரது மகன் முஹம்மத் ரிழா பஹ்லவி பதவி கவிழ்க்கப்பட்ட தனது தந்தைக்குப் பதிலாக ஈரானின் புதிய மன்னராக முடி சூடப்பட்டார் என்பது வரலாறாகும். இது 1941 ஆம் ஆண்டு நடைபெற்றது. இந்நிலையில் ஈரான் அரசியல் ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் பாரிய குழப்பத்தில் மூழ்கிக் காணப்பட்டது.

ஷாஹ் முஹம்மத் ரிழாவை இயக்குவதில் அமெரிக்கா பின்னணியில் செயற்பட்டது. அவர் பதவிக்கு வந்ததும் ஈரானை ஆக்கிரமித்த அன்னிய படைகளை தமது நாட்டில் நிலை கொள்ள அனுமதித்ததோடு சோவியத் ரஷ்யாவுக்கான பெற்றோல், மற்றும் எரிபொருள் உதவிகள் ஈரான் ஊடாக எடுத்துச் செல்லவும் அனுமதி வழங்கினார்.

காலப் போக்கில் இவரது போக்கை மக்கள் வெறுக்கத் தொடங்கினர். அதனால் 1941 இல் இவருக்கு எதிராக பத்திகையாளர் ஒருவர் மேற்கொண்ட கொலை முயற்சியும் தோல்வியில் முடிந்தது.

கி.பி. 1950-1953 வரையான காலப்பகுகளில் ஈரான் பிரதமராக இருந்த முஹம்மத் முஸத்திக் என்பவர் இவருக்கு எதிராகக் கொண்டு வந்த உள்நாட்டு சீர்திருத்த நிகழ்ச்சிகளுக்கு இவர் எதிர்த்ததன் காரணமாக மக்கள் ஆதரவுடன் அவரை நாட்டை விட்டும் முஸத்திக் விரட்டி அடித்தார். இருப்பினும் அமெரிக்காவின் C.I.A வின் மறைமுக உதவியினால் அவர் மீண்டும் அந்நாட்டில் கால் பதித்தார். அதன் பின் தனது எதிரிகள் ஒருவர் பின் ஒருவராக பழிவாங்கினார்.

முஸத்திக் மூலம் தமது கட்டுப்பாட்டை இழக்க நேரிடுவதை உணர்ந்த பிரிட்டன் 1913 முதல் ஆக்கிரமித்து வந்த ஈரானிய எண்ணெய் வளங்களை தனது கம்பனிகள் இழக்க நேரிடுவதை உணர்ந்து கி.பி. 1953 இல் ஈரான் பாராளுமன்றத்தில் முஸத்திக் இற்கு எதிராக வாக்கெடுப்பு நடாத்தப்பட்டு தனக்கு ஆரவாக பெரும்பான்மை வாக்குப் பலத்துடன் வெற்றி பெற்றது.

இதனால் முஸத்திக் மூன்று ஆண்டுகள் சிறையில் அடைக்கப் பட்டு பின்னர் விடுதலை செய்யப்பட்டு கி.பி. 1966 இல் மரணம் அடையும் வரை பலவந்தமான வீட்டுக் காவலில் வைக்கப்பட்டார். இதற்கு முஸத்திக் 1952 இல் பிரிட்டனோடு முழுமையாக ஈரானின் இராஜதந்திர உறவுகளைத் துண்டித்துக் கொண்டது, நாட்டின் வளங்களை அரச சொத்தாகப் பிரகடனப்படுத்தியது போன்ற பிரதான காரணிகளாகும்.

இறுதியில் மன்னர் ஷா ஷரீஆவையும், சமய யாப்பையும் எதிர்ப்பவராக சந்தேகிக்கப்பட்டு அவருக்கு எதிராக எதிர்ப் பிரச்சாரம் செய்யப்பட்டது. ஷாஹ் ஈரானை அமெரிக்காவுக்கு விற்றுவிட்டார் என குமைனி இமாம் ஹுஸைன் நினைவு தின உரையில் குற்றம் சாட்டி ஷாஹ்வுக்கு எதிரான தனது பிரசாரத்தைத் தொடங்கினார். குமைனியின் கருத்து மக்களால் வரவேற்பைப் பெற்றதான் காணரமாக மக்கள் கடைகளை மூடி வீதிகளில் இறங்கி ஆர்ப்பாட்டம் செய்தனர். இருந்தும் ஷாஹ் தனது இரும்புக் கரம் கொண்டு மக்களை அடக்கினார். இருந்தும் தனது விருப்பத்திற்கு மாற்றமாக நடக்கும் விவசாயிகள் மற்றும் மதப் போதகர்களின் காணிகள் பறிமுதல் செய்வதாக எச்சரித்ததோடு பெண்களுக்கு தேர்தலில் களமிறங்கும் (ஓட்டுக் கேட்கும்) உரிமைகளை வழங்குவதகாகவும் எச்சரித்து கடுமையாக எதிர்க்கப்பட்டது. கி.பி. 1963 காலப் பகுதியில் குமைனி போன்றவர்கள் இதனை எதிர்ப்பதில் முன்னணியில் இருந்தனர்.

1960 காலப் பகுதியில் ஈரானின் நிலங்களை விவசாயி களுக்குப் பகிர்ந்தளித்த மன்னர் ஷாஹ் சமூக, பொருளாதா வளர்ச்சி மேம்பாட்டுக்காக நாட்டின் பெற்றோல் வருவாயில் ஒரு பகுதியின் மூலம் பாரிய அபிவிருத்திப் பணிகளை முன்னெடுத்தார்.

நாட்டில் காணப்பட்ட எழுத்தறிவு அற்ற நிலையை இல்லாதொழித்து, கல்வி அறிவுள்ள ஒரு சமூகத்தை உருவாக்கினார். பாலங்கள், பாதைகள், விமான நிலையங்கள், ரெயில் பாதைகள் அமைத்து நாட்டை பாரிய அபிவிருத்தியில் இட்டுச் சென்றார்.

அமெரிக்காவின் துணையுடன் நாட்டின் பாதுகாப்பு, மற்றும் ராணுவத்தைப் பலப்படுத்திய மன்னர் ஷாஹ்வின் காலத்தில் ஈரான் நான்காவது இராணுவ பலம் பொருந்திய நாடு எனக் கணிக்கப் பட்டிருந்தது.

மன்னர் ஷாஹ் இஸ்ரேலுடன் தனது இராஜ தந்திர உறவுகளைப் பேணி வந்தார். நாட்டின் பாராளுமன்றம் இருந்த நிலையிலும் மன்னர் ஷாஹ் தனது இரும்புப் பிடிக்குள் அந்த சபையை வைத்திருந்தார். அவரை மீறி அந்த சபை எந்தக் கருத்தையும் வெளியிட முடியாது.

தமது கருத்துக்களைச் சுதந்திரமாகப் பகிர்ந்து கொள்ள முடியாது போயுள்ள இந்நிலையால் மக்கள் மத்தியில் குறிப்பாக துறைசார் அறிஞர்கள், கல்விமான்கள், மார்க்க அறிஞர்கள், சிவில் சமூகங்கள், மாணவர் அமைப்புக்கள் மத்தியில் பாரிய எதிர்ப்பலை யைத் தோற்றுவித்தது.

இவரது எதிரணியினரால் இவர் ராணுவத்தைக் கொண்டு மக்களின் குரல்வளையை நசுக்குவதாக குற்றம் சுமத்தப்பட்டது. வெளிப்படையில் பாரஸீகப் பண்பாடுகளை உயிர்ப்பிப்பவராகவும் அதற்காக பாரிய அளவு பணங்களை வீண் விரயம் செய்பவராகவும் மன்னர் ஷாஹ் விளங்கினார்.

மன்னர் ஷாஹ்வின் சர்வாதிகாரப் போக்கால் மக்கள் சீற்றம் அடைந்தனர். நாட்டின் பல பாகங்களிலும் எதிர்ப்பலைகள் தோன்றின. 1970 இல் பிரான்ஸ் பரீஸ் நகரில் அரசியல் சிறைவாசம் அனுபவித்துக் கொண்டிருந்த குமைனிக்கு மக்கள் ஆதரவு அதிகரித்தது. இறுதியில் அது மக்கள் புரட்சியாக வெடித்தது. ஷாஹ்வின் ஆட்சிக்கு சாவு மணியடித்தது.

# மன்னர் ஷாஹ்வின் பதவி கவிழ்ப்பு

UU

1935- 1951 வரையான காலப் பகுதியில் ஈரான் பிரதமராகப் பதவி வகித்த கலாநிதி முஹம்மத் முஸத்திக் (1882- 1966) என்பவர் மன்னர் ஷாஹ் நேசநாடுகளுக்கு வழங்கி வந்த பெற்றோல் உதவியை நிறுத்தி, அதனை நாட்டின் பொதுச்சொத்தாக மாற்றியதோடு மக்கள் உதவியோடு ஷாஹ்வை பதவியில் இருந்தும் விலக்கினார்.

இருப்பினும், பிரித்தானிய அமெரிக்காவின் துணையுடன் ஷாஹ் மீண்டும் ஆட்சியில் அமர்ந்தார். பிரதமர் முஸத்திக்கை கைது செய்து மூன்று ஆண்டுகள் சிறையில் அடைத்து, மீண்டும் அவரை தொடர் கட்டாய வீட்டுக்காவலில் வைத்தார். அவர் கி.பி. 1966 இல் முஸத்திக் மரணமானார்.

இவரது புரட்சி மத்திய கிழக்கில் முதலாவது மக்கள் புரட்சி என வர்ணிக்கப்டுகின்றது. இவர் சாதாரண ஒரு பிரதமர் அல்ல, மாற்றமாக ஈரானைப் பல நூற்றாண்டுகள் ஆட்சி செய்த, ஆழவேரூன்றிய காஜாரி கோத்திரத்தில் வந்தவரும், ஈரானின் உயர்தர அரசியல் ஆய்வாளருமாவார்.

இவ்வாறு மன்னர் ஷாஹ்வுக்கும் பிரதமர் முஸத்திக் அவர்களுக்கு இடையில் உருவான ஒரு மாத கால தொடர் அரசியல் குழப்பத்தின் பின்னால் முஹம்மத் ரிழா ஷாஹ் ஈரானை விட்டும் தனது மனைவி மக்களோடு அவரது சொந்த விமானத்தில் தனது மெய்ப்பாது காலர்களின் உதவியுடன், ஈராக்கின் நஜஃப் நகரை வந்தடைந்து, அங்கு தனது ஷீஆ மதக்கடமைகளை நிறைவேற்றிவிட்டு, அங்கிருந்து இத்தாலியை வந்தடைந்தார். இது கி.பி. 1953 இல் நடந்தது.

ஈரானின் பெற்றோலிய லாபத்தின் நாடுவளம் பெறவேண்டும், மக்கள் நலன் காக்கப்பட வேண்டும் என்ற ஈரானிய ஆட்சியாளர்களின் நோக்கம் இன்றுவரை ஈரான் மக்களுக்கு நிறைவேறாமல் இருக்க தலைப்பாகை அணிந்த மதகுருக்களால் நிறைவேறாது மீண்டும் அங்கு 2018 இல் மக்கள் புரட்சி ஏற்பட்டிருப்பதை அவதானிக்க முடிகின்றது.

மன்னர் ஷாஹ் ஷீஆ மதத்தைப் புறக்கணித்தார் என்ற குற்றச்சாட்டுக்கள் இன்றி நாட்டில் வேலை இல்லாத்திண்டாட்டம், பசி, பட்டினிக்கு முடிவு கட்டவில்லை. சர்வாதிகாரியாகச் செயற்படுகின்றார் என்பதைக் கவனத்தில் கொண்ட ஈரான் மக்கள் சுன்னாக்கள், ஷீஆக்கள் என்ற வித்தியாசம் இன்றி, மன்னர் ஷாஹ்வுக்கு எதிரான நாடுதழுவிய ரீதியில் பாரிய ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டு இறுதியில் ஷாஹ்வின் ஆட்சி மக்கள் புரட்சியால் 1979 இல் கவிழ்க்கப்பட்டது. இதன் பின்னர் ஈராக்கிலும், பிரான்ஸிலும் தஞ்சம் புகுந்த குமைனிக்கு மௌசு வந்தது.

அவர் ஈரானிய மக்களின் பாரிய எதிர்ப்பலைகளுக்கும், கோஷங்களுக்கும் மத்தியில் தனது சொந்த விமானத்தில் மீண்டும் புறப்பட்டுச் சென்றார். ஈரானில் தமக்கு எதிராக வரவிருக்கும் எதிர்ப்புக்களைக் கவனித்து ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் அவரை ஏற்க மறுத்தன.

இவரது உடலில் பரவிய புற்று நோய் காரணமாக இவரது உடல் நிலை மோசமாகப் பாதிக்கப்பட்டதைக் கவனித்து அமெரிக்காவின் டெக்ஸாஸ் இராணுவத் தளத்தில் தரை இறங்க அமெரிக்கா அனுமதித்தது.

இருப்பினும் 1979 ஆம் ஆண்டு ஈரானின் அமெரிக்க தூதுவர் ஆலயத்திற்கு முன்னால் ஈரானியர்கள் இதனை எதிர்த்து பாரிய

ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டு அமெரிக்க தூதுவர் ஆலயத்தை முற்றுகையிட்டதோடு, அதன் பணியாளர்கள், ராஜதந்திரிகள் என 52 பேரைப் பணயக் கைதிகளாகவும் பிடித்து ஷாஹ்வை மீண்டும் ஈரானுக்கு நாடு கடத்தக் கோரினர்.

அந்தக் கோரிக்கை அமெரிக்காவால் நிறைவேற்ற முடியாது போனபோது கலகக்காரர்களிடம் தனது பிரகைஜகளை விடுதலை செய்யுமாறு அமெரிக்கா கோரியது. அவர்கள் அதற்கு செவிசாய்க்காத படியால் ஈரான் அமெரிக்கா உறவில் விரிசல் ஏற்பட்டது.

அதனால் தனது பிரஜைகளின் உயிருக்கு அஞ்சி ஷாஹ்வை அங்கிருந்து உடடினடியாக வெளியேறுமாறு அமெரிக்கா பணித்தது. அவர் உடனடியாக அங்கிருந்து மெக்சிகோ சென்றார், பின்னர் அங்கிருந்து எகிப்து ஜனாதிபதி அன்வர் ஸாதாத்தின் விசேட விமானம் மூலம் எகிப்தை வந்தடைந்தார்.

இறுதியில் எகிப்து ஜனாதிபதி அன்வர் ஸதாத் அவரை வரவேற்றார். 1979 இல் இந்நிகழ்வு நடந்தது. கடுமையாக சுகவீனமுற்றிருந்த ஷாஹ் எகிப்தின் இராணுவ வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டு அவர் தனது குடல் புற்று நோய் சிகிச்சைப் பலன் இன்றி 1980 ஆம் ஆண்டு எகிப்தில் மாண்டார். இத்தோடு ஷாஹ்வின் அத்தியாயம் முடிவுக்கு வந்தது.

1981 ஆம் ஆண்டு அல்ஜீரியாவின் மத்தியஸ்தத்தோடு அமெரிக்காவுக்கும் ஈரானுக்கும் இடையில் எட்டப்பட்ட உடன் படிக்கையின் பிரகாரம் 444 நாட்களின் பின்னர் அமெரிக்க கைதிகள் அனைவரும் விடுவிக்கப்பட்டனர்.

இந்த ஆட்சிக் கவிழ்ப்பில் ஈரானிய அரபிஸ்தான் மற்றும் பல சுன்னா முஸ்லிம்களின் பங்களிப்பும் மிக முக்கிய பங்கு வகித்ததாக வரலாற்று ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.



ՍՍ

# மன்னர் ஷாஹ் காலத்தில் சுதந்திரமாகச் செயற்பட்ட சுன்னாக்கள்

ஈரானில் ஷாஹ்வின் காலத்தில் சுன்னா முஸ்லிம்கள் தமது மார்க்க கடமைகளை சுதந்திரமாக நிறைவேற்றும் அதிகாரம் பெற்றிருந்ததை மறுக்க முடியாது.

- ✍ மஸ்ஜிதுகளை நிறுவுதல்,
- ✍ அரபு மத்ரஸாக்களைக் நிர்மாணித்தல்,
- ✍ சுதந்திரமாக மார்க்க உரைகள் நிகழ்த்துதல்,
- ✍ மார்க்க ஒன்று கூடல்கள் நடத்துததல்,
- ✍ ஜும்ஆ, ஜமாத் தொழுகைகள் நடத்துதல்,
- ✍ தமது மார்க்கம் தொடர்பான நூல்கள், வழிகாட்டல்களை அச்சிட்டு வெளியிடுதல் போன்ற தமது மார்க்க விடயங்களை சுதந்திரமாக முன்னெடுப்பதை ஷாஹ்வின் அரசு தடுக்க வில்லை. அவை அனைத்தும் அவர்களின் மத்ஹபுக்குட்பட்டு அனுமதிக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

மன்னர் ஷாஹ் துருக்கியின் சாபக்கேடு முஸ்தஃபா கமால் அதாதுர்கால் ஈர்க்கப்பட்ட ஒரு ஷீஆ மதவாதி, அவர் தனது ஆட்சியைப் பாதுகாப்பதில் கவனமாக இருந்தார். அவருக்கு தொல்லை செய்யாது வாழவேண்டும் என்பதை விரும்பி இருந்தார் என்றே உணர முடிகின்றது.

எப்படியோ தற்போதைய ஷீஆக் குடியரசை விட அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்கள் அவரது ஆட்சியில் பன்மடங்கு மத சுதந்திரங்கள் வழங்கப்பட்டிருந்தனர் என்பதை மறுக்க முடியாது.

மேலதிகத் தகவல்களுக்காகப் பின்வரும் இணைய தளங்களைப் பார்வையிடவும்.

## உஸாத்துணைகள்:


المكتبة الشاملة – قسم فرق وعقائد
الموسوعة السياسية العسكرية
www.sunnah.org\main\
(www.marefa.org\
www.islamveb.net
www.aljezeera.net.
www.fnoor.com\main\rticle
htts:\\ ar.wikipedia.org\wiki




௫௫

# ஈரான் பல்துறை முன்னோடிகளை பெற்றெடுத்த உன்னத தேசம்

பாரஸீக ஈரானில் இஸ்லாமிய அறிஞர்களான இமாம்கள் பல நூறு பேர் தோன்றி மறைந்துள்ளனர் என்பதை நினைக்கின்ற போது 'இந்த தேசத்திற்கா இந்தக் கதி!' என ஒரு புறம் ஆச்சரியமாக இருந்தாலும் மறுபுறத்தில் இஸ்லாமிய எதிரிகளின் தொடர் சதியை இது உணர்த்துகின்றது.

பிஸ்த், ஹராத், நஸஃ, பல்ஹ், புகாரா, ஸமர்கந்து, மரூ, ஜுர்ஜான், நைஸாபூர், ஸர்ஹஸ், அர்ரைய் (துஹ்ரான்), தூஸ் போன்ற கிழக்குப் பகுதி நகரங்கள் அக்காலத்தில் ஹதீஸ் துறையில் பாரிய முன்னேற்றம் கண்ட நகரங்களாக விளங்கின. ஹதீஸ் துறையில் பிரசித்தி பெற்ற இமாம்களான புகாரி, முஸ்லிம், இப்னு ஹிப்பான், திர்மிதி, தாரகுத்னி, நஸயி போன்ற பல நூறு அறிஞர்கள் இந்த பிரதேச மண்ணின் மைந்தர்கள் என்பது இதனை உறுதி செய்யும் மற்றொரு சான்றாகும்.

இமாம்களான முஸ்லிம், அல்ஹாகிம் அந்நைஸாபூரி, தபரி, அல்பஹ்ருர் ராஸி, ஸர்ஹஸி, பைறூனி, ஷஹ்ருஸ்தானி, ஃபாராபி, திர்மிதி, அபூதாவூத், ஹலீல் பின் அஹ்மத், ஸீபவைஹி, இமாம் அல்கஸ்ஸாலி போன்ற ஹதீஸ், தஃப்ஸீர், ஃபிக்ஹ், தர்க்கவியல் போன்ற அனைத்து துறை சார் அறிஞர்களைப் பெற்றெடுத்த உன்னத தேசமாகும். (பார்க்க: مجموع مؤلفات تاريخ الرافضة )

அப்படியான உன்னத தேசம் எப்படி, எப்போது இந்த நிலைக்கு மாறியது? அதன் பின்னணி என்ன? என்பது பற்றி சுன்னா முஸ்லிம்களாகிய நாம் அறிந்து கொள்வது காலத்தின் தேவையாகும்.

# ஈரானில் ஷீஆ உருவாக்கப் பின்னணி

UU

ஈரான் இரண்டாம் கலீஃபா உமர் பின் கத்தாப் (ؓ) அவர்களின் ஆட்சியில் ஹிஜ்ரி 13 ஆம் ஆண்டு இந்தப் பிரதேசத்தின் முக்கிய நகரங்கள் வெற்றி கொள்ளப்பட்ட இஸ்லாமிய வரலாற்றில் மாபெரும் வெற்றி என்று பெயர் சூட்டப்பட்ட நஹாவாந்துப் போர் ஹிஜ்ரி 21 இல் முடிவுற்றதோடு ஈரானை ஆட்சி செய்து வந்த ஸாஸானியர் என்ற ஆட்சியாளர்கள் முழுமையாகத் தோல்வியைத் தழுவினர்.

இவர்களின் காலத்தில்தான் எகிப்து பாலஸ்தீனம் முதலான பிரதேசங்கள் வெற்றி கொள்ளப்பட்டன. பாரசீகம், கிழக்கு ரோம், (பைஸாந்தியா), ஆகியன முஸ்லிம்களிம் வீழ்ந்தன. பாரசீகப் பேரரசன் குஸ்ரு (கிஸ்ரா), கிழக்கு ரோமானியப் பேரரசன் சீசர் (கைஸர்) ஆகியோர் அதிகாரத்தை இழந்தனர்.

கலீஃபா உஸ்மான் பின் அஃப்பான் அவர்களின் காலத்தில் இஸ்லாமியப் பேரரசு கிழக்கு மற்றும் மேற்கு எல்லை வரை விரிவடைந்தது. அவர்களின் காலத்தில்தான் ஈரானின் பிரதான நரகங்களான குராஸான், அஹ்வாஸ் போன்ற நகரங்கள் வெற்றி கொள்ளப்பட்டன.

அப்படிப் பார்க்கின்ற போது கலீஃபாக்களால் வெற்றி கொள்ளப்பட்ட பாரஸீகம் (ஈரான்), ஹிஜ்ரி 21 முதல், ஹிஜ்ரி 907 வரை கிட்டத்தட்ட 886 வருடங்கள் நேர்வழி நடந்த கலீஃபாக்கள், அதன் ஆட்சிக்கு வந்த உமைய்யா, அப்பாஸியர்களின் கீழ் சுன்னா முஸ்லிம்களின் கீழ் ஆட்சி செய்யப்பட்டு வந்திருப்பதை உறுதி செய்ய முடிகின்றது.



# ஈரானின் ஷீஆ மதப் பிரவேசத்தின் சூத்திரதாரிகள்.

UU

அப்பாஸியர் ஆட்சியின் வீழ்ச்சியின் பின்னர், அஸர்பைஜான் மாகாணத்தில் வாழ்ந்து வந்த துருக்கிய கோத்திரமான கஸ்பலாஷிய்யா கோத்திரம் காலப்போக்கில் ஷீஆப் பிரிவான இமாமிய்யா மதத்தைத் தழுவியது. அவர்கள் ஸஃபவிய்யா தரீக்காவின் முதன்மை ஸ்தாபகராக விளங்கிய صـــفي الدين الأردبيلي ஸஃபிய்யுத்தின் அல் அர்தபீலி என்பவர் நிறுவிய தரீக்காவைப் பின்பற்றி வந்தனர். அஸர்பைஜான் மக்களிடம் அமோக வரவேற்பைப் பெற்றிருந்த இந்த தரீக்கா அமைப்பானது அல் இஃவான் என்ற பெயரில் அம்மக்களிடம் அறியப்பட்டிருந்தது.

ஸஃபிய்யுத்தினின் மரணத்தின் பின்னால் அவரது மகன் ஸத்ருத்தீன் என்பவர் அதனை முன்னெடுத்துச் சென்றார். அவருக்குப் பின்னால் அவரது மகன் குவாஜா அலி என்பவரும் அவரது மரணத்தின் பின்னால் (شاه الشـــــاه) மன்னர்களுக்கெல்லாம் மன்னர் என்ற நாமம் சூடிக் கொண்ட அவரது புதல்வரான இப்ராஹீம் என்பவர் முன்னெடுத்துச் சென்றார்.

இவர் பகிரங்க ஷீஆ ஆதரவாளராக விளங்கியதோடு அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்களுக்கு எதிரான நடவடிக்கைகளிலும் ஈடுபட்டார்.

இந்த தரீக்கா வழி வந்த ஸஃபிய்யுத்தின் அல் அர்தபீலியின் பேரர்களில் ஒருவரான إسماعيل الصفوي இஸ்மாயீல் அஸ்ஸபஃவி ஹி: 906 ல் திப்ரீஸ் மாகாணத்தை வெற்றி கொண்டதோடு ஒரு புதிய தேசத்தை

உருவாக்கிக் கொள்ளும் சந்தர்ப்பத்தை சாதமாகப் பயன்படுத்தி தனது பாட்டன் ஸஃபிய்யுத்தின் அல் அர்தபீலியின் நினைவாக ஒரு ஆட்சியை அங்கு நிறுவினான். அதுதான் ஸஃபவியர் ஆட்சி என வரலாற்றில் அறியப்படுகின்றது.

அந்த ஆட்சி ஈரானின் திப்ரீஸ் மாகாணத்தைப் தலைமையக மாகக் கொண்டு ஹிஜ்ரி 907- கி.பி. 1501 ஆம் வருடம் ஸஃபவிய்யர் ஆட்சியை துவக்கப்பட்டது.

தூய ஷீஆ மதத்தைப் பிரதிபலிக்கின்ற, இமாமிய்யா சிந்தனையை நூறு சதவிகிதம் நடைமுறைப்படுத்துகின்ற ஒரு மாகாணமாக திப்ரீஸ் மாகாணம் விளங்கியதோடு அது ஷீஆ மத நாடாகவும் பிரகடனம் செய்யப்பட்டது.

கஸ்பலாஷிய்யா என்ற பெயரில் வாழ்ந்த இஸ்மாயீல் அஸ்ஸஃபவியின் ஆதரவாளர்களான சூஃபிக்கள் பல கோத்திரங் களைக் கொண்ட ஒரு அமைப்பாக இருந்ததன் காரணமாக ஈரான், போன்ற பிரதேசங்களை மிக இலகுவாக ஷீஆ மதம் ஆக்கிரமித்துக் கொண்டது என ஆய்வாளர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர்.

இஸ்மாயீல் அஸ்ஸஃபவி பதவியேற்றதோடு அந்த மாகாணம் ஹி: 907 இல் தனி ஷீஆத் தேசமாகப் பிரகடனப்படுத்தப்பட்டதோடு, ஷீஆ மத சிந்தனை முழு ஈரானின் முழு பிரதேசங்களுனக்கும் பரவலாக்கப்பட்டது. (மேலதிக தகவல்களுக்கு: عودة الصـــــــــفويين بقلم : عبدالعزيز بن صالح المحمود

அங்கு எஞ்சி இருந்த ஷாஃபி மத்ஹபைப் பின்பற்றி வந்த அஹ்லுஸ் சுன்னா முஸ்லிம்கள் அனைவரும் திட்டமிட்டுக் கொலை செய்யப்பட்டார்கள். அல்லது ஷீஆ மதத்திற்கு பலாத்காரமான முறையில் மாற்றம் செய்யப்பட்டார்கள்.

இந்தக் காலங்களில் அங்குள்ள பள்ளிகள் தோறும் برائت جويان அபூபக்கர், உமர், உஸ்மான்(ﷺ) ஆகிய கலீஃபாக்களை விட்டும் நீங்குதல் என்ற சுலோகம் தொங்கவிடப்பட்டுக் கொண்டிருந்தது என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.



55

# இஸ்மாயீல் ஸஃபவி அரங்கேற்றிய கொடுமைகள்.

இஸ்மாயீல் ஸஃபவி திப்ரீஸ் மாகாணத்தைக் கைப்பற்றியதும் தனக்கு ஷாஹ் (மன்னர்) என்ற பெயரை சூட்டிக் கொண்டான்.

அங்கு காலம் காலமாக வாழ்ந்து வந்த சுன்னா முஸ்லிம்களில் ஒரு இலசட்சத்தி நாற்பதாயிரம் (1,40,000,00) பேரைக் கொலை செய்ததோடு, அவன் அங்கிருந்த எஞ்சிய முஸ்லிம்களை காலப் போக்கில் எவ்வாறு தீர்த்துக் கட்டினான் என்பது பற்றி முஸ்லிம் ஆய்வாளர் ஒருவர் இவ்வாறு வர்ணிக்கின்றார்.

لذا استُغّلت هذه الدولة الفتية من المجوس واليهود ، فقضوا على ملايين المسلمين السنة في إيران ، وهدموا مســـــاجدهم، وذبحوا علماءهم، وقتلوا طلبة العلم، وعذّبوا عامة أهل الســـــنة ، ونهبوا أموالهم ومتاجرهم وبساتينهم ، وأحرقوا المكتبات ،... وفعلوا فيهم الأفاعيل ، مما اضطر كثير من أهل السنة إلى ترك ديارهم ، وإلى اللجوء إلى خارج إيران، كدول الخليج والعراق وأفغانســـتان وباكســـتان،... أو إلى داخل إيران ، في المناطق النائية ، كمنطقة الأكراد. غربًا. والبلوش. شرقًا. أو اضطروا إلى أن يتشـيعوا فتسـلم دماؤهم ، ومن الأمور المؤلمة التي يتناقلها السنة في إيران أن الرافضة صاروا يلقون من فوق المآذن في خراسان كل يوم ( ٧٠ ) عالمًا أو طالب علم يوميًا، حتى لم يبق من الســـنة إّلا أقل من النصـــف الآن ، مع أنهم كانوا يمثلون ما يزيد على (٩٥٪ ) بل أكثر ، من سكان إيران .(( أثر اليهود والنصـارى والمجوس في التشـيع / السـيد أبو علي المرتضى بن سالم الهاشمي)

நெருப்பு வணங்கிகள், மற்றும் யூத இளைஞர்களைப் பயன்படுத்தி ஈரானில் வாழ்ந்து வந்த சுன்னா முஸ்லிம்களை ஸஃபவிக்கள் ஒழித்துக் கட்டினர். அவர்களின் பள்ளிகளை உடைத்தனர், அவர்களின் அறிஞர் பெருமக்களையும் மார்க்க அறிவு

படிக்கும் மாணவர்களையும் திட்டமிட்டுக் கொலை செய்தனர்.

அஹ்லுஸ் ஸுன்னாவைச் சேர்ந்த பொதுமக்களை கொடூரமான முறையில் சித்திரவதை செய்து துன்புறுத்தினர். அவர்களின் சொத்துக்களையும், தோப்புக்களையும் சூறையாடினர். அவர்களின் (படிப்பு சார்) நூலகங்களை தீயிட்டுக் கொழுத்தினர், வார்த்தைகளால் சொல்ல முடியாத அளவு அவர்களை வதைத்தனர்.

இந்நிலையில் பெரும்பாலான அஹ்லுஸ்ஸுன்னாக்கள் தமது சொந்த பிரதேசங்களை விட்டு விட்டு வளைகுடா நாடுகள் ஈராக், ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான் போன்ற அண்டை நாடுகளுக்கு ஈரானுக்கு வெளியில் அகதிகளாகச் செல்ல நிர்ப்பந்திக்கப்பட்டனர்.

மற்றும் சிலர் ஈரானின் மேற்காக உள்ள நாடான குர்திஸ்தான், கிழக்காக உள்ள பலூஸிஷ்தான் போன்ற பிரதேசங்களுக்கு வெளியேறிச் செல்ல நிர்ப்பந்திக்கப்பட்டனர். அல்லது பலாத்கார மாக ஷீஆக்களாக மாற்றப்பட்டு ஈரானுக்குள் வாழ அனுமதிக்கப்பட்டனர்.

ஷீஆக்கள் தினமும் ஆலிம்கள், ஷரீஆத்துறை மாணவர்கள் என எழுபது (70) வரை பள்ளிகளின் மினாராவுக்கு மேலால் இருந்து தூக்கி வீசினார்கள் என அக்கால சுன்னா முஸ்லிம்கள் தமது வாழ்வில் நேரடியாகக் கண்ட மிகக் கவலை தரும் காட்சி என வர்ணித்துள்ளார்கள்.

இதுதான் 95% வீதமான சுன்னா முஸ்லிம்கள் வாழ்ந்த பல நூறு இமாம்களைப் பெற்றெடுத்த ஈரான் என்ற ஒரு தேசத்தின் கதையாகும்.

பர்மா, இலங்கை போன்ற நாடுகளின் பௌத்தர்கள் ஷீஆக்களை விட எவ்வளவோ மேலானவர்கள்.

மேலதிகத் தகவலுக்கு பின்வரும் நூல்களைப் பார்வை இடவும்:

١. أثر اليهود والنصارى والمجوس في التشيع   السيد أبو علي المرتضى بن سالم الهاشمي
٢. مجموع مؤلفات الرافضة – محمد مال الله
٣. أحوال أهل السنة في إيران– عبد الله محمد الغريب



UU

# நுஸைரிய்யாக்கள் (அலவிய்யாக்கள்) – அறிமுகம்

நுஸைரிய்யா என்பது பாத்தினிய்யாப் பிரிவுகளில் ஒரு பிரிவாகும். இவர்கள் தம்மை அலவிய்யா என்றும் அழைத்துக் கொள்வார்கள்.

நுஸைரிய்யாக்கள் என்போர் தற்போதைய ஈரானில் ஹீரிஸ்தான் மாகாணத்தில் ஹி. 03 ஆம் நூற்றாண்டில் பனூ நுமைர் என்ற கோத்திரத்தோடு இணைத்துப் பேசப்படும் அபூஷுஐப் முஹம்மத் பின் நுஸைர் என்ற வழிகேடனின் வழி நடப்பவர்களாக அறிமுகமானார்கள். அஷ்கரி 271 இல் இவர்களின் அரசியல், சமய நடவடிக்கைகள் ஆரம்பமானது.

முஹம்மத் பின் நுஸைர் என்பவனின் பெயருடன் இணைத்துப் பேசப்படும் இந்தப் பிரிவினர் நுஸைரிய்யா என்று சிலராலும் நுமைரிய்யா என்று மற்றும் சிலராலும் அழைக்கப்படுகின்றனர்.

பாதினிய்யாக்களில் மிகவும் வழி கெட்ட பிரிவுகளில் ஒன்றாகக் கணிக்கப்படும் இந்தப் பிரிவினர் ஷீஆ இமாமிய்யாவில் இருந்து பிரிந்தவர்களாவர். அபூ அப்தில்லா அஷ்ஷுயி என்பவன் வெளிப்படையாக ஆரம்பமாக மொரோக்கோவில் பாத்தினிய்யாக் கொள்கையைத் தொடங்கி பிரச்சாரம் செய்து கொண்டிருந்த போது இவர்கள் ஈரான், மற்றும் சிரியா போன்ற நாடுகளில் உபைதிய்யா ஷீஆக்களோடு அறிமுகமானார்கள்.

அபுல் ஹஸன் என்ற புனைப் பெயருடைய முஹம்மத் பின்

அல்ஹாதி என்பவன் தன்னை ஷீஆக்களின் இமாமாகிய அபுல்ஹஸன் அஸ்கரி அவர்கள் தன்னை நபியாக அனுப்பியதாக வாதிட்டான் என்றும்,

இவன் மறுபிறவிக் கோட்பாடு உண்டு என்றும், அல்லாஹ் ஹராமாக்கியவைகள் ஹலாலானது, என்றும் ஆண்கள் ஒருவரை ஒருவர் திருமணம் செய்து கொள்ளலாம் என்றும் இவனே இந்த முஹம்மத் பின் நுஸைர் அந்நுமைரி ஆகும் என்று இமாம் இஹ்ஸான் இலாஹி ளஹீர் (ரஹ்) அவர்கள் இந்தப் பிரிவினர் பற்றிக் குறிப்பிடுகின்ற போது வாதிட்டான். குறிப்பிட்டுள்ளார்கள். (இஹ்ஸான் இலாஹி ளஹீர்)

இவர் ஒரு நபி இல்லை. மாற்றமாக பதினோராவது இமாமாகிய ஹஸன் அல்– அஸ்கரி என்பவரிடம் செல்வதற்கான வாயிலாக இவர் விளங்குகின்றார் என நுஸைரிய்யாப் பிரிவினர் குறிப்பிடுகின்றனர்.

**நுஸைரிய்யாக்களின் சாட்சியம்:**

இப்பிரிவினர் இஸ்மாயீலிய்யா என்ற கடும்போக்கு ஷீஆக்களில் இருந்தும் பிரிந்து சென்ற முழுமையான நாஸ்தீக சிந்தனையைப் பிரதிபலிக்கின்ற ஒரு குழுவாகும். இவர்கள் மார்க்கத்தில் முழுமையாக எல்லை மீறியவர்களாக கணிக்கப் படுகின்றனர்.

நுஸைரிய்யாக்களில் ஒரு சாரார் அலி(ﷺ) அவர்களை ஒரு கடவுள் என்று நம்புவதோடு அவர்களை அல்லாஹ்வின் ஸ்தானத்தில் வைத்தும் மதிக்கின்றனர்.

لا إله إلا علي ، لا إله إلا حيدرة ، ((شرح العقيدة الطحاوية لابن جبرين – (٤٨٣/ ٣)

“வணக்கத்திற்கு தகுதியானவர் ஹைதர் எனப்படும் அலியைத் தவிர வேறு கடவுள் இல்லை” என்பது இவர்களின் இறுதியான நம்பிக்கையாகும்.

இவர்கள் தொடக்க காலங்களில் நுமைரிய்யா, ஹத்தாபிய்யா போன்ற பெயர்களில் அறியப்பட்டனர். பின்னர் நுஸைரிய்யா என அடையாளப்படுத்தப்பட்டனர்.

இவர்கள் இஸ்மாயீலிய்யா, ஷீஆ, சூஃபிய்யா, உபைதிய்யாக்கள் போன்று மார்க்க செயற்பாடுகளுக்கு உள், வெளிப் பொருள் உண்டு என வாதிட்டனர். இப்பிரிவினர் தம்மை அஹ்லுல் பைத்தினரில் முக்கியமானவரான அலிபின் பின் அபீதாலிப்(ﷺ) அவர்களின் பெயரோடு இணைத்து உலக முஸ்லிம்களுக்குக் காட்டிக் கொள்ள அலவிய்யா – அலவிய்யூன் என அழைத்துக் கொள்வதை சிறப்பாகக் காண்கின்றனர்.

உண்மையில் அலவிய்யா என்ற இந்தப் பெயரை அவர்களாக வைத்துக் கொள்ளவில்லை. மாற்றமாக சிரியாவை பிரான்ஸ் கி.பி. 1920 இல் ஆக்கிரமித்த போது பிரான்ஸ்காரர்கள் மக்களைக் கவர்ந்திழுப்பதற்காக இவர்களுக்குச் சூட்டிய பெயராகும். அதுவும் முஸ்லிம் அறிஞர்கள் இந்தப் பிரிவினரை காஃபிர்கள் என தீர்ப்பளித்த பின்னர் இந்தப் பெயர் கொண்டு அழைக்கப்பட்டனர்.

நுஸைரிய்யாக்களின் குஃப்ர் கலிமா,

شهدت أن لا إله إلا هو العلي المعبود،ولا حجاب إلا الســـيد محمد المحمود،ولا باب إلا السيد سلمان الفارسي

☞ வணங்கப்படும் அந்த உயர்வானவன் வணக்கத்திற்குரியவன் என சாட்சியம் கூறிவிட்டேன்.

☞ அவனைச் சென்றடையும் திரை புகமுக்குரிய முஹம்மத் நபி (ﷺ) அவர்களாகும் என்றும்,

☞ அவரிடம் சேர்ப்பிக்கும் பிரதான வாசஸ்தலம் மாண்புமிகு தலைவர் ஸல்மான் ஃபாரிஸீ என்றும் சாட்சியம் கூறுகின்றேன்.

UU

# நுஸைரிய்யாக்களை காபிராக்கும் இரு அடிப்படைகள்

நுஸைரிய்யாக்களிடம் காணப்பட்ட மார்க்கத்திற்கு மாற்றமான அம்சங்களை இரண்டு பிரதானமான அடிப்படை அம்சங்களைக் கவனத்தில் கொண்டு இஸ்லாமிய அறிஞர்கள் இவர்களை காஃபிர்கள் என தீர்ப்பு வழங்கினார்கள்.

**முதலாவது அடிப்படை:** இவர்களின் பாரம்பரிய சமயக் கோட்பாட்டு சிந்தனைகளில் காணப்படும் இஸ்லாமிய மார்க்கம் போதிக்காத, இறை நிராகரிப்பு, நாஸ்திகம், இஸ்லாத்தின் விதிகளை எள்ளி நகையாடுதல் போன்ற இறை மறுப்புசார் நம்பிக்கைகள்.

**இரண்டாவது அடிப்படை:** இவர்களின் சமயக் கோட்பாட்டுச் சிந்தனைகளை அல்குர்ஆன், மற்றும் சுன்னாவின் நிழலில் நிறுத்தும் போது அவை சோசலிச, கம்யூனிஸ சிந்தனைகளுக்கு ஒப்பானதாக, அதை விட மோசமானதாக அமைந்திருத்தல்.

இந்த இரண்டு அடிப்படைகளையும் கொண்டு ஆய்வு செய்கின்ற போது இப்பிரிவினர் இஸ்லாமல்லாத மாற்று மதச் சிந்தனைகளில் இருந்து உற்பத்தியான நரகத்திற்குக் கொண்டு செல்லும் வழிகேட்டுச் சிந்தனைகளைப் பிரதிபலிப்போர் என அறியப்பட்டது.

وَمَنْ يَبْتَغِ غَيْرَ الْإِسْلَامِ دِينًا فَلَنْ يُقْبَلَ مِنْهُ وَهُوَ فِي الْآخِرَةِ مِنَ الْخَاسِرِينَ [آل عمران : ٨٥]

"யார் இஸ்லாமல்லாததைப் பின்பற்றுகின்றானோ அது அவனிடமிருந்து அங்கீகரிக்கப்படமாட்டாது. மறுமையில் அவன் நஷ்டமடைந்தோரில் உள்ளவனாவான்." (ஆலுஇம்ரான்: 85) என்ற அல்குர்ஆனிய வசனத்தை சுருக்கமாக முன்னிலைப்படுத்தி இவர்கள் காஃபிர்கள் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.



UU

# நுஸைரிய்யாக்களின் கொள்கை இரகசியம்

?

நுஸைரிய்யாக்கள் தமது மத சிந்தனை உலகுக்கு வெளிப்படுத்த முடியாத இரகசியம் வாய்ந்ததாகவும், அதனை தேர்வு செய்யப்பட்ட ஒரு (வலி) இறை நேசரைத் தவிர வேறு யாராலும் அடைந்து கொள்ளவும் முடியாது என்றும் நம்புகின்றனர்.

இதன் மூலம் அவர்கள் தம்மை ஒரு இரகசிய சிந்தனா இயக்கமாகக் கணிக்கின்றனர். அதனால் தமது கொள்கைகளை வெளி உலகுக்கு அவர்கள் பகிரங்கமாக அறிவிப்பதில்லை.

இமாம் ஜஃபர் ஸாதிக் (رضي الله عنه) அவர்களின் மாணவர்களில் ஒருவரான முஃபள்ளல் பின் உமர் என்பவன் இவர்களின் கொள்கை இரகசியம் அனைத்தையும் அறிந்த ஒரு 'வலி' என நுஸைரிய்யாக்கள் நம்புகின்றனர்.

இவர்களின் நூல் ஒன்றில் இவர்களது நம்பிக்கையின் ரகசியம் தொடர்பாக இப்படிக் கூறப்பட்டிருக்கின்றது.

(يا مفضل: لقد أعطيت فضلاً كثيرًا، وتعلمت علمًا باطنًا فعليك بكتمان سر الله ولا تطلع عليه إلا وليًا مخلصًا) (الهفت الشريف):

"முஃபள்ளலே! நீர் அதிக சிறப்புக்களை வழங்கப்பட்டுள்ளீர், மறைமுகமான அறிவைக் கற்றுள்ளீர், எனவே, அல்லாஹ்வின் இரகசியமான அந்த மறைவான அறிவை நீர் மறைத்துக் கொள்ள வேண்டும். அதனை தூய்மையான வழி நடக்கும் ஒரு வலி (இறைநேசரு)க்கே அன்றி வேறு யாருக்கும் நீர் அறிவித்துக் கொடுக்காதே!"

UU

# நுஸைரிய்யாக்களின் நம்பிக்கைக் கோட்பாடுகள்

**நுஸைரிய்யாக்களின் நம்பிக்கைக் கோட்பாடுகள்:**

1. **நான்காம் கலீஃபா அலி (رضي الله عنه) அவர்களை மனிதக் கடவுளாக வழிபடுதல். அதாவது கடவுளின் வெளிப்பாடு என நம்புதல்:**

அலி(رضي الله عنه) அவர்கள் மேகத்தில் குடியிருப்பதாக நம்பிக்கை கொள்வதோடு, இடிச் சப்தம் அவரது சப்தம்தான் என்றும், மின் வெட்டுவது அவரது சிரிப்பு என்றும் நம்புகின்றனர். இதனால்தான் அவர்கள் மேகத்தை கண்ணியப்படுத்தும் வழக்கமுடையோராக இருக்கின்றனர். இவர்களில் சிலர் அலி(رضي الله عنه) அவர்கள் சூரியனிலும் சந்திரனிலும் குடியிருப்பதாக நம்புகின்றனர்.

2. **அல்ஹுலூல் வல் இத்திஹாத் - அதாவது, 'மனிதர்களின் இரட்சகனாகிய அல்லாஹ், மனிதராகிய அலி (رضي الله عنه) அவர்களில் ஒன்றாகக் கலந்துள்ளான்' என்ற நம்பிக்கை:**

கடவுளானவர், ஈஸா என்ற தூதரில் ஒன்றாய்க் கலந்துள்ளார் என்பது கிறிஸ்தவர்களின் நம்பிக்கையாகும். இது அவர்களிடம் இன்று வரை காணப்படும் முக்கிய நம்பிக்கையாகும்.

இவ்வாறான நம்பிக்கை, ஷீஆக்களிடம் மட்டுமின்றி, அவர்களின் பிரிவுகள் மற்றும் அவர்களின் நம்பிக்கை கோட்பாட்டுக்கு மிகவும் நெருங்கியவர்களான சூஃபிக்கள், மற்றும் தரீக்காவாதிகள் போன்றோரிடமும் காணப்படுகின்றது.

நுஸைரிய்யாக்கள் அல்லாஹ் என்ற கடவுள் மனிதனைப் படைத்த போதே அவனில் ஒன்றாய்க் கலந்துவிட்டதாக நம்புகின்றனர்.

கிறிஸ்தவ சமயத்தில் கடவுளின் வெளிப்பாடு ஏழு மனிதப் பரம்பரை அல்லது தலைமுறைகளைக் கடந்து வந்துள்ளது எனக் கூறப்படுகின்றது.

அவ்வாறே நுஸைரிய்யாக்களிடம் முதலாவது அல்லாஹ்வில் இருந்து ஆதம் நபி வாயிலாக ஷீத் என்ற இறைத் தூதருக்கு கடவுளின் வெளிப்பாடு தொடங்கி அவரில் இருந்து பின் வந்த ஒருவர் பின் ஒருவராக மாறி இவ்வாறு ஏழு பரம்பரை வரை கடந்து, இறுதியாக அது அலி பின் அபீதாலிப் அவர்களை வந்தடைந்ததாக நம்புகின்றனர்.

இந்த அடிப்படையில் நோக்குகின்ற போது அலி பின் அபீதாலிப் (رضي الله عنه) அவர்கள் அல்லாஹ்வின் ஒரு வெளிப்பாடு என்றும் அவர்கள் வெளிப்படையாகவும் அந்தரங்கமாகவும் மனித உருவத்தில் தோன்றிய ஒரு கடவுளின் வெளிப்பாட்டைக் கொண்டவர் என்றும் வாதிடுகின்றனர்.

அதனால் வெளித்தோற்றத்தில் பார்ப்பதற்கு அலி(رضي الله عنه) அவர்கள் ஒரு மனித உருவில் இருப்பினும் அவர்கள் மறுபுறத்தில் பார்க்க முடியாத கடவுளின் ஒரு பிரகாசமாக இருக்கின்றார் என வாதிக்கின்றனர்.

பின்வரும் பாடல் வரிகளில் அலி(رضي الله عنه) அவர்களை அல்லாஹ்வின் இடத்தில் வைத்து சாட்சியம் கூறுகின்றனர். இதன் மூலம் அவர்களின் நம்பிக்கையின் உண்மைத்தன்மை பற்றி தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.

أشهد ألا إله إلا ** حيدرة الأنزع البطين

"வணக்கத்திற்கு தகுதியானவர் அகன்ற வயிறுள்ள, நெற்றி முடி தொங்கிக் கொண்டிருக்கும் ஹைதர் எனப்படும் (அலியாகும்) என்று சாட்சி கூறுகின்றேன்."

ولا حجاب عليه إلا ** محمد الصادق الأمين

"அவருக்கு திரையாக இருப்பவர் அஸ்ஸாதிக், அல்அமீன் என்ற முஹம்மத் (ﷺ) ஆகும்."

ولا طريق إليه إلا ** سلمان ذو القوة المتين

அவரை அடைந்து கொள்ளும் வழி சக்தியும் பலமும் வாய்ந்த சல்மான் அல்ஃபரிஸ் அவர்களைத் தவிர வேறு யாரும் கிடையாது என்றும் சாட்சி சொல்கின்றேன்!

أن عليًا هو الرب، وأن محمدًا هو الحجاب، وأن سلمان هو الباب (( أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – (٢ / ٣٧٦))

அலி(﵁) அவர்கள்தான் உலக இரட்சகர் என்றும், முஹம்மத் நபி அதற்கான திரை என்றும், அதன் நுழைவாயில் ஸல்மான்(﵁) அவர்களாகும் என்பது இதன் பொருளாகும். (இப்னு தைமிய்யா– அஹ்காமுல் முர்தத்)

**3. மறுபிறவிக் கோட்பாடு. முதலாவது மற்றும் இரண்டாவது கோட்பாடுகளை சரியாக ஆராய்ந்தால் மறுபிறவிக் கோட்பாடு என்பது உள்ளெடுந்தவாரியாகக் காணப்படுவது புலனாகும்.**

அலி அவர்களை வணங்காதவர்கள் உலகில் புதிதாக பிறக்கின்ற போது சுன்னி முஸ்லிமாக, அல்லது யூதனாக, கிறிஸ்தவனாக, அல்லது ஒட்டகம், கழுதை போன்ற பிராணிகளின் தோற்றத்தில் பிறப்பதாகவும்,

அவர்களைக் கடவுளாக ஏற்று வணங்குபவன் ஏழு பிறவிகள் எடுப்பான் என்றும், பின்னர் அவனுக்குரிய உயர்வான இடத்தை வானிலுள்ள நட்சத்திரங்களுக்கு மத்தியில் அவன் பெற்றுக் கொள்வான் என்றும் நம்புவதோடு,

“யார் இந்த சிந்தனையில் இருந்து நெறிபிறழ்கின்றானோ அவனது பாவம் கழிக்கப்பட்டு பரிசுத்தமாக்கப்படும் வரை அவன் மீண்டும் மீண்டும் பிறப்பான்” என்றும் நம்புகின்றனர். அதாவது, தொடர்ந்தும் பிறவியெடுப்பான் என்பதாகும்

الكتاب : الدولة الفاطمية \ المؤلف : علي محمد محمد الصلابي



٥٥

# இது பற்றி விபரிக்கும் அறிஞர்கள்

أن القول بالتناسخ من الدعائم الرئيسية والأركان الهامة في المذهب النصيري، وهو عندهم بديل البعث والقيامة والحساب والجزاء، والثواب والعقاب ليس في الجنة أو النار في الآخرة، وإنما هو في هذه الدنيا حسب التراكيب والتقمصات الناسوتية والمسخوية التي تصيب الروح

மறுபிறவிக் கோட்பாடு என்பது நுஸைரிய்யா கொள்கைப் பிரிவின் அடிப்படைக் கோட்பாடுகளில் ஒன்றாகவும், முக்கிய தூண்களில் ஒன்றாகவும் கணிக்கப்படுகின்றது. அது, மரணத்தின்பின் உயிர்த்தெழுதல், மறுமை நாள், அல்லாஹ்வின் கேள்வி விசாரணை, உலகில் மனித நடத்தைகளுக் கான கூலி வழங்கல், நன்மை, இறை தண்டனை போன்ற மறுமை தொடர்பான ஈமானிய அம்சங்களுக்குப் பதிலாக இவ்வுலகில் அது முடிவடைந்து விடும் என்பதை முக்கியத் துவப்படுத்துகின்றது.

சுவனத்தில் தண்டனை என்பது இல்லை, மறுமையில் நரகம் என்பதும் இல்லை. இந்த உலகில் மனித உயிர்களுக்கிடையிலான தொடர்பாடல்கள், மற்றும் உயிர் மாறுதல்கள் என்பதே உண்டு. (மறுவாழ்வுக்கு உயிர்கள் தடுத்துக் கொள்ளப்படுவது என்பது கற்பனை) போன்ற இறை நிராகரிப்பை இந்தக் கோட்பாடு உள்ளடக்கி உள்ளது.

**வணக்கம் தொடர்பாக வந்திருப்பவைகளை உள், மற்றும் வெளி என்ற இரு பொருளில் அறிதல்:**

அதாவது, வணக்க வழிபாடுகள் சார்ந்த செயற்பாடுகளுக்கு வெளிப்படையாக உலக முஸ்லிம்கள் எல்லோராலும் கூறப்படும் விளக்கத்திற்கு நேர் முரணான விளக்கத்தை வழங்கி இபாதத் எனப்படும் உயரிய வணக்க வழிபாடுகளின் நோக்கத்தில் இவர்கள் தகர்த்துவிடுகின்றனர்.

பொதுவாக மற்றவர்கள் செய்கின்ற வணக்கங்களை இவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. இந்த அடிப்படையைத் தழுவித்தான் நுஸைரிய்யாக்கள் சமயக் கோட்பாடுகளுக்கு பின்வரும் விளக்கங்கள் தருகின்றனர். மரணத்தின் பின் உயிர் கொடுத்து மீண்டும் எழுப்பப்படுதல், அல்லாஹ்வின் கேள்வி விசாரணை, சுவர்க்கம், நரகத்தை பொய்ப்பித்தல் போன்ற இறைமறுப்புக்கள் இவர்களின் மறுபிறவிக் கோட்பாட்டின் தீய விளைவுதான் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

ஐவேளைத் தொழுகைகள் என்பது இவர்களின் விளக்கத்தின் படி அலி, ஹஸன், ஹுஸைன், முஹ்ஸின், ஃபாதிமா ஆகிய அஹ்லுல் பைத்தினர் ஐவரின் பெயரைக் குறிக்கும் பொதுச் சொல்லாகும். இவர்கள் ஐவரின் பெயர்களையும் மனனம் செய்வதால் தொழுகை நிறைவேற்றியதற்கு ஈடாகும் என்றும் (ஜுனுப் எனப்படும்) கடமையான குளிப்பு, வுழூ, தொழுகையில் பேண வேண்டிய ஏனைய கடமைகள், அதன் நிபந்தனைகள் அனைத்துக்கும் தமது இமாம்களின் பெயர்கள் மாத்திரம் ஒருவரது மனதில் பாடமாக இருப்பது போதுமானது என்பதும் அவற்றை நிறைவேற்றியதற்குப் போதுமான, பிரதியீடானவைகள் என்பதும் இவர்களின் விளக்கமாகும்.

ஒரு மாத கால நோன்பு என்பது அவர்களின் வேதப் புத்தகத்தில் இடம் பெறும் முப்பது ஆண்கள், முப்பது பெண்களின் பெயர்களாகும்.

وبأن إلاههم الذي خلق السـمـوات والأرض هو علي بن طالب .رضي الله عنه. فهو عندهم الإله في السـماء، والإمام في الأرض، فكانت الحكمة في ظهور اللاهوت بهذا الناسوت علي رأيهم أن يؤنس خلقه وعبيده؛ ليعلمهم كيف يعرفونه ويعبدونه. ((أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – (٢ / ٣٧٥ ))

அவர்களைப் படைத்த கடவுள் அலி(﵁) அவர்களாகும். அவர்களே! வானங்களையும் பூமியையும் படைத்தவர்கள். அவர்கள் தமது வானில் உள்ள தமது கடவுளாகவும் பூமியில் தமது இமாமாகவும் இருக்கின்றார்கள்.

அலி(﵁) அவர்கள் பூமியில் மனித தோற்றத்தில் கடவுளின் அவதாரமாக இருப்பது அவரது படைப்பினங்களாகிய மனித அடியார்கள் மன ஆறுதல் பெறவும், அவர்களை எப்படி அறிந்து கொள்வது என்பதைப் புரியவும்போதிக்கவும் அவர்களை மக்கள் வணங்கவுமே என்ற தத்துவத்தை அவர்கள் முன்வைக்கின்றனர்.
(இமாம் இப்னு தைமிய்யா: அஹ்காமுல் முர்தத்)



UU

# நுஸைரிய்யாக்கள் பற்றிய இமாம்களின் தீர்ப்புக்கள்

இந்தப் பிரிவினரின் சமய நடவடிக்கைகளையும் அவர்கள் இஸ்லாமிய மார்க்கம் தொடர்பாக கொண்டிருக்கும் நாஸ்தீகக் கோட்பாட்டையும் சடவாதத்தையும் கூர்ந்து கவனித்த உலக முஸ்லிம் அறிஞர்கள் இவர்களை காஃபிகளை விட மோசமான பிரிவினர் எனத் தீர்ப்பளித்துள்ளனர் என இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்களிடம் நுஸைரிய்யாக்கள் என்ற பிரிவினர் பற்றி கேட்கப்பட்ட போது அல்லாஹ்வைப் புகழ்ந்து பின்வருமாறு பதில் அளித்தார்கள்.

فَأَجَابَ شَيْخُ الْإِسْلَامِ تَقِيُّ الدِّينِ أَبو الْعَبَّاس أَحْمد ابْنُ تيمية : الْحَمْدُ لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ . هَؤُلَاءِ الْقَوْمُ الْمُسَمَّوْنَ بالنصـيرية هُمْ وَسَائِرُ أَصْنَافِ الْقَرَامِطَةِ الْبَاطِنِيَّةِ أَكْفَرُ مِنْ الْيَهُودِ وَالنَّصَارَى ؛ بَلْ وَأَكْفَرُ مِنْ كَثِيرٍ مِنْ الْمُشْرِكِينَ وَضَرَرُهُمْ عَلَـى أُمَةِ مُحَمَّدٍ صَلَّـى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَعْظَمُ مِنْ ضَرَرِ الْكُفَّارِ الْمُحَارِبِينَ مِثْلُ كُفَّارِ التَّتَارِ والفـرنج وَغَيْرِهِمْ ؛ فَإِنَّ هَؤُلَاءِ يَتَظَاهَرُونَ عِنْدَ جُهَّالِ الْمُسْلِمِينَ بِالتَّشَيُّعِ وَمُوَالَاةِ أَهْلِ الْبَيْتِ وَهُمْ فِي الْحَقِيقَةِ لَا يُؤْمِنُونَ بِاللَّهِ وَلَا بِرَسُولِهِ وَلَا بِكِتَابِهِ وَلَا بِأَمْرٍ وَلَا نَهْيٍ وَلَا ثَوَابٍ وَلَا عِقَابٍ وَلَا جَنَّةٍ وَلَا نَارٍ وَلَا بِأَحَدِ مِنْ الْمُرْسَلِينَ قَبْلَ مُحَمَّدٍ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَلَا بِمِلَّةٍ مِنْ الْمِلَلِ السَّالِفَةِ بَلْ يَأْخُذُونَ كَلَامَ اللَّهِ وَرَسُولِهِ الْمَعْرُوفِ عِنْدَ عُلَمَاءِ الْمُسْلِمِينَ يَتَأَوَّلُونَهُ عَلَى أُمُورٍ يَفْتَرُونَهَا ؛ يَدَّعُونَ أَنَّهَا عِلْمُ الْبَاطِنِ ؛

நுஸைரிய்யா என்ற பெயரில் உள்ள இந்தப் பிரிவினரும் இவர்களைப் போன்ற பாதினிய்யாக்களான கராமித்தா பிரிவினரும் யூத கிஸ்த்தவர்களை விடவும் மோசமான காபிர்களாகும்.

அதுமட்டுமின்றி, இணைவைப்பாளர்கள் பலரை விடவும் மிகக் கொடிய காபிர்களாகும்.

முஹம்மத் நபி(ﷺ) அவர்கள் சமுதாயத்தில் இவர்களின் தீங்கு என்பது போர்க்கால காபிர்களான தாத்தாரிய பிரஞ்சு மற்றும் ஏனைய காபிர்கள் போன்றோரின் தீங்கை விடக் கொடியதாகும்.

மார்க்க அறிவில்லாத பாமரர்களிடம் தம்மை ஷீஆக்கள் என்றும், அஹ்லுல் பைத்தினரை நேசிப்போர் என்றும் நடித்துக் கொள்ளும் இவர்கள் உண்மையில் அல்லாஹ்வையோ, அவனது தூதரையோ அவனது வேதத்தையோ, கட்டளைகளையோ, மார்க்கம் விதித்த தடைகளையோ, நன்மை மற்றும் தண்டனைகளையோ, சுவர்க்கம் – நரகத்தையோ, ஏன் முன் வந்த தூதர்களையோ, சமய சித்தாந்தங்களையோ எதையும் இவர்கள் நம்பிக்கை கொள்வதில்லை.

அத்தோடு, இவர்கள் அல்லாஹ்வினதும் அல்லாஹ்வின் தூதரினதும் பேச்சை உலக முஸ்லிம்கள் பொதுவாக அறிந்து வைத்துள்ளவாறு எடுத்துக் கொள்வதும் இல்லை. அவற்றை தாம் இட்டுக் கட்டும் கற்பனை விளக்கங்களில் எடுத்துக் கொண்டு அவை (இல்முல்பாதின்) புதைந்து காணப்படும் புதுமைத் தத்துவங்கள் என வாதிடுவார்கள். (இப்னு தைமிய்யா)

இமாம் இப்னு தைமிய்யா அவர்கள் மின்ஹாஜுஸ் ஸுன்னா என்ற நூலில் இவர்களுக்கும் யூத கிரஸ்தவர்களுக்கும் இடையில் காணப்படும் நெருங்கிய உறவு பற்றி இவ்வாறு பதிவு செய்துள்ளார்கள்.

وكذلك إذا صار اليهود دولة في العراق وغيره تكون الرافضـــة من أعظم أعوانهم، فهم دائمًا يوالون الكفار من المشركين واليهود والنصارى، ويعاونونهم على قتال المسلمين ومعاداتهم."

(منهاج السنة ٣/٣٧٨)

ஈராக்கிலோ அதற்கு அண்டிய பிரதேசங்களிலோ யூதர்களுக் கென்று ஒரு ஆட்சி உருவாகினால் அதன் முக்கிய பங்காளிகளாக ஷீஆக்கள் விளங்குவார்கள். அவர்கள் இணைவைப்பாளர்களுக்கும், யூத மற்றும் கிறிஸ்தவர்களுக்கும் என்றும், எப்போதும் துணையாக நின்று செயல்படுவார்கள். (இஸ்லாமிய விரோதிகள்) முஸ்லிம்களை கொன்று குவிக்கவும், அவர்களை எதிரிகளாக்கவும் அவர்களுக்கு துணை நிற்பார்கள். (மின்ஹாஜுஸ்ஸுன்னா)

இப்னு மைதிய்யா மரணித்து 700 ஆண்டுகள் கழிந்தும் இதுதான் நிலை. அல்லாஹு அக்பர். பரம்பரை பரம்பரையாக மனம் செய்யப்பட வேண்டிய முத்தான வரிகள்.

இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் மற்றுமொரு இடத்தில் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்.

.وَمِنْ الْمَعْلُـــــومِ عِنْدَنَا أَنَّ السَّوَاحِلَ الشَّامِيَّةَ إنَّمَا اسْتَوْلَى عَلَيْهَا النَّصَارَى مِنْ جِهَتِهِمْ وَهُمْ دَائِمًا مَعَ كُلِّ عَدُوٍّ لِلْمُسْلِمِينَ ؛ فَهُمْ مَعَ النَّصَارَى عَلَـــى الْمُسْلِمِينَ . وَمِنْ أَعْظَمِ الْمَصَائِبِ عِنْدَهُمْ فَتْحُ الْمُسْلِمِينَ لِلسَّوَاحِلِ وَانْقِهَـــارُ النَّصَـــارَى ؛ بَلْ وَمِنْ أَعْظَمِ الْمَصَـــائِبِ عِنْدَهُمْ انْتِصَارُ الْمُسْلِمِينَ عَلَـــــى التَّتَارِ . وَمِنْ أَعْظَمِ أَعْيَادِهِمْ إذَا اسْتَوْلَى – وَالْعِيَاذُ بِاَللَّهِ تَعَالَى – النَّصَارَى عَلَـــى ثُغُورِ الْمُسْلِمِينَ فَإِنَّ ثُغُورَ الْمُسْلِمِينَ مَا زَالَتْ بِأَيْدِي الْمُسْلِمِينَ حَتَّى جَزِيرَةَ قُبْرُصَ يَسَّرَ اللَّهُ فَتْحَهَا عَنْ قَرِيبٍ وَفَتَحَهَا الْمُسْلِمُـــونَ فِي خِلَافَةِ أَمِيرِ الْمُؤْمِنِينَ " عُثْمَانَ بْنِ عفـان " رَضِيَ اللَّهُ عَنْهُ فَتَحَهَـا " مُعَـاوِيَةُ بْنُ أَبِي سُفْيَـانَ " إلَى أَثْنَـاءِ الْمِـائَةِ الرَّابِعَةِ . فَهَؤُلَاءِ الْمُحَادُّونَ لِلَّهِ وَرَسُولِهِ كَثُرُوا حِينَئِذٍ بِالسَّوَاحِلِ وَغَيْرِهَا فَاسْتَوْلَى النَّصَارَى عَلَـــى السَّاحِلِ ؛ ثُمَّ بِسَبَبِهِمْ اسْتَوْلَوْا عَلَـــى الْقُدْسِ الشَّرِيفِ وَغَيْرِهِ ؛ فَإِنَّ أَحْوَالَهُمْ كَانَتْ مِنْ أَعْظَمِ الْأَسْبَابِ فِي ذَلِكَ ؛ ثُمَّ لَمَّا أَقَامَ اللَّهُ مُلُوكَ الْمُسْلِمِينَ الْمُجَاهِدِينَ فِي سَبِيلِ اللَّهِ تَعَالَى " كَنُورِ الدِّينِ الشَّهِيدِ وَصَلَاحِ الدِّينِ " وَأَتْبَاعِهِمَا وَفَتَحُوا السَّوَاحِلَ مِنْ النَّصَارَى وَمِمَّنْ كَانَ بِهَا مِنْهُمْ وَفَتَحُوا أَيْضًا أَرْضَ مِصْرَ ؛ فَإِنَّهُمْ كَانُـــوا مُسْتَوْلِينَ عَلَيْهَا نَحْوَ مِائَتَيْ سَنَةٍ وَاتَّفَقُـــوا هُمْ وَالنَّصَارَى فَجَاهَدَهُمْ الْمُسْلِمُـــونَ حَتَّى فَتَحُـــوا الْبِلَادَ وَمِنْ ذَلِكَ التَّارِيخِ انْتَشَرَتْ دَعْوَةُ الْإِسْلَامِ بِالدِّيَارِ الْمِصْرِيَّةِ وَالشَّامِيَّةِ . ثُمَّ إنَّ التَّتَارَ مَا دَخَلُوا بِلَادَ الْإِسْلَامِ وَقَتَلُوا خَلِـــــــــيفَةَ بَغْدَادَ وَغَيْرَهُ مِنْ مُلُوكِ الْمُسْلِمِينَ إلَّا بِمُعَاوَنَتِهِمْ وَمُؤَازَرَتِهِمْ ؛ فَإِنَّ مُنَجِّمَ هُـــولَاكُـــو الَّذِي كَانَ وَزِيرَهُمْ وَهُوَ " النَّصِيرُ الطوسـي " كَانَ وَزِيرًا لَهُمْ بِالْأَلَمُوتِ وَهُوَ الَّذِي أَمَرَ بِقَتْلِ الْخَلِيفَةِ وَبِوِلَايَةِ هَؤُلَاءِ . وَلَهُمْ " أَلْقَابٌ " مَعْرُوفَةٌ عِنْدَ الْمُسْلِمِينَ تَارَةً يُسَمَّوْنَ " الْمَلَاحِدَةَ " وَتَارَةً يُسَمَّوْنَ " الْقَرَامِطَةَ " وَتَارَةً يُسَمَّوْنَ " الْبَاطِنِيَّةَ " وَتَارَةً يُسَمَّوْنَ " الإسماعيلية " و تَارَةً يُسَمَّوْنَ " النصـيرية " وَتَارَةً يُسَمَّوْنَ " الخرمية " وَتَارَةً يُسَمَّوْنَ " الْمُحَمِّرَةَ

ஷாம் (டமஷ்கஸ்) தேசத்தின் கரையோரப் பகுதிகளைஇவர்கள்

வழியாகவே கிறிஸ்தவர்கள் ஆக்கிரமித்தனர் என்பது எங்களால் அறியப்பட்டதாகும். அவர்கள் எப்போதும் முஸ்லிம்களின் விரோதிகளோடுதான் இருப்பார்கள். அவர்கள் முஸ்லிம்களுக்கு எதிராக கிறிஸ்தவர்களோடுதான் இருப்பார்கள்.

முஸ்லிம்கள் ஷாம் தேச கரையோரப் பிரதேசங்களை வெற்றி கொண்டதையும் கிறிஸ்தவர்கள் அங்கிருந்து புறமுதுகிட்டு ஓடியதையும் இவர்கள் தமக்கு ஏற்பட்ட மிகப் பெரும் சோதனையாகக் கொள்வார்கள். அதை விடவும் மோசமான பண்பு என்னவெனில், முஸ்லிம்கள் தாத்தாரியர்களுக்கு எதிராக வெற்றி கொள்கின்ற போது அதனை தமக்கு எதிரான வெற்றி கொள்வதாகக் கருதுவார்கள்.

இவர்களின் உதவியுடன் மூன்றாம் கலீஃபா உஸ்மான் பின் அஃப்பான்(ﷺ) அவர்களின் காலத்தில் முஆவியா பின் அபீ சுஃப்யான் (ﷺ) அவர்களால் வெற்றி கொள்ளப்பட்ட சைப்பிரஸ் (கப்ரஸ்) நகரை ஆக்கிரமித்த கிறிஸ்தவர்கள் தமது வெற்றிக் கொண்டாட்டத்தை ஹிஜ்ரி 04 ஆம் நூற்றாண்டின் அரைவாசி வரை கொண்டாடினார்கள்.

இவர்கள் அல்லாஹ்வினுடையவும் அவனது தூதருடையவும் பரம எதிரிகளாகும். சிலுவைப் போராளிகள் புனித குத்ஸ் நகரையும் மற்ற நகர்களையும் கைப்பற்ற இவர்களே காரணமாக இருந்தனர்.

இவர்களின் சதியை முறியடிப்பதில் மாவீரர்களான நூறுத்தீன் ஸன்கி, மற்றும் ஸலாஹுத்தீன் அய்யூபி (ரஹ்) போன்றவர்களும் அவர்களின் தோழர்களும் முக்கிய பங்காளிகளாவர்.

கிறித்தவர்கள் ஏற்கனவே ஆக்கிரமித்திருந்த சிரியாவின் கரையோர பிரதேசங்களையும் எகிப்தையும் முஸ்லிம் படை வீரர்கள் மீட்டனர். பின்னர் அங்கு 200 வருடங்களுக்கும் மேலாக ஆட்சியும் செய்தனர்.

பின்னரும் இவர்கள் கிறிஸ்தவர்களோடு (ரகசிய) ஒப்பந்தங் கள் செய்தனர். இருந்தும் முஸ்லிம்கள் அவர்களுக்கு எதிராகப் போர் செய்து பல பிரதேசங்களை மீண்டும் வெற்றி கொண்டனர். இதன் காரணமாகவே சிரிய தேசத்திலும் எகிப்திலும் இஸ்லாம் பரவியது.

தாத்தாரியர்கள் பக்தாத் நகர்மீது படை எடுத்து, முஸ்லிம் மன்னர்களையும் கலீஃபாவையும் கொலை செய்தததும் இந்தக் கொடியவர்கள் ஊடாகவே நடந்தேறியது. நுஸைர் அத்தூஸி என்ற ஷீஆவாதி தாத்தாரிய ஹோலாகோஹானின் கைப்பொம்மையாக செயல்பட்டவன். இவனே அப்பாஸிய கலீஃபாவைக் கொலை செய்ய அவர்களுக்கு வழிகாட்டினான்.

இப்படிப்பட்டவர்களை அக்கால அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்கள் (மலாஹிதா), நாஸ்தீகர்கள், சமூகத்துரோகிகள், கராமிதா, பாதினிய்யா, இஸ்மாயீலிய்யா நுஸைரிய்யா, அல்ஹுர்ரமிய்யா, அல்முஹம்மரா போன்ற பல்வேறு பெயர்களில் அழைப்போராக இருந்தனர். (இப்னு தைமிய்யா)

இவர்களிடம் காணப்பட்ட தீய பண்பாடு பற்றி இமாம் இப்னு தைமிய்யா அவர்களின் பின்வரும் வாசகங்களைக் கவனியுங்கள்.

وَمِنْ أَعْظَمِ الْمَصَائِبِ عِنْدَهُمْ فَتْحُ الْمُسْلِمِينَ لِلسَّوَاحِلِ وَانْقِهَارُ النَّصَارَى ؛ بَلْ وَمِنْ أَعْظَمِ الْمَصَائِبِ عِنْدَهُمْ انْتِصَارُ الْمُسْلِمِينَ عَلَى التَّتَارِ . وَمِنْ أَعْظَمِ أَعْيَادِهِمْ إذَا اسْتَوْلَى – وَالْعِيَاذُ بِاَللَّهِ تَعَالَى – النَّصَارَى عَلَى ثُغُورِ الْمُسْلِمِينَ ((أسباب رفع العقوبة لشيخ الإسلام ابن تيمية – (٥٨ / ١)

முஸ்லிம்கள் ஷாம் (டமாஸ்கஸ்) பிரதேச கரையோரப் பிரதேசங்களை வெற்றி கொண்டு, கிறிஸ்தவர்கள் அங்கிருந்து பின் நோக்கி, தோல்வியை சந்திப்பது இவர்களுக்கு சகிக்க முடியாத பாரிய வேதனையாகும்.

இவர்களுக்கு அதை விடவும் பாரிய கவலை தரும் செய்தி என்னவெனில் தாத்தாரியர்களை முஸ்லிம்கள் வெற்றி கொண்டதாகும். முஸ்லிம்களின் படைமுகாம்களை கிறிஸ்தவர்கள் வெற்றி கொண்டால் இவர்களுக்கு இதைவிட வேறு கொண்டாட்டம் இருப்பதில்லை. (இப்னு தைமிய்யா) இதுவே நுஸைரிய்யாக்களின் உண்மை முகம் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அவர்களின் துரோக வரலாறு பற்றி ஆய்வாளர் முஹம்மத் ஸல்லாபி அவர்கள் எடுத்தெழுதுகின்ற போது,

تاريخ النصيريين ، تاريخ أسود ملطخ بالدماء ضد أهل السنة،وكانوا دائمًا خنجرًا مسمومًا في جنب الأمة الاسلامية، يتآمرون ضدها في الخفاء، ويظهرون لها العداء كلما وجدوا لذلك سبيلا، والتاريخ يشهد بأنهم كانوا دائمًا في تحالف مع أعداء الاسلام.

நுஸைரிய்யாக்களின் வரலாறு என்பது அஹ்லுஸ்ஸுன்னாக் களுக்கு எதிரான இரத்தக் கறைபடிந்த வரலாறாகும். அவர்கள் எப்போதும் இஸ்லாமிய உம்மத்தின் விலாவின் இரு பகுதியிலும் விஷம் ஏற்றப்பட்ட நச்சுக் கத்தியாகவே இருந்து வந்துள்ளனர்.

அந்த உம்மத்திற்கு, எதிராக மறைவாக சதிசெய்வார்கள். சந்தர்ப்பம் கிடைக்கும் போது வெளிப்படையாகவே அந்த உம்மத்திற்கு எதிராக தமது விரோதத்தை வெளிப்படுத்துவார்கள்.

அவர்கள் எப்போதும் இஸ்லாமிய உம்மத்தின் எதிரிகளோடு கைகோர்த்தே காலம் கடத்தியுள்ளனர் என்பதற்கு வரலாறு சாட்சி சொல்லும் எனக் குறிப்பிட்டுள்ளார்கள். (கலாநிதி: ஸல்லாபி).

இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் இவர்களின் செயல்பாடுகளை நன்கு அறிந்தவர் என்ற வகையில் இவர்கள் பற்றி பின்வரும் நூல்களில் இவர்கள் தொடர்பாக எச்சரிக்கை செய்துள்ளார் கள். படித்துப் பயன் பெறவும்.

((١)) إقامة الدليل على إبطال التحليل

((٢)) : أسباب رفع العقوبة عن العبد . تحقيق : علي بن نايف الشحود

((٣)) الفتاوى الكبرى .

((٤)) أحكام المرتد

**காலனித்துவ ஃபிரான்ஸ் படைகளோடு கைகோர்த்த நுஸைரிக்கள்:**

சிலுவைப் போராளிளை எதிர் கொண்ட அஸ்ஸன்கி, மற்றும் அய்யூபிய இஸ்லாமிய அரசுகளை நுஸைரிக்கள் சார்ந்து நின்று எதிர் கொண்டார்கள். ஷாமில் நுஸைரி அலவிக்களின் குடியிருப்புக்கள் வழியாகவே பிரஞ்சுப் படைகளும், சிலைவைப் போராளிகளும் உட்பிரவேசிக்க வழிவிட்டார்கள்.

பிரஞ்சு ஆக்கிரிமிப்பு படையினருக்கு துஸைரிக்களின் முக்கியஸ்தர்கள் 3.7.1936 ஆண்டு அனுப்பி வைத்த ஆவணப்பதிவு ஒன்றில் இவ்வாறு எழுதி இருந்தனர்:

رفع أعيان النصيريين مذكرة إلى الحكومة الفرنسية في ١٩٣٦/٧/٣ قالوا فيها: هل يجهل فرنسيو اليوم بأن حملات الصليبيين ماكان لها أن تنجح، وماكان لحصونها أن تبقى إلا في القسم الشمالي الغربي من سورية، أي في بلاد النصيرية، إننا أكثر الشعوب إخلاصا لفرنسا.

நமது ஒத்துழைப்பு இல்லையானால் சிலுவைப் போராளிகள் வெற்றி பெற்றிருக்கவே முடியாது. அத்துடன், அவர்கள் ஷாமின் வடமேற்கு மாகாகாண கோட்டைகள் மற்றும் நுஸைரிய்யாக்கள் வாழும் பிரதேசங்களில் மாத்திரம் தங்கி வாழ வேண்டிய நிலை வந்திருக்கும். இதனை பிரான்ஸ்காரர்கள் மறக்கலாமா? நாம்தான் அவர்களோடு மிக இதய சுத்தியோடு நடக்கும் மக்களாகும்.

ஆதாரம்:

المسلمون في سوريا"، ج٢، للأستاذ عدنان سعد الدين، المراقب العام السابق لجماعة الإخوان المسلمين في سوريا

http://www.alrased.net/main

நுஸைரிக்களுக்கும் இஸ்லாமியப் பிரதேச ஆக்கரிமப்பாளர் களான கொடிய பிரான்ஸ் காரர்களுக்கும் இடையில் காணப்பட்டது போன்ற தொரு நெருக்கமான உறவு இன்று பஷ்ஷார் ரஷ்யா, பஷ்ஷார் சீனா, பஷ்ஷார் ஈரான் என்ற உறவுகளை இன்றும் உறுதி செய்கின்றன.

கேடு கெட்ட இந்தக் கயவர்கள் மாவீரர் ஸலாஹுத்தீன் அய்யூபி (ரஹ்) அவர்களைப் படுகொலை செய்ய எடுத்த முயற்சிகள் தோல்வியில் முடிவடைந்தன.

அதனால் ஸலாஹுத்தீன் அய்யூபி (ரஹ்) அவர்கள் இவர்களைப் பதம் பார்த்த பின்பே யூதர்கள், மற்றும் சிலுவைப் போராளிகள் போன்றோரின் கதைகளை முடிக்க வேண்டும் என்றார்களாம்.

மற்றொரு சமகால நிகழ்வைப் பாருங்கள்,

2003 அமெரிக்கா ஈராக்கை ஆக்கியிமித்ததல்லவா? அப்போது தென் ஈராக்கில் இருந்து பாரிதொரு ஷீஆக்களின் மக்கள் ஊர்வலமொன்றில்,

انطلقت المظاهرات في القسم الجنوبي من العراق إثر احتلال الأمريكان للعراق عام ٢٠٠٣ يهتفون: (لا إمام إلا علي، ونريد حاكم جعفري)

அலிதான் எமது இமாம். ஜஃபர் ஸாதிக் கொழ்கைவாதி ஒருவரே நமக்குத் தலைமைப் பதவி வகிக்க வேண்டும் எனக் கோஷமிட்டனர்.

فلم يكن لأهل جبلة ناصر ولا منجد، وأمر المهدي أصحابه بخراب المســـاجد، واتخاذها خمارات،وكانوا يقولون لمن رأوه من المســلمين، قل: لا إله إلا علي، واسجد لإلهك المهدي الذي يحيي ويميت، حتى يحقن دمك. وهذا نفســه الذي وقع في عصــرنا لمدينة حماة عندما احتلها الطائفيون ووحدات من الجيش – الوحدات الخاصــةوســرايا الدفاع –وقتلوا من أهلها عشرات الألوف، بأساليب تقشعر من هولها الأبدان، وهجّروا زهاء مئةوخمسين ألفا مع أعداد كبيرة من المفقودين، ولاســيما من الفتيان والفتيات، أما من بقي على قيد الحياة، وعجز عن الرحيل، أو وقع في الأسر، فكان البغاة المتوحشـــون يقولون له: (اركع لحافظ أسد)، هذا ما تواترت به الروايات والأخبار.

ஷாம் தேசத்தின் மீது அல்காயிம் என்ற பாதினிய்யா மஹ்தி படையெடுத்த போது ஜபலா என்ற நகர மக்களுக்கு உதவியாளர்கள் மாரும் இருக்க வில்லை. மஹ்தி தனது படைகளிடம் பள்ளிகளைப் பாழாக்கி, அவற்றை மதுக்கடைகளாக மாற்றும்படி கட்டளை பிறப்பித்தான். அவர்கள் களத்தில் சந்திக்கின்ற முஸ்லிமை நோக்கி

قل: لا إله إلا علي، واسجد لإلهك المهدي الذي يحيي ويميت، حتى يحقن دمك.

உனது உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால் வணக்கத்திற்குரியவர் அலி (ؓ) அவர்களைத் தவிர வேறு ஒரு கடவுள் இல்லை என்று கூறிவிடு, மரணக்கச் செய்கின்ற, உயிர்ப்பிக்கின்ற உனது தற்கால கடவுளாகிய மஹ்திக்கு சுஜூத் செய்திடு எனக் கூறி மறுத்தவர்களைக் கொலை செய்து விடுவார்கள்.

இதுதான் தற்காலத்திலும் சிரியாவில் நடக்கின்றது. மாகாணத்தை (ஈரானிகள், ரஷ்யர்களின் உதவியோடு சிரியாவின் ஹமா பிரதேத்தை கொலைகாரன் பஷ்ஷார் கும்பல் அவனது விஷேட படை, மற்றும் விமானப் படை என்வற்றின் உதவியோடு ஆக்கிரமித்த போதும் பல்லாயிரம் முஸ்லிம்களைக் கொலை செய்தனர். அவர்களின் கொலைவெறியாட்டத்தை காணும் போது உடல்கள் நடுநடுங்கும், 150.000.00 ஒரு லெட்சித்தி ஐம்பணாயிரம் பேர்கள் அப்பிரதேசத்தில் இருந்து புலம் பெயர் அகதிகளாகினர். இன்னும் பலர் குறிப்பாக இளைஞர், யுவதிகள் பல நூறு பேர் வரை காணாமல் ஆக்கப்பட்டனர், நாட்டை விட்டும் வெளியேறிச் செல்ல முடியாத வயோதிபர்கள், மற்றும் கைதிகளாகப் பிடிக்கப்பட்டவர்களிடம் நீ ஹாபிழ் அஸதுக்கு (ருகூவு) சாஷ்டாங்கம் செய் என வீண்டிக் கொள்வர். இது (மஹ்திக்கதையல்ல) மக்கள் அனைவரும் அளிவித்த மறுக்க முடியாத உண்மையாகும்.

மேலும் வாசிக்க:
http://www.alrased.net/main/

مســـلمون في سوريا"، ج٢، للأستاذ عدنان سعد الدين، المراقب العام الســـابق لجماعة الإخوان المسلمين في سوريا

“அஹ்காமுல் முர்தத்” மதம் மாறியோர் தொடர்பாக இமாம் இப்னு தைமிய்யா அவர்களின் கருத்துக்களை ஒன்றிணைத்த நூலாக விளங்குகின்றது.

அதன் ஆசிரியர் அலி பின் நாயிஃப் அஷ்ஷஹ்ஹூத் அவர்கள் இவர்கள் தொடர்பாகவும் இவர்களின் உட்பிரிவுகள் சில தொடர்பாகவும் இமாம் இப்னு தைமிய்யாவின் கருத்தை பின்வருமாறு

பதிவு செய்துள்ளார்கள்.

هؤلاء [ الدرزية ] و [ النصـيرية ] كفار باتفاق المسـلمين، لا يحل أكل ذبائحهم، ولا نكاح نسائهم، بل ولا يقرون بالجزية؛ فإنهم مرتدون عن دين الإسلام، ليسوا مسلمين؛ ولا يهود، ولا نصـاري، لا يقرون بوجوب الصـلوات الخمس، ولا وجوب صوم رمضـان، ولا وجوب الحج، ولا تحريم ما حرم الله ورسوله من الميتة والخمر وغيرهما . وإن أظهروا الشـــهادتين مع هذه العقائد فهم كفار باتفاق المسلمين .(( أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – (2 ஃ 390)

துரூஸ், மற்றும் நுஸைரிய்யாப் பிரிவினர் முஸ்லிம்களின் ஏகோபித்த கருத்தின் படி காஃபிர்களாகும். அவர்கள் அறுக்கும் பிராணிகளை உண்ணுவதோ, அவர்களின் பெண்பிள்ளைகளை மணம் முடிப்பதோ கூடாது.

அது மட்டுமன்று, இவர்களிடம் காப்பு வரியான (ஜிஸ்யா) பெறுவதும் கூடாது. ஏனெனில், இவர்கள் இஸ்லாமிய மார்க்கத்தை விட்டும் மதம் மாறியோராகும். இவர்கள் முஸ்லிம்களோ, யூதர்களோ கிறிஸ்தவர்களோ அல்லர். (இவர்களோடு போர்தான் வழி)

இவர்கள் ஐங்காலத் தொழுகையின் கடமைகளையோ, ரமளான் கால நோன்பின் கடமையையோ, ஹஜ் கடமை என்பதையோ, அல்லாஹ்வும் அவனது தூதரும் உண்ணக் கூடாது என்பதை தவிர்ந்து கொள்பவர்களோ, அல்லாஹ் தடுத்தவைகளைத் தவிர்ந்து வாழ வேண்டும் என்றோ, மது மற்றும் போதைப் பொருள்கள் ஹராம் என்றோ அவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. இரு சாட்சியங்களைக் கொண்ட தூய திருக்கலிமாவை வெளிப்படையில் அவர்கள் சொன்னாலும் முஸ்லிம்களின் ஏகோபித்த முடிவின் படி அவர்கள் காஃபிர்களே!

أما طائفتا النصـيرية والدروز فقد كانتا على مر التاريخ والعصـور مصـدرًا لإثارة القلاقل وزعزعة الأمن والثورات المسـتمرة ضد الحكم الاسلامي، وعونًا للأعداء من الصـليبيين المستعمرين وغيرهم. ((الدولة العثمانية عوامل النهوض وأسباب السقوط – (2 ஃ 177))

நுஸைரிய்யாக்கள் மற்றும் அவர்களில் ஒரு பிரிவான துரூஸிகள் ஆகிய இரு பிரிவினரும் வரலாறு நெடுகிலும் குழப்பங்களைத் தோற்றுவிப்பதிலும் பாதுகாப்பை சீரழிப்பதிலும், இஸ்லாமிய அரசுக்கு எதிராக தொடராக புரட்சி செய்வதிலும் பிரதான ஊற்றுக் கண்ணாக விளங்கியதோடு, முஸ்லிம் நாடுகளை ஆக்கிரமிக்க வந்த சிலுவைப் போராளிகளான ஆக்கிரமிப்பாளர்கள், மற்றும் இஸ்லாமிய எதிரிகளுக்கு துணையாகவும் செயற்பட்டார்கள்.
(அஸ்ஷல்லாபி- அத்வல்தலுல் உஸ்மானிய்யா).

இந்த அடிப்படையை நடைமுறைப்படுத்தியே இவர்கள் இஸ்லாமியக் கடமைகளை பாழ்படுத்தும் இறைமறுப்பளார்களாக விளங்கினார்கள். இமாம் இப்னு தைமிய்யாவின் மற்றொரு விளக்கத்தைக் கவனியுங்கள்.

وَالْنُصَيْرِيَّةُ لَا يَكْتُمُونَ أَمْرَهُمْ , بَلْ هُمْ مَعْرُوفُونَ عِنْدَ جَمِـيعِ الْمُسْلِمِينَ , لَا يُصَلُّونَ الصَّلَوَاتِ الْخَمْسَ , وَلَا يَصُـومُـونَ شَهْرَ رَمَضَانَ , وَلَا يَحُجُّـونَ الْبَيْتَ , وَلَا يُؤَدُّونَ الزَّكَاةَ وَلَا يُقِرُّونَ بِوُجُوبِ ذَلِكَ , وَيَسْتَحِلُّـونَ الْخَمْرَ وَغَيْرَهَا مِنْ الْمُحَرَّمَاتِ , وَيَعْتَقِدُونَ أَنَّ الْإِلَهَ عَلِيُّ بْنُ أَبِي طَالِبٍ ((ابن تيمية \ قامة الدليل على إبطال التحليل – (3 ஃ 213)

நுஸைரிய்யாக்களின் காரியங்கள் முஸ்லிம்களிடம் மறைந்துள்ள மாய மந்திரமல்ல. மாறாக, அவர்கள் அனைத்து முஸ்லிம்களிடமும் யார் எனத் தெளிவாக அறியப்பட்டுள்ளனர். அவர்கள் ஐவேளை தொழமாட்டார்கள். ரமளான் மாதம் நோன்பு நோற்க மாட்டார்கள். கஃபா இல்லம் சென்று ஹஜ் செய்யமாட்டார்கள். ஸகாத் கொடுக்கவும் மாட்டார்கள். அது தார்மீகக் கடமை என்பதை அவர்கள் அங்கீகரிக்கவும் மாட்டார்கள். மதுவும், மாதும் மற்றும் பலதையும் இஸ்லாத்தில் தடுக்கப்பட்டதை ஹலால் என்பார்கள். அலி(ﷺ) அவர்களைத் தவிர வணக்கத்திற்கு தகுதியானவர் வேறு யாரும் இல்லை என அவர்கள் நம்புவார்கள். ( இமாம் இப்னு தைமிய்யா- இகாமதுத்தலீல்)

# நுஸைரிய்யாக்களின் நம்பிக்கைகள் சில

ഛഛ

ஷீஆக்களைப் போன்று இவர்களிடமும் விசித்திரமான நம்பிக்கைகள் உண்டு. அவற்றைப் பார்க்கின்ற போது ஷீஆக்களுக்கும் இவர்களுக்கும் இடையில இமாம் யார் என்பதில்தான் பிரச்சினைகள் இருப்பது போன்று தெரிகின்றது.

இவர்கள் அலி(ﷺ) அவர்களைக் கடவுள் என்றும், அவர்கள் மரணிக்காத கடவுளின் (அல்லாஹ்வின்) அவதாரம் என்றும், அவர்கள் மேகத்தில் இன்றும் உயிர் வாழ்வதாகவும் நம்புவதோடு இடி முழக்கம் அலி(ﷺ) அவர்களின் சப்தம் என்றும், மின்னல் வெளிச்சம் அவர்களின் புன்முருவல் என்றும் நம்புகின்றனர். مجموع مؤلفات تاريخ الرافضة

நுஸைரிய்யாக்கள் தமது நம்பிக்கைகளை சிறுவர்களுக்குப் போதிக்கும் முறை பற்றி விளக்கும் இமாம் மிக்ரீஸி அவர்கள் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்.

وهو أن الصـــــبي إذا بلغ الحلم عملت له وليمة، فإذا اجتمع الناس وأكلوا وشربوا حلفوا الصبي أربعين يمينًا على كتمان ما يودع من الذهب، ثم يعلمونه مذهبهم وهو إلهية علي بن أبي طالب، وأن الخمر حلال، وأن تناســـــخ الأرواح حق، وأن العالم قديم، والبعث بعد الموت باطل، وإنكار الجنة والنار، وأن الصـلوات خمس وهي إسماعيل وحسـن وحسـين ومحسـن وفاطمة، ولا غسـل من جنابة، بل ذكر هذه الخمسـة يغني عن الغسـل وعن الوضوء، وأن الصـيام عبارة عن ثلاثين رجلًا وثلاثين امرأة ذكروهم في كتبهم، وأن إلههم علي بن أبي طالب خلق السـمـــوات والأرض، وهو الرب، وأن محمدًا هو الحجاب وسلمان هو الباب. (( السـلوك لمعرفة دول الملوك – (١ / ٤١١)) المؤلف : أبو العباس أحمد بن علي بن عبد القادر، الحسيني العبيدي، تقي الدين المقريزي (المتوفى : ٨٤٥ هـ

சிறுவன் ஒருவன் அவனது பருவ வயதை அடைகின்ற போது அவனுக்காக ஒரு விருந்துபசாரம் ஏற்பாடு செய்யப்படும். மக்கள் அனைவரும் அங்கு கூடி உண்டு குடித்ததும் அந்தச் சிறுவனை அழைத்து அவனிடம் வைப்புச் செய்யப்படும் நகையை யாருக்கும் காட்ட மாட்டேன் என்பதாக நாற்பது தடவைகள் சத்தியவாக்குப் பெறுவார்கள். பின்னர் அவனுக்கு தமது கொள்கையை அதாவது அலி (ﷺ) அவர்கள் கடவுள்தன்மை உள்ளவர், மது ஆகுமானது, மரணத்தின் பின்னர் மறுபிறவி என்பது உண்மை, இந்த உலகம் பழைமையானது, அதாவது அது மீண்டும் மீண்டும் அழியும் தன்மை கொண்டது. (அதனால் அல்லாஹ் என்பவன் பொய்), மரணத்தின் பின்னால் எழுப்பப்படுதல் என்பது அசாத்தியமானது, சுவர்க்கம் மற்றும் நரகத்தை நம்ப முடியாது, தொழுகைகள் என்பது இஸ்மாயீல் (அவர்களின் பிரதான இமாம்) ஹஸன், ஹுஸைன், முஹ்ஸின், பாதிமா ஆகிய ஐவரின் பேரைக் குறிக்கும் எனப் போதிப்பார்கள்.

கடமையான குளிப்பு என்பது இல்லை, மேற்படி ஐவரின் பெயர்களை மட்டும் மனனம் செய்வதால் குளிப்புக் கடமைக்கும் உழுச் செய்வதற்கும் அது போதுமானது, நோன்பு என்பது தமது வேதப் புத்தகத்தில் இடம் பெறும் தமது அங்கத்தவர்களின் முப்பது பெயர்களைக் குறிக்கும். தமது ஆன்மீகக் கடவுள் வானங்களையும் பூமியையும் படைத்த அலி அவர்களைத் தவிர வேறு யாரும் இல்லை. அவரே இரட்சகர். அவருக்குத் திரையாக இருப்பவர் முஹம்மத் நபி(ﷺ) அவர்கள். அதற்கு வாயிலாக விளங்குபவர் ஸல்மான் (அல்பாரிஸி (ﷺ) அவர்கள் என்று அந்த சிறுவருக்குப் போதிப்பார்கள். (இமாம் மிக்ரீஸி– அஸ்ஸுலூக் லி மஃரிஃபத்தி துவலில் முலூக்)

பிரசித்த பெற்ற வரலாற்று ஆசிரியர்களில் ஒருவரான இமாம் இப்னுல் அஸீர் (ரஹ்) அவர்கள் தனது அல்காமில் என்ற நூலில் ஹிஜ்ரி 322 ஆம் ஆண்டு தொடர்பான நிகழ்வு பற்றி விபரிக்கின்ற போது வழிகேடர்களான நுஸைரிய்யா பிரிவினரின் கொள்கை கோட்பாடுகள் பற்றியும் பின்வருமாறு விரிவாக விபரித்துள்ளார்கள்.

ويقولون أنّ الملائكة كلّ من ملك نفســه، وعرف الحقّ، وإنّ الجّنة معرفتهم وانتحال مذهبهم، والنار الجهل بهم، والعدول عن مذهبهم ويعتقدون ترك الصـــلاة والصــــيام وغيرهما من العبادات، ولا يتناكحون بعقد،

ويبيحون الفروج، ويقولون إنّ محمّدًا، صـــلى الله عليه وســـلم، بعث إلى كبراء قريش وجبابرة العرب، ونفوسهم أبّية، فأمرهم بالسـجود، وإنّ الحكمة الآن أن يمتحن الناس بأباحة فروج نسـائهم، وإنه يجوز أن يجامع الإنســـان من شاء من ذوي رحمه، وحرم صديقه، وابنه، بعد أن يكون على مذهبه، وإّنه لا بّد للفاضل منهم أن ينكح المفضـــول ليولج النور فيه، ومن امتنع من ذلك قُلب في اللور الذي يأتي بعد هذا العالم امرأةً، إذ كان مذهبهم التناسـخ، وكانوا يعتقدون أهلاك الطالبّيين والعّباسـّيين، تعالى الله عّما يقول الظالمون والجاحدون علوًّا كبيرًا. (( الكامل في التاريخ – (٣ / ٤٥٦ (**المؤلف : عز الدين أبو الحسن علي بن محمد بن عبد الكريم الجزري المعروف ب " ابن الأثير**

மலக, மல்லக என்ற அரபுச் சொல் ஒருவர் தன்னிடம் சொந்தமாக ஒரு பொருளை, அல்லது ஆட்சியை வைத்துக் கொள்வதைக் குறிக்கும். அவ்வாறே மலக், மலாயிகா என்பது ஒருவர் தன்னை அறிந்து, அவரை அடக்கமாக வைத்துக் கொள்வதைக் குறிக்கும் (அதாவது மலக்குகள் என்பது பொய்யாகும்). ஒருவர் அடக்க ஒழுக்கமாக வாழ்வதுதான் மலக் என்பதன் பொருளாகும்.

சுவர்க்கம் என்பதும் அவர்களைப் பற்றி அறிவதும் அவர்களின் மதமுறைப்படி நடப்பதும், நரகம் என்பது தம்மைப் பற்றிய அறியாமை, தமது கோட்பாட்டு முறையில் இருந்து தடம்புரளுதல் என விளக்கும் இவர்கள் தொழுகை, நோன்பு போன்ற இன்னபிற உயர்ந்த வணக்க கடமைகளை முஸ்லிம்கள் போன்று செய்யாது விடுவது அவசியம் என நம்புகின்றனர்.

அவர்கள் உடன்படிக்கை செய்து திருமணம் செய்ய மாட்டார்கள், விபச்சாரத்தை ஆகுமாக்குவார்கள், முஹம்மத் நபி(ﷺ) அவர்கள் குரைஷியரில் உள்ள பெருமைக்காரர்கள், அரேபிய அடங்காப்பிடாரிகளுக்கே அனுப்பப்பட்டார்கள். அவர்களின் மனங்கள் அவர்களை மறுத்தே இருந்தன. அதனால் அவர்கள் சுஜூத் செய்யுமாறு கட்டளை இட்டார்கள்.

இப்போதுள்ள காலத்தின் தத்துவக் கோட்பாடு என்னவெனில் மனிதர்கள் தமது மனைவியரின் மர்மஸ்தான உறுப்புக்களைக் கொண்டு சோதிக்கப்பட்டதாகும். (அதாவது அவர்களைப் பிறருக்கு தாரை வார்ப்பது கொண்டு சோதிக்கப்பட்டுள்ளனர். கொடுக்க அனுமதித்தால் அவர்கள் வெற்றி பெற்றவர்கள்) ஒரு மனிதன் தான் விரும்பும் தனது உறவினர்களோடு தனது நண்பனின், மகனின் மனைவியரோடு தாராளமாக உறவு கொள்ளலாம்.

இவை இந்தக் கொள்கையை மனதளவில் ஏற்ற பின்பே நடக்க வேண்டும்! இந்தப் பிரசாரம் மக்களிடம் பரவுவதற்காக இந்தக் கொள்கையில் உயர் நிலையில் இருக்கும் ஒருவர் அதில் உள்ள சாதாரண தரத்தவருக்கு திருமணம் செய்து வைக்க வேண்டும். யாராவது அதனை நடைமுறைப்படுத்தாது தடுத்துக் கொண்டால் இந்த உலகின் மறு உலகப் பிறப்பில் அவர் பெண்ணாக மாற்றப்படுவார்.

அதாவது தமது மறுபிறவிக் கோட்பாட்டின் படி அழிவைத் தேடிக் கொண்ட தாலிபீன்கள் (ஜஃபர் பின் அபீ தாலிப், மற்றும் அகீல் பின் அபீதாலிப்) பரம்பரையினரையும் அப்பாஸியர் பரம்பரையினரையும் சேர்ந்து நாசமாகப் போனவர்களாக கணிக்கப்படுவர் என உண்மைக்குப் புறம்பாக இவர்கள் மக்களை எச்சரித்து நம்பிக்கை கொள்கின்றனர்.

அநியாயக்காரர்களான இந்த இறை மறுப்பாளர்களின் உண்மைக்குப் புறம்பான இவ்வாறான தீய நம்பிக்கைகளை விட்டும் அல்லாஹ் உயர்ந்தவன். (அல்காமில்– அல்இமாம் இப்னுல் அஸீர்)

அலி பின் அபீ தாலிப்(ؓ) அவர்களைக் கொலை செய்த அப்துர் ரஹ்மான் பின் முல்ஜிமை நுஸைரிய்யாக்கள் கௌரமான ஒருவனாக நோக்குவதாக இமாம் ஸலாஹுத்தீன் அஸ்ஸபதி அவர்கள் மற்றொரு பதிவைத் தருகின்றார்கள்.

**عبد الرحمن بن ملجم المرادي، قاتل علي بن أبي طالب رضي الله عنه . قرأ القرآن على معاذ بن جبل وكان من العباد، وقيل أن عمر بن الخطاب رضـــي الله عنه كتب إلى عمرو بن العاص أن قرب إلي دار عبد الرحمن بن ملجم ليعلم الناس القرآن والفقه فوسـع له مكان داره، ثم كان من شـيعة علي بن أبي طالب بالكوفة وشـهد معه صـفين، ثم فعل ما فعل. وهو عند الخوارج من أفضل الأمة وكذلك النصيرية يعظمونه. قال ابن حزم: يقولون أن ابن ملجم أفضل أهل الأرض لأنه خلص روح اللاهوت من ظلمة الجسـد وكدره، وعند الروافض أنه أشقى الخلق في الآخرة، وهو عندنا أهل السـنة من نرجو له النار، (( الوافي بالوفيات – (٦ / ١١١ المؤلف : صلاح الدين خليل بن أيبك الصفدي (المتوفى : ٧٦٤ هـ)**

அலி (ؓ) அவர்களைக் கொலை செய்த அப்துர்ரஹ்மான் பின் முல்ஜிம் முஆத் பின் ஜபல்(ؓ) அவர்களிடம் குர்ஆனைக் கற்றவன்.

அவன் வணக்கசாலிகளில் ஒருவனாகவும் இருந்தான்.

இவனது குர்ஆன் பாடசாலை இடப் பற்றாக்குறை காரணமாக அது நெருக்கடியானதாக இருந்ததாகவும் மக்களுக்கு குர்ஆன், பிக்ஹ் போன்ற பாடங்கள் நடத்த அதனை விசாலப்படுத்திக் கொடுக்கும் படியும் கூறியும் கூஃபாவின் கவர்னராக இருந்த அம்று பின் ஆஸ்(ரழி) அவர்கள் உமர் பின் கத்தாப்(ரழி) அவர்கள் கடிதம் அனுப்பி இருந்தார்களாம்.

இவன், அலி(ரழி) அவர்களின் அணியில் இணைந்து அவர்களோடு சிஃப்பீன் போரில் பங்கெடுத்தான். பின்னர் ஹவாரிஜ் களோடு இணைந்து அவன் செய்ய வேண்டிய கலீஃபாவின் கொலை அட்டகாசத்தைப் புரிந்தான். இவனை நுஸைரிய்யாக்கள் கண்ணிய மான ஒருவனாகப் பார்க்கின்றனர்.

இதற்கு விளக்கம் தரும் அறிஞர் இப்னு ஹஸ்ம் அவர்கள், இப்னுல் முல்ஜிம் இவர்களால் இந்த பூமியில் சிறந்த மனிதனாக பார்க்கப்படுவதற்கான காரணம் என்னவெனில் இவன் கடவுளின் உயிரை அநியாயம், மற்றும் அழுக்கில் இருந்து சுத்தப்படுத்தியவன் என்ற அவர்களின் நம்பிக்கையாகும் எனக் குறிப்பிடு கின்றார்கள்.

மறுமையில் இவன் துர்பாக்கியசாலியாக இருப்பான் என ராபிழாக்களான ஷீஆக்கள் நோக்குகின்ற அதே வேளை அஹ்லுஜஸ் ஸுன்னாக்களாகிய நாம் இவனுக்கு நரகம் கிடைப்பதையே ஆதரவு வைக்கின்றோம் எனக் குறிப்பிட்டுள்ளார்கள். (அல்வாஃபி வபில்-வஃபயாத். அல்இமாம் ஸபிய்யுத்தீன் அஸ்ஸஃபதி)

இது போன்ற இன்னும் பல சான்றுகள் நுஸைரிய்யாக்களின் கோர முகங்கள், அவர்களின் கொள்கையில் காணப்படும் நாஸ்தீகத் தன்மை, இறை நிராகரிப்பு என அனைத்தையும் மிகவும் துல்லியமாக விளக்கி அவர்கள் காஃபிர்கள் என்பதை இரண்டாவது கருத்துக்கு இடமில்லாதவாறு இமாம்கள் தெளிபடுத்தி இருப்பதை நோக்க முடிகின்றது.

சமகால இயக்க உறுப்பினர்கள் மத்தியில் காணப்படும் எல்லை மீறிய போக்குகள் இப்னுல் முல்ஜிமை நினைவுபடுத்துகின்றது!



55

# மெய்சிலிர்க்கும் இமாம் இப்னு கஸீர்(ரஹ்) அவர்களின் பதிவு

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் ஹிஜ்ரி 717 ஆம் ஆண்டு இது தொடர்பான வரலாற்றுப் பதிவில் நுஸைரிய்யாக்கள் பற்றிய குறிப்பில் அவர்கள் அரங்கேற்றிய சமூகக் கொடுமைகளை பின்வருமாறு பதிவு செய்கின்றார்கள்.

وفي هذه السنة خرجت النصيرية عن الطاعتو كان من بينهم رجل سموه محمد بن الحسن المهدي القائم بأمر الله، وتارة يدعي علي بن أبي طالب فاطر السموات والارض، تعالى الله عما ؟ يقولون علوا كيرا. وتارة يدعي أنه محمد بن عبد الله صاحب البلاد، وخرج يكفر المسلمين وأن النصيرية على الحق، واحتوى هذا الرجل على عقول كثير من كبار النصيرية الضلال، وعين لكل إنسان منهم تقدمة ألف، وبلادا كثيرة ونيابات، وحملوا على مدينة جبلة فدخلوها وقتلو خلقا من أهلها، وخرجوا منها يقولون لا إله إلا علي، ولا حجاب إلا محمد، ولا باب إلا سلمان،

ஹிஜ்ரி 717 ஆம் ஆண்டு நுஸைரிய்யாக்கள் தம்மை கலீஃபாவின் கட்டுப்பாட்டை விட்டும் விலக்கிக் கொண்டனர். இவர்களில் ஒருமனிதன் இருந்தான். அவனுக்கு முஹம்மத் பின் அல்-ஹஸன் என்று பெயர் சூட்டிக் கொண்டனர்.

அவனை ஒரு தடவை எதிர்பார்க்கப்பட்ட அல்மஹ்தி என்றும், அல்காயிம் பிஅம்ரில்லாஹ் அல்லாஹ்வின் கட்டளைக்கு அடிபணிபவர், நிலையானவர் என்றும் அவர்கள் அவனுக்கு பெயர் சூட்டினர்.

இவன் வானங்கள், மற்றும் பூமியைப் படைத்தவர் அலி பின்

அபீதாலிப்(ﷺ) அவர்களாகும் என்றும் வாதிட்டான். (இவர்களின் அபத்தங்களில் இருந்து அல்லாஹ் மிக்க உயர்ந்தவன்).

இவன் ஒரு முறை தானே இப்பிரதேசங்களை ஆள எதிர் காலத்தில் வரவிருக்கும் மஹ்தி முஹம்மத் பின் அப்தில்லாஹ் என்றும் வாதிட்டு அவனை நம்ப மறுக்கின்ற அக்கால முஸ்லிம்களை காஃபிர்கள் என்றும், நுஸைரிய்யாக்கள் சத்திய வழியில் இருப்பதாகவும் வாதிட்டான்.

இவன் வழிகேடர்களான பல கிறிஸ்தவர்களின் மனங்களில் பெரிய அளவு இடம் பிடித்திருந்தான். அவர்களில் உயர் நிலையில் உள்ள, வழிகேட்டில் மூழ்கித் திளைத்த ஒவ்வொரு கிறிஸ்தவருக்கும் ஆயிரம் (தீனார்) கொடுப்பனவை நிர்ணயித்ததோடு அவர்கள் பலரை பல பிரதேசங்களுக்கு பிரதிநிதிகளாகவும் நியமித்தான். இந்த நுஸைரிகள் ஜபலா என்ற நகர் மீது அவர்கள் போர் தொடுத்து அங்குள்ள பல மக்களை ஈவிரக்கமின்றிக் கொலை செய்தனர். அங்குள்ள மக்கள்

لا إله إلا علي، ولا حجاب إلا محمد، ولا باب إلا سلمان،

வணக்கத்திற்குரியவர் அலி அவர்களைத் தவிர வேறு எவரும் இல்லை, முஹம்மத் நபியைத் தவிர அவருக்கு வேறு யாரும் திரை இல்லை, ஸல்மான் (அல் பாரிஸி) அவர்களைத் தவிர வேறு யாரும் அவரின் வாயிலாக இல்லை எனக் கூறிக் கொண்டு வெளியேறினர் எனக் குறிப்பிடும் இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள்

سبوا الشـــــيخين، وصاح أهل البلدوا إسلاماه، واسلطاناه، وا أميراه، فلم يكن لهم يومئذ ناصر ولا منجد، وجعلوا يبكون ويتضـــرعون إلى الله عزوجل، فجمع هذا الضـــال تلك الاموال فقسمها على أصحابه وأتباعه قبحهم الله أجمعين.

இவர்கள் இரு கலீஃபாக்களையும் திட்டித் தீர்த்தார்கள், ஊர் மக்கள் இஸ்லாத்திற்கு ஏற்பட்ட கேடே! துருக்கிய சுல்தானுக்கு நேர்ந்திட்ட கதியே! பொறுப்பாளருக்கு ஏற்பட்ட சலனமே! என்றெல்லாம் கூச்சலிட்டார்கள்.

அப்போதெல்லாம் அவர்களுக்கு உதவுவோரோ ஆபத்தில் அவர்களுக்கு கைகொடுப்போரோ இருக்கவில்லை. அம்மக்கள், அழுது அங்கலாய்த்து அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தார்கள்.

இந்த வழிகேடன் அங்குள்ள செல்வங்கள், சொத்துக்களை எல்லாம் ஒன்று திரட்டி தனது தோழர்களுக்கும், தனது ஆதரவாளர் களான அடிவருடிகளுக்கும் பங்கு வைத்துக் கொண்டிருந்தான். அல்லாஹ் அவர்கள் அனைவரையும் சீரழிப்பானாக! எனக் குறிப்பிட்ட பின்னர்,

وقال لهم لم يبق للمسلمين ذكر ولا دولة، ولو لم يبق معي سوى عشرة نفر لملكنا البلاد كلها. ونادى في تلك البلاد إن المقاسمة بالعشـر لا غير ليرغب فيه، وأمر أصحابه بخراب المسـاجد واتخاذها خمارات،وكانوا يقولون لمن أسروه من المسلمين: قل لا إله إلا علي، واسجد لآلهك المهدي، الذي يحيي ويميت حتى يحقن دمك.

அத்தோடு அவன், அவர்களிடம் இப்போது முஸ்லிம் என்ற பெயர் நாமமோ, அல்லது தேசமோ இங்கில்லை. என்னோடு வெறும் பத்துப் பேர்கள்தான் இருக்கின்றனர் என்றால் நான் இந்த தேசங்கள் அனைத்தையும் எனது ஆளுகைக்குள் இருக்கின்ற பத்துப் பேர்களுக்கே பகிர்ந்தளிப்பேன். அவர்கள் அல்லாத வேறு யாருக்கும் அதில் பங்கில்லை.

அதாவது பத்துப் பேர்களைக் கொண்டுதான் பங்கீடு என்றும் வேறு யாருக்கும் அதில் பங்கில்லை என்றும் குறிப்பிட்ட பின் அவன் பள்ளிவாயில்களைப் பாழ்படுத்தி அவற்றை மதுக்கடைகளாக மாற்றும் படி கட்டளையிட்டான். அவனது படைகள் தாம் கைது செய்யும் முஸ்லிமிடம்,

قل لا إله إلا علي، واسـجد لآلهك المهدي، الذي يحيي ويميت حتى يحقن دمك ويكتب لك فرمان،

‘நீ உனது உயிரைப் பாதுகாத்துக் கொள்ள, வணக்கத்திற்கு தகுதியானவர் அலி அவர்களைத் தவிர வேறு ஒரு கடவுள் இல்லை

என்று கூறி விடு என்றும், மரணிக்கச் செய்கின்ற, உயிர் கொடுக்கின்ற உனது இந்த மஹ்திக்காக சுஜூத் செய் என்றும், அதற்காக உனக்கு பாதுகாப்பு உத்தரவாதக் கடிதமும் எழுதித் தரப்படும்" என்றும் கூறுவார்கள்.

இவனது படையினரை சந்தர்ப்பம் பார்த்திருந்த முஸ்லிம் படை ஒன்று அவர்களுக்கு எதிராகப் போரடியது பற்றிப் பேசும் இமாம் இப்னு கஸீர் அவர்கள்,

وتجهزوا وعملوا أمرا عظيما جدا،فجردت إليهم العساكر فهزموهم وقتلو منهم خلقا كثيرا، وجما غفيرا، وقتل المهدي أضلهم وهو يكون يوم القيامة مقدمهم إلى عذاب السعير، كما قال تعالى (ومن الناس من يجادل في الله بغير علم ويتبع كل شيطان مريد، كتب عليه أنه من تولاه فإنه يضله ويهديه إلى عذاب السعير. ((البداية والنهاية – (١٤ / ٩٥))

அவர்கள் தம்மைத் நன்றாகத் தயார்படுத்திக் கொண்டு பிரமாண்டமான சாதனை நிகழ்வொன்றைச் செய்தார்கள். அவர்களின் பக்கம் பாரிய படை நகர் ஒன்றை உருவாக்கி அவர்களைத் தோற்கடித்து, பலரைக் கொலையும் செய்தார்கள். அவர்களின் மிகப் பெரிய வழிகேடனாக இருந்த பொய் மஹ்தியும் கொலை செய்யப்பட்டான்.

"அல்லாஹ்வின் விஷயத்தில் அறிவின்றி தர்க்கம் செய்வோர் மனிதர்களில் உள்ளனர். அவன் கட்டுக்கடங்காத ஒவ்வொரு ஷைத்தானையும் பின்தொடர்வான். எவன் அவனைத் தோழனாக்கிக் கொண்டானோ அவனை அவன் வழிகெடுத்து, பின்னர் அவனை எரியும் நெருப்பில் கொண்டு சேர்த்து விடுவான் என்பது எழுதப்பட்டதாகும் என்று அல்லாஹ் குர்ஆனில் கூறுவது போன்று இந்த வழிகேடன் மறுமையில் கொழுந்து விட்டெரியும் நரக அணித்தலைவராக முதலாவது இடத்தில் இருப்பான் எனக் குறிப்பிடுகின்றார்கள். (இமாம் இப்னு கஸீர்- அல்பிதாயா வந்நிஹாயா).

கலீஃபாக்களைத் திட்டி முஸ்லிம்களுக்கு அட்டூழியம் புரிந்தது பற்றி விபரிக்கின்ற இமாம் ஸஹபி (ரஹ்) அவர்கள் இவ்வாறு கருத்துக்களைப் பகிர்ந்து கொள்கின்றார்கள்.

ولعنوا الشيخين، وخربوا المساجد وكانوا يحضرون المسلم إلى طاغيتهم ويقولون: اسجد لإلهك. فسار إليهم عسكر طرابلس وقتل الطاغية وجماعة وتمزقوا. وفيها أعيدت إمرة العرب إلى مهنا. ((العبر في خبر من غبر (٤ / ٤٦ \ المؤلف : أبو عبدالله محمد بن أحمد بن عثمان بن قايماز الذهبي

இந்த மஹ்தி என்பவனது பிரிவினர் (அபூபக்கர், உமர்(ﷺ) ஆகிய) இருபெரும் கலீஃபாக்களையும் சபித்தனர். பள்ளிகளை பாழாக்கினர். அவர்களின் வழிகேடனாகிய தாகூத்திடம் ஒரு முஸ்லிமைக் கொண்டு வந்து "நீ உனது கடவுளாகிய இவனுக்கு சுஜூத் செய்" எனக் கூறி அநியாயம் இழைத்துக் கொண்டிருந்த போது (துராபில்ஸ் எனப்படும்) திரிப்போலியில் இருந்து முஸ்லிம் படை ஒன்று தயாராகி அவனது கூட்டத்தினரின் முகாம் மீது தாக்குதல் தொடுத்தன் பயனாக அந்தக் கொடிய வம்பன் கொல்லப்பட்டான். அவனது சேனைகள் சின்னாபின்னமாகினர். (இமாம் ஸஹபி- அல்இபர்)

தற்காலத்தில் காஃபிர்களோடு கைகோர்த்து முஸ்லிம் மக்களைக் கொலை செய்யும் ஈரான், சிரியா, ஹிஸ்புல்லாஹ், ஷீஆக்கள் இதே வழியில் தமது செயற்பாடுகளை இன்று வரை முன்னெடுப்பது பற்றி தூர நோக்கு, ஐக்கியம், நவீன இஸ்லாம், நவீன மதாஜித் போன்ற வார்த்தைகளால் முஸ்லிம் சமூகத்தை வழிகெடுப்போர் பற்றி முஸ்லிம்கள் அவதானமாக இருக்க வேண்டும்.

# பொய்யன் மஹ்தி முஹம்மத் பின் ஹஸனின் இறுதி முடிவு பற்றி இமாம்கள்

55

பொய்யன் மஹ்தி முஹம்மத் பின் ஹஸனின் இறுதி முடிவு பற்றி இமாம் மிக்ரீஸி (ரஹ்) அவர்கள் இப்படிக் குறிப்பிடுகின்றார்கள்.

فجرد إليه نائب طرابلس الأمير شــــهاب الدين قرطاي الأمير بدر الدين بيليك العثماني المنصوري على ألف فارس فقاتلهم إلى أن قتل الدعي ... (( السلوك لمعرفة دول الملوك – (١ / ٤١٠ ) \ المؤلف : أبو العباس أحمد بن علي بن عبد القادر، الحسيني العبيدي، تقي الدين المقريزي

அப்பாஸியப் ஆட்சியாளர் அல்மன்சூரின் பரம்பரையில் வந்த உஸ்மானிய கலீஃபாக்களின் வழி வந்த தராபில்ஸ் தலைவராக இருந்த (அல்அமீர்) ஷஹாபுத்தீன் கிர்தாய் என்பவர் ஆயிரம் குதிரை வீரர்களோடு வந்து இவர்களுக்கு எதிராகப் போராடினார். இறுதியில் அந்தப் பொய்யன் கொல்லப்பட்டான். (இமாம் மிக்ரீஸி– அஸ்ஸுலூக் லி மஃரிஃபத்தி துவலில் முலூக்).

இமாம் ஸஃபதி அவர்கள் இவ்வாறு பதிவு செய்துள்ளார்கள்.

... ثم إن العسكر الطرابلسي ركب معهم إليهم فأبادوهم، وقتلوا منهم جماعة وقُتل كبيُرهم المذكور، وأراح الله منهم. ((أعيان العصر وأعوان النصر \ المؤلف : صلاح الدين خليل بن أيبك الصفدي))

பின்னர் திரிப்போலிய (தராபில்ஸ்) நகரத்தில் இருந்து தமது உஸ்மானியப் படைத் தளபதியோடு வந்த சிப்பாய்கள் இவர்களைத் தாக்கி முழுமையாக அழித்தொழித்தார்கள். அவர்களில் பலரைக் கொலை செய்தார்கள். மேற் கூறப்பட்ட தலைவன் இந்தப் போரில் கொல்லப்பட்டான். இவர்களின் தொல்லையில் இருந்து அல்லாஹ் மக்களை நிம்மதிப் பெருமூச்சு விடச் செய்தான். ( இமாம் ஸலாஹுத்தீன் அஸ்ஸஃபதி– அஃயானுல் அஸ்ர்)

இங்கு நாம் ஆழமாக சிந்திக்க வேண்டிய விஷயம் என்ன வென்றால் இந்த முஹம்மத் பின் அல் ஹஸன் என்பவன் தான் ஒரு பொய் மஹ்தியாக இருந்தும் மக்கள் தன்னை ஒரு கடவுளாக நம்ப வேண்டும் என்றும், இல்லாத போது நான் அவர்களை அழிப்பேன் என்ற மமதையில் பல்லாயிரக்கணக்கான சுன்னா முஸ்லிம்களின் உயிர்கள் வீணாக ஓட்டி தனது இரத்த தாகத்தைத் தீர்த்துக் கொண்டான்.

இவ்வாறான கொடுமைகள்தான் நமது சுன்னா முஸ்லிம் களுக்கு எதிராக மத்திய கிழக்கு நாடுகளான சிரியா, ஈராக், ஈரானிய அஹ்வாஸ் மாகணம் போன்ற பிரதேசங்களில் ஷீஆக் கொடுங் கோலர்களால் அரங்கேற்றப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

**நுஸைரிய்யாக்கள் வாழும் பிரதேசங்கள்.**

சிரியா லாஸிதிகிய்யா மலைத் தொடர்கள், ஹமாத், ஹிம்மஸ். இஸ்கந்தந்ரூனிய்யா, தர்தூஸ், மற்றும் தற்போதைய துருக்கி, குர்திஸ்தான் மற்றும் அதை அண்டிய பிரதேசங்கள்.

**குறிப்பு :**

**இவர்களின் நம்பிக்கை சார்ந்த அனைவரும் நுஸைரிகள் என்றே அடையாளப்படுத்தப் படுவார்கள்.**

# துரூஸிய்யா பிரிவின் "துரூஸ்" பிரிவினர்

٧٧

**சொல் விளக்கம்:**

தர்ஸ் என்பது ஆடை தைப்பதைக் குறிக்கும் பாரஸீக மொழிச் சொல்லாகும். துரூஸ்கள் என்போர் தையல் தொழில் செய்பவர்கள் எனப் பொருள்படும்.

**இஸ்லாமிய வழக்கில்:**

வெளிப்படையில் தம்மை இஸ்லாமியர்களாக அடையாளப் படுத்திக் கொண்டு கிரேக்க தத்துவியலாளர்களான பைதகரஸ், அரிஸ்டோட்டில், பிளேட்டோ போன்றவர்களின் தத்துவங்களை மறைமுகமாக நம்பிக்கை கொண்டு அவர்களின் போதனைகளை இஸ்லாமிய உலகில் நடைமுறைப்படுத்தும் மறைமுகமான ஒரு சமூகமாகும்.

**தோற்றம் :**

துரூஸ் அல்லது துரூஸிய்யாப் பிரிவினரின் தோற்றம் பற்றி விளக்கும் அல்லாமா இஹ்ஸான் இலாஹி ழஹீர் என்பவர் பின்வரும் கருத்துக்களை முன்வைக்கின்றார்கள்.

وكانت نشأتها أيام الحاكم بأمر الله الفاطمي الذي تولى ملك مصر بعد وفاة أبيه سنة ٣٨٦هـ وكان عمره آنذاك أحد عشر عامًا ، واستقل به سنة ٣٩٠هـ بعد قتل أحد الأوصياء عليه (( الشيعة والتشيع –فرق وتاريخ – (١ / ٢٢٤ )) العلامة إحسان إلهي ظهير ))

தனது தந்தையின் மரணத்தின் பின்னால் ஹிஜ்ரி 386 இல் எகிப்தின் ஆட்சிக்கு வந்த யூதன் அல்ஹாகிம் பிஅம்ரில்லாஹ் என்பவரின் ஆட்சிக் காலத்தில் துரூஸிகளின் தோற்றம் இருந்ததாக ஆய்வார்கள் சுட்டிக்காட்டுகின்றனர். அப்போது அந்த ஆட்சியாளனின் வயது பதின் ஒன்றாக இருந்தது. இவன் ஹிஜ்ரி 390 ஆம் ஆண்டு அவனது நெருக்கமான சீடர்கள் ஒருவனால் கொல்லப்படும் வரை வரை ஆட்சியில் அமர்ந்தான். (அல்லமா இஹ்ஸான் இலாஹி ளஹீர்).

**கொள்கை ஸ்தாபகர்:**

துரூஸிகளின் மதக் கோட்பாடுகளை தோற்றுவிப்பதில், حمـــــزة بن علـــــي بن أحمد الـــــزوزني ஹம்ஸா பின் அலி பின் அஹ்மத் அஸ் ஸவ் ஸனி என்பவர் முதன்மை ஸ்தாபகராக பிரஸ்தாபிக்கப்படுகின்றார்.

மறுபிறவிக் கோட்பாட்டில் நம்பிக்கை உள்ளவரான இவர் நெருப்பு வணக்க சமயமான மஜூஸிய சமயத்தைச் சேர்ந்தவராகும்.

பரிசுத்த ஆவியானது நபி ஆதம் (عليه السلام) அவர்களில் முதலாவதாக புகுந்து இறுதியாக அலி(رضي الله عنه) அவர்களுக்குள் வந்து சேர்ந்தது. பின்னர் அவரில் இருந்து அல்ஹாகிம் பிஅம்ரில்லாஹ் என்ற உபைதிய்யா மன்னரில் ஆட்கொண்டது, அவரே கடவுளின் அவதாரம் என்றும் இவர்கள் நம்புகின்றனர்.

مجموع مؤلفات عقائد الرافضة والرد عليها \ المكتبة الشاملة

# துரூஸிகளின் கடவுள்

55

ஷீஆக்கள், மறைந்து வாழும் மஹ்தியின் மீது நம்பிக்கை கொண்டிருப்பது போன்று துரூஸிகள், உபைதிய்யா ஆட்சியின் ஸ்தாபகரான அல்ஹாகிம் பி அம்ரில்லாஹ் எனப் பெயர் சூடப்பட்ட அபூ அலி அல்மன்சூர் என்பவனைக் கடவுளின் அவதாரமாகவும் கடவுள்தன்மை கொண்டவராகவும் நோக்குகின்றனர்.

ஹிஜ்ரி 386 இல் தனது தந்தையின் மரணத்தின் பின்னால் பதினொரு வயதாக இருக்கின்ற போதே எகிப்தில் அவன் ஆட்சியில் அமர்த்தப்பட்டவன் ஹிஜ்ரி 390 வரை ஆட்சியில் அமர்ந்தான்.

இரக்க சிந்தை அற்ற, கடின சுபாவமும், மூர்க்க குணமும் உள்ளவனாக இனம் காணப்பட்ட இவனை இவர்கள் கடவுளாக ஏற்றுக் கொண்டதற்கான பிரதான காரணம் இவனைப் பற்றி அவனது பிரச்சாரகர்களால் மேற்கொண்ட பகீரத பிரச்சாரமாகும்.

இவனே இந்த துரூஸிய மக்களின் அகீதாக் கோட்பாட்டின் தந்தை என அறியப்படுகின்றான். இவன் ஹிஜ்ரி 395ல் எகிப்தில் “தாருல் ஹிக்மா” என்ற பெயரில் ஒரு பாடசாலையை ஆரம்பித்தான். ஷீஆக்கொள்கையினை ரகசியமாகப் பரவச் செய்யும் நோக்குடன் அந்தக் கல்லூரி தோற்றுவிக்கப்பட்டது.

இங்கிருந்துதான் பாத்திமிய்யாக்கள் என்ற பொய்யான பரம்பரைப் பெயரில் தமது பிரச்சாரப் பணிகளை அவர்கள் முன்னெடுத்தனர். உலகின் நாலா பாகங்களில் இருந்தும் பல பிரத்தியேக அழைப்பாளர்கள் கொண்டுவரப்பட்டு மக்கள் மூளைச் சலவை செய்யப்பட்டனர்.

அல்ஹாகிம் பிஅம்ரில்லாஹ் என்ற அபூ அலி அல் மன்சூர் என்பவன் கடவுள் தன்மை கொண்ட ஒருவன் என்பது இங்குள்ள மாணவர்களுக்கு இரகசியமாகப் போதிக்கப்பட்டு ஹி. 408 இற்கு பின்னரே அந்தக் கொள்கை பரவலாக்கல் செய்யப்பட்டதாக வரலாற்று ஆய்வாளர்களால் சுட்டிக் காட்டப்படுகின்றது.

மேலதிக தகவல்களுக்கு :

عقيدة الدروز عرض ونقض \ تأليف : المدكتور محّمد أحمد الخطيب

# துரூஸிகள் பற்றி இமாம் இப்னு தைமிய்யா(ரஹ்) அவர்கள்

۵۵

وأما [ الدرزية ] فأتباع هشتكين الدرزي،وكان من موالي الحاكم، أرسله إلي أهل وادي تيم الله بن ثعلبة، فدعاهم إلي إلهية الحاكم، ويسمونه / [ الباري،العلام ] ويحلفون به، وهم من الإسماعيلية القائلين بأن محمد بن إسماعيل نسخ شريعة محمد بن عبد الله، وهم أعظم كفرا من الغالية، يقولون بقدم العالم، وإنكار المعاد، وإنكار واجبات الإسلام ومحرماته، وهم من القرامطة الباطنية الذين هم أكفر من اليهود والنصاري ومشركي العرب، وغايتهم أن يكونوا [ فلاسفة ] علي مذهب أرسطو وأمثاله، أو [ مجوسا ] . وقولهم مركب من قول الفلاسفة والمجوس، ويظهرون التشيع نفاقا . والله أعلم .

துரூஸிய்யா, அல்லது துரூஸ் பிரிவினர் ஹஷ்டகீன் அத்துரஸி என்பவனின் ஆதரவாளர்களாகும். அவன் உபைதிய்யா ஆட்சியாளரான அல்ஹாகிம் பிஅம்ரில்லாஹ் என்ற ஆட்சியாளரை பின்பற்றுவோரில் ஒருவனாக இருந்தான். அவன் தைமுல்லாஹ் பின் ஸஃலபா என்ற கணவாயில் வாழ்ந்து வந்த மக்களிடம் பிரச்சாரத் திற்காக அல்ஹாகிம் பிஅம்ரில்லாஹ் என்ற அந்த ஆட்சியாளரால் அனுப்பி வைக்கப்பட்டான். அவன் அங்கு சென்று அம்மக்களை அல்ஹாகிம் பிஅம்ரில்லாஹ் என்பவன் ஒரு கடவுள் கோட்பாட்டைக் கூறி அழைப்புவிடுத்தான்.

அவர்கள் அந்த ஆட்சியாளனை [ الباري، العلام ] படைப்பாளன், யாவற்றையும் அறிந்தவன் எனப் பெயர் வைத்து அழைத்தனர். அவனை வைத்து கொண்டாடினர்.

இவர்கள் இஸ்மாயீலிய்யாக் கொள்கையாளர்களாகவும் (அஹ்லுல் பைத்தினரில் ஒருவரான) முஹம்மத் பின் இஸ்மாயீல் என்பவர் முஹம்மத் நபி (ﷺ) அவர்களின் சமயக் கோட்பாட்டை மாற்றி, புது மதம் கொண்டு வந்தவர் என்றும் நம்பினர்.

இவர்கள், எல்லை மீறிய ஷீஆக்களை விடவும் மிகவும் அபாயகரமான கொள்கை உடையவர்களாக இருந்தனர். இவர்கள் உலகம் பழமையானது (அழியாது மீண்டும் மீண்டும் புதிதாகிக் கொண்டிருக்கும்) என்ற போக்கில் இருந்ததோடு மறுமையை நிராகரித்தல், இஸ்லாத்தின் கடமைகளை நிராகரித்தல், தடுக்கப் பட்டவைகளை கருத்தில் கொள்ளாது அலட்சியம் செய்து நடத்தல் போன்ற பண்புள்ளவர்களாக இருந்தனர். இவர்களின் செயற்பாடுகள், தில்லு முல்லுகள், சதித் திட்டங்கள் அனைத்தையும் பகல் வெளிச்சம் போன்று அவதானித்த இமாம் இப்னு தைமிய்யா அவர்கள் குறிப்பிடும் பின்வரும் தீர்ப்பைக் கொஞ்சம் கவனியுங்கள்.

وهم من القرامطة الباطنية الذين هم أكفر من اليهود والنصاري ومشركي العرب، وغايتهم أن يكونوا [ فلاسفة ] علي مذهب أرسطو وأمثاله، أو [ مجوسا ] . وقولهم مركب من قول الفلاسفة والمجوس، ويظهرون التشيع نفاقا . والله أعلم .(( أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – (٢ / ٣٩٠)

இவர்கள் யூதர்கள், கிறித்தவர்கள், அரபிகளில் உள்ள இணைவைப்பாளர்கள் அனைவரையும் விட மிகவும் மோசமான இணைவைப்பாளர்களாகும். இவர்களின் இலக்கு அரிஸ்டோட்டில் மற்றும் அவர் போன்ற தத்துவவியலாளர்களின் கொள்கைப் பரப்பாளர்களாக இருப்பதாகும். அல்லது, தனித்த நெருப்பு வணங்கிகளாக இருப்பதாகும். இவர்களின் கோட்பாடுகள் (புலக்காட்சி களை மாத்திரம் நம்பிக்கை கொள்ளும் இறைமறுப்பாளர்களான) தர்க்கவியலாளர்கள், நெருப்பு வணங்கிகளின் கோட்பாட்டில் இருந்தும் உருவான கலப்புக் கோட்பாடாகும்.

துரூஸிய மதத்தினர் ஆரம்பமாக இஸ்லாமியர்களாக இருந்ததாகவும் பின்னர், இஸ்மாயீலிய்யாக்களின் கொள்கைக்குள் சங்கமித்ததாகவும், காலப் போக்கில் மதமற்றவர்களாக மாறியதாகவும் ஆய்வாளரான கலாநிதி மஹ்மாஸ் அல் ஜல்ஊத் என்பவர் சுட்டிக் காட்டுவது இங்கு கவனிக்கத்தக்கதாகும்.

# துரூஸிகளின் முக்கிய நம்பிக்கைக் கோட்பாடுகள்

55

இவர்களின் நம்பிக்கை கோட்பாடு பற்றி ஆய்வு செய்வோர் இவர்களின் நம்பிக்கை கோட்பாடு மற்றும் இவர்களின் நடவடிக்கை அனைத்திலும் இஸ்மாயீலிய்யாக்கள் என்ற பிரிவினரின் கோட்பாடும், கிறிஸ்தவ சமயத்தவரின் நம்பிக்கைக் கோட்பாடும் ஒன்றுக்கொன்று சமநிலையில் காணப்படுவதாக சுட்டிக்காட்டுகின்றனர்.

இவர்கள் இன்றும் துரூஸ் என்ற பெயரில்தான் அறியப்படுகின் றனர். இருந்தும் இந்தப் பெயரில் அழைக்கப்படுவதை அவர்கள் விரும்புவதில்லை என சுட்டிக்காட்டும் இஸ்லாமிய ஆய்வாளர் கலாநிதி முஹம்மத் அல்கதீப் அவர்கள் இவர்கள் தமக்கு "அல்முவஹ்ஹிதீன்" என்றே சூட்டிக் கொண்டுள்ளனர் எனக் குறிப்பிடுகின்றார்.

عقيدة الدروز عرض ونقض تأليف : الدكتور محمّد أحمد الخطيب

அந்த வகையில் அவர்களின் நம்பிக்கை கோட்பாடுகளாக பின்வரும் கோட்பாடுகள் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும்.

### 1. மனித இனம் அழிவின்றி தொடர்ந்தும் மறுபிறவி எடுத்தல்.

இவர்களின் நம்பிக்கை கோட்பாடுகளில் ஒன்றாக மறுபிறவிக் கோட்பாடு சுட்டிக் காட்டப் பட்டுள்ளது. அதாவது, உயிரானது மலக்குகளால் கைப்பற்றப்பட்ட பின்னர் வானுக்கு உயர்த்தப்பட்டு, மீண்டும் கேள்விக்காக அது மீட்டப்படும் என்ற அடிப்படையான இஸ்லாமிய நம்பிக்கையை நிராகரித்து, உயிர் மற்றொரு புதுப் பிறவியோடு கலந்து மற்றொரு பிறவியைத் தோற்றுவிக்கின்றது என நம்புகின்றனர். உயிர் பிரிந்த மனிதன் மண்ணோடு மக்கிப் போவான். அதன் பின்னர் அவனது உயிர் மற்றொரு உடலில் தாவுவதாக இவர்கள் நம்புகின்றனர்.

### 2. மரணத்தின் பின்னால் உள்ள வாழ்வை நிராகரித்தல்:

மறுபிறவிக் கோட்பாட்டு வாதத்தினால் இஸ்லாமிய அடிப்படை நம்பிக்கையான மறுமை நம்பிக்கை, சுவர்க்கம், நரகம் என்ற அனைத்தும் உடைக்கப்படுவது இயல்பானதாக மாறுவது மாத்திரமின்றி, மனிதன் இந்த உலகில் அவன் விரும்பியவாறு வாழ்ந்து மடியலாம்.

இந்த வாதத்தினால் மனிதன் படைக்கப்பட்டதன் நோக்கம் இல்லாதொழிக்கப்பட்டு மனிதனுக்கும் கால்நடைகளுக்கும் இடையில் எவ்வித வேறுபாடும் அற்ற ஒரு மிருகக் கலாசாரத்தைக் கொண்ட சமூக அமைப்பு தோற்றம் பெறுவது நிதர்சனமான உண்மையாகும். இதுவே அவர்களின் விருப்பமும் கூட.

இவர்கள் ஷீஆக்கொள்கையை தமது கொள்கை நலனுக்காக நயவஞ்சனையாக உபயோகிப்பர் (அல்லாஹ்வே மிக அறிந்தவன்) என இமாம் இப்னு தைமிய்யா விளக்குகின்றார்கள்.

### 3. அரசனைக் கடவுளாக்கி வணங்குதல்.

நம்ரூத், பிர்அவ்ன் மற்றும் பல மன்னர்களை மனிதர்கள் கடவுளர்களாக வணங்கியது பற்றி நாம் அறிவோம். அவ்வாறே துரூஸ்களின் அடிப்படையான நம்பிக்கைகளில் ஒன்றாக அபூ அலி அல்மன்சூர் என்ற உபைதிய்யா ஆட்சியாளனாகிய அல்ஹாகிம் பிஅம்ரில்லாஹ் என்ற ஆட்சியாளனை கடவுளாக அங்கீகரிப்பதாகும். கீழ்வரும் அடிப்படைகளை தமது அங்கத்தவர்களுக்கு அவர்கள் போதிப்பார்கள் என ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டுகின்றார்கள்.

إن أهم عقائدهم ، ألوهية الحاكم كما ورد في مصـــــحف الدروز ميثاق للدرزيين أن يقولوا:

آمنت بالله ، ربي الحاكم ، العلي الأعلى ، رب المشـــــرقين ، ورب المغربين ، وإله الأصلين والفرعين ، منشــــئ الناطق والأساس ، مظهر الصـــورة الكاملة بنوره ، الذي على العرش اســــتوى ، وهو بالأفق الأعلى ، ثم دنا فتدلى ، وآمنت به ، وهو رب الرجعى ، وله الأولى والآخرة ، وهو الظاهر والباطن . ((الشــيعة والتشــيع ..فرق وتاريخ – (( ١ / ٢٢٤ \ إحسان إلهي ظهير))

அவர்கள் தமது முஸ்ஹஃப் என்றழைக்கப்படும் புனித நூலில் தமது கோட்பாடாக:

☞ நான் அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டேன்.

☞ எனது இரட்சகன் அல்ஹாகிம் என்ற ஆட்சியாளனே!

☞ அவர் உயர்வானரும், அதி உயர்ந்தவரும்,

☞ அவர் இரு கிழக்குகளின் இரட்சகர்

☞ அவரை இரு மேற்குத் திசைகளினதும் இரட்சகர்,

☞ அவரே இரு அடிப்படைகளின் அரசர், } **அனைத்தும் அவரே!**

☞ இரு கிளைகளினதும் இரட்சகன்.

☞ பேசுவோரையும், அடிப்படையையும் தோற்றுவித்தவர், (தனது இயக்கக் காப்பாளர்)

☞ தனது பிரகாசத்தால் முழுமையான தோற்றத்தை (மனித உருவில்) வெளிப்படையாக வெளிப்படுத்தும் ஆற்றல் மிக்கவர்,

☞ அர்ஷின் மீது நிலையானவர்.

☞ அவர் அதி உயர்ந்த அந்த வானின் மேல் இருப்பவர்,

☞ பின்னர் அவர் அந்தக்கடவுளை நெருங்கி வந்தார். எனவே நான் அவரை நம்பிக்கை கொண்டேன்.

☞ அவர்தான் மனிதர்களை மறுபிறவியாக மீளச் செய்யும் இரட்சகர்.

☞ அவருக்குத்தான் இந்த உலகும் கடைசி உலகும் சொந்தமானது.

☞ அவரே உள்ளரங்கமானவரும், வெளிரங்கமானவரும்...

# துருஸிகள் வாழும் பிரதேசங்கள்

55

தற்போது இவர்கள் லெபனான், சிரியா, பலஸ்தீன், ஈரான், துருக்கி போன்ற நாடுகளில் வாழ்கின்றனர். இவர்கள் சாதாரண எண்ணிக்கையினராக இருந்தாலும் மேற்கத்திய நாடுகளின் தயவால் வளர்க்கப்படுவதோடு, முஸ்லிம் நாடுகளின் இரகசியங்கள் பற்றிய உண்மைகளை வெளி உலகுக்கு கொண்டு செல்லும் மிகப் பெரும் தரகர்களாகவும் செயல்படுகின்றனர்.

இவர்களைப் பற்றி இஸ்லாமிய ஆய்வாளரான கலாநிதி மஹ்மாஸ் அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்.

الدروز جماعة من الناس يقدر عددهم ما بين (١٥٠–٢٠٠) ألف نسمة تقريًبا يعيشون في لبنان وسوريا وفلسطين، وأصلهم الجنسي غامض ويعتقد بعض المؤرخين أن الدروز من بقايا الشعوب القديمة، احتموا بالجبال أيام الفتوحات الإسلامية، واحتفظوا على الدوام بقدر من الاستقلال، وهم بصفة عامة لا يتمسكون بعقيدتهم إلا قليلاً: فهم مسلمون مع المسلمين، ونصارى مع النصارى، ويهود مع اليهود، وليس لديهم أماكن للعبادة خاصة بهم ((الموالاة والمعاداة في الشــــــريعة الإسلامية – (٢ / ١٢٠ \ المؤلف : محماس بن عبد الله بن محمد الجلعود

இவர்கள் கிட்டத்தட்ட (150- 200) ஒன்றரை இலட்சம் முதல் இரண்டு இலட்சம் பேர் வரைதான் இருக்கின்றனர். இவர்கள் லெபனான், சிரியா, பலஸ்தீன் போன்ற பிரதேசங்களில் வாழ்கின்றனர்.

இவர்கள் எந்த இனத்தைப் பிரதிபலிக்கின்றனர் என்பது மூடுமந்திரமாகவே இருக்கின்றது. இவர்கள் பண்டைக் கால

சமூகத்தில் இருந்து வந்த வழித்தோன்றல்களில் உள்ளவர்கள் என்று சிலர் குறிப்பிடுகின்றனர்.

இஸ்லாமிய வெற்றிகளின் போது அப்பிரதேச மலைச் சாரல்களில் பாதுகாப்புத் தேடி ஒளிந்து வாழ்ந்ததாகவும் இன்று வரை அவர்கள் தமது தனித்துவத்தை தொடர்ந்தும் பேணிவருவோராக இருப்பதாகவும் மற்றும் சிலர் சுட்டிக் காட்டுகின்றனர்.

அத்துடன், இவர்கள் மொத்தத்தில் முஸ்லிம்களோடு முஸ்லிம்களாக, யூதர்களோடு யூதர்களாக, கிறிஸ்தவர்களோடு கிறிஸ்தவர்களாக தம்மை அடையாளப்படுத்தாது ஒன்றரக் கலந்து வாழ்கின்றனர்.

இவர்களின் வணக்கத்திற்கென தனியான, பிரத்தியேக இடங்கள் எதுவும் அறியப்படவில்லை. (அல்முவாலாத் வலமுஅதாத்– ஆய்வாளர்: மஹ்மாஸ் அல்ஜல்ஊத்).

والظاهـر أن الدروز من فـرق الإسماعيلية القديمة ولكنهم بـرزوا كطائفة جديدة عندما قال زعيمهم حمزة بن علي بألوهية الحاكم بأمر الله سنة (٤٠٨هـ .(الموالاة والمعاداة في الشـريعة الإسلامية – (٢ / ١٢٠ \ المؤلف : محماس بن عبد الله بن محمد الجلعود ))

மொத்தத்தில் இவர்கள் இஸ்மாயீலிய்யாப் பிரிவின் ஒரு அங்கமாகவே இருந்தனர். அவர்களின் தலைவராக இருந்த ஹம்ஸா பின் அலி என்பவருக்கு கடவுள் தன்மை உண்டு என்றும், எனவே அவரை நாம் வணங்க வேண்டும் என்றும், தமது கோட்பாட்டுக் கருத்தை இவர்கள் முன்வைத்ததன் காரணமாக, இவர்கள் துரூஸிய்யா என்ற பெயரில் தோன்றிய வேறு ஒரு புதிய பிரிவாக அறியப்பட்டனர் என்பது அறிஞர்களின் மற்றொரு சாராரின் முடிவாகும்.

இன்றைய ஈரான், சிரியாவின் அஸத் போன்றவர்களின் நிலைபற்றி அறிந்தால் அதுவே பாதினிய்யாப் பிரிவின் மறுவடிவம் என்பதை சுருக்கமாகப் புரிந்து கொள்ளலாம்.

ஆரம்பகால நுஸைரிய்யாக்கள், துரூஸிய்யா, மற்றும் பாத்தினிய்யாக்களான கராமிதாக்கள் போன்ற அனைத்து பிரிவுகளின் வழித்தோன்றல்களாக தற்கால சிரியாவின் பாத்சோஸலிச ஆட்சியாளர்கள் காணப்படுகின்றனர்.

அவர்கள் தம்மை அலவிய்யா என்று அழைத்துக் கொண்டாலும் உண்மையில் அவர்கள் மறுமையை நம்பாத காபிர்கள் என்பதில் சந்தேகமில்லை.

ஆரம்பகால பாத்தினிய்யாக்கள் எவ்வாறெல்லாம் சுன்னா முஸ்லிம்களை ஆண்கள், பெண்கள், சிறுவர்கள், கர்ப்பினித் தாய்மார்கள், பால்குடிக் குழந்தைகள் என்ற எந்த வித்தியாசமும் இன்றிக் கொலை செய்தார்களோ, அதே வழியில் சற்றும் வித்தியாசம் இன்றிக் கொலை செய்யும் காட்சிகளை சிரியா, மற்றும் ஈராக்கில் சமகாலத்தில் நாம் அவதானிக்கின்றோம். அவர்களைப் புரிந்து கொள்ள இவர்களின் கொடுமைகள் பற்றி அறிந்து கொண்டாலும் போதுமானதாகும்.

இமாம் இப்னு தைமிய்யா அவர்கள் வாழ்ந்த காலத்தில் இவர்கள் வாழ்ந்துள்ளனர். இந்தப் பிரிவினர் இன்றும் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் தொடர்பாக இமாம் அவர்களின் பின்வரும் வசீகரமான வரிகளை வாசிக்கவும்

هؤلاء [ الدرزية ] و [ النصـيرية ] كفار باتفاق المسـلمين، لا يحل أكل ذبائحهم، ولا نكاح نسائهم، بل ولا يقرون بالجزية؛ فإنهم مرتدون عن دين الإسلام، ليسوا مسلمين؛ ولا يهود، ولا نصـاري، لا يقرون بوجوب الصـلوات الخمس، ولا وجوب صوم رمضـان، ولا وجوب الحج، ولا تحريم ما حرم الله ورسوله من الميتة والخمر وغيرهما . وإن أظهروا الشـــهادتين مع هذه العقائد فهم كفار باتفاق المسلمين .(( أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – (٢ / ٣٩٠)

துரூஸ், மற்றும் நுஸைரிய்யாப் பிரிவினர் என்போர் முஸ்லிம்களின் ஏகோபித்த கருத்தின் படி காஃபிர்களாகும். அவர்கள் அறுப்பவைகளை உண்ணுவதோ அவர்களின் பெண் பிள்ளைகளை திருமணம் முடிப்பதோ கூடாது.

அது மட்டுமல்ல, இவர்களிடம் (ஜிஸ்யா) பாதுகாப்பு வரி

பெறுவதும் கூடாது. ஏனெனில், இவர்கள் இஸ்லாமிய மார்க்கத்தை விட்டும் மதம் மாறியோராகும். இவர்கள் முஸ்லிம்களோ, யூதர்களோ கிறிஸ்தவர்களோ அல்லர்.

இவர்கள் ஐங்காலத் தொழுகையின் கடமைமைகளையோ, ரமளான் கால நோன்பின் கடமையையோ, ஹஜ் கடமை என்பதையோ, அல்லாஹ்வும் அவனது தூதரும் உண்ணக்கூடாது என்பதைத் தவிர்ந்து நடப்போரோ, அவர்கள் தடுத்ததை தவிர்ந்து வாழவேண்டும் என்றோ, மது மற்றும் போதைப் பொருள்கள் ஹராம் என்றோ ஏற்றுக் கொள்வதில்லை. இரு சாட்சியங்களைக் கொண்ட கலிமாவை அவர்கள் வெளிப்படையில் சொன்னாலும் முஸ்லிம்களின் ஏகோபித்த முடிவின் படி அவர்கள் காஃபிர்களே! (இமாம் இப்னு தைமிய்யா- அஹ்காமுல் முர்தத்)

இவர்கள் ஷீஆக்கள், நுஸைரிய்யாக்களைப் போன்றே முஸ்லிம்களுக்கு எதிராக சதி செய்வோராக அறியப்பட்டுள்ளனர். உஸ்மானிய இஸ்லாமியப் பேரரசுக்கு எதிரான இவர்களின் துரோக வரலாறு பற்றி ஆய்வாளர் முஹம்மத் ஸல்லாபி அவர்கள் எடுத்தெழுது கின்ற போது

وكان أمير الدروز بشير الشهابي المتوفى سنة ١٢٦٦هـ يقف بجنوده بجانب جيش محمد علي عند احتلاله للشـــام، مما سهل على جيش محمد علي هزيمة الجيش العثماني في حمص، وعبر جبال طوروس، وأوغلت جيوشـــه في قلب بلاد الترك،وكان هناك مراســـلات بين نابليون والدروز عند حصـــار الفرنســـيين (عكا) ((الدولة العثمانية عوامل النهوض وأسباب السقوط – (٢ / ١٧٨)

துருஸிய நுஸைரிய்யாக்களின் தலைவன் பஷீர் அஷ்ஷிஹாபி (மரணம் ஹி: 1266) என்பவன் முஹம்மத் அலி என்ற ஷீஆக்கள் ஷாமை ஆக்கிரமித்த போது அவனுக்குத் துணையாக அவனது படையுடன் இணைந்து கூட்டாகச் செயல்பட்டான். இதனால் முஹம்மத் அலியின் படை ஹிம்ஸ் நகரிலும் தோரோஸ் மலைப் பகுதிகளிலும் உஸ்மானியப் படையை தோற்கடிக்க ஏதுவாகியது.

இதனால் அலியின் படைகள் உஸ்மானியரின் மத்திய பிரதேசத்திற்குள் ஊடறுத்தன. பிரான்ஸ் படையினர் “உக்கா” நகரை முற்றுகை இட்ட போது நெப்போலியனுக்கும் நுஸைரிய்யா துரூஸ்களுக்கும் இடையில் ரகசியக் கடிதத் தொடர்புகள் காணப்பட்டன என விபரித்துள்ளார் ஸல்லாபி (அலி முஹம்மத் ஸல்லாபி- அத்தவல்துல் உஸ்மானிய்யா)

இதுதான் ஷீஆக்களின் குழந்தைகளின் நிலை. சந்தர்ப்பம் பார்த்திருந்து இஸ்லாமிய உலகில் கழுத்தறுப்புச் செய்வார்கள். வெளிப்படையில் முஸ்லிம்கள் என அடையாளப்படுத்திய பல குழுக்களே இஸ்லாமிய பேரரசுகளைக் கூட நாசப்படுத்தியுள்ளது என்பதைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டும்.

# கராமித்தா பிரிவினர்

55

**அறிமுகம்:**

ஹம்தான் பின் கர்மத் என்பவன் தன்னை முஹம்மத் பின் இஸ்மாயீல் பின் ஜஃபர் அஸ்ஸாதிக் (ﷺ) அவர்களின் பரம்பரையில் ஒருவனாக வெளித்தோற்றத்தில் நடித்து, இஸ்லாமிய அரசை வீழ்த்தி கலாசார பண்பாட்டு சீரழிவுகளை மக்கள் உணராது விதைக்கும் நோக்குடன் பாத்தினிய்யக் கொள்கையை முஸ்லிம் உலகில் அறிமுகம் செய்த ஒருவனாக இவனது பெயர் பிரஸ்தாபிக்கப் படுகின்றது.

முஸ்லிம் சமூகத்தில் தோன்றிய வழிகெட்ட பிரிவுகள் ஒவ்வொன்றும் இஸ்லாமிய அரசின் முன்னேற்றத்தை தடுத்து நிறுத்திட, இஸ்லாத்தின் பரவலைக் கட்டுப்படுத்திட சந்தர்ப்ப சூழ் நிலைகளுக்கு அமைய வெளி எதிரிகளின் துணை கொண்டு உருவாக்கப் பட்டுள்ளதை அவதானிக்க முடிகின்றது.

அத்துடன், பாதினிய்யா பிரிவுகளில் பெரும்பாலானவைகள் மஹ்தி கோஷத்தோடும், அஹ்லுல் பைத்தினர் பேரிலும் இஸ்லாமிய எதிரிகளால் தோற்றுவிக்கப்பட்டிருப்பதை அவதானிக்கின்ற போது இந்த சமூகத்தை வழிகெடுக்க அவர்கள் பாவித்த ஆயுதம் அஹ்லுல் பைத்தினரை நேசித்தல் என்பது புலப்படுகின்றது.

# பாத்தினிய்யாக்கள் என்போர் யார்?

55

الباطنية: دعوة ظهرت أولا في زمان المأمون، وانتشرت في زمان المعتصم .وذكر أصحاب التواريخ أن الذين وضعوا أساس دين الباطنية كانوا من أولاد المجوس .وكانوا مائلين إلى دين أسلافهم، ولم يجسروا على إظهاره خوفا من سيوف المسلمين، ومنهم: ميمون بن ديصان المعروف بالقداح، ومحمد بن الحسين الملقب بدندان، ثم حمدان قرمط وأبو سعيد الجنابي .
انظر " الفرق بين الفرق " ((سير أعلام النبلاء. تحقيق: الأرنؤوط))

அப்பாஸிய கலீஃபா அல்மாமூனின் காலத்திலேதான் ஆரம்பாக இவர்களின் கொள்கை தொடர்பான தகவல் வெளிவந்தது. பின்னர், அல்முஃதஸிம் என்பவரின் ஆட்சியில் அது வேகமாகப் பரவியது. இவர்கள் பாரஸீக நெருப்புவணங்கிகளான மஜூஸ்களின் வாரிசுகளில் வந்தவர்களாக இருந்தனர் என வரலாற்று ஆய்வாளர்களால் சுட்டிக் காட்டப் படுகின்றது.

முஸ்லிம் போராளிகளின் வாள் தமக்கு எதிராகப் பாவிக்கப்படும் என்பதை அஞ்சிய இவர்கள் வெளித்தோற்றத்தில் இஸ்லாத்தில் இருந்து கொண்டு, தமது முன்னோர்களான நெருப்பு வணங்கிகளின் சமயத்தை மறைமுகமாகவும் இஸ்லாத்தை வெளிப்படையாகவும் பின்பற்றி வந்தனர்.

இதில் உபைதிய்யா ஆட்சியை நிறுவிய யூதப் பரம்பரையில் வந்த மைமூன் அல்கத்தாஹ், தன்தான் என அறியப்பட்ட முஹம்மத் பின் அல்ஹஸன், கராமிதா சிந்தனைப் பரப்பாளர் என அறியப்பட்ட ஹம்தான் கர்முத், மற்றும் அபூ ஸயீத் அல் ஜனாபி போன்றோர் இந்தக்

கொள்கை உருவாக்கத்திற்கு முக்கியமானவர்கள் (ஸியரின் அடிக்குறிப்பில் இருந்து)

கராமிதாக்கள் தலைமை ஸ்தாபகர் பற்றி இமாம் அஸ்ஸஃபதி அவர்கள் குறிப்பிடுகின்ற போது,

أحمد بن عبد الله القرمطي الخال رأس القرامطة وطاغيتهم هو سمى نفســــــه هكذا (الوافي بالوفيات – (٢ / ٤١٦)

இவனது பெயர் அஹ்மத் பின் அப்துல்லாஹ் அல்கர்மதி அல் ஹால் என்பவன் என்றும் அவன் அவர்களில் கொடிய தலைவனாக அறியப்படுகின்றான் என்றும் அப்பாஸிய கலீஃபா அல்முக்தஃபீ என்பவரால் ஹிஜ்ரி 291 இல் கொலை செய்யப்பட்டு மரணமானான் எனக் குறிப்பிடுகின்றார்கள். (இமாம் ஸலாஹுத்தீன் அஸ்ஸஃபதி – அல்வாஃபி பில் வஃபயாத்)

ஷீஆக்களின் ஊடாக சமூகத்தில் அறிமுகமான இந்தக் குழுவானது இஸ்மாயீலிய்யா, உபைதிய்யா, ஸஃபவிய்யாக் குழுக்கள் போன்ற தீய குழுக்களின் வரிசையில் முன்னணிக் குழுவினராக மேற்படி பாத்தினிய்யாப் பிரிவினர் இமாம்களால் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளனர்.

வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத மிலேச்சத்தனமாக பல கொடுமைகளை முஸ்லிம் பிரதேசங்களில் அரங்கேற்றிய வரண்ட உள்ளம், ஈவிரக்கமற்ற நாஸியப் படைகளை விடவும் கொடிய மிருகங்கள்தாம் இந்தக் குழுவினர் என்றால் மிகை இல்லை என்பதை அவர்கள் பற்றிய ஆய்வும், வாசிப்பும் நமக்கு உணர்த்தும் முக்கிய பாடங்களாகும்.

## 55 காரணப் பெயர்

கர்மத் என்பது கரம்பதா என்ற அடையாளப் பெயரில் கூஃபாவில் வாழ்ந்த ஒரு மனிதனைக் குறிக்கும். நப்திய்ய மொழியில் செந்நிறக் கண்ணன் என்பது இதன் பொருளாகும். கராமிதாக்களின் சிந்தனை முன்னோடியாக இவன் விளங்கியதால் அவனைப் பின் பற்றியோர் கராமிதா என பிற்காலத்தில் அழைக்கப்பட்டனர். (அல்பிதாயாவின் அடிக்குறிப்பில் இருந்து)

**வரலாற்று ஆய்வாளர்களின் கருத்துக்கள்.**

இவர்களின் தோற்றம் பற்றி இஸ்லாமிய வரலாற்றுத் துறை அறிஞர்களின் கருத்துக்கள் இங்கு சுருக்கமாகப் பகிரப்படுகின்றன.

**இமாம் மிக்ரீஸி (ரஹ்) அவர்களின் குறிப்பு:**

وكان أول سنة ظهر فيها أمر القرامطة سنة أربع وستين ومائتين، وذكر بعض العلماء أن لفظة قرامطة إنما هو نســـبة إلى مذهب يقال له القرمطة خارج عن مذاهب الاسلام، فيكون على هذه المقالة عــــــزوة إلى مذهب باطل، لا إلى رجل. اتعاظ الحنفاء بأخبار الأئمة الفاطميين الخلفاء– (١ /152). المؤلف : تقي الدين أحمد بن علي المقريزي

ஹிஜ்ரி 264 ஆவது ஆண்டு கராமித்தாக்களின் கொள்கைப் பிரகடனம் வெளியான ஆண்டு என அவர்கள் குறிப்பிடுவதோடு, கராமித்தா பிரிவு என்பது இஸ்லாமிய மார்க்கத்தை விட்டும் முழுமையாக வெளியேறிய வழிகெட்ட ஒரு கொள்கையைக் கொண்ட கர்மதாக்கள் என்போரைத் தான் குறிக்கும் என்றும், அது ஒரு தனி

மனிதனை குறிக்காகது என்றும் குறிப்பிடுகின்றார்கள்.

اتعاظ الحنفاء بأخبار الأئمة الفاطميين الخلفاء- . المؤلف : تقـــي الدين أحمد بن علـــي المقريزي

ஷீஆ பாத்திமிய்யா இமாம்கள் தொடர்பான நூலில் அதன் ஆசிரியரான இமாம் மிக்ரீஸி அவர்கள் கர்மத கர்மத் என்பதை இவ்வாறு விளக்குகின்றார்கள்.

وكان قرمط من قرية تعرف باللور على نهر هد من رستاق مهروسا من طسوج فرات بادفلي.
وإنما قيل له قرمط لأنه كان قصيرا ورجلاه قصيرتين ، وخطوه متقاربا ، فسمى لذلك قرمطا .
(( اتعاظ الحنفاء بأخبار الأئمة الفاطميين الخلفاء. مفهرس - ( ١ / ٤٤ ))

கர்மத் என்பது ஹூத் என்றழைக்கப்படும் ஒரு நதிக்கு அருகாமையில் அமைந்த தூர் என்ற கிராமத்தைக் குறிக்கும். அது ஈராக்கில் பாத்ஃபலி எனபடும் நீண்ட ஒரு நதியுடன் இணைந்திருந்த மாவட்டங்களில் ஒன்று.

கர்மத் என்பவனது பெயர் இந்த ஊரைக் கொண்டு அவனுக்கு சூட்டப்பட்டது. கர்மத என்ற அரபுச் சொல் இருகால்களும் ஒன்றுடன் ஒன்று பின்னியவாறு இணைந்திருப்பதைக் குறிக்கும்.

இந்த கர்மத் என்பவன் குள்ளமானவனாகவும், அவனது இரு கால்களும் குள்ளமானதாகவும், அவன் எட்டுவைக்கின்ற போது ஒன்றுடன் ஒன்றை நெருக்கியே வைப்பான் என்றும், அதனால் அவன் கர்மத் என அழைக்கப்பட்டான் என மற்றொரு இடத்தில் குறிப்பிடுகின்றார்கள். பார்க்க:

. (( اتعاظ الحنفاء بأخبار الأئمة الفاطميين الخلفاء. مفهرس - ( ١ / ٤٤ ))

# கர்மதின் இயற் பெயர்

55

இவனது பெயரை அஹ்லுல் பைத்தினர்களின் பெயர்களோடு இணைத்தும், பொய்யாக சோடித்தும் புனைந்தும் அவன் தயாரித்திருந்தான். இதனால் இவனது பெயர் என்ன என்பதில் அறிஞர்கள் தீர்க்கமான முடிவில் இல்லை. அதனால் அவன் பல பெயர்களின் அறியப்படுகின்றான்.

சிலர் இவனது பெயர்,

أحمد بن عبد بن محمد بن اسماعيل بن جعفر الصـادق ابن محمد بن علي بن الحسـن بن علي بن أبي طالب، أبو العباس، صاحب الخال، نسب نفسه هكذا
. وقيل: أحمد بن عبد الله بن محمد بن جعفر .
وقيل: محمد بن عبد الله بن جعفر، وقيل عبد الله بن أحمد بن محمد بن اسماعيل.
وقيل: ان اسمه الحسـين بنزكرويه بن مهرويه وقيل ابن مهري - الصـوابي، من أهل صوان، من سواد الكوفة، وهو المعروف بصـاحب الخال، أخو علي بن عبد الله القرمطي، نسـب نفسـه إلى محمد بن اسماعيل بن جعفر، وتسـمى بالمهدي. وبايعته القرامطة بعد قتل أخيه بنواحي دمشـق وصار إلى السـخنة، والإركه والزيتونة وخناصرة من الأحص من أعمال حلب، ودخل هذه المواضع عنوة، ونهب ما فيها من الأموال والسلاح.

அஹ்மத் பின் முஹம்மத் பின் இஸ்மாயீல் பின் ஜஃபர் அஸ்ஸாதிக் பின் முஹம்மத் பின் அலி பின் அல் ஹஸன் பின் அலி பின் அபீதாலிப் அபுல் அப்பாஸ் ஸாஹிபுல்ஹால் என்று சொல்லப்படுவதாகவும்,

அஹ்மத் பின் அப்தில்லாஹ் பின் முஹம்மத் பின் ஜஃபர்

என்றும்,

முஹம்மத் பின் அப்தில்லாஹ் பின் ஜஃபர் என்றும் அப்துல்லாஹ் பின் அஹ்மத் பின் முஹம்மத் பின் இஸ்மாயீல் என்றும்

அல்ஹுஸைன் பின் ஸக்ராவைஹி பின் மர்தவைஹி என்றும், இப்னு மிஹ்ரி கூஃபாவின் விளைச்சல்கள் நிறைந்த ஸவான் தேசத்தில் உள்ளவராக இருந்த அஸ்ஸவானி என்றும், இவனைத்தான் மக்கள் ஸாஹிபுல்ஹால் அதாவது தனது சகோதரனின் பிரதிநிதியாக வந்தவன் என்றும்,

மற்றும் சிலர் அவனது பெயர் அலி பின் அப்தில்லாஹ் அல்கர்மதி என சொல்லப்படுவதாகவும் குறிப்பிட்டுள்ளனர். இந்த கர்மதிதான் தனது பெயரை முஹம்மத் பின் இஸ்மாயீல் என அஹ்லுல் பைத்தினரில் ஒருவரான ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் பெயரோடு தனது பரம்பரையை இணைத்துக் கூறி, தன்னை ஒரு மஹ்தியாகக் கற்பனை செய்து மக்களிடம் பிரகடனம் செய்தவன்.

பார்க்க: بغية الطلب في تاريخ حلب المؤلف : ابن العديم – (١ / ٣٠٠)

ஈராக் பிரதேச பொதுமக்களையும் உலக முஸ்லிம்களையும் ஏமாற்றி, அவர்களை வழிகெடுக்க யூதன் இப்னு ஸபஃவும் அவனது கைக் கூலிகளும் கண்டுபிடித்த ஒரே ஒரு மருந்து என்னவென்றால் அஹ்லுல் பைத்தினர் பெயரில் ஒருவனை, ஒரு கொள்கையை உருவாக்குவதுதான். அதுவே இவன் பெயரிலும் நடந்தேறி யிருக்கின்றது.

எத்தனை பொய் மஹ்திகள்! எத்துணை அஹ்லுல் பைத்தினர் பேரில் உதித்த பொய்யான பரம்பரைகள். இந்த உம்மத்தில் வந்து நுழைந்துவிட்டனர். இதன் தொடரில்தான் இலங்கை, இந்தியா, மலேசியா, பாகிஸ்தான் போன்ற நாடுகளில் உள்ள மவ்லானாக் களையும் தங்கள் சேகுமார்களையும் பார்க்க வேண்டி இருக்கின்றது.

இவர்கள் கூஃபாவில் வாழ்ந்த “ஹம்தான் பின் கர்மத்” என்பவனின் ஷீஆக் கடும்போக்கு சிந்தனைக் குழுவாகும் எனக் குறிப்பிடுகின்றார்கள் இமாம் இப்னு தைமிய்யா அவர்கள்.

من حاشية تحقيق أسباب رفع العقوبة لشيخ الإسلام ابن تيمية – (١ / ٥٦ )

இமாம் முதஹ்ஹிர் இப்னு தாஹிர் அல்மக்திஸி அவர்கள் குறிப்பிடுகின்ற போது,

و أما القرامطة فأصـــحاب القرمط و هو رجل من ســـواد الكوفة أباح لهم قتل من خالفهم فلذلك خرجت القرامطة على الحجاج غير مرة (( البدء والتاريخ\ المؤلف : مطهـر بن طاهر المقدس– (١ / ٢٩٨))

கராமிதாக்கள் என்போர் கர்மத் என்பவனைப் பின்பற்றிய ஒரு பிரிவாகும். அது கூஃபாவில் வாழ்ந்த மக்களில் ஒருவனின் பெயரைக் குறிக்கும். அவன் தனக்கு முரணானவர்களைத் தாராளமாகக் கொன்றொழிக்கும்படி தனது ஆதரவாளர்களுக்கு கட்டளையிட்டான். அதனால் அவனது ஆதரவாளர்கள் அத்து மீறி ஹஜ்ஜாஜிகளைப் பல தடவைகள் கொலை செய்துள்ளனர்.

# கர்மத் பற்றி இமாம் தபரி அவர்கள் தரும் தகவல்

55

قرمط رجل من سواد الكوفة كان يحمل غلات السواد على أثوار له يسمى حمدان ويلقب بقرمط ثم فشا أمر القرامطة ومذهبهم وكثروا بسواد الكوفة ((تاريخ الأمم والملوك – الطبري (٥ / ٦٠٢

இவன் கூஃபாவில் விவசாய நிலங்கள் நிறைந்த வளமான செல்வம் கொழிக்கும் பிரதேசத்தில் உள்ள ஒருவன். இவன் ஆரம்பத்தில் எருதுகள் மீது விவசாயப் பொருட்களை, பயிர்களை ஏற்றிச் செல்பவனாக இருந்தான். இவனது பெயர் ஹம்தான்.

இவனது புனைப் பெயராக' கர்மத்" என்பதாக இருந்தது. கூஃபா பிரதேசத்தில்தான் கராமிதாக்களின் கொள்கை முதன் முதலில் அறிமுகமாகி, அவர்களின் ஆதரவும் பெருகியது எனக் குறிப்பிடுகின்றார்கள். (அத்தபரி- தாரீஹுல் உமமி வல்- முலூக்)

கராமிதா என்ற பெயருக்கான காரணம் பற்றிய மற்றொரு கருத்தாக இமாம் அத்திம்யாதி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்ற போது

و إنّما غلب عليه اسم القرمطي لأنّه اعتلّ عند ذلك البقّال الّذي كان يبتاع منه (الأرطال من) التمر. فكان في القرية رجل يحمل للناس على أثوار له يقال له ذو العينين، و كان أهل القرية يسمّونه كرميتة معناه بالنبطية ذو العينين، فكلّم البقّال كرميتة في حمل العليل إلى منزله، فحمله على أثواره و أقام عنده فمرّضه حتّى برأ. فلمّا خاف على نفسه على حسب ما نورده و صار إلى الشّام تسمّى باسم كرميتة الّذي كان عنده، فخفّفه الناس فقيل «١» له قرمط، فلذلك عرفوا بالقرامطة. ((المسالك و الممالك. المؤلف : أبو بكر (المشهور بالبكري) بن محمد شطا الدمياطي – (١ / ٣١٠)

கர்மதி என்ற பெயர் பெரிய அளவில் பிரபல்யம் பெறுவதற்கான காரணமாக இருந்தது என்னவெனில் இந்த கராமிதா கொள்கையைக் கொண்டு வந்தவன் கர்மத் வழக்கமாக ஒரு மலிகைக் கடை முதலாளியிடம் சில (ராத்தல்கள்) கிலோ அளவான பேரீத்தம் பழங்களைக் கொள்வனவு செய்யும் வழக்கமுள்ளவனாக இருந்தான்.

இவன் மக்களோடு அதிகம் மார்க்கம் பேசுபவனாகவும், துறவறம் பற்றிப் பேசுபவனாவும் இருந்ததோடு, தான் சம்பாதித்ததில் இருந்து உண்டு வாழ்ந்து வந்ததோடு, மக்களை தன்பக்கம் ஈர்ப்பதற்காக நாளாந்தம் ஐம்பது வேளைகள் தொழும் வழக்கமுள்ள வனாக இருந்தான்.

பின்னர் காலப் போக்கில் தன்னை நபி(ﷺ) அவர்களின் குடும்பத்தில் இருந்தும் வந்தவன் என்ற பூதாகரமான பல நச்சுக் கருத்துக்களைக் கக்கினான் என்றும் மற்றோர் இடத்தில் குறிப்பிட்டுள்ளார்கள்.

அங்கு மனிதர்களை தனது காளைமாட்டு வண்டியில் ஏற்றி இறக்கும் தொழில் செய்யும் ஒரு மனிதன் அக்கிராமத்தில் இருந்தான். அவனுக்கு இரு (கண்களிலும் உள்ள குறைபாடுகளுக்காக மக்கள் அவனை ذو العـيـنـين அவனை “கர்மீத்தா” என்றே அழைப்போராக இருந்தனர்.

அவர்களின் தாய் மொழியான நப்தியய மொழியில் அதன் பொருள் ذو العينين இரு கண்ணன் என்பதாகும். இந்தக் கொள்கையைப் பிற்காலத்தில் அவன் பிரகடனப்படுத்தியதால் அந்த கராமிதா ஸ்தாபகன் ஹம்தான் நோய்வாய்ப்பட்ட போது குறித்த கடையின் உரிமையாளர் கர்மீதாவைப் பேசி அவனது வண்டியில் ஹம்தானை எடுத்துச் செல்லுமாறு வேண்டிக் கொண்டதற்கு அமைய இவனை அந்த கர்மீதா தனது இல்லம் நோக்கி எடுத்துச் சென்று தன்னிடம் தங்கவைத்து அவனுக்கு சிகிச்சை அளித்ததன் பயனாக அவன் பூரண குணம் அடைந்தான்.

இவன் தனக்கு ஏதும் ஆபத்துக்கள் நேரலாம் என்று எண்ணி, உடனே அங்கிருந்து வெளிக்கிளம்பி ஷாம் தேசம் நோக்கி விரைந்தான். அங்கு இவன் தன்னை கர்மீதா என்றே அழைத்துக் கொண்டான். இதைக் காரணமாக வைத்தே கராமிதா பெயர் இவர்களுக்கு மருகி வரலாயிற்று எனக் குறிப்பிடுகின்றார்கள்.

பார்க்க:
(( المسالك و الممالك. المؤلف : أبو بكر (المشهور بالبكري) بن محمد شطا الدمياطي

மற்றுமோர் இடத்தில் இமாம் அஹ்மத் அபூதாஹிர் அவர்களின் கருத்தாக இமாம் திம்யாதி அவர்கள் இவ்வாறு விளக்கம் தருகின்றார்கள்.

و قال أحمد بن أبي الطاهر: كان ابتداء أمر القرامطة أنّ رجلا كان يعرف بيحيى بن المعلّى صدر من ناحية الكوفة إلى القطيف، فنزل على رجل يعرف بعلي بن المعلّى بن حمدان و كان يترّفض، و أظهر يحيى أنّه رسول المهدي المنتظر، و ذلك سنة إحدى و ثمانين و مائتين ((المسالك و الممالك. (١ / ٣١١) مؤلف : أبو بكر (المشهور بالبكري) بن محمد شطا الدمياطي ))

கராமித்தா விவகாரம் என்பதன் தொடக்கம் என்ன வெனில் எஹ்யா இப்னுல் முஅல்லா என்ற ஒருவன் இருந்தான். அவன் ஈராக்கின் கூஃபா நகர் பகுதியில் இருந்து வந்து (சவூதியின் கிழக்குப் பகுதி நகர்களில் ஒன்றான) கதீஃப் பகுதியில் எஃலா பின் அல் முஅல்லா பின் ஹம்தான் என்பவனிடத்தில் தங்கினான்.

அவன் ஒரு ஷீஆ மதத்தவனாக இருந்தான். யஹ்யா அவனிடம் தன்னை எதிர்பார்க்கப்பட்ட மஹ்தி என்று கூறினான். இது ஹிஜ்ரி 281 இல் நடந்தது எனக் குறிப்பிட்டுள்ளதைப் பார்க்கின்றோம்.

இவர்களை சுருக்கமாக விளக்குவதானால் இமாம் இப்னு தைமிய்யா குறிப்பிடுவது போன்று இவர்கள் "ஹம்தான் பின் கர்மத்" என்பவனின் கொள்கை ஆதரவுக் குழு எனக் குறிப்பிட முடியும் .
பார்க்க:
من حاشية تحقيق أسباب رفع العقوبة لشيخ الإسلام ابن تيمية – (١ / ٥٦ ))



# தோற்றமும் கொள்கைப் பரவலும்

55

இவ்வாறு நோக்குகின்ற போது ஹிஜ்ரி மூன்றில் தோற்றம் பெற்ற இவர்களின் கொள்கை ஹிஜ்ரி நான்காம் நூற்றாண்டுகளில் பாரிய வளர்ச்சி அடைந்ததோடு முஸ்லிம்களுக்கு எதிராகப் பல கொடுமைகளையும் அரங்கேற்றி இருப்பதை அறிய முடிகின்றது.

இமாம் இப்னுல் கையிம் (ரஹ்) அவர்கள் ஆரம்ப கால சமூகங்களின் இருப்பையும் பாதுகாப்பையும் கேள்விக்குறியாக்கிய காரணிகள், பேரழிவுகள் போன்ற அம்சங்கள் பற்றிக் குறிப்பிடும் வேளையில் மேற்படி கருத்தை உறுதி செய்துள்ளதோடு ஹிஜ்ரி மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியிலும், நான்காம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இவர்கள் தோற்றம் பெற்றுள்ளனர் எனக் குறிப்பிடுகின்றார்கள்.

பார்க்க: (( إغاثة اللهفان من مصائد الشيطان – (٢ / ٢٦٩))

அல் இஃலாம் என்ற கலைக் களஞ்சியத் தொகுப்பாளர் அஸ்ஸர்கலி என்பவர் அவரது அல்இஃலாமில் ஹிஜ்ரி: 293 கி.பி. 906 நிகழ்வுகள் தொடர்பான குறிப்பில் இவ்வாறு தருகின்றார்.

( ٠٠٠ – ٢٩٣ هـ = ٠٠٠ – ٩٠٦ م)
قرمط: رأس " القرامطة " من الباطنية. وإليه نسبتهم. اختلف في اسمه وأصله. قيل: اسمه " حمدان " أو " الفرج بن عثمان " أو الفرج بن يحيى " وقرمط لقبه. والنسابون يضبطونه بكسر القاف والميم، بينهما راء ساكنة، واللغويون يفتحون القاف والميم، وعن هؤلاء أخذ الفرنج فسموه" karmati " أصله من خوزستان. وعرف في سواد الكوفة (سنة ٢٥٨ هـ فكان يظهر الزهد والتقشف واستمال إليه بعض الناس،

فأراهم كتابا قيل: أوله " بسم الله الرحمن الرحيم.... الأعلام للزركلي – (٥ / ١٩٤)

கர்மத் என்பது பாத்தினிய்யாப் பிரிவில் உள்ள கராமிதாக் களின் தலைவனைக் குறிக்கும். அவன் பக்கமே இவனது கொள்கை ஆதரவாளர்கள் இணைத்துப் பேசப்படுகின்றனர்.

அவனது இயற் பெயர் எது என்பதில் அறிஞர்களிடம் கருத்து முரண்பாடுகள் உண்டு. சிலர், ஹம்தான் என்றும், மற்றும் சிலர் அல்ஃரபஜ் பின் உஸ்மான் என்றும், வேறு சிலர் அல்ஃபரஜ் பின் யஹ்யா என்றும் குறிப்பிடுகின்றனர்.

கர்மத் என்பது அவனது புனைப் பெயர் (பட்டப் பெயர்) ஆகும். இலக்கியவாதிகள் மற்றும் பரம்பரை ஆய்வாளர்கள் என்போர் கிர்மித், கர்மத் என்று இருவிதமாக மொழிகின்றனர். இவர்களில் தகவல்களை அடிப்படையாகக் கொண்டே பிரஞ்சுக்காரர்கள் இவர்களை “karmath” (கர்மத்) என பெயர் சூட்டினர்.

இவர்களின் வருகை ஹி: 258 காலப்பகுதியில் கூஃபாவில் செழிப்பான வயல் விவசாய நிலங்கள் உள்ள ஹோஸ்தான் என்ற நகரை அடிப்படையாகக் கொண்டு தொடக்கம் பெற்றது. அவன் மக்களை தம் பக்கம் ஈர்ப்பதற்காக இவர்களின் சிந்தனைகளில் துறவறம், எளிமை போன்ற பண்புகளை வெளிப்படுத்தி வெற்றி கண்டான்.

## கராமித்தாக்கள் என்ன சொல்கின்றனர்?:

இவன் بسم الله الرحمن الرحيم எனத் தொடங்கும் தனது கொள்கைப் பிரகடன நூல் ஒன்றை மக்கள் முன்னிலையில் வெளிப்படுத்தினான். (அல்இஃலாம்– அஸ்ஸர்கலி)

அந்த நூலில் காணப்படும் முக்கிய கருத்துக்கள் பற்றி இமாம் ஸஹபி (ரஹ்) அவர்கள் தெரிவிக்கின்ற கருத்துக்கள் :

فمن قول القـرامطة: إنّ الحجّ والقبلة إلى بيت المقدس، ويوم الجمعة والاثنين ويوم الخميس يوم استراحة، وإنّ الصّوم في السـنة يومان: يوم النّيروز ويوم المهرجان. وإنّ الخمر حلال، ولا غســـل الجنابة. وتحيَّلوا على المســـلمين بطرقٍ شتّى، ونفق قولهم على الجهال وأهل البّر. ويدخلون على الشّيعة بما يوافقهم، وعلى السُّنة بما يوافقهم. ويخدعون الطّوائف، ويظهرون لكلّ فرقةٍ أنّهم منهم. (( تاريخ الإسلام للإمام الذهبي – (٢٠ / ٢٣٤))

ஹஜ் என்பது பைத்துல் மக்தஸில் நிறைவேற்றப்படும், திங்கள், மற்றும் ஜும்ஆத் தினங்கள் ஓய்வு நாட்களாகும், வருடத்தில் இருதின நோன்புகள். அவ்விரண்டு தினங்களும் النيروز والمهـــرجان என அழைக்கப்படுகின்றன.

இது நெருப்பு வணங்கிகளான பாரஸீகர்களின் இரு திருவிழாத் தினங்காளாகும். ஷீஆக்கள் இந்த இரு தினங்களையும் மிக்க மதிப்பபுள்ள தினமாகக் கருதுகின்றனர். நைரூஸ் தினம் வருடம் தோறும் மார்ச் 21 இல் அனுஷ்டிக்கின்ற தினமாகும்.

தமது மஹ்தி அந்த நாளில்தான் ஸர்தாப் பொந்தில் இருந்து புறப்படுவார் என ஷீஆக்கள் நம்புகின்றனர். மஹ்ரஜான் தினம் வருடத்தில் சரியாக ஒக்டோபர் மாதம் 26 ஆம் திகதி அன்று கொண்டாடப்படுகின்றது.

பாரஸீக மொழியில் மஹ்ரஜான் என்பது مهـــــــــرکان என்று அழைக்கப்படுகின்றது. பாரஸீக மன்னர்களில் ஒருவனின் மரணித்ததை முன்னிட்டு இந்தக் கொண்டாட்டம் பாரஸீகர்களால் உருவாக்கப்பட்டது. அதனை இந்த ஷீஆக்களும், அவர்களின் பிரிவுகளும் இன்றும் கொண்டாடுகின்றனர்.

- ☞ மது போதை வஸ்து தொடர்பான அனைத்தும் ஹலால்.
- ☞ ஜனாபத் என்ற குளிப்புக் கடமை இல்லை என்று குறிப்பிடும் இவர்களிடம் இமாம் ஸஹபி அவர்கள் முஸ்லிம்களை பலவிதமான சூட்சுமங்கள் மூலம் ஏமாற்றி வழிகெடுப்பர் எனக் குறிப்பிட்ட பின்னர்.
- ☞ அறிவீனர்கள் மற்றும் சமூக அக்கரை கொண்ட நலன் விரும்பிகள் மீது தமது செல்வாக்கை செலுத்துவார்கள்.
- ☞ ஷீஆக்கள் விரும்பியவாறு அவர்களுடன் இணைந்து அவர்கள்

செயற்படுவார்கள். சுன்னாக்களோடும் அவ்வாறே வெளிப்படையில் நடந்து கொள்வார்கள். உள்ளால் கருவறுப்பார்கள்.

☞ அனைத்து பிரிவினருக்கும் தில்லுமுல்லு செய்து தாமும் அவர்களில் உள்ள ஒரு குழு என நடித்துக் கொள்வார்கள். (அஸ்ஸஹபி– தாரீஹுல் இஸ்லாம்).

இவை கராமிதாக்களின் கொள்கைகள் மற்றும் போக்குகள் தொடர்பாக விளக்கும் சுருக்கமான இமாம் ஸஹபி அவர்களின் பார்வையாகும்.

அல்பக்ரி என்ற பெயரில் பிரசித்தி பெற்ற இமாம் அத்திம்யாதி அவர்கள் கராமித்தாக்களின் கொள்கைப் பரவல் தொடர்பாக எடுத்தெழுதுகின்ற போது இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்.

وكان ابتداء أمر القرامطة أنّ رجلا قدم من سواد الكوفة من ناحية خوزستان، فأقام بموضع يعرف بالنهرين يظهر الزهد و التقشّف و يأكل من كسبه و يكثر الصلاة، وكان يبتاع كلّ ليلة من بقّال (رطل تمر) «٤» من عمل يده فيفطر عليه. وكان إذا قعد إليه إنسان ذاكره أمر الدّين وزهّده في الدنيا (ورغبه في الآخرة) «٥» و أعلمه أنّ المفروض على الناس خمسون صلاة في كلّ يوم و ليلة حتّى فشا ذلك، و أعلمهم أنّه يدعو إلى إمام «٦» عادل من أهل بيت الرّسول صلعم. فلم يزل على ذلك، فقصده الجماعة بعد الجماعة و الفوج من الناس بعد الفوج، فيخبرهم بما تعلّق في قلوبهم ... فلم يزل على ما كان عليه إلى أن جاءته أكثر أهل تلك الناحية و ما والاها، و اتّخذ منهم اثني عشر نقيبا أمرهم أن يدعوا الناس إلى دينه و قال: أنتم كحواريّي عيسى. فاشتغل أكثر أهل ذلك الصقع عن أعمالهم (بما رسم لهم به) . (( المسالك و الممالك. البكري - (١ / ٣١٠)\\ المؤلف : أبو بكر (المشهور بالبكري بن محمد شطا الدمياطي)

கராமிதாக்களின் தொடக்கம் என்பது கூஃபா நகரில் விளைச்சல் நிறைந்த நிலப் பகுதியான ஹுஸ்தான் நகரில் இருந்து ஒரு மனிதன் வந்து அந்நஹ்ரைன் (ஈராறு) என்று அறியப்படும் ஒரு கிராமத்தில் தங்கினான். இவன் துறவறம், எளிமை என்பதை வெளிப்படுத்தினான். தனது சம்பாத்தியத்தில் இருந்துதான் உண்ணுவான். தொழுகையை அதிகரித்தே தொழும் வழக்கமுள்ளவனாக இருந்தான். அவன் ஒரு மலிகைக் கடையில் ஒரு இராத்தல் (450 கி. அளவு) இடை அளவு பேரீத்தம் பழங்களை அவனிடம் ஒவ்வொரு இரவும் கொள்முதல் செய்வான்.

அவன் தனது கரத்தால் தேடித்தான் உண்ணுவான். யாராவது ஒரு மனிதர் அவனிடம் அமர்ந்தால் இவன் அவரோடு துறவற வாழ்வு பற்றியும், மறுமையில் ஆசை ஊட்டியும் பேசுவான். அந்த மனிதனிடம் நாளாந்தம் ஐம்பது நேரங்கள் தொழ வேண்டும் என்றும் போதனை செய்வான்.

அத்தோடு, தான் நபி(ﷺ) அவர்களின் குடும்பத்தில் உள்ள நீதியான ஒரு இமாமின் பக்கம் அழைப்பு விடுப்பதாகவும் (இடையில் கதை விடுவான்). இவ்வாறு இவன் தனது திட்டத்தை மெதுமெதுவாக நகர்த்திக் கொண்டே சென்றான்.

காலப் போக்கில் இவனது பிரச்சாரத்தால் கவரப்பட்ட மக்கள் அவனை கூட்டம் கூட்டமாக நாடத் தொடங்கினர், குழுக் குழுவாக அவனிடம் வந்து சேர்ந்தனர். அவன் அவர்களின் உள்ளங்களில் தேங்கிக் கிடக்கும் சில விடயங்கள் பற்றியும் அறிவிப்பான் . . .

அவன் இவ்வாறு நடந்து கொண்டிருந்த போது அந்தப் பகுதி மக்களில் பெரும்பாலானவர்கள் அவனோடு இணைந்தனர். அவன் அவர்களில் இருந்து பன்னிரெண்டு நகீப்களை (தூய பிரச்சாரகர்களை) தேர்வு செய்து அவர்களிடம் நீங்கள் அனைவரும் ஈஸா(عليه السلام) அவர்களின் ஹவாரிய்யூன் எனப்படும் உற்ற நேசர்கள் போன்றவர்கள் எனக் கூறி, மக்களை அவனது சிந்தனையின் பக்கம் அழைக்கும் படி ஏவினான். இவர்களில் பலர் தமது வேலைகளை விட்டு விட்டு அவன் வரைந்த அடிப்படையில் செயல்படத் தொடங்கினர்.

(பார்க்க: (( المسالك و الممالك. المؤلف : أبو بكر (المشهور بالبكري) بن محمد شطا الدمياطي

தொடர்ந்தும் இமாம் திம்யாதி அவர்கள் விபரிக்கின்ற போது, இவன், தான் ஒரு மஹ்தியாக வெளிப்படும் நேரம் மிகவும் அண்மித்து விட்டதால் தன்னுடன் விரைந்து இணையுமாறு கட்டளையிட்டான்.

ஒரு ஏட்டை வெளியில் காட்டி இதுதான், தான், மஹ்தி

என்பதற்கான ஆதாரம் என்றும் குறிப்பிட்டு அலி பின் அல்முஅல்லாவிடம் கதீஃப் நகர மக்களில் யார் ராபிழாக்களாக மாற விருப்பமோ அவர்களிடம் நீர் இந்த ஏட்டை வாசித்துக் காட்டு என்று பணித்ததோடு, அண்மையில் உள்ள பஹ்ரைனில் யார் ஷீஆக்களாக விருப்பமோ அவர்களையும் அவனோடு இணைந்து கொள்ளமாறும் அழைத்த போது அவர்கள் அவனது அழைப்புக்கு பதில் அளித்தனர். இவ்வாறு விடையளித்தவர்களில் 800 பேர்கள்வரை காணப்பட்டனர்.

இவ்வாறு இவனுக்கு பதில் அளித்தவர்களில் (எமன்) ஜுனாபா தீவில் உள்ள அபூஸயீத் அல் ஜுனாபி என்பவனும் ஒருவன். இவன் அஸ்ஸுராதா என்ற மாகாணத்தில் உணவு விற்பனை செய்து வந்தான். இவன் தனது வியாபாரம் தொடர்பான கொடுக்கல் வாங்கல்கள் பற்றித்தான் அறிவானே அல்லாமல் அவன்,

و لا يعرف من كتاب الله و لا من سّنة رسوله صلعم و لا من العلوم شيئا، و كان قبيحا قميئا

அல்லாஹ்வின் வேதத்தில் இருந்தோ, முஹம்மத் நபி (ﷺ) அவர்களின் சுன்னாவில் இருந்தோ, அல்லது வேறு அறிவுகளில் இருந்தோ எதையும் அவன் அறியாதவனாக இருந்தான். இவன் அசிங்கமான பண்பு, நடத்தை உள்ளவனாகவும், துர்க்குணமுள்ள வனாகவும் இருந்தான் என தமது பதிவை முடிக்கின்றார்கள்.

(( المسالك و الممالك. المؤلف : أبو بكر (المشهور بالبكري) بن محمد شطا الدمياطي

இமாம் அவர்கள் இமாம் இப்னு கஸீர் – ரஹ்– ஹிஜ்ரி 278 வது நிகழ்வு தொடர்பாக அல்பிதாயா வந்நிஹாயா குறிப்பிடும் போது:

ثم دخلت سنة ثمان وسبعين ومائتين قال: وفيها تحركت القرامطة وهم فرقة من الزنادقة الملاحدة أتباع الفلاسفة من الفرس الذين يعتقدون نبوة زرادشت ومزدك،وكانا يبيحان المحرمات ... (( البداية والنهاية – (١١ / ٧١)

பின்னர், ஹிஜ்ரி 278 ஆவது வருடம் பிரவேசிக்கின்றது. இந்த ஆண்டு கராமிதாக்கள் எனப்படுவோர் எழுச்சி பெற்றனர். இவர்கள் ஸராதஷ்த், மற்றும் மஸ்தக் என்ற இருவரை இரு நபிமார்களாக நம்பிவந்த பாரஸீக தர்க்கவியலாளர்களைப் பின்பற்றி வந்த நாஸ்தீகர்களாகவும், சமூகத்துரோகிகளாகவும், பச்சோந்திகளாகவும் இருந்தனர் எனக் குறிப்பிடுவதை அவதானிக்கின்ற போது பாதினிய்யாக்களான கராமித்தா பிரிவினர் பாரஸீக நெருப்பு வணக்கத்திற்கும், நாஸ்தீகத்திற்கு இடையில் பிரசவித்த வெளிப்படை இஸ்லாமியக் குழந்தை என்பதை உணர்த்துகின்றது. (இமாம் இப்னு கஸீர்– அல்பிதாயா வந்நிஹாயா).

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் மற்றோர் இடத்தில்,

ويقال لهم القرامطة، قيل نسبة إلى قرمط بن الأشعث البقار، وقيل إن رئيسهم كان في أول دعوته يأمر من اتبعه بخمسين صلاة في كل يوم وليلة لشغلهم بذلك عما يريد تدبيره من المكيدة.

இவர்கள் கராமித்தா என அழைக்கப்படுகின்றனர். கர்மத் பின் அல்அஷ்அஸ் அல்பக்கார் என்பவனோடு இணைத்து இந்தப் பிரிவினர் பேசப்படுகின்றனர். இவர்களைப் பின்பற்றியவர்களின் கவனத்தை திசைதிருப்புவதற்காக ஆரம்பத்தில் ஐம்பது நேரத் தொழுகைகளைக் கடைப்பிடிக்கும்படி கராமித்தாக்களின் தலைவன் கர்மத் கட்டளையிட்ட தாகக் கூறப்படுகின்றது என்றும் குறிப்பிடுகின்றார்கள்.

## 55

# கராமித்தாக்களின் மறு பெயர்கள்

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் கராமித்தாக்களின் பிரதான நுழைவாயில் பற்றி பின்வருமாறு விளக்குகின்றார்கள்.

ويقال لهم القرامطة، قيل نسبة إلى قرمط بن الأشعث البقار، وقيل إن رئيسهم كان في أول دعوته يأمر من اتبعه بخمسين صلاة في كل يوم وليلة لشغلهم بذلك عما يريد تديره من المكيدة. ثم اتخذ نقباء اثنى عشر، وأسس لاتباعه دعوة ومسلكا يسلكونه ودعا إلى إمام أهل البيت، ويقال لهم الباطنية لانهم يظهرون الرفض ويبطنون الكفر المحض، والخرمية والبابكية نسبة إلى بابك الخرمي الذي ظهر في أيام المعتصم وقتل كما تقدم ويقال لهم المحمرة نسبة إلى صبغ الحمرة شعار مضاهاة لبني العباس ومخالفة لهم، لان بني العباس يلبسون السواد. ويقال لهم التعليمية نسبة إلى التعلم من الامام المعصوم. وترك الرأي ومقتضى العقل. ويقال لهم السبعية نسبة إلى القول بأن الكواكب السبعة المتحيزة السائر مدبرة لهذا العالم فيما يزعمون لعنهم الله وهي القمر في الاولى، وعطارد في الثانية، والزهرة في الثالثة، والشمس في الرابعة، والمريخ في الخامسة، والمشتري في السادسة، وزحل في السابعة.

قال ابن الجوزي: وقد بقي من البابكية جماعة يقال إنهم يجتمعون في كل سنة ليلة هم ونساؤهم ثم يطفئون المصباح وينتهبون النساء فمن وقعت يده في امرأة حلت له ويقولون هذا اصطياد مباح لعنهم الله.

கராமித்தாக்களின் கர்மத் பின் அல்அஷ்அஸ் அல்பக்கார் என்பவனோடு இணைத்துப் பேசப்படுகின்ற காரணத்தினால் கராமித்தா என்றும் அழைக்கப்படுகின்றனர். இவர்களைப் பின்பற்றியவர்களின் கவனத்தை திசை திருப்புவதற்காக ஆரம்பத்தில் ஐம்பது நேரத் தொழுகைகளைக் கடைப்பிடிக்கும்படி இவர்களின் தலைவன் கர்மத் அவர்களுக்கு கட்டளையிட்டதாகக் கூறப்படுகின்றது.

பின்னர் அவன், பன்னிரெண்டு (நகீப்கள் எனப்படும்) கொள்கை பரப்புச் செயலாளர்களை தேர்ந்தெடுத்தான். தனது ஆதரவாளர்களுக்கென அழைப்பு வழிமுறையையும் அவர்கள் நடக்கவேண்டிய நடைமுறைகளையும் வரைந்தான். அத்தோடு, அவன் அஹ்லுல் பைத்தினரின் பேரில் கற்பனையில் மறைந்து வாழும் ஷீஆக்களின் இமாமின் பக்கம் அழைப்பும் விடுத்தான்.

கராமித்தாக்கள் ஷீஆ மதக் கோட்பாட்டை வெளிப்படுத்தி, உள்ளரங்கத்தில் தெளிவான இறைமறுப்பை மறைத்து வைப்பதனால் இவர்களுக்கு பாத்தினிய்யா என்றும் சொல்லப்படும்.

அப்பாஸிய கலீஃபா அல் முஃதஸிம் காலத்தில் வெளியான பாபக் அல்ஹுர்ரமி என்பவனை அவர்கள் பின்பற்றியதால் அல்குர்ரமிய்யா, அல்பாபகிய்யா என்றும் இவர்கள் அழைக்கப் படுகின்றனர்.

பனுல் அப்பாஸ் (அப்பாஸிய) பரம்பரை மக்கள் கறுப்பு நிறங்களைக் கொண்டு தம்மை அடையாளப்படுத்தி இருந்ததனால் அவர்களுக்கு மாற்றம் செய்யும் முகமாக இவர்கள் தம்மை சிவப்பு நிறத்தால் அடையாளப்படுத்திக் கொண்டனர். அதற்காக இவர்களின் பெயர்களில் ஒன்றாக முஹம்மறா (செவ்வினத்தவர் – சிவப்புச் சட்டைக்காரர்கள்) என்றும் அறியப்பட்டிருந்தது.

ஷீஆக்களின் மறைந்து வாழும் இமாமிடம் இருந்து இவர்கள் தமது போதனைகளைப் பெறுவதாகப் போதிப்பதாலும், சுயமான விளக்கங்களையும் பகுத்தறிவு வாதத்தையும் விட்டுள்ளதாலும் இவர்களுக்கு தஃலீமிய்யா (கண் மூடிப் பின்பற்றுவோர்) என்றும் சொல்லப்படும்.

ويقال لهم السبعية نسبة إلى القول بأن الكواكب السبعة المتحيزة السائر مدبرة لهذا العالم فيما يزعمون لعنهم الله وهي القمر في الاولى، وعطارد في الثانية، والزهرة في الثالثة، والشمس في الرابعة، والمريخ في الخامسة، والمشتري في السادسة، وزحل في السابعة.

முதலாம் வானத்தை சந்திரன், இரண்டாம் வானத்தை மேர்கரி, மூன்றாம் வானத்தை வீனஸ், நான்காம் வானத்தை சூரியன், ஐந்தாம் வானத்தை மார்ஸ், ஆறாம் வானத்தை ஜுபிட்டர், ஏழாவது வானத்தை

சனிக் கோள் ஆகியன நிர்வாகம் செலுத்தி, இந்த உலகை ஏழுகோள்கள் இயக்குகின்றன என்று கூறி அவற்றை நம்பி, அல்லாஹ்வை நிராகரிக்கின்ற காரணத்தால் இவர்களுக்கு ஸபயிய்யா (ஏழு கோள் நம்பிக்கையாளர்கள்) என்றும் கூறப்படும். இவ்வாறான வழிகேடர்களை அல்லாஹ் சபிப்பானாக!

**குறிப்பு: மேற்படி பெயரில் இருப்பவை அரபுக்களிடம் அறியப்பட்ட கோள்களாகும். புவி, புதன், வெள்ளி, செவ்வாய், வியாழன், சனி ஆகிய கோள்களோடு யுரேனஸ், மற்றும் நெப்டியூன் ஆகிய கோள்கள் நவீன விஞ்ஞானத்தில் போதிக்கப் படுவதற்கு ஒத்த பெயர்கள் அக்காலத்தில் காணப் பட்டிருப்பது, ஒரு புறத்தில் பாத்தினிக்களின் தெளிவற்ற விஞ்ஞான அறிவையும் மறு புறத்தில் இறை நிராகரிப்பையும் எடுத்துக் காட்டுகின்றது.**

இவைகளை வணங்கி வழிபடாது அவைகளைப் படைத்த அல்லாஹ் ஒருவனை மாத்திரம் தூய்மையாக வணங்க வேண்டும் என குர்ஆன் கட்டளையிடுவதன் இரகசியமும் இதுதான்.

இவர்களில் உள்ள பாபகிய்யா பிரிவினரில் ஒரு சாரார் வருடத்தில் ஓரிரவில் தாமும் மற்ற பெண்களும் ஒன்று கூடுவார்கள். பின்னர் வெளிச்சத்தை அணைப்பார்கள், (அவ்விரவு தமது கைகளில் அகப்படும்) பெண்களைச் சூறையாடுவார்கள், பாலியல் வன்புணர்வு செய்வார்கள்.

எவன் கையில் ஒரு பெண் மாட்டிக் கொண்டாளோ அவள் அவனுக்கு ஹலால் (தாய், சகோதரி, பிறர் மனைவி என்ற வித்தியாசம் இன்றி) அனுபவிப்பார்கள். அல்லாஹ்வின் சாபம் இவர்களுக்குக் கிடைக்கட்டுமாக! இது அல்லாஹ் தமக்கு ஆகுமாக்கிய பெண் வேட்டை முறை என்பார்களாம் என இமாம் இப்னுல் ஜவ்ஸி (ரஹ்) அவர்கள் கூறி உள்ளதாக குறிப்பிடுகின்றார்கள்.

தர்க்கவியல் சிந்தனையாளரான இமாம் அல்பாகில்லானி அவர்கள் அவரது பிரபலமான நூலான, " هتك الأستاروكشـــــف الأسرار في الرد على الباطنية " என்ற நூலில் இவர்களுக்கான முழுமையான மறுப்பை வெளியிட்டுள்ளதாக இமாம் இப்னுல் ஜவ்ஸி அவர்கள் குறிப்பிடுவது இங்கு கவனிக்கத்தக்கதாகும்.



UU

# ஷீஆக்களே இவர்களின் இறங்கு துறைமுகம்

ஷீஆ மத சிந்தனையில் முதலாவதாக தன்னை இணைத்துக் கொள்ளும் ஒருவர், அதன் ஊடாக தான் விரும்பிய அனைத்து விதமான வழிகேடுகளுக்கும் செல்லலாம் என்பதை கண்டறிந்த பல யூதர்கள், எமன், பக்தாத், ஈராக் மற்றும் ஷாம், பஹ்ரைன் போன்ற பிரதேச அப்பாவிகளை,

- அஹ்லுல் பைத்தினர் பேரிலும்,
- அவர்களின் பரம்பரையில் வந்தவர்கள் என்ற பெயரிலும்,
- எதிர்பார்க்கப்பட் ஒரு மஹ்தி என்ற பெயரிலுமே தம்மைப் பற்றி அறிமுகம் செய்து தம்மைப் பற்றி எதுவம் அறியாத பாமர மக்கள் மத்தியில் புகழ்ந்து, பாரதுாரமான வழிகேடுகளை விதைத்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

ஷீஆ இமாமிய்யாக்கள், இஸ்மாயீலிய்யாக்கள், பாத்தினிய்யாக்கள், நுஸைரிய்யாக்கள், உபைதிய்யாக்கள், ஸஃபவிக்கள் எனத் தோன்றிய பிரிவுகள் யாவும் ஷீஆ மதத்தில் அலி (ரழி) அவர்களின் பெயரில் வந்தவைகளே! அவை அனைத்து குழுக்களின் தரிப்பிடமாக ஷீஆ மற்றும் அஹ்லுல் பைத் துறைமுகமே இருந்துள்ளது.

அஹ்லுல் பைத்தினரில் பரம்பரையில் இருந்து வந்தவர், பாத்திமா(ரழி) அவர்களின் பரம்பரையில் வந்தவர் என்றதும் மக்கள் ஏமாந்து இவர்கள் பின்னால் செல்வது, இயல்பான நடைமுறையாக இன்றும் இருக்கின்ற போது தொழில் நுட்ப விஞ்ஞான முன்னேற்றம்

இல்லாத இஸ்லாம் சரியாகச் சென்றடையாத அந்தக் காலம் பற்றிக் கேட்கவா வேண்டும்? இதனை சாதமாகப் பயன்படுத்திக் கொண்ட யூதர்கள் தமது காரியங்களை ஷீஆக்கள் ஊடாகவே உலகெங்கும் நகர்த்தினர்.

அந்த வகையில் பாத்தினிய்யாக்கள் தாமும் ஷீஆக்களுக்கு சற்றும் சளைத்தவர்கள் அல்லர் என்பதை நிரூபித்து முஸ்லிம் உம்மத்தில் நாத்திகத்தை முழுமையாகப் பரப்பி அவர்களில் பெரும்பகுதியினரை மார்க்கத்தின் பெயரால் முர்தத்களாக மாற்றி உள்ளனர் என்பதை அவர்கள் தொடர்பான வாசிப்பு நமக்குச் சொல்லும் பாடமாகும்.

இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்களின் பின்வரும் கூற்றைக் கவனியுங்கள்.

الشيعة الباطنية فإن عقيدتهم في الابتداء عقيدة الشيعة ثم ينقلون المستجيب لهم إلى الرفض ثم ينقلونه إلى ترك الأعمال ثم ينقلونه إلى الإنسلاخ من خصوص الإسلام ثم إلى الإنسلاخ من الملل إلى أن يصل إلى البلاغ الأكبر والناموس الأعظم عندهم فيصير معطلا محضا ((الصفدية – (١ / ٢٧٣\ الإمام ابن تيمية ت: د رشاد سالم ))

பாத்தினிய்யா ஷீஆக்களின் தொடக்கக் கொள்கை (அஹ்லுல் பைத்தினரை எல்லை கடந்து நேசம் கொள்ளப் போதிக்கும்) ஷீஆக் கொள்கையாகும். பின்னர் அவர்கள் தமக்குப் பதில் அளித்தவர்களை முற்றிய ஷீஆக் கொள்கையை நோக்கி நகர்த்தினர்.

பின்னர், அமல்கள் எதுவும் அவசியமற்றவை என்பதாகக் காரணம் கூறி அவற்றை விட்டு விடும் நிலைக்கு அவனைக் கொண்டு செல்வர், பின்னர் இஸ்லாத்தின் சிரேஷ்ட மற்றும் உயரிய நல்ல பழக்க வழக்கங்களை விட்டும் அவனை அப்புறப்படுத்துவர். பின்னர், புனித இஸ்லாத்தை விட்டும் முழுமையாக அவனை வெளியேற்றிவிடுவர்.

இவ்வாறு அவர்களின் பெரிய போதகரை மகாரிஷி என்ற தரத்தை எட்டும் வரை கொண்டு சென்று அவன் முழுமையான, சுத்த ஒரு நாத்திகனாக அவன் மாறுவான் என குறிப்பிடுகின்றார்கள்.

(இமாம் இப்னு தைமிய்யா- அஸ்ஸஃபதிய்யா)

இவை ஆழமான, நிதர்சனமான வரிகள். இதை இன்றும் மறுக்க முடியாது என்பதே அதிசயம். பைல்வானிஸம், ஹமவேஸ்ட் பிரிவுகளின் கூப்பாடுகளையும், வாதங்களையும் இமாம் இப்னு தைமிய்யாவின் மேற்படி வரிகள் உண்மைப்படுத்துகின்றன.

இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் ஃபதாவா என்ற தனது நூலில் மேலும் குறிப்பிடுகின்ற போது:

وَأَما هؤُلاءِ الْقَرامِطَةُ فَإِنَّهُمْ فِي الْباطِنِ كافِرُونَ بِجَمِيعِ الْكُتُبِ وَالرُّسُلِ، يُخْفُونَ ذَلِكَ وَيَكْتُمونَهُ عَنْ غَيْرِ مَنْ يَثِقُونَ بِهِ ؛ لا يُظْهِرُونَهُ، كَما يُظْهِرُ أَهْلُ الْكِتابِ دِينَهُمْ، ((الفتاوى الكبرى – (٣ / ٥٠٠)

கராமித்தாக்கள் எனப்படும் இந்தக் கூட்டம் உள்ளரங்கமாக அனைத்து வேதங்களையும், தூதர்களையும், நிராகரிப்பவர்கள். அவர்களின் வழிகேட்டை யார் உறுதியாக நம்பிக்கை கொள்ள மாட்டார்களோ, அல்லது யாரால் பாதகம் ஏற்படுமோ அவர்களிடம் அதனை வெளிப்படுத்தாது, மறைத்து வைத்துக் கொள்வார்கள். அது பற்றி வெளிப்படுத்தமாட்டார்கள். வேதம் கொடுக்கப்பட்டவர்கள் யூத-கிறிஸ்தவர்களைப் பற்றி தமது மார்க்கத்தை வெளிப்படுத்தும் யுக்திகள் போன்று எனக் குறிப்பிடுகின்றார்கள்.

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் இவர்களின் நிலை பற்றியும் இவர்களின் அறிவற்ற, தேடலில்லாத அசமந்த போக்குப் பற்றியும் விளக்கிய பின்னர்,

ثم هم بعد ذلك أتباع كل ناعق إلى باطل، وأكثر ما يفسدون من جهة الرافضة ويدخلون إلى الباطل من جهتهم، لانهم أقل الناس عقولا، ويقال لهم الاسماعيلية، لا نتسابهم إلى إسماعيل الاعرج بن جعفر الصادق.

பின்னரும் இவர்கள் அசத்திய வழிக்கு அழைக்கின்ற மார்க்கமற்ற ஒவ்வொரு கூப்பாட்டாளனுக்கும் ஆதரவளிப்பவர்களே! இவர்கள் ராபிழாக்கள் எனப்படும் ஷீஆக்களின் ஊடாகவே மக்களிடம் நுழைந்து அவர்களை வழிகெடுக்க முற்படுகின்றனர்.

ஷீஆக்கள் என்போர் புத்தி குறைந்தவர்கள். இஸ்மாயீல் அல்அஃரஜ் பின் ஜஃபர் ஸாதிக் என்பவரின் பக்கம் இணைத்துப் பேசப்படுவதால் இவர்களுக்கு இஸ்மாயீலிய்யா என்றும் கூறப்படும் எனக் குறிப்பிட்டுள்ளார்கள். (இமாம் இப்னு கஸீர்- அல்பிதாயா வந்நிஹாயா)

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் இவர்களின் வழிகேடுகள் பற்றி அல்குர்ஆனின் வசனங்கள் சிலவற்றைக் கொண்டு ஆதாரம் காட்டி விளக்கிய பின்னர், இவர்கள்

أن الباطل والجهل والضـلال والمعاصي لا ينقاد لها إلا شرار الناس((البداية والنهاية – (١١ / ٧١)

அசத்தியம், மடைமை, வழிகேடு, பாவங்கள் என அனைத்திற்கும் மனிதர்களில் தீயவர்கள்தான் வழிப்படுவார்கள் எனக் குறிப்பிடுகின்றார்கள். (அல் பிதாயா வந்நிஹாயா)

சுருக்கமாகச் சொன்னால், நவீன காலத்தில் வழிகெட்ட பிரிவுகளிடம் காணப்படும் அனைத்து விதமான பண்புகளையும் இந்தப் பிரிவுகளிடம் காணப்பட்டன என்பதே உண்மை!

# UU கராமிதாக்கள் தொடர்பான இமாம்கள், நல்லறிஞர்களின் தீர்ப்புக்கள்

வழிகேடுகளின் வாரிசுகள் அனைவருக்கும் இஸ்லாமிய அறிஞர்களின் தீர்க்கமான தீர்ப்புக்கள் காரணங்களோடும், ஆதாரங்களோடும் வழங்கப்பட்டிருக்கின்றன என்ற வகையில் இவர்கள் தொடர்பாகவும் அறிஞர்கள் வழங்கிய தெளிவான தீர்ப்புக்கள் பற்றி கீழே எடுத்தெழுதப்படுகின்றது.

**இமாம் இப்னுல் கைய்யிம் (ரஹ்):**

- இமாம் இப்னுல் கையிம் (ரஹ்) அவர்கள் இவர்கள் தொடர்பாக பின்வரும் தீர்ப்பினை வெளியிடுகின்றார்கள்.

طوائف القرامطة والإسماعلية والنصيرية والبشكية والدرزية والحاكمية وسائر العبيدية الذين سمون أنفســـهم الفاطمية وهم من أكفر الكفار كما ستأتي ترجمتهم فكل هؤلاء يجمعهم هذا المذهب ويتفاوتون في التفصـــــيل فالمجوس شيوخ هؤلاء كلهم وأئمتهم وقدوتهم وإن كان المجوس قد يتقيلون بأصـل دينهم وشـرائعهم وهؤلاء لا يتقيلون بدين من ديانات العالم ولا بشريعة من الشرائع (( ابن القيم \ إغاثة اللهفان من مصائد الشيطان – (٢ / ٢٤٩

கராமிதாக் பிரிவுகள், இஸ்மாயீலிய்யா, நுஸைரிய்யா, பிஷ்கிய்யா, துரஸிய்யா, ஹாகிமிய்யா, மற்றும் அதன் கிளைகளான ஏனைய உபைதிய்யாப் பிரிவுகள் அனைவரும் தமக்கு பாதிமிய்யா என்றே பெயர் வைத்துக் கொண்டனர்.

இவர்கள் காபிர்களை விடவும் முத்திய இறைமறுப்பாளர் களாவர். இவர்கள் அனைவரையும் பாதினிய்யா என்ற கொள்கை ஒன்றிணைக்கும். அவர்கள் முன்வைக்கும் விளக்கக் கோட்பாட்டில்

தமக்குள் சற்று வித்தியாசப்படுவார்கள்.

இவர்கள் அனைவரினதும் குருக்களும் முன்மாதிரிகளும் நெருப்பு வணங்கிகளான பாரஸீகர்களே! நெருப்பு வணங்கிகள் தமது அடிப்படை மார்க்கத்தையும், அதன் கோட்பாட்டு வழிகளையும் அவர்கள் பேணிக் கொண்டிருந்த போதும் இவர்களிடம் அவ்வாறு காணமுடியாது. இவர்கள் எந்த சமயக் கோட்பாடுகளையும் கட்டிக்காப்பவர்கள் அல்லர். (இப்னுல் இமாம் கையிம்– إغاثة اللهفان من مصائد الشيطان )

**இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்களின் கூற்று:**

பாத்தினிய்யாக்கள் தொடர்பாக முன்வைக்கப்பட்ட அறிஞர்களின் அனைத்துவிதமான கருத்துக்களும் கராமித்தாக் களையும் உள்ளடக்கிக் கொள்ளும். இருப்பினும், இஸ்லாமிய தேசத்தைத் துவம்சம் செய்து இஸ்லாத்தின் சட்டங்களைப் பாழ்படுத்தி பெண்களுக்கு எதிரான கற்பழிப்புக்கள், பாலியல் துஷ்பிரயோகங்கள், விபச்சாரம் செய்தல், சொத்துக்கள் சூறையாடுதல், புனித பூமியான கஃபாவில் அட்டூழியங்கள் புரிதல், ஹாஜிகளைக் கொன்றொழித்தல்.. என அனைத்து அக்கிரமங்களையும் துறவரம், அஹ்லுல் பைத்தினரை நேசித்தல் போன்ற வெளிக் கோஷத்தின் மூலம் மக்களைத் தம்பக்கம் ஈர்த்து பலமான அரசொன்றை உருவாக்கிய பின்னரே அரங்கேற்றினர். இதைத்தான் இன்று ஈரான் ஈராக் மற்றும் சிரியாவில் செய்து கொண்டிருக்கின்றது.

(நூல்: அல் பிதாயா வன் நிஹாயா)

UU

# கராமித்தாக்கள் முஸ்லிம் உலகில் அரங்கேற்றிய கொடுமைகள்

கராமிதாக்களின் பிறப்பிடமாக ஆரம்ப காலங்களில் ஷாம் தேசமும் தற்போதைய சவூதி அரேபியாவின் கிழக்கு மாநிலமும் காணப்பட்டது. பஹ்ரைன், அஹ்ஸா, தம்மாம், கதீஃப் போன்ற பிரதேசங்களில் கராமிதாக்கள் தமக்கென ஒரு ஆட்சியை நிறுவி, அங்கு சில காலம் அதிகாரத்தில் இருந்துள்ளனர் என்பதை வரலாறு உறுதி செய்கின்றது.

ஹிஜ்ரி 286 இல் சவூதி அரேபியா கதீஃப் நகரில் எமனைச் சேர்ந்த அபூ ஸயீல் அல் ஜுனாபி என்பவன் தலைமையில் இவர்கள் ஒன்றிணைக்கப்பட்டனர். இந்தப் பிரதேசங்கள்தாம் நபித்துவ காலத்தில் ஹஜர் என்று அறியப்பட்டதாக இருந்துள்ளதை இவர்கள் தொடர்பான வாசிப்பின் மூலம் அறிய முடிகின்றது. பக்தாதில் அப்பாஸியர் ஆட்சியின் பலவீனம், இவ்விரு நாடுகளுக்கும் இடையில் காணப்பட் தொலை தூரம் போன்ற காரணங்களால் இந்த நிலையை அவர்கள் தமக்கு சாதகமாக்கி இருக்கலாம், இதற்கு பக்தாதிய மற்றும் துருக்கிய கலீஃபாக்களின் கவனயீனமும் மற்றொரு காரணியாகும்.

மக்காவைத் தாக்கி ஹஜருல் அஸ்வத் கல்லை 22 ஆண்டுகள் தம்மோடு வைத்திருந்தமையானது இவர்கள் ஒரு சக்தி வாய்ந்த குழுவினராக இருந்துள்ளதைக் காட்டுகின்றது.

இவர்கள் இஸ்லாத்தை அழிக்கவும் அதன் மக்களைப் பழிவாங்கவும் படைக்கப்பட்வர்கள் போன்று நடந்துள்ளனர்.

இவர்களின் அநீதிகளையும் அட்டூழியங்களையும் அவதானிக்கின்ற போது இஸ்லாத்தினுள் காணப்பட்ட சிலுவைப் போராளிகள் எனக் குறிப்பிட முடியும் போன்றிருக்கின்றது. இவர்கள் அவ்வளவு படுபயங்கரமான மனித மிருகங்கள் என்பதை அவர்களின் வரலாறு சொல்கின்றது.

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் கராமித்தாக்களின் கொடுமைகள், மிலேச்சத்தனமான எல்லை மீறல்கள், தாக்குதல்கள் பற்றி அல்பிதாயா வந்நிஹாயா என்ற பெறுமதியான அந்த பொக்கிஷத்தில் பல இடங்களிலும் எழுதி இருக்கின்றார்கள்.

قال بعض الشـــــــعراء:وكنت امرأ من جند إبليس برهة * من الدهر حتى صار إبليس من جندي

சில காலம் இப்லீஸின் படையில் ஒரு சிப்பாயாக இருந்தேன், இப்லீஸோ எனது படையில் ஒருவனாக மாறினான் என்ற ஒரு கவிஞரின் கவிதை வரிகள் இவர்கள் இப்லீஸை மிகைத்தவர்கள் என்ற பொருள் கொண்ட கவிதையைக் குறிப்பிட்டு இமாம் இப்னு கஸீர் (ரஹ்) கொடிய இந்த கராமித்தாக்கள் ஹரம் ஷரீஃபில் அரங்கேற்றிய மிலேச்சத்தனமான தாக்குதல்கள் பற்றி இவ்வாறு விளக்குகின்றார்கள்.

والمقصـود أن هذه الطائفة تحركت في هذه السـنة، ثم استفحل أمرهم وتفاقم الحال بهم كما سنذكره، حتى آل بهم الحال إلى أن دخلوا المســجد الحرام فســفكوا دم الحجيج في وسط المسجد حول الكعبةو كسروا الحجر الأسود واقتلعوه من موضعه، وذهبو به إلى بلادهم في سنة سبع عشرة وثلاثمائة، ثم لم يزل عندهم إلى سنة تسع وثلاثين وثلاثمائة، فمكث غائبا عن موضعه من البيت ثنتين وعشرين سنة فإنا لله وإنا إليه راجعون وكل ذلك من ضعف الخليفة وتلاعب الترك بمنصـب الخلافة واستيلائهم على البلاد وتشـتت الامر. وقد اتفق في هذه السـنة شيئان أحدهما ظهور هؤلاء، والثاني موت حســام الاسلام وناصر دين ((البداية والنهاية – (١١ / ٧١))

இப்லீசுக்கே இவர்களின் அணியில் சேர்ந்து பணி செய்து, மக்களை வழிகெடுக்க விருப்பம் எனக் கூறுவதன் நோக்கம் என்னவெனில் இவ்வாண்டுதான் இந்தக் குழு செயற்படத் தொடங்கியமையாகும்.

பின்னர், அவர்களின் கெடுபிடிகள் அதிகரித்தது. நாம் பின்னர் கூறவிருக்கும் படி நிலைமை மிகவும் மோசமடைந்தது. எந்த அளவு எனில் அவர்கள் மஸ்ஜிதுல் ஹராமுக்குள் பிரவேசித்து மஸ்ஜிதின் மத்தியிலும், கஃபாவைச் சூழவும் ஹாஜிகளின் இரத்தங்களை ஓட்டினர்.

ஹஜருல் அஸ்வத் கல்லை உடைத்தனர், அதன் இடத்தை விட்டும் அதைக் கழற்றி அப்புறப்படுத்தி தமது பிரதேசத்திற்கு (தற்போதைய அல்அஹ்ஸா)ஹிஜ்ரி 317 ஆம் ஆண்டு கொண்டு சென்றனர்.

அது அவர்களிடம் ஹிஜ்ரி 339 வரை 22 வருடங்கள் வரை தடுத்து வைக்கப்பட்டதால் கஃபா ஹஜருல் அஸ்வத் கல் இன்றி காணப்பட்டது என்பதை ஆச்சரியத்தோடு إِنَّا لِلَّهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُــــونَ எனக் கூறி விளக்கிய பின்னர், இவை அனைத்தும் கலீஃபாவின் பலவீனம் மற்றும் துருக்கியர்கள் கிலாஃபத் பதவிக்காக தமக்குள் சண்டை இட்டுக் கொண்டு சில பிரதேசங்கள் மீது அடர்ந்தேறியதன் விளைவாக ஆட்சி சிதறுண்டு காணப்பட்டது. இந்த ஆண்டில் ஒன்றுபட்ட இருகாரணிகள் **இந்த நிலைக்கு காரணிகளாக இருந்தன. ஒன்று இவர்கள் வெளிப்பட்டமை, இரண்டாவது இஸ்லாம் தொடர்பான ரோஷமும் , மார்க்கத்தின் உதவியாளர்கள் மரணித்ததுமாகும் எனக் குறிப்பிடுகின்றார்கள்.**

## ௫௫

# இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்களின் மகத்தான பதிவு

ஹிஜ்ரி: 311 வது வருடம் தொடர்பான வரலாற்றுக் குறிப்பில் இவ்வாறு பதிவு செய்கின்றார்கள்.

ثم دخلت سنة إحدى عشرة وثلثمائة فيها دخل أبو طاهر سليمان بن أبي سعيد الجنابي أمير القرامطة في ألف وسبعمائة فارس إلى البصرة ليلا، نصب السلالم الشعر في سورها فدخلها قهرا وفتحوا أبوابها وقتلوا من لقوه من أهلها، وهرب أكثر الناس فألقوا أنفسهم في الماء فغرق كثير منهم، ومكث بها سبعة عشر يوما يقتل ويأسر من نسائها وذراريها، ويأخذ ما يختار من أموالها. ثم عاد إلى بلده هجر، كلما بعث إليه الخليفة جندا من قبله فر هاربا وترك البلد خاويا، إنا لله وإنا إليه راجعون.( ( البداية والنهاية – (١١ / ١٦٨) )

பின்னர் ஹி: 311 ஆம் வருடம் வந்தது. அதில்தான் கராமிதாக்களின் தலைவன் அபூதாஹிர் சுலைமான் பின் அபூஸயீத் அல் ஜனாபி என்பவன் 1700 குதிரைவீரர்களோடு பஸராவிற்குள் ஒரு இரவில் நுழைந்தான்.

அங்குள்ள பிரதான சுவர்களின் மேல் மரபுவழியில் தயாரிக்கப்பட்ட ஏணிகளை நட்டி, அவற்றில் பலாத்காரமாக நுழைந்தான். அதன் வாயில்களைத் திறந்து அங்கு அவனது கண்ணுக்கு அகப்பட்ட, சந்தித்த அனைத்து மக்களையும் கொலை செய்தான். மக்களில் பெரும்பகுதியினர் தப்பியோடி, அங்குள்ள ஒரு நதியில் குதித்ததனால் நீரில் மூழ்கி அவர்களில் பலர் மாண்டனர்.

அவன் அங்கு பதினேழு நாட்கள் தங்கி இருந்து அங்குள்ள மக்களைக் கொலை செய்வதும், பெண்களையும், அடிமைகளையும் சிறைபிடிப்பதுமாக பாரிய கொடுமைகளை அரங்கேற்றினான்.

அவன் தனக்கு விருப்பமான பொருட்களைக் கொள்ளையடித்துக் கொண்டு ஹஜர் எனப்படும் பஹ்ரைனுக்கு மீண்டும் நுழைந்தான். அப்போது முஸ்லிம் கலீஃபா அவர்கள் அவனை எதிர்கொள்ள ஒரு படையைத் தயார் செய்து அனுப்பினார்.

அதற்குத் தாக்குப்பிடிக்க முடியாத அவன் தனது ஊர் பாழ்போன நிலையில் வெறும் கையுடன் அங்கிருந்து தப்பியோடினான். அல்லாஹ்வே போதுமானவன், அவன் பக்கமே மீளவும் இருக்கின்றோம் إِنَّا لِلَّهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُونَ என முடிப்பதைப் பார்க்கின்றோம். (இமாம் இப்னு கஸீர்– அல்பிதாயா வந்நிஹாயா)

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் மற்றுமோர் இடத்தில் :

ثم دخلت سنة إحدى وثلاثين وثلثمائة وفي رمضان منها كانت وفاة أبي طاهر سليمان بن أبي سعيد الحسن الجنابي الهجري القرمطي، رئيس القرامطة، قبحه الله، وهذا هو الذي قتل الحجيج حول الكعبة وفي جوفها، وسلبها كسوتها وأخذ بابها وحليتها، واقتلع الحجر الاسود من موضعه وأخذه معه إلى بلده هجر، فمكث عنده من سنة تسع عشرة وثلثمائة ثم مات قبحه الله وهو عندهم لم يردوه إلى سنة تسع وثلاثين وثلثمائة كما سيأتي. (( البداية والنهاية – (١١ / ٢٣٦))

பின்னர், ஹி 331 வது வருடம் பிரவேசித்தது. அந்த ஆண்டு ரமளானில் அபூ தாஹிர் சுலைமான் பின் அபீ ஸயீத் அல்ஹஸன் அல்ஜனாபி அல்ஹஜரி, அல்கர்மதி என்ற கராமிதா தலைவன் நாசமானான்.

இவனே கஃபாவிற்கு உள்ளேயும், வெளியிலும் நடுவிலும் ஹாஜிகளைக் கொன்றொழித்தவன். அல்லாஹ் அவனை நாசமாக்குவானாக! இவன்தான் கஃபாவின் சீலையைக் கழற்றி, அதன் கதவையும் கஃபாவின் பொக்கிஷத்தையும் திருடியவன்.

ஹஜருல் அஸ்வத் கல்லைக் கழற்றி, அதன் இடத்தை விட்டும் அப்புறப்படுத்தி "ஹஜர்" என்று தனது ஊருக்கு எடுத்துச் சென்ற படு

பாவி. இவனிடம் அந்தக் கல் ஹி. 319 முதல் 339 வரை மொத்தமாக 22 வருடங்கள் காணப்பட்டது எனக் குறிப்பிடுகின்றார்கள். (இப்னு கஸீர்– அல்பிதாயா வந்நிஹாயா).

ஹிஜ்ரி 302 ஆம் ஆண்டு நிகழ்வுகள் பற்றி மேலும் குறிப்பிடுகின்ற போது:

ثم دخلت سنة ثنتين وثلاثمائة قطعت الأعراب وطائفة من القرامطة الطريقين على الراجعين من الحجيج، وأخذوا منهم أمولا كثيرة، وقتلوا منهم خلقا وأسروا أكثر من مائتي امرأة حرة، فإنا لله وإنا إليه راجعون. (( البداية والنهاية – (١١ / )

பின்னர், ஹிஜ்ரி 302 ஆம் ஆண்டு வந்தது. அவ்வாண்டில்தான் சில கிராமப்புற அரபிக்களும், கராமித்தாக் கோஷ்டியினரும் ஹஜ்ஜில் இருந்து திரும்பிக் கொண்டிருந்த ஹாஜிகளை வழிமறித்து கொள்ளை அடித்தனர். அவர்களின் அதிகமான சொத்துக்களை பறிமுதல் செய்தனர். அவர்களில் அதிகமான மக்களைக் கொலை செய்ததோடு, அவர்களில் பலரை சிறைப்பிடித்தனர். அவ்வாறு சிறைப்பிடிக்கப்பட்டவர்களில் 200 க்கும் அதிகமான சுதந்திரமான பெண்கள் இருந்தனர். அல்லாஹ்வே இந்த அநீதிக்கு போதுமானவன் إِنَّا لِلّهِ وَإِنَّا إِلَيهِ رَاجِعُونَ எனக் கூறி முடித்துள்ளார்கள். (அல்பிதாயா வந்நிஹாயாய– இமாம் இப்னு கஸீர்)

**இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள்:**

இவர்கள் தொடர்பாக இமாம் இப்னு கஸீர் அவர்கள் பின்வரும் மகத்தான வரிகளைப் பதிவு செய்துள்ளார்கள்.

ومعلوم أن القرامطة شر من اليهود والنصارى والمجوس، بل ومن عبدة الاصنام، وأنهم فعلوا بمكة ما لم يفعله أحد،(( البداية والنهاية – (١١ / ١٨٣))

கராமித்தாக்கள் என்போர் யூத, கிறிஸ்தவர்கள், நெருப்பு வணங்கிகள் என்போரை விடவும் மோசமானவர்கள். அவர்கள் மக்காவில் அரங்கேற்றிய கொடுமைகள் போல வேறு ஒருவரும் நடந்து கொண்டதில்லை. (இமாம் இப்னு கஸீர்– அல்பிதாயா வந்நிஹாயா)



இமாம் அபுல் பகா அவர்கள் மக்கா மதீனா தொடர்பான வரலாற்று நூலில் பின்வரும் குறிப்பதைத் தருகின்றார்கள்.

واعلم أن ابتداء خروج القرامطة كان سنة إحدى عشرة وثلاثمائة ،وكان أبو طاهر سليمان بن الحسن القرمطي رئيسهم فدخل البصرة في الليل في ألف وسبعمائة فارس ، نصبوا السلاليم على السور ونزلوا فوضعوا السيف في البلد وأحرقوا الجامع ، وهرب خلق إلى الماء فغرقوا وسبوا الحريم ، والله المستعان . (( تاريخ مكة المشرفة والمسجد الحرام والمدينة الشريفة والقبر الشريف – (١ / ١٧٦(المؤلف : أبو البقاء محمد بن أحمد بن محمد ابن الضياء المكي الحنفي

அறிந்து கொள்க, கராமிதாக்கள் வெளிப்பட ஆரம்பித்தது ஹிஜ்ரி 311 இல் ஆகும். அபூதாஹிர் சுலைமான் பின் அல்ஹஸன் அல்கர்மதி என்பவன் அவர்களின் அப்போதைய தலைவராக இருந்தான்.

அவன் ஒரு இரவில் பஸராவில் 1700 குதிரை வீரர்களோடு நுழைந்து, சுவர்கள் மீது ஏணிகளை நாட்டி அதன் ஊடாக ஊருக்குள் புகுந்து வாள் முனையில் அட்டகாசம் செய்து பிரசித்தி பெற்ற அல்ஜாமிவுல் உமவிப் பள்ளியை எரித்தான்.

அம்மக்களில் ஒருசாரார் தண்ணீரில் குதித்து அதில் மூழ்கி (பரிதாபகரமாக) மரணித்தனர். மற்ற பெண்களை எல்லாம் அடிமைகளாக சிறைப் பிடித்தனர். அல்லாஹ்தான் உதவி வேண்டப் போதுமானவன் .

(பார்க்க:
(( تاريخ مكة المشرفة والمسجد الحرام والمدينة الشريفة والقبر الشريف – (١ / ١٧٦(
المؤلف : أبو البقاء محمد بن أحمد بن محمد ابن الضياء المكي الحنفي

இமாம் இப்னுல் கைய்யிம் (ரஹ்) அவர்கள் ஆரம்ப கால சமூகங்களின் இருப்பையும் பாதுகாப்பையும் கேள்விக்குறியாக்கிய காரணிகள், பேரழிவுகள் போன்ற அம்சங்கள் பற்றி விரிவாக விளக்கிய பின்னர் சமூக அழிவுக்கான காரணிகளில் ஒன்றாக கராமித்தாக்களின் போக்கும் அமைந்ததாகக் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்.

وكذلك في أواخر المائة الثالثة وأول الرابعة لما اشتغل أهل العراق بالفلسفة وعلوم أهل الإلحاد سلط عليهم القرامطة الباطنية فكسروا عسكر الخليفة عدة مرات واستولوا على الحاج واستعرضوهم قتلا وأسرا واشتدت شوكتهم واتهم بموافقتهم في الباطن كثير من الأعيان من الوزراء والكتاب والأدباء وغيرهم واستولى أهل دعوتهم على بلاد المغرب واستقرت دار مملكتهم بمصر وبنيت في أيامهم القاهرة واستولوا (( إغاثة اللهفان من مصائد الشيطان – ( ٢ / ٢٦٩ ))

இவ்வாறுதான் ஹிஜ்ரி மூன்றாம் நூற்றாண்டின் இறுதியிலும் நான்காம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும் ஈராக் மக்கள் தர்க்கவியல் மற்றும் நாத்திகர்களின் அறிவியல் தத்துவங்களிலும் ஈடுபட்ட போது பாதினிய்யாக்கள் எனப்படும் கராமித்தாக்களைக் கொண்டு அல்லாஹ் அவர்கள் மீது சாட்டினான். அவர்களின் கை ஓங்கிய போது அவர்கள் கலீஃபாவின் ராணுவக் கோட்டையை பல முறை தாக்கி அழித்தனர். ஹாஜிகள் மீது ஆக்கிரமித்து அக்கிரமம் புரிந்தனர்.

அவர்களைப் பகிரங்கமாகக் கொலை செய்து சிறைப்பிடிக்கவும் செய்தனர், அமைச்சர்கள், எழுத்தாளர், இலக்கியவாதிகள் என்ற குறிப்பிடத்தக்க சிலர் இவர்களின் மறைமுக ஆதரவாளர்கள் என சந்தேகிக்கப்பட்டனர்.

இவர்களின் கொள்கையை முழுமையாக அங்கீகரித்தோர் அரேபிய மொரோக்கோவை தமது ஆளுகையின் கீழ் கொண்டு வந்து அங்கு பல தசாப்தங்கள் ஆட்சி செய்தது போன்று, எகிப்திலும் இவர்களின் அரசு நிலைத்திருந்தது.

இவர்களின் காலத்தில்தான் அல்காஹிரா என்றழைக்கப்படும் கெய்ரோ நகரம் உருவாக்கப்பட்டது. அவர்கள் இந்த நகர் மீது தமது ஆட்சியைத் தக்க வைத்துக் கொண்டிருந்தனர். (இமாம் இப்னுல் கைய்யிம்– இகாஸதுல் லஹ்ஃபான்).

இமாம் இப்னு கஸீர் அவர்கள் ஹிஜ்ரி 327 இல் நிகழ்வுகள் பற்றிய சரித்திரத் தொடரில் கராமிதாக்களின் தலைவன் கஃபாவில் அரங்கேற்றிய மனிதப் பேரழிவு பற்றி இவ்வாறு விபரிக்கின்றார்கள்.

قد ألحد هذا اللعين في المسجد الحرام إلحادا لم يسبقه إليه أحدا ولا يلحقه فيه، وسيجاريه على ذلك الذي لا يعذب عذابه أحد، ولا يوثق وثاقه أحد. وإنما حمل هؤلاء على هذا الصنيع أنهم كفار زنادقة، وقد كانوا ممالئين للفاطميين الذين نبغوا في هذه السنة ببلاد إفريقية من أرض المغرب، ويلقب أمير هم بالمهدي، وهو أبو محمد عبيد الله بن ميمون القداح .وقد كان صباغا بسلمية،وكان يهوديا فادعى أنه أسلم ثم سافر من سلمية فدخل بلاد إفريقية، فادعى أنه شريف فاطمي، فصدقه على ذلك طائفة كثيرة من البربر وغيرهم من الجهلة، وصارت له دولة، فملك مدينة سجلماسة، ثم ابتنى مدينة وسماها المهدية،وكان قرار ملكه بها،وكان هؤلاء القرامطة يراسلونه ويدعون إليه، ويترامون عليه، ويقال إنهم إنما كانوا يفعلون ذلك سياسة ودولة لا حقيقة له. البداية والنهاية – ( ١١ / ١٨٣ ))

சபிக்கப்பட்ட இந்த கேடுகெட்டவன் புனித (மக்கா) மஸ்ஜித் ஹராமில் இதற்கு முன்னர் யாரும் செய்திடாத இதன் பின்னரும் செய்யாத மாபெரிய பாதகத்தைச் செய்தான். எவனது வேதனையைப் போன்று யாரும் வேதனை செய்ய முடியாதோ, யாரைப் போன்று கட்டிவைத்து வேதனை செய்ய முடியாதோ அந்த (அல்லாஹ்) அவனுக்குக் கூலி கொடுப்பானாக!

இறை மறுப்பாளர்களான ஸின்தீக் எனப்படும் மார்க்கத்தின் வேடதாரிகளாக இவர்கள் இருந்ததனால்தான், இந்தக் கொடுமையைச் செய்யத் தூண்டியது எனலாம்.

இவர்கள் ஃபாதிமிய்யாக்களோடு இசைந்து செல்வோராக இருந்தனர். ஆபிரிக்க நாடான மொரோக்கோவில் இந்த ஆண்டுதான் இவர்கள் காலூன்றினார்கள். அவர்களின் தலைவனுக்கு மஹ்தி எனப் பெயரும் வைக்கப்பட்டது. அவன்தான் அபூ முஹம்மத் உபைதுல்லாஹ் மைமூன் அல் கத்தாஹ் என்று அறியப்பட்டிருந்தான். இவன் சிரியா ஸல்மியாவில் தங்கி வியாபாரம் செய்யும் ஒருவனாக இருந்தான்

இவன் ஒரு யூதனும் கூட, இவன் தன்னை இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவனாகக் கூறிக் கொண்டு ஆபிரிக்கா சென்று அங்கு தனது பெயர் மற்றும் பரம்பரையை பாத்திமிய்யா எனப்படும் அஹ்லுல் பைத்தினர் பரம்பரை என்று பொய்யாக வாதிட்டான்.

அங்கு வாழ்ந்த பர்பர் இனத்தவர்களும், விபரமில்லாத மற்றும் பல பாமரமக்களும் அதனை உறுதி செய்யாது நம்பி உண்மைப் படுத்தினர். இவன் அங்கு தனக்கென ஓர் ஆட்சியைப் பிடித்துக் கொண்டான். ஸஜ்லமாஸா என்ற நகரை இவன் ஆட்சி செய்தான். பின்னர். ஒரு புதிய நகரை உருவாக்கி அதற்கு “அல்மஹ்தவிய்யா” எனப் பெயரிட்டான். அவனது ஆட்சி அங்கிருந்துதான் செயல்படத் தொடங்கியது.

இந்த கராமித்தாக்கள் பஹ்ரைனில் இருந்து கொண்டு இவனோடு கடிதத் தொடர்புகளை ஏற்படுத்தி அவனுக்கு ஆதரவு தெரிவிக்க மக்களை அழைப்போராக இருந்தனர். இவர்கள் தமக்கென உண்மையான அரசியல் சார்ந்த பயனோ, அல்லது ஒரு ஆட்சியோ இல்லாதிருந்த நிலையில் இவ்வாறான கடிதத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டிருந்தனர் எனக் கூறப்படுகின்றது. (அல்பிதாயா வந்நிஹாயா)

55

# ஷாமிலும் அட்டூழியங்கள் புரிந்த கராமித்தாக்கள்

இது பற்றி بغـــــية الطلب في تاريخ حلب المؤلف : ابن العديم என்ற நூல் ஆசிரியர் இப்னுல் அதீம் அவர்கள் ஷீஆக்களில் கேடுகெட்டவர்கள் என வர்ணிக்கப்டும் கராமிதா பரம்பரையில் வந்த ஸக்ரவைஹி பின் மஹ்ரவஹி என்பவன் பஸ்ரா மற்றும் ஷாம் தேசத்தில் அரங்கேற்றிய மனிதப் பேரவலம் பற்றி இவ்வாறு விபரிப்பதைப் பார்க்கின்றோம்.

وأفسد بالشام، وعاث في بلادها، وغلب على أطراف حمص، وخطب على منابرها، وفتحوا له بابها، وسار إلى حماه، ومعرة النعمان وغيرهما من البلاد، فقتل أهلها، والنســاء والأطفال، ثم جاء إلى سـلمية، فمنعوه، ثم أعطاهم الأمان ففتحوا له بابها، فدخل وقتل الهاشميين أجمعين بها، ثم قتل الرجال، ثم البهائم ثم الصبيان ثم خرج منها وليس بها عين تطرف.

இவன் ஷாம் தேசத்தை துவம்சம் செய்து, அதன் அனைத்து பிரதேசங்களையும் சீரழித்தான். அதன் ஹிம்ஸ் நகரின் பல பகுதிகளை ஆக்கிரமித்து, அங்குள்ள பள்ளிகளின் மிம்பர் மேடைகளில் உரையும் நிகழ்த்தினான். அவனுக்காக அதன் எல்லைக் காவலாளிகள் அதன் வாயில்களின் கதவுகளைத் திறந்து விட்டனர்.

ஹமாத், மஅர்ரத்துன் நுஃமான் மற்றும் பல நகரங்களில் அவன் பிரவேசித்தான். அங்குள்ள பெண்கள், சிறுவர்கள் அனைவரையும் கொலை செய்தான். பின்னர் ஸல்மிய்யா வந்தடைந்தான். மக்கள் அவனைத் தடுத்து நிறுத்தினார்கள். அவன் அவர்களுக்கு பாதுகாப்பு உத்தரவாத வாக்குறுதி அளித்த பின்னால் அதன் வாயில்களை மக்கள் திறந்து விட்டனர்.

அங்கு பிரவேசித்த அவன் அந்த ஊரில் காணப்பட்ட ஹாஷிமி கோத்திர மக்கள் அனைவரையும் படுகொலை செய்தான். பின்னர், அங்குள்ள ஆண்கள், சிறுவர்கள், மற்றும் கால்நடைகள் அனைத்தையும் கொலை செய்தான். பின்னர், அவனை ஏறிட்டுப் பார்ப்பதற்கென்று ஒருவர் கூட (யாரும்) இல்லை என்ற நிலையில் அவன் அங்கிருந்து வெளியேறிச் சென்றான்.

இவனுக்கு பதிலடி கொடுக்கும் முகமாக தற்போதைய அலப்போ எனப்படும் ஹலப் நகர மக்கள் புனித போரைத் தொடங்கி இவனது படையில் பலரைக் கொலை செய்ததன் விளைவாக அலப்போவிலும், அதன் சுற்றுப் புற நகர்களிலும் சமாதானம் மீண்டது. மக்கள் அச்சம், பீதி இன்றி வாழ்வைத் தொடர்ந்தனர்.

மேலதிக வாசிப்பிற்காக:

بغية الطلب في تاريخ حلب المؤلف : ابن العديم – (١ / ٣٠٠)

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் ஹிஜ்ரி 290 தொடர்பான வரலாற்றுக் குறிப்புக்களில் கராமித்தாக்கள் புரிந்த அட்டூழியங்கள் பற்றி பல இடங்களில் விரிவாக விளக்கியதோடு, கராமித்தா கொடுங்கோலர்களில் ஒருவன் ஷாமில் அரங்கேற்றிய கொடூரங்கள் பற்றியும் இவ்வாறு எடுத்தொழுதி உள்ளார்கள்.

فقام بأمر القرامطة من بعده أخوه الحسين وتسمى بأحمد وتكنى بأبي العباس وتلقب بأمير المؤمنين، وأطاعه القرامطة، فحاصر دمشق فصالحه أهلها على مال، ثم سار إلى حمص فافتتحها وخطب له على منابرها، ثم سار إلى حماه ومعرة النعمان فقهر أهل تلك النواحي واستباح أموالهم وحريمهم وكان يقتل الدواب والصبيان في المكاتب، ويبيح لمن معه وطئ النساء، فربما وطئ الواحدة الجماعة الكثيرة من الرجال، فإذا ولدت ولدا هنأ به كل واحد منهم الآخر، فكتب أهل الشام إلى الخليفة ما يلقون من هذا اللعين، فجهز إليهم جيوشا كثيفة، وأنفق فيهم أموالا جزيلة وركب في رمضان فنزل الرقة وبث الجيوش في كل جانب لقتال القرامطتوكان القرمطي هذا يكتب إلى أصحابه: " من عبد الله المهدي أحمد بن عبد الله المهدي المنصور الناصر لدين الله القائم بأمر الله الحاكم بحكم الله، الداعي إلى كتاب الله، الذاب عن حريم الله، المختار من ولد رسول الله "(( البداية والنهاية – (١١ / ١٠٨))

ஹிஜ்ரி 290 ஆம் வருடம் எஹ்யா பின் ஸக்ரவைஹி பின் மஹ்ரவைஹி என்பவன் ஷாம் தேசத்திற்கு எதிராகப் படை எடுத்தான். அவன் ஒரு போரில் கொலை செய்யப்பட்டான். அவனது மரணத்தைத் தொடர்ந்து அவனது சகோதரன் ஹுஸைன் என்பவன் கராமித்தாக் களின் தலைமை ஆட்சியில் அமர்ந்தான்.

அவன் தனக்கு அஹ்மத் என்று பெயர் சூட்டிக் கொண்டான். சில போது தன்னை அபுல் அப்பாஸ் என்றும் அழைத்துக் கொண்டான். இவன், (அமீருல் காஃபிரீன் என்பதற்குப் பதிலாக) அமீருல் முஃமினீன் என்ற புனைப் பெயரில் அழைக்கப்பட்டதுதான் புதினம்.

கராமித்தாக்கள் அவனுக்கு வழிபட்டனர், அவன் டமஷ்கஸ் நகரை முற்றுகையிட்ட போது அங்குள்ள மக்கள் போர் இன்றி (ஜிஸ்யா) காப்பு வரி அறவீட்டை சம்மதிப்பதன் பேரில் சுமூகமான முறையில் அவனோடு சமாதானம் செய்து கொண்டனர்.

அதன் பின், அவன் ஹிம்ஸ், ஹமா, மஅர்ரத்துன் நுஃமான், மற்றும் பல பிரதேசங்களுக்கு படை எடுத்துச் சென்றான். அந்த நகர மக்கள் அவனுக்கு நகர எல்லைகளைத் திறந்து விட்டனர்.

அவன் அப்பிரதேசத்தின் பல பகுதிகளை ஆக்கிரமித்து அங்குள்ள பள்ளி மிம்பர் மேடைகளில் உரையும் நிகழ்த்தினான். அவன் அங்குள்ள பெண்களைக் கொலை செய்து அவர்களின் சொத்து செல்வங்கள் அனைத்தையும் சூறையாடினான்.

கால்நடைகள், மற்றும் குர்ஆன் மத்ரஸா சிறுவர்கள் அனைவரையும் கொரூரமான முறையில் கொலை செய்தான். தன்னோடு இருந்த தனது சஹாக்கள், ஆதரவளாரகள் தமது கரங்களில் அகப்படும் பெண்களை பாலியல் துஷ்பிரயோகம் செய்ய அனுமதித்தான்.

சில போது, ஆண்களின் எண்ணிக்கை அதிகமாக இருந்தால் ஒரு பெண்ணைப் பல காடையர்கள் குழுவாகச் சேர்ந்து பாலியல் துஷ்பிரயோகம் செய்யவும் அனுமதித்தான்.

குறித்த பெண்ணுக்கு குழந்தை பிறந்தால் அவளோடு

சம்பந்தப்பட்டவர்கள் வாழ்த்துக்களையும் ஆசீர்வாதங்களையும் பரஸ்பரம் பரிமாறிக் கொள்ளும் கேடுகெட்ட கொடிய பண்புள்ளவர்கள்.

அல்லாஹ்வின் சாபத்திற்குள்ளான இவனால் ஷாம் தேச மக்கள் தாம் எதிர் நேர்க்கியுள்ள இந்த கொடுமை பற்றி பக்தாதில் தமது கலீஃபாவுக்கு கடிதம் எழுதினர். அவர் உடனே பாரிய படையணி ஒன்றைத் தயார் செய்து, அதற்காக நிறைய பொருளாதாரங்களையும் செலவு செய்திருந்தார். அந்தப்படையினர் சிரியாவின் ரக்கா மாகாணத்தை ஒரு ரமழான் மாத்தில் வந்தடைந்தனர். அவர்கள் கராமித்தா ஷீஆக்களோடு போர் செய்வதற்காக சகல பிரதேசங்களிலும் தமது போராளிகளைப் பரத்தி நிலை கொள்ளச் செய்தனர்.

இந்த கர்மத்தி தனது தோழர்களுக்கு அவசரக் கடிதம் எழுதினான், அதில் அவன் தன்னை அஹ்மத் என அறிமுகப்படுத்தி தானே அப்துல்லாஹ் அல்மஹ்தி அல்லது அஹ்மத் பின் அப்தில்லாஹ் அல்மஹ்தி எனக் குறிப்பிட்டு, நான் என்றும் உதவி அளிக்கப்படுபவன், அல்லாஹ்வின் மார்க்கத்தின் உதவியாளன், அல்லாஹ்வின் கட்டளையைக் கொண்டு நிலையான மஹ்தி நானே! மேலும் அல்லாஹ்வின் சட்டத்தை நடைமுறைப்படுத்தும் அல்ஹாகிம், அல்லாஹ்வின் வேதத்தின் பக்கம் அழைக்கும் தாயி (அழைப்பாளன்), அல்லாஹ்வின் புனித கட்டளைக்காகப் போராடும் ஒரு போராளி, அல்லாஹ்வின் தூதரின் பிள்ளைகளின் பின் வாரிசுகளில் தோன்றிய வாரிசு என்றெல்லாம் பொய்யான செய்திகளைப் பரப்பி மக்களைத் தூண்டி போருக்காக அழைப்பு விடுத்தான். (பார்க்க: அல்பிதாயா வந்நிஹாயா)

இந்த பொய்யன் எவ்வளவு பெரும் கொலைகாரன் என்று அறிந்தும் கூட பாமர மக்கள் அவனுடன் கைகோர்த்து போர் செய்தனர் என்றால் இஸ்லாமியப் பெயரில் உருவான ISIS மற்றும் பல தீவிரவாத அமைப்புக்களின் அழைப்பிற்கு மந்த புத்தியும், குறைவான மார்க்க அறிவும் உள்ள இளைஞர்கள் மார்க்கத்திற்காக தம்மை அர்ப்பணிக்க ஏன் இவ்வாறான வழிகேடர்களோடு இணைந்து கொள்ள மாட்டார்கள்? என்று சிந்திக்க வேண்டும்.



55

# இமாம் இப்னுல் அஸீர் (ரஹ்) அவர்களின் பதிவு

இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்களின் அல்பிதாயாவில் கராமித்தாக்கள் தொடர்பாக பதிவு செய்துள்ள 290 ஆம் ஆண்டு செய்தியை ஒத்ததாக பல செய்திகளை இமாம் இப்னுல் அஸீர் அவர்கள் பதிவு செய்ததோடு ஷாமில் இந்த அஹ்மத் அல்ஹுஸைன் என்ற கொடியவன் பெண்கள், குர்ஆன் மத்ரஸா சிறுவர்கள், மிருகங்கள் என ஒருவரையும் விட்டு வைக்காது மிலேச்சத்தனமாக அவர்கள் பேரில் அரங்கேற்றிய கொலை வெறி பற்றியும் விபரித்துள்ளார்கள்.

பார்க்க:

،(( الكامل في التاريخ– (٣ / ٣٦٣) لمؤلف : عز الدين أبو الحسن علي بن محمد بن عبد الكريم الجزري المعروف ب " ابن الأثير "

இவ்வாறு இவனுக்கு பதிலடி கொடுக்கும் முகமாக தற்போதைய அலப்போ எனப்படும் ஹலப் நகர மக்கள் புனித போரைத் தொடங்கி இவனது படையில் பலரைக் கொலை செய்ததன் விளைவாக அலப்போவிலும் சுற்றுப் புற நகர்களிலும் சமாதானம் மீண்டது. மக்கள் அச்சம் பீதி இன்றி வாழ்க்கையைத் தொடர்ந்தனர் என இஸ்லாமிய வரலாற்று ஆய்வாளர்கள் முன்வைக்கின்றனர்.

# இப்னு ஸீனாவும், பாத்தினிய்யா நாஸ்தீக சிந்தனையும்

55

**வாழ்க்கைக் குறிப்பு:**

பிறப்பு : ஹி. 370 ரஷ்யாவின் புகாரா மாகாண பல்க் நகர்
மரணம்: ஹி. 428
இயற்பெயர்: ஹுஸைன் பின் அப்தில்லாஹ் பின் சீனா

அபூ அலி. இப்னு சீனா என்று சுருக்கமான பெயரில் பிரசித்தி பெற்றுள்ள இவர், தனது காலத்து ஆட்சியாளரால் தத்துவ மேதைகளின் தலைவர் என பெயர் சூட்டப்பட்டார்.

ரஷ்யா புகாராவில் வாழ்ந்து வளர்ந்த இவர், உலகின் பல பிரதேசங்களுக்கும் அறிவியல் தேடலாகப் பல பயணங்கள் சென்றுள்ளார். முஸ்லிம்களிடம் கல்வியைத் தேடாது நாஸ்திகர்களிடம் இருந்துதான் இவர் தனது கல்வியைத் தேடினார் என வரலாற்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். இப்னு சீனா ஷீஆ உபைதிய்யாக் களின் தீவிர ஆதரவுக் குடும்பப் பின்னணியைக் கொண்டவர். இவர் இறைக் கோட்பாடு, மறுமை நம்பிக்கை, மண்ணறை வாழ்வு போன்ற மறைவான பகுத்தறிவிற்குப் புலப்படாத, புலன்களால் உணர முடியாத ஈமானிய அம்சங்களை நிராகரித்தார்.

இப்னு சீனா மருத்துவத் துறையில் பல தொகுப்புக்களையும், ஆய்வுகளையும் மேற்கொண்டவர். அத்தோடு தர்க்கவியல், இயற்பியல், அவரது நம்பிக்கைக்கு அமைவாகக் காணப்பட்ட கடவுள் கோட்பாடு பற்றியும் எழுதி உள்ளார்.

இவர், அக்கால அறிஞர்கள் பலரோடு தர்க்கத்தில் ஈடுபட்டார். அதனால் அவரது செல்வாக்கு மக்களிடம் அதிகரித்து. அதனால் அவர் பிரபல்யமும் அடைந்தார்.

அவருக்கு ஈரான் ஹமதான் மாகாண அமைச்சுப் பதவி ஒன்று வழங்கப்பட்ட பின்னர், அதன் இராணுவம் அவருக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்தது. அவரது பதவியும் பறிக்கப்பட்டு அவரது வீடும் கொள்ளையடிக்கப்பட்டது.

இவர் சில காலம் ஈரான் அஸ்பஹான் மாகாணத்தில் தலைமறைவாகி இருந்து, பின்னர் எழுத்துப் பணிகளில் ஈடுபட்டார். அதன் பின்னர் மீண்டும் ஹமதான் நகருக்குத் திரும்பி வரும் வழியில் நோயுற்று இறந்தார். (காமிலா அல்கவாரி என்பவரின் இப்னு ஸீனா பற்றிய குறிப்பில் இருந்து பெறப்பட்டது).

மேலதிக வாசிப்பிற்கு பார்க்க:

شرحة نونية القرني ل \ كاملة الكواري – (٤ / ٧٣)

இந்தப் பின்னணியைக் கொண்ட இப்னு ஸீனாவின் நிலை பற்றிக் குறிப்பிடும் இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் :

فابن سـينا وأمثاله من أئمة هؤلاء وكان أهل بيته من أهل دعوة الحاكم وأمثاله من أئمة القرامطة الباطنية الإسماعيلية ( الصفدية – (٢ / ١٨)

இப்னு சீனாவும் அவர் போன்ற பலரும் இந்தக் கொள்கையின் தலைவர்களாகக் காணப்பட்டனர். அவரும் அவரது குடும்பமும், அவர் போன்றோரும் ராபிழிய்யா உபைதிய்யா பாதினிய்யாக்களில் சேர்ந்த ஷீஆ மத வழி வந்த அல்ஹாகிம் அபூ அலி அல்மன்சூர் அல் உபைதி என்பவரின் முழு ஆதரவாளர்களாகவும் இருந்தனர் எனக் குறிப்பிடுகின்றார்கள். (இமாம் இப்னு தைமிய்யா– அஸ்ஸபதிய்யா).

இமாம் இப்னுல் கையிம் (ரஹ்) அவர்கள் இப்னு சீனாவும் அவரது நம்பிக்கையும் இந்த பாதினிய்யா வழி வந்தவர்களின் நம்பிக்கைதான் என்றும் அவர், பாதினிய்யாக்களைப் போன்று

நாஸ்திகக் கோட்பாட்டில் ஊறித்திழைத்த ஒருவர் என்றும் குறிப்பிட்டு விளக்கும் செய்தியில் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்.

وكان ابن سينا كما أخبر عن نفسه قال : أنا وأبي من أهل دعوة الحاكم فكان من القرامطة الباطنية الذين لا يؤمنون بمبدأ ولا معاد ولا رب خالق ولا رسول مبعوث جاء من عند الله تعالى وكان هؤلاء زنادقة يتسترون بالرفض ويبطنون الإلحاد المحض وينتسبون إلى أهل بيت الرسول وهو وأهل بيته برآء منهم نسبا ودينا ((إغاثة اللهفان من مصائد الشيطان – (٢ / ٢٦٦))

இப்னு சீனா தன்னைப் பற்றிக் குறிப்பிடும் போது நானும், எனது தந்தையும் ஷீஆ உபைதிய்யாக்களின் அல்ஹாகிம், أبو علي منصور بن نزار العزيز بالله ابن معد المعز لدين الله العبيدي அபூ அலி மன்சூர் பின் நஸார் அல்உபைதி என்பவரின் முழு ஆதரவாளர்களாக இருந்தோம் எனக் குறிப்பிடும் இப்னு சீனா உலகின் தொடக்கம், மரணத்தின் பின்னால் மீட்டப்படுதல், படைப்பாளனும் இரட்சகனுமாகிய அல்லாஹ், அவன் அனுப்பிய தூதர்கள் போன்ற அடிப்படையான எதையும் நம்பிக்கை கொள்ளாத, பாத்தினிய்யாக்களான கராமித்தா, இஸ்மாயீலிய்யா என்ற நாத்தீகக் குழுவினரின் வழியில் உள்ளவர்களாக இருந்தார்.

இவர்கள் அனைவரும் தெளிவான நாஸ்தீக சிந்தனையை தம்முள் மறைத்துக் கொண்டு, ராபிழா எனப்படும் ஷீஆவுக்குள் மறைந்து வாழ்ந்ததோடு, நபி(ﷺ) அவர்களின் குடும்பத்தினரான அஹ்லுல் பைத்தினர் பக்கம் பொய்யாக தம்மை இணைத்துக் கொண்டும் காரியமாற்றினர்.

இவரும் இவரது குடும்பமும் பரம்பரையாலும், சமயக் கோட்பாட்டாலும் அஹ்லுல் பைத்தினர் எனப்படும் நபியின் குடும்பப் பரம்பரையில் இருந்து முழுமையாக நீங்கியவர்கள் என்பதே உண்மை. அவர்கள் அந்த நூலில் மற்றொரு இடத்தில்,

فكان ساحرا يعبد الأصنام (( إغاثة اللهفان من مصائد الشيطان – (٢ / ٢٦٧))

இப்னு சீனா சிலை வணக்கம் செய்யும், ஒரு சூனியக்காரனாக இருந்தான் எனக் குறிப்பிட்டுள்ளார்கள். (இப்னுல் கையிம் இகாஸதுல் லஹ்ஃபான்) இவனைத்தான் முஸ்லிம் மருத்துவர் என்ற புகழ் நாமத்தோடு இஸ்லாமிய நாகரிகத்தில் போதிக்கப்படுகின்றது.

கராமித்தாக்கள் பற்றி இமாம் அவர்கள் மேலும் விபரிக்கின்ற போது இவ்வாறு பின்வருமாறு பதிவு செய்துள்ளார்கள்.

وكانوا يقتلون أهل العلم والإيمان ويدعون أهل الإلحاد والشرك والكفران لا يحرمون حراما ولا يحلون حلالا وفي زمنهم ولخواصهم وضعت رسائل إخوان الصفا ولما انتهت النوبة إلى نصير الشرك والكفر الملحد وزير الملاحدة النصير الطسى وزير هولاكو شفا نفسه من أتباع الرسول وأهل دينه فعرضهم على السيف حتى شفا إخوانه من الملاحدة واشتفى هو فقتل الخليفة والقضاة والفقهاء والمحدثين واستبقى الفلاسفة والمنجمين والطبائعيين والسحرة ونقل أوقاف المدارس والمساجد والربط إليهم وجعلهم خاصته وأولياءه ((إغاثة اللهفان من مصائد الشيطان – (٢ / ٢٦٦))

கராமித்தாக்கள் என்போர் இணைவைப்பாளர்கள், மற்றும் இறை நிராகரிப்பாளர்கள், நாத்திகவாதிகள் போன்றோரை விட்டு விட்டு அல்லாஹ்வைப் பற்றிய ஞானமும், இறுக்கமான இறை நம்பிக்கையும் உள்ள மக்களைத்தான் கொலை செய்வார்கள், ஹராம் ஹலால் என்ற கோட்பாட்டு விதி இவர்களிடம் கிடையாது.

இவர்களது காலத்தில் சாமானிய மக்கள், மற்றும் அவர்களின் அறிவார்ந்தவர்கள் என்போர் அனைவருக்கும் பொருந்தும் رسائل إخوان الصفا என்ற போதனைத் தொகுப்பொன்று தொகுத்து வெளியிடப்பட்டது.

இறை நிராகரிப்பும், இணைவைப்பும், நாஸ்தீகமும் மலிந்து காணப்பட்ட நாஸ்திக அமைச்சர்களில் ஒருவன் என்றும் அறியப்பட்ட சிலை வணங்கியான ஹோலாகுகானின் அமைச்சர்களில் ஒருவனாகிய நுஸைர் அத்தூஸி என்பவனுக்கு எகிப்து தேசத்தின் ஆட்சி அதிகாரம் கைமாறிய போது அவன் தன்னை தூதர் வழி நடப்பவன் என்றும், தனது கொள்கையை ஏற்காதவர்களுக்கு வாள்தான் தீர்வாகும் என்றும் வெளிப்படையாக எச்சரித்ததோடு பொதுஜனங்களோடு அவனைப் போன்று கடுமையாக நடந்து

கொள்ளுமாறு தனது தோழர்களுக்கும் பணிப்புரை விடுத்திருந்தான்.

இதனால் அப்பாஸிய கலீஃபாவால் நியமிக்கப் பட்டிருந்த நீதிபதிகள் (காழிகள்), மார்க்க அறிஞர்கள், ஹதீஸ் துறை வல்லுனர்கள் எனப் பலரின் உயிர்களை இந்தக் கொடியவன் போக்கியதோடு, தர்க்கவியலாளர்கள், நட்சத்திர வழிபாட்டாளர்கள், இயற்கைவாதிகள், நாத்திகர்கள், சூனியக்காரர்கள் என்போரை மாத்திரம் கொலை செய்யாது மீதமாக விட்டுவைத்தான்.

மத்ரஸாக்கள் எனப்படும் மார்க்க கலாநிலையங்கள், மற்றும் மஸ்ஜிதுகள் என்பவற்றின் வக்ஃப் சொத்துக்களையும், போர்க் காவலாளிகள் என்போரின் உடமைகளையும் தனக்குரியதாக்கினான். அவன் மேற்கூறப்பட்ட தீய கொள்கையாளர்களை தனது அந்தரங்க செயலாளர்களாகவும், அரச பொறுப்பதிகாரிகளாகவும் நியமித்தான்.

((إغاثة اللهفان من مصائد الشيطان \ ابن القيم رحمه الله ))

**குறிப்பு:**

رسائل إخوان الصفاوخلان الوفا என்பது ஹிஜ்ரி மூன்றாம் நூற்றாண்டின் பின் ஷீஆ ஆட்சியாளர்களான பனூ-புவைஹியரின் காலத்தில் கராமித்தாக்களின் கொள்கைப் பிரகடனம் தொடர்பாக ஒன்றிணைக்கப்பட்ட ஒரு தொகுப்பாகும்.

அது இஸ்லாத்திற்கு மாற்றமான கடவுள் கோட்பாடு, தர்க்கவியல், தத்துவம், இயற்பியல், இரசாயனவியல், நட்சத்திர அறிவியல், கலை என பல துறை சார்ந்த ஷிர்க்கான பல அம்சங்களை உள்ளடக்கிய ஐம்பது சிறு நூல்களின் தொகுப்புக்களின் தொகுப்பைக் குறிக்கும்.

அது இமாம் ஜஃபர் ஸாதிக்(ரழி) அவர்கள் அறிவித்ததாத அவர்கள் பெயரில் பொய்யாக சோடித்தும் புனைந்தும் சொல்லப்பட்ட பொய்யான கட்டுக்கதைகள், அபத்தங்கள் நிறைந்த ஒரு தொகுப்பு என்பதே உண்மை!

## ௫௫ உபைதிய்யா ஷீஆக்களின் அட்டூழியங்கள்

பாத்தினிய்யா வழி வந்தோர் அஹ்லுஸ் சுன்னாக்களை ஈவிரக்கமின்றிக் கொத்துக் கொத்தாகக் கொலை செய்துதத்தே வரலாறாகும். இமாம் அபூ ஷாமா அல்மக்திஸி (ரஹ்) அவர்கள் உபைதிய்யா ஷீஆக்களின் அட்டூழியங்கள் பற்றி விபரித்துக் கொண்டு வருகின்ற போது பின்வருமாறு கொடுமைகள் பற்றிப் பதிவு செய்துள்ளார்கள்.

قلت: وفي أيام الملقب بالحاكم منهم أمر بكتب سبّ الصحابة رضي الله عنهم على حيطان الجوامع، والقياسر والشوارع، والطرقات؛ وكتب السجلات إلى سائر الأعمال بالسبّ، ثم أمر بقلع ذلك؛ وأنا رأيته مقلوعًا في بعض أبواب دمشق في الأمكنة العليا منقورًا في الحجر، ودلّني أول الكلام وآخره على ذلك، ثم جدّد ذلك الباب وأزيل الحجر. وفي أيامه طُوّف بدمشق برجل مغربي ونودي عليه؛ هذا جزاء من يحبّ أبا بكر وعمر، ثم ضربت عنقه. وكان يجري في أيامهم من نحو هذا أشياء مثل قطع لسان أبي القاسم الواسطي، أحد الصالحين، وكان أذّن ببيت المقدس وقال في أذانه " حيّ على الفلاح " فأُخذ وقطع لسانه. (( الروضتين في أخبار النورية و الصلاحية – (1 ஃ 217 ))

நான் சொல்கின்றேன் எனக் கூறி பின்வரும் தகவல்களைப் பகிர்ந்து கொள்கின்றார்கள்.

உபைதிய்யா ஆட்சியாளர்களில் ஒருவனாகிய அல்ஹாகிம் என்ற புனைப் பெயரில் அழைக்கப்பட்ட அபூ மன்சூரின் அல்உபைதி என்பவனின் காலத்தில் ஸஹாபாக்களைத் திட்டித்தீர்க்கின்ற வாசகங்களை எழுதி, அவற்றை ஜும்ஆப் பள்ளிவாயில்களின்

சுவர்கள், கொழுத்த பெரிய ஒட்டகைகள், நெடுஞ்சாலைகள், வீதிகள் போன்றவற்றில் தொங்கவிடுமாறும், காட்சிப்படுத்துமாறும் கட்டளையிட்டிருந்தான்.

பொதுக்காரியாலய பதிவேடுகளில் நபித்தோழர்களைத் சாபமிடுகின்ற வாசகங்கள் உள்ளடங்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் பணிப்புரை வழங்கியிருந்தான்.

பின்னர் அவைகளை அகற்றும்படி கட்டளை பிறப்பித்ததோடு, அதற்குப் பதிலாக அவை கற்களால் செதுக்கப்பட்டு டமஷ்கஸ் நகரின் பிரதான நுழை வாயில்களில் தொங்கவிடப் பட்டிருந்ததைக் கண்டேன் என தெரிவிக்கும் இமாம் அபூஷாமா (ரஹ்) அவர்கள் இவனது காலத்தில் மொரோக்கோவைச் சேர்ந்த சுன்னா முஸ்லிம் ஒருவர் நபித்தோழர்களான அபூபக்கர், உமர் (ﷺ) ஆகியோரை நேசிக்கின்றார் என்ற காரணம் கூறப்பட்டு, அவரை இழிவுபடுத்தும் நோக்கில் அவன் டமஷ்கஸ் நகரைச் சுற்றிக் கொண்டு வரப்பட்டு அபூபக்கர், உமர் (வ) ஆகியோரை நேசிப்பவருக்குரிய தண்டனை இதுதான் என அறிவிக்கபட்ட பின்னர் அவர் கொலை செய்யப்பட்டாராம்.

தொடர்ந்தும் கருத்து வெளியிடும் இமாம் அவர்கள், இவர்களின் ஆட்சிக் காலங்களில் இவ்வாறான கொடுமைகள் சர்வசாதாரணமாக நடந்தேறுவது இயல்பானது. உதாரணமாக பலஸ்தீன் நல்லடியார்களில் ஒருவரான அபுல்காஸிம் அல்வாஸிதி (ரஹ்) அவர்களின் நாவைத் துண்டித்ததைக் குறிப்பிடலாம்.

அவர், பாங்கு சொல்லுகின்ற போது (حـي علـى خير العمل ஹய்ய அலா ஹைரில் அமல்) என்ற வாசகத்தை ஷீஆக்கள் போன்று பாங்கில் இணைத்துக் கூறாது, حي على الصـــــــــلوة "ஹய்ய அலஸ் ஸலாஹ்" என்ற வார்த்தையை ஹதீஸில் வந்திருப்பது போன்று கூறினார் என்பதற்காக இவரது காதையும், நாவையும் துண்டித்தனராம். இவர் பைத்துல் மக்திஸ் பள்ளியில் பாங்கொலிக்கும் சுன்னி முஆத்தின்களில் ஒருவராக இருந்தவர் என்பது குறிப்பிடத் தக்கது. (இமாம் ஷாமா அல்மதிஸி– அர்ரவ்ளதைன்)

இமாம் அபூஷாமா (ரஹ்) அவர்கள் ஷீஆ உபைதிய்யா, பாதினிய்யாக்களின் கேடுகட்ட பண்புகளைத் தோலுரித்துக் காட்டிய இமாம்கள் பற்றிப் பேசும் போது இவ்வாறு பதிவு செய்கின்றார்கள்.

قدكشف أيضًا حالهم الإمام أبو القاسم عبد الرّحمن بن علي بن نصر الشاشي في كتاب الرِّدّ على الباطنية، وذكر قبائح ما كانوا عليه من الكفر والمنكرات والفواحش في أيام نزار وما بعده. ووصل الأمر إلى أن وصف بعضـهم ما كانوا في قصـيدة سماها: الإيضـاح عن دعوة القدّاح، (الروضتين في أخبار النورية و الصلاحية – (1 ஃ 217)

திரைமறைவில் இவர்களிடம் காணப்பட்ட கயமத்தனங்களை இமாம் அபுல் காஸிம் அப்துர் ரஹ்மான் அஷ்ஷாஷி (ரஹ்) அவர்கள் தனது الرِّدّ علـــــــــى الباطنية என்ற தனது நூலில் நஸார் என்பவனது காலத்திலும் அவனது காலத்திற்குப் பின்னால் வந்தவர்களாலும் அரங்கேற்றப்பட் சமூகக் கொடுமைகள் பற்றியும் இவர்களிடம் காணப்பட்ட பல அசிங்கங்கள், இறைமறுப்புக்கள், மார்க்க விரோதச் செயல்பாடுகள், மானக்கேடானவைகள் என அனைத்தையும் இந்த நூலில் விபரித்துள்ளார்கள் எனக் குறிப்பிட்டுள்ளதோடு, சில அறிஞர்கள் இந்த உபைதுல்லாஹ் அல்கத்தாஹ் என்பவனின் உண்மை நிலை பற்றி கவிதைகள் இயற்றிக் கூறும் அளவு இவனது நிலைமை மிகவும் மோசமாகக் காணப்பட்டது என்கிறார்கள்.

(இமாம் அபூ ஷாமா அல்மதிஸி– அர்ரவ்ளதைன்).

மொரோக்கோவில் உபைதிக்கள் அரங்கேற்றிய கொடுமைகள்.

ஷீஆக்களில் வரலாறு சுன்னத் ஜமாஅத் முஸ்லிம்களுக்கு எதிரான இரத்தம் தோய்ந்த வரலாறாகும். அதில் உபைதிய்யா ஆட்சியாளர்களின் வரலாறு ஒன்றும் நல்ல பக்கங்களைக் கொண்ட வரலாறு அல்ல.

உபைதுல்லாஹ் ஆட்சிக் கதிரையில் அமர்வதற்கு அங்கு வாழ்ந்து வந்த கோத்திரங்களைப் பகையாக்கி அவர்களின் சண்டையில் குளிர் காய்ந்தான்.

பர்பர் இனத்தவர்களில் கொடிய குணாதிசயம் கொண்ட பலரை தம்பக்கம் ஈர்த்துக் கொண்டு ஷீஆ, அஹ்லுல் பைத்தினர் பெயரைப் பயன்படுத்தி அவர்களை தம்பக்கம் கவர்ந்திழுத்தான்.

காலப் போக்கில் மெல்ல மெல்ல தனது நச்சுக் கருத்துக்களை அவர்கள் மத்தியில் விதைத்து வெற்றியும் கண்டான்.

பனூ உபைத் பரம்பரையான உபைதிய்யா பாதினிக்கள் பற்றி கருத்து வெளியிடும் அறிஞர்கள் அவர்கள் மதம் மாறிய கொடிய காபிரான நாஸ்தீகர்கள் என்ற கருத்தை வெளியிடுகின்றனர்.

இமாம் தஹபி (ரஹ்) அவர்கள்

ويقول الذهبي عن هذا القائم: كان مهيبا شجاعًا قليل الخير فاسد العقيدة،

அல்காயிம் (என்றும் உயிரோடிருப்பவன்) என்ற பெயரில் அறியப்பட்ட உபைதுல்லாஹ் மக்கள் அச்சப்படும் சண்டி அரசனாகவும் தீய கொள்கைவாதியாகவும் இருந்தான் என்றும்,

ويقول أيضـــا: وقد أجمع علماء المغرب على محاربة آل عبيد لما شهروه من الكفر الصـــراح الذي لا حيلة فيه.

உபைதிய்யாக்கள் வெளிப்படுத்திய, தப்பிக்கவே முடியாத தெளிவான இறைமறுப்பின் காரணமாக மொரோக்கோ நாட்டு உலமாக்கள் அனைவரும் உபைதிய்யாக்கள் காஃபிர்கள் என்பதில் முடிவாக இருந்தார்கள். (இமாம் தஹபி)

وقال القاضي عياض: أجمع العلماء بالقيروان أن حال بني عبيد حال المرتدين والزنادقة

கைரவான் உலமாக்கள் உபைதிய்யா ஆட்சியாளர்கள் மதம் மாறிய, இஸ்லாத்தின் துரோகிகள் என்பதில் ஏகமனதான முடிவில் இருந்தனர். (இமாம் காழீ இயாழ்)

இந்தக் கொடிய காஃபிர்கள் மாலிக் இமாமின் வழிகாட்டலில் வந்த மொரோக்கோவின் பிரசித்தி பெற்ற மாணவர்களாக இருந்த இமாம், இப்னு /ஹதைல், இப்னுல் பர்தூன் (ரஹ்) ஆகிய இருவரும் இவனது தீய கொள்கையில் காணப்படும் விபரங்களை மக்கள் மத்தியில் கடுமையாக விமர்சனம் செய்ததை அறிந்த உபைதுல்லா அவர்கள் இருவரையும் கைது செய்து கடுமையாகத் தாக்கி சித்திரவதையும் செய்து அவர்களைக் கொலையும் செய்தான்.

இமாம் இப்னுல் பர்தூன் (ரஹ்) அவர்களிடம் அவர்கள் கொலை செய்யப்படுவதற்கு முன்னால் தனக்கெதிரான கருத்துக்களில் இருந்து வாபஸ் பெறுகின்றீரா எனக் உபைதுல்லாஹ் கேட்ட போது அவர்கள் أعن الإســــــلام أرجع என்ன! நான் இஸ்லாம் மார்க்கத்தில் இருந்து வாபஸ் பெறச் சொல்கின்றாயா? எனக் கேட்டதாக அவரது வரலாற்றுக் குறிப்பில் இடம் பெற்றுள்ளது.

وقال الشـــــيخ المؤرخ أبو شامة عن مؤسس الدولة العبيديه عبيد الله المهدي: كان زنديقا خبيثا عدوًا للإسلام متظاهر بالتشـــيع حريصـــا على إزاله الملة الإسلامية، قتل من الفقهاء والمحدثين والصالحين جماعة كثيرة.

உபைதிய்யா ஆட்சியை நிறுவிய உபைதுல்லாஹ் தீய பண்புள்ளவனாகவும் , இஸ்லாத்தின் மிகப் பெரும் துரோகிமாகவும் அதன் எதிரோதிரியாகவும் இருந்தான். இஸ்லாம் மார்க்கத்தை இல்லாதொழிக்க ஷீஆ வேஷம் தரித்திருந்தான். ஃபுகஹாக்கள், முஹத்திஸீன்கள், வணக்க வழிபாடு செய்து கொண்டிருந்த பலரைக் கொலை செய்தான்.(இமாம் அபூஷாமா அல்மக்திஸி (ரஹ்) அவர்கள்)

அல்ஹாகிம் உபைதுல்லாஹ் ஆட்சி பீடம் ஏறியதும் பாதினிய்யாப் பிரிவின் பல கோட்பாடுகளை பிரகடனம் செய்தான். அவையாவன :

(1) நபித்தோழர்களைத் திட்டி சபிக்கும் வாசகங்களை கற்களில் பொழிந்து அவற்றை பள்ளிவாயில்களின் சுவர்கள், கட்டட மதில்கள், பொதுச் சந்தைகளில் காட்சிப்படுத்த கட்டளை இட்டதோடு, அவற்றை பாதுகாக்க பணியானர்களை நியமித்தான். உபைதிய்யாக்களின் ஆட்சிக்குட்பட்ட அனைத்து பகுதிகளிலும் இந்தக் கேவலத்தை அரங்கேற்றினர்.

(2) மொரோக்கா நகர கைரவான் மாகாண, மாரில சுன்னா முஸ்லிம்கள் உபைதிக்களின் கெடுபிடுயில் பலவீனப்படுத்தப்பட்ட சமூகமாகவும் உரிமைகள் பறிக்கப்பட்ட கீழ்க்குடி மக்கள் போன்றும் வாழ்ந்தனர்.

(3) இவர்கள் அந்தகர் ஒருவரை வீதியில் நிறுத்தி முதலாம் கலீஃபா அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்களை சபிக்கும் கவியாக ألعــنوا الغار وماوعـــى ஸவ்ர் என்ற குகையையும் அது வைத்யிருந்தவரையும் சாபமிடுங்கள் எனப் பாடும் நிலை காணப்பட்டது. அதனை மறுத்துப் பேசுவோரை உடனிடயாகக் கைது செய்து அவர்களைக் கொலை செய்தனர்.

(4) கொம்புள்ள ஆடுகள், களுதைகள் போன்ற மிருகங்களின் தலைகளை கழிவறைக் கதவுகளில் தொங்க விட்டு, அவற்றில் சில தாள்களில் நபித்தோழர்களின் பெயர்களை எழுதி தொங்கவிட்டனர்.

இப்படிப் பல கொடுமைகள் பொய்யன் உபைதுல்லாஹ்வின் ஆட்சியில் சுன்னா முஸ்லிம்களுக்கு எதிராக சர்வசாதாரணமாக நடந்தேறியது. இந்தப் படுபாவியை அவனது ஆதரவாளர்கள் சிலர் தமது கடவுளாக வாதிட்டனர்.

(5) ஃபஜ்ருடைய அதானில் இடம் பெறும் (الصــــــلاة خير من النوم) என்ற வாசகத்தை பாங்கில் இருந்து அகற்றியதோடு முஹாத் தொழுகையை இல்லாதொழித்து அதன் நேரத்தில் முஹர் தொழுகை நிறைவேற்றுமாறு பணித்தனர்.

(6) வெள்ளிக்கிழமை நாளில் இரண்டாம் குத்பா உரையை நபித்தோழர்கைத் திட்டுவறகாவும். இறைமறுப்பை வெளிப்படுத்தவும் நேரத்தை ஒதுக்கினர். இதனால் சுன்னா முஸ்லிம்கள் பள்ளிகளை வெறுத்ததால் காலப் போக்கில் பள்ளிகள் பாழடைந்தன.

குழப்பமான இந்த நிலை பற்றி விளக்கும் அறிஞர் இப்னு நாஜி என்பவர் தனது معالم الإيمان என்ற நூலில் இவ்வாறு விபரிக்கின்றார்.

يقول بن ناجى فى كتابة (معالم الإيمان) "جزى الله مشـــــــــيخة القيروان، هذا يموت وهذا يُضرب، وهذا يُسجن، وهم صابرون لا يفرون، ولو فروا لكفرت العامة دفعة واحدة"

கைரவான் உலமாக்களுக்கு அல்லாஹ் அருள் செய்வானாக! உபைதிகளின் கொடுமையால் ஒருவர் மரணிக்கின்றார். மற்றொருவர் சிறையில் அடைக்கப்பட்டு வதைக்கப்படுகின்றார். இவை அனைத்தையும் பின்வாங்காது அவர்கள் பொறுமையாக தாங்கிக் கொண்டனர். அவர்கள் மாத்திரம் விரண்டோடி இருப்பின் பொதுமக்கள் ஒரே தடவையில் இறை நிராகரிப்பாளர்களாகி இருப்பார்கள். (இமாம் இப்னு நாஜி).

மொராக்கோ சுன்னா முஸ்லிம்களை ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலால் இரும்புப் பிடி கொண்டு அடக்கி வாழ்ந்த அபூ யசீத் என்ற கவாரிஜிய சிந்தனையாளர் உபைதிகளுக்கு எதிராக கிளர்ச்சி செய்த போது தாஸ்தீகத்தை அடியோடு நறுக்கிட சுன்னா முஸ்லிம்கள் அவரது புரட்சியை ஆதரித்தனர். அதனால் உபைதிள் அங்கிருந்து துரத்தி அடிக்கப்பட்டனர்.

இறுதியாக ஹிஜ்ரி 440 ஆண்டோடு உபைதிகளின் சாபக் கேடான அனைத்து பித்அத்துக்களும் பூண்டோடு ஒழிக்கப்பட்டது. அப்பாஸியர் ஆட்சி அங்கு மீண்டும் மலர்ந்தது. சுன்னா முஸ்லிம்கள் திம்மதிப் பெருமூச்சுடன் வாழ்ந்தனர். அல்லாஹ் தனது தூதரின் மார்க்கத்தை அவனது சிறந்த அடியார்கள் மூலம் நிலை நாட்டினான்.

الدولة الفاطمية / د علي محمد الصلابي
المراجع : القاضي عياض: ترتيب المدار

www.dd.sunnah.net

# பாத்தினிய்யாக்கள் பற்றிய அறிஞர்களின் தீர்ப்புக்கள்

55

அஹ்லுஸ்ஸுன்னா அறிஞர்களின் பாத்தினிய்யாக்கள் என்போர் பார்வையில் கராமித்தா பிரிவினர் மாத்திரம் நோக்கப் படுவதில்லை. மாற்றமாக ஷீஆ, பாத்திமிய்யா, நுஸைரிய்யா, அலவிய்யா, காதியானிகள், போரா, இஸ்மாயீலிய்யா, பஹாயிய்யா போன்ற அகீதாவில் முரண்பட்ட அனைத்துப் பிரிவையும் குறிக்கும்.

இருப்பினும் கராமித்தாக்களை இந்தப் பிரிவுகளின் முதன்மைப் பிரிவுகளில் சேர்ப்பார்கள் என்பதே உண்மை. அந்த அடிப்படையில் கராமித்தா மற்றும் பாத்தினிய்யாக்கள் பற்றிய தீர்ப்புகள் இங்கு தரப்படுகின்றன.

பாத்தினிய்யாக்கள் மார்க்கத்தை விட்டும் வெளியேறியவர்கள். இமாம் தகிய்யுத்தீன் அல்மிக்ரீஸி (ரஹ்) அவர்கள்,

فإنه لم يخل وقت ولا زمان من مارق على الدين، وشاع تفرق كلمة المسلمين ليبلوا الله المجاهدين فيهم والصابرين، ويصلي أكثر العاكفين نار جهنم التي أعدت للكافرين. وهذه الطائفة المارقة من الباطنية الملحدين، والكفرة المستسلمين، انتهكوا المحارم، واستحلوا الكبائر، وأراقوا الدماء، وكذبوا بالذكر، وأنكروا الآخرة، وجحدوا الحسنات والجزاء، وفصلوا أعضاء المسلمين، وسملوا أعين الموحدين؛ فكادوا الدين وفقهاءه، وأعلنوا بالشرك ونداءه (( اتعاظ الحنفاء بأخبار الأئمة الفاطميين الخلفاء. المؤلف : تقي الدين أحمد بن علي المقريزي – (١ /٢١٧ الشاملة))

எந்த ஒரு நேரத்திலும் காலத்திலும் இஸ்லாத்தை விட்டும் வெளியேறுகின்ற ஒரு பிரிவினர் இல்லாமல் இருந்ததில்லை, அதனால், முஸ்லிம்களின் ஒருமித்த குரல் பிளவுண்டு சிதறாமலும் இல்லை.

இது அவர்களில் உள்ள தியாகிகள் மற்றும் பொறுமையாளர்களை அல்லாஹ் சோதிக்கவும், பிடிவாதமாகப் பிரிந்து செல்வோருக்கும் காபிர்களுக்கும் வாக்களிக்கப்பட்ட நரகத்தை வழங்கவும் இவ்வாறு செய்கின்றான்.

இவ்வாறு வெளியேறிச் செல்லும் இந்தப் பிரிவினர், பாத்தினிய்யா நாத்திகர்களும், முஸ்லிம்களாக நடித்துக் கொள்ளும் காபிர்களுமாவர். அவர்கள், புனிதமான மானங்களைப் போக்கினர், பெரும் பாவங்களை ஆகுமாக்கினர், இரத்தங்களை ஓட்டினர். அல்குர்ஆனைப் பொய்ப்பித்தனர். மறுமையை நிராகரித்தனர், நன்மைகள், கூலி வழங்கப்படுதல் என்பவற்றையும் மறுத்தனர்.

முஸ்லிம்களின் உறுப்புக்களைத் கண்டம் துண்டமாக வெட்டித் துண்டாடினர், ஓரிறைக் கொள்கையாளர்களான சுன்னா முஸ்லிம்களின் கண்களில் சூடேற்றிய இரும்புக் கம்பிகளைப் பாய்ச்சினர். மார்க்கத்திற்கும் அதன் விளக்க அறிஞர்களான புகஹாக்களுக்கும் சதித்திட்டம் தீட்டினர், இணைவைத்தலுக்கு விளம்பரம் செய்து அதன் பக்கம் அழைப்பும் விடுத்தனர். (இமாம் தகிய்யுத்தீன் அல்மிக்ரீஸி – இத்தஆலுல் ஹுனஃபா) என்ற கருத்தின் ஊடாக இமாம் மிக்ரீஸி (ரஹ்) அவர்கள் பாதினிய்யாக்கள் மார்க்கத்தை விட்டும் வெளியேறிச் சென்ற, சதிகாரர்கள் என்பதாக தீர்ப்பளித்துள்ளார்கள்.

**இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள்:**

قال ابن كثير: "ولم يعجّل الله سبحانه وتعالى بعقوبة على هؤلاء الملحدين كما عجّلها على أصحاب الفيل وهم نصارى، وهؤلاء شرٌّ من اليهود والنصارى والمجوس" [البداية والنهاية: ١١/١٦٠ ]

புனித மக்கா நகர் மீது தாக்குதல் நடத்த வந்த யானைப் படையினர் கிறித்தவர்களாக இருந்தும் அவர்கள் மீது தண்டனையை அல்லாஹ் உடனடியாக இறக்கியது போன்று யூதர்கள், கிறிஸ்தவர்கள், நெருப்பு வணங்கியவர்களான மஜூஸிகள் என்போரை விடவும் மோசமான இவர்கள் மீது அவன் உடனடியாக இறக்கி வைக்கவில்லை என இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

(இமாம் இப்னு கஸீர்- அல்பிதாயா வந்நிஹாயா)

அதாவது உலகில் காணப்படுகின்ற பல பிரிவுகளில், தம்மை அஹ்லுல் பைத்தினராக அறிமுகம் செய்த இவர்கள் முஸ்லிம் உலகைச் சீரழித்தவர்களில் யூத-கிறிஸ்தவர்களை விட இவர்கள் மிகவும் மோசமானவர்கள் என்பதாகும்.

**இமாம் புர்ஹானுத்தீன் அல்புகாயி (ரஹ்) அவர்கள்:**

أجمعت الأمة على تكفيرهم. (نظم الدرر موافق للمطوع – ت: عبدالرزاق غالب) – (٨ / ١٦٦)

பாத்தினிய்யாப் பிரிவான கராமித்தாக்கள் காஃபிர்கள் என்று முஸ்லிம் சமூகம் ஏகமனதாக முடிவு செய்துள்ளது.

(நள்முத்துரர்- அப்துர்ரஸ்ஸாக் காலிப்)

முஸ்லிம் சமூகம் காபிர்கள் என்று முடிவு செய்துள்ள இவ்வாறானவர்களிடம் இருந்து நன்மைகளை எதிர்பார்க்கலாமா என்று சிந்திக்க வேண்டும். அப்படியானால் முஸ்லிம் உலகை சீரழிக்கும் ஷீஆக்கள் போன்றோரிடமிருந்து எந்த நன்மைகளையும் நாம் எதிர்பார்க்க முடியாது.

**இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள்:**

பாத்தினிய்யா பிரிவினரில் கராமித்தாக்கள் ஷீஆக்கள் போன்று மிக மோசமான பிரிவாக விளங்கும் நுஸைரிய்யா – அலவிய்யா- பிரிவு பற்றி இமாம் அவர்களிடம் வினவப்பட்ட போது அவர்கள் கீழ்வரும் தீர்ப்பைக் கூறினார்கள்.

القوم المسمون بالنصيرية هم وسائر أصناف القرامطة الباطنية أكفر من اليهود النصاري، بل وأكفر من كثير من المشـــركين وضررهم علي أمة محمد صلى الله عليه وسلم أعظم من ضرر الكفار المحاربين مثل كفار التتار والفرنج وغيرهم؛ فإن هؤلاء يتظاهرون عند جهال المسلمين بالتشيع، وموالاة أهل البيت، وهم في الحقيقة لا يؤمنون بالله ولا برسوله ولا بكتابه، ولا بأمر ولا نهي، ولا ثواب ولا عقاب، ولا جنة ولا نار، ولا بأحد من المرسـلين قبل محمد صـلى الله عليه وسلم، ولا بملة من الملل الســـالفة، بل يأخنون كلام الله ورسوله المعروف عند علماء المســـــلمين يتأولونه علي أمور/ يفترونها، يدعون أنها علم الباطن، (أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – (٢ / ٣٩٧)

இவர்களுக்குத்தான் நுஸைரிய்யாக்கள் என்று கூறப்படும். இவர்களும் ஏனைய பாத்தினிய்யா பிரிவுகளும் யூத, மற்றும் கிறிஸ்தவர்களை விடவும் மோசமான இறைமறுப்பாளர்களாகும்.

அது மட்டுமின்றி, அவர்கள் உலகில் உள்ள இணை வைப்பாளர்கள் அனைவரை விடவும் மிக மோசமானவர்கள். ஏனெனில், முஸ்லிம் சமூகத்திற்கு எதிரான இவர்களின் தீங்கு என்பது தாத்தாரிய மற்றும் பிரஞ்சு காபிர்கள், மற்றும் உலகில் உள்ள ஏனைய காபிர்களின் தீங்கை விடவும் கேடு நிறைந்தாகும்.

இவர்கள் பொது மக்களிடம் ஷீஆக்களின் போர்வையில் பிரசன்னமாகி, அஹ்லுல்பைத்தினரை நேசிப்போராக வெளிப்படையில் நடித்துக் கொள்வார்கள். அவர்கள் உண்மையில் அல்லாஹ்வையோ, அவனது தூதரையோ, அவன் இறக்கிய வேதத்தையோ நம்புவதில்லை.

மேலும், அவர்கள் இறைக் கட்டளைகளாக உள்ள ஏவல்களையோ, விலக்கல்களையோ, நன்மைக் கோட்பாடு, தண்டனை முறைகளையோ, சுவர்க்கம், நரகத்தையோ, முஹம்மத் நபி(ﷺ) அவர்களுக்கு முன்னால் உலகில் வந்த தூதர்களையோ நம்புவதில்லை.

فإن هؤلاء يتظاهرون عند جهال المسلمين بالتشيع، وموالاة أهل البيت، وهم في الحقيقة لا يؤمنون بالله ولا برسوله ولا بكتابه، ولا بأمر ولا نهي، ولا ثواب ولا عقاب، ولا جنة ولا نار، ولا بأحد من المرسلين قبل محمد صلى الله عليه وسلم، ولا بملة من الملل الســـــالفة، بل يأخنون كلام الله ورسوله المعروف عند علماء المسلمين يتأولونه علي أمور/ يفترونها، يدعون أنها علم الباطن، (أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية (٢ / ٣٩٧)

இவர்கள், எதுவும் அறியாத அப்பாவிகளான பாமர முஸ்லிம் மக்களிடம் தம்மை ஷீக்கள் (அலி (ؓ) மற்றும், அஹ்லுல் பைத்தினரின்

நேசர்களாகவும் இனம் காட்டிக் கொண்டு வாழும் இவர்கள் அல்லாஹ்வையோ, அவனது தூதரையோ, அவனது வேதத்தையோ, ஏவல், விலக்கல்களையோ, நன்மையையோ, தண்டனைகளையோ, சுவர்க்கம், நரகத்தையோ, தூதர்களையோ, முஹம்மத் நபி(ﷺ) அவர்களையோ, அவர்களுக்கு முன்னர் வழக்கில் இருந்த ஏனைய சமயங்களையோ உண்மையில் அவர்கள் நம்பிக்கை கொள்வதில்லை.

அத்துடன், அவர்கள் அல்லாஹ்வுடையவும், அல்லாஹ் வுடைய தூதருடையவும் வார்த்தைகளை எடுத்து தாம் விரும்பிய அடிப்படையில் பிழையான அர்த்தங்கள் தந்து அவை 'இல்முல் பாதில்' எனப்படும் மறைவான ஞானத்தில் உள்ளவைகள் என பொய்யாக வாதிடுவார்கள். (இப்னு தைமிய்யா. அஹ்காமுல் முர்தத்)

இமாம் இப்னு தைமிய்யாவின் ஆய்வின்படி இந்த பூமியில் மிகக் கெட்ட பிரிவினர்களாக பாத்தினிய்யா கராமித்தாக்கள் கொள்ளப்படுகின்றனர்.

مذهب القرامطة الباطنية، وهو من أخبث مذاهب أهل الأرض، ((مفهوم الصـــبر عند ابن تيمية رحمه الله – (١ / ١٩٨))

பாத்தினிய்யா கராமித்தாப் பிரிவு பூமியில் தோன்றிய சிந்தனைப் பிரிவுகளிலேயே மிகவும் அசிங்கமான அருவருப்பான பிரிவாகும். (இப்னு தைமிய்யா– மஃப்ஹூமுஸ் ஸப்ர்)

وَهُمْ مِنْ أَجْهَلِ الَّناسِ وَأَضَلِّهِمْ وَأَكْفَرِهِمْ . ((كتاب الإيمان الأوسط \ الإمام ابن تيمية )

கராமிதாக்களான இவர்கள் மனிதர்களிலேயே மிகவும் மடையர்களும், அவர்களில் மிகப் பெரும் வழிகேடர்களும், அவர்களில் உள்ள மிகப் பெரும் இறை மறுப்பாளர்களுமாகும். (இமாம் இப்னு தைமிய்யா– கிதாப் அல்ஈமானுல் அவ்ஸத்)

مْذَهبَ الْقَرامِطَةِ الْباطِنَّيةِ وَهُوَ مِنْ أَخْبَثِ مَذاهِبِ أَهْلِ الْأَرْضِ أَفْسَدُ مِنْ الْيُهـــودِ وَالَّنصَارَى وَلِهَذا كَانَ عَامَّةُ مَنْ انْضَمَّ إِلَيهِمْ أَهْلُ الزَّنْدَقِةِ وَالِنفاقِ وَالْبِدَعِ: الْمَتَفَلْسِفَةُ والمـباحـيةوَالَّرافِضَةُ ((رأي شيخ الإسلام ابن تيمية بالرافضة –\ جمعه وحققه وعلق عليه : علي بن نايف الشحود )



பாத்தினிய்யா மத சிந்தனை என்பது பூமியில் உள்ள யூத, மற்றும் கிறிஸ்தவ சமயக் கோட்பாட்டை விட மிகவும் படு மோசமான மத சிந்தனையாகும். இதனால்தான் அதில் இணைந்தவர்கள் இஸ்லாத்தின் உள்ள எதிரிகளாக வெளிப்படையில் இஸ்லாத்தைச் சரிகண்ட நாஸ்திகர்கள், நயவஞ்சகர்கள், பித்அத்தில் ஊறித்திழைத்தவர்களாகக் காணப்பட்ட தர்க்கவியலாளர்கள், உலக சுகபோக வாழ்வை முன்னிலைப் படுத்துவோர், மற்றும் ஷீஆக்கள் என்போராக இருந்துள்ளனர்.
(இமாம் இப்னு தைமிய்யா (ரஹ்)

**இமாம் இப்னுல் கைய்யிம் (ரஹ்) அவர்கள்:**

பாத்தினிய்யாக்கள் என்போர் ஷீஆக்கள் மத்தியில் மறைந்து அஹ்லுல் பைத்தினரை நேசிப்போர் என்ற போர்வையில் வாழும் இவர்கள், ஸனாதிகா எனப்படும் (இஸ்லாத்தின் துரோகிகளாகவும்), தம்முள் தெளிவான இறைமறுப்பை மறைத்துக் கொண்டு தம்மை அஹ்லுல் பைத்தினர் பக்கம் இணைத்தவராகவும் பேசிக் கொள்வோரகவும் இருந்தனர். அஹ்லுல் பைத்துக்களோ இவர்களின் சமய சித்தாந்தத்திலோ, அல்லது பரம்பரையிலோ அடிப்படையில் இவர்களை விட்டும் முழுமையாக நீங்கிக் கொண்ட நிரபராதிகளாகும். (இப்னுல் கையிம். இகாஸதுல் லஹ்ஃபான்).

اعلموا –أسعدكم الله– أن ضرر الباطنية على فرق المســلمين أعظم من ضرر اليهود والنصــارى والمجوس، بل وأعظم من الدهرية وسائر أصناف الكفرة عليهم، بل أعظم من ضـرر الدجال الذي يظهر آخر الزمان؛ لأن الذين ضـــلوا عن الدين بدعوة الباطنية من وقت ظهور دعوتهم إلى يومنا أكثر من الذين يضــلون بالدجال من وقت ظهوره؛ لأن فتنة الدجال لا تزيد مدتها عن أربعين يومًا، وفضائح الباطنية أكثر من عدد الرمل والقطر» ( الدولة الفاطمية – (١ / ٣٣)

முஸ்லிம்கள் மீது பாத்தினிய்யாக்களின் தீங்கானது யூத, கிறிஸ்தவ, மற்றும் நெருப்பு வணங்கிகளின் தீங்கை விடவும் கொடூரமானதாகும். அது மட்டுமின்றி, இயற்கைவாதிகள், மற்றும் ஏனைய காஃபிர்களின் தீங்கை விடவும் கொடியது. மட்டுமின்றி, வரும் காலங்களில் மறுமையின் அடையாளமாக வரவிருக்கும் தஜ்ஜாலின் கொடுமைகளை விடவும் பாரியது.

ஏனெனில், பாத்தினிய்யாக்களின் கொள்கைப் பிரசாரம் தொடங்கியது முதல் நமது காலம் வரையான இன்றுவரை வழிகெட்ட மக்கள் தொகை என்பது தஜ்ஜால் மூலம் வழிகெடுக்கப்படுபவர்களை விடவும் பன்மடங்கு அதிகமானதாகும்.

தஜ்ஜாலின் குழப்பம் என்பது வெறும் நாற்பது நாட்களில் முடிந்து விடும். இவர்களின் குழப்பங்களோ பூமியில் உள்ள மணல்களின் எண்ணிக்கையை விட, மழைத் துளிகளின் எண்ணிக்கையை விடவும் அதிகமானதாகும் என்ற இமாம் அப்துல் காதிர் அல்பக்தாதி அவர்கள் குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கதாகும்.

(அஸ்ஸல்லாபி- அத்தவல்துல் ஃபாதிமிய்யார்)

இந்தக் கோட்பாடு பற்றி சுருக்கமாகக் கூறுவதாக இருந்தால் இமாம் இப்னு தைமிய்யா அவர்கள் கூறுவது போன்று

(( بل هو جامع لكل كفر ))

“அது அனைத்து இறைமறுப்புக்களை உள்ளடக்கிய குஃப்ர் களஞ்சியம்” எனக் குறிப்பிட முடியும்.

இவர்கள் பற்றி ஆய்வு செய்த சுன்னா அறிஞர்கள் அனைவர்களும் இவர்கள் மார்க்க அடிப்படைகளையும் கடமைகளையும் நெறிமுறைகளையும் பாழாக்கி, ஹராமாக்கப் பட்டவைகளை ஹலாலாக்குவார்கள், இவர்களின் பார்வையில் விபச்சாரம் கூட சர்வசாதாரணமானதாகும் எனக் குறிப்பிடுகின்றனர். (துஃலீகாத் அலா கஷ்ஃபிஷ்ஷுபுஹாத்)

**குறிப்பு: பாத்தினிய்யா சிந்தனையில் தனது வாழ்நாளில் பெரும் பகுதியைக் கழித்து பலரை வழிகெடுத்து பின்னர் அதில் இருந்து மீண்ட அறிஞர் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களால்** فضـــــــــــائح الباطنية **“பாத்தினியாக்களின் சீர் கேடுகள்” எனும் தலைப்பில் எழுதப்பட்ட நூல் இது தொடர்பான முக்கிய சில விடயங்களை அறிந்து கொள்ள உதவும்.**



ՍՍ

# பாத்தினிய்யாக்களின் வழிகேட்டுத் தத்துவங்கள்

அல்லாஹ்வின் வேத வரிகளை யூதர்கள் மாற்றியமைத்தது போன்று இஸ்லாத்தில் வந்த பிரிவுகளான கவாரிஜ்கள், முஃதஸிலா, ஜஹ்மிய்யா, ஷீஆ, சூஃபிய்யா, தரீக்காவாதிகள் என்போரின் தொடரில் பாத்தினிய்யா மற்றும் கராமித்தாக்கள் போன்ற வழிகெட்ட பிரிவுகளும் உள்ளடங்குகின்றனர்.

குர்ஆன் மற்றும் சுன்னாவில் வரும் சான்றுகளுக்கு வெளிப்படையான பொருள் தராது, அவற்றிற்கு மறைவான ஒரு பொருள் உண்டு என்ற வாதத்தின் மூலம் அவர்கள் அல்லாஹ்வின் வேதத்திலும், முஹம்மத்(ﷺ) அவர்களின் விளக்கத்திலும் இல்லாத பல புதுமைகளை உருவாக்கிய இவர்கள், ஷரீஆவின் வெளிப்படையான சான்றுகள் வெளிப்படையான பொருள்கள் என்பதை தாம் நம்பத்தயாரில்லை என்றும் தமது இமாம்கள் ஊடாக தாம் பெற்ற இல்முல் பாதின் எனப்படும் மறைவான அறிவையே ஷரீஆ என்றும் அதுவே சரியான பாதை என்றும் வாதிட்டனர்.

பாத்தினிய்யாக்கள் இஸ்லாத்தின் சான்றுகளான குர்ஆன், ஹதீஸ்களில் வரும் விளக்கத்தைப் புறக்கணித்து, தமது மனோ இச்சைகளுக்கு இசைவாக அவற்றிற்கு விளக்கம் தந்து மக்களை மார்க்கத்தில் இருந்து தூரப்படுத்துவதையும், அதில் இருந்து வெளியேற்றுவதன் மூலம் அவர்களை மறுமை இலக்கற்றவர்களாக மாற்றுவதையும் இலக்காகக் கொண்டு செயல்பட்டனர்.

பாத்தினிய்யாக்களின் விளக்கங்களும் ஷீஆக்களின்

விளக்கங்களும் ஒன்றுக் கொன்று உடன்பட்டதாக இருப்பதைக் பார்க்கின்ற போது இவ்விரு சாராருக்கும் இடையில் காணப்படும் கொள்கை ஒற்றுமையை இலகுவாகப் புரிந்து கொள்ள முடியும்.

ஷீஆப் பிரிவினர்கள் தமது கொள்கையை நிலைநாட்டி அஹ்லுல் பைத்தினரை பகடைக் காய்களாகப் பாவித்தது போன்றதொரு தந்திரத்தை பாத்தினிய்யாக்களும் கையாண்டனர்.

இதற்காக ஈரான், ஈராக் மற்றும் சிரியாப் பிரதேச பொது மக்களை மடையர்களாக்கிட இதுவே அவர்கள் கையாண்ட பிரதான யுக்தியாகும்.

இப்னு தைமிய்யாவின் சிரேஷ்ட மானவர்களில் ஒருவரான இமாம் இப்னுல் கையிம் (ரஹ்) அவர்கள் இவர்களின் விளக்கம் தொடர்பாக பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்.

أما تحريفهم للنصــوص بأنواع التأويلات الفاسدة التي يحرفون بها الكلم عن مواضعه فأكثر وأشهر من أن تذكر كتأويلات القرامطة والباطنية والفلاسفة والرافضـــة والجهمية والقدرية ا (( لصواعق المرسلة – (٣ / ١٠٥٠)

இவர்கள் சான்றுகளைத் திரித்து பாழாய்ப்போன தீய பல விளக்கங்கள் தந்து அல்லாஹ்வின் வார்த்தைகளை அதன் உரிய, நேர்த்தியான இடங்களில் இருந்தும் மாற்றியமைத்து பிழையான பல பொருள்கள் தருகின்றனர். இங்கு அவற்றைக் கூற முடியாதவாறு அவை மக்கள் மத்தியில் பிரசித்தி பெற்றவையாகவும் அதிகமானவையாகவும் இருக்கின்றன.

உதாரணமாக கராமிதா, பாதினிய்யா, பலாஸிஃபா எனப்படும் தத்துவியலாளர்கள், (கடும் போக்காளர்களான) ஷீஆக்கள், ஜஹ்மிய்யா, கத்ரிய்யா போன்றவர்களின் விளக்கங்கள் போன்றவற்றைக் கூறலாம் என்ற இமாம் அவர்களின் கருத்தோட்டத்தின் மூலமாக அவர்களின் போக்கு எவ்வாறானது என்பதைப் புரிந்து கொள்ள முடியும். (இமாம் இப்னுல் கையிம்- அஸ்ஸவாயிகுல் முர்ஸலா

அந்த அடிப்படையில் இந்தப் பிரிவினரின் கொள்கை, கோட்பாட்டுகளில் தங்கி உள்ள விளக்கம் பற்றி சுருக்கமாக தரப்படுகின்றது.

UU

# அல் குர்ஆன், அஸ்ஸுன்னாவின் சான்றுகளுக்கு அபத்தமான விளக்கமளித்தல்

அல்லாஹ் தனது அடியார்களுக்கு வழங்கும் பிரகாசத்திற்கு உதாரணமாக அந்நூர் அத்தியாயம் வசனம் 35 இல் தரும் விளக்கம் ஆட்சரியமிக்கதாகும். அது இறைவிசுவாசிகளை வியப்பில் ஆழ்த்த வல்லதாக இருக்கின்றது. பின்வரும் வசனத்தைப் படியுங்கள்.

اللَّهُ نُورُ السَّمَاوَاتِ وَالْأَرْضِ مَثَلُ نُورِهِ كَمِشْكَاةٍ فِــــيهَا مِصْبَاحٌ الْمِصْبَاحُ فِي زُجَاجَةٍ الزُّجَاجَةُ كَأَنَّهَا كَوْكَبٌ دُرِّيٌّ يُوقَدُ مِنْ شَجَرَةٍ مُبَارَكَةٍ زَيْتُونَةٍ لَا شَرْقِيَّةٍ وَلَا غَرْبِيَّةٍ يَكَادُ زَيْتُهَا يُضِــيءُ وَلَوْ لَمْ تَمْسَسْهُ نَارٌ نُورٌ عَلَـــــى نُورٍ يَهْدِي اللَّهُ لِنُورِهِ مَنْ يَشَاءُ وَيَضْرِبُ اللَّهُ الْأَمْثَالَ لِلنَّاسِ وَاللَّهُ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ [النور : ௳٣٥

“அல்லாஹ் வானங்கள் மற்றும் பூமியின் பேரொளியாவான். அவனது பேரொளிக்கு உதாரணம் ஒரு மாடம் போன்றதாகும். அதனுள் ஒரு விளக்கு இருக்கின்றது. அந்த விளக்கு ஒரு கண்ணாடிக் கூண்டினுள் இருக்கின்றது. அந்தக் கண்ணாடிக் கூண்டு நன்கு பிரகாசிக்கும், ஒளிவீசும் ஒரு நட்சத்திரம் போன்றாகும். அதற்கு பரகத் நிறைந்த சைதூன் (ஒலிவ்) மரத்தில் இருந்து எரியூட்டப்படுகின்றது. அது கிழக்குத்திசையைச் சேர்ந்ததும் அல்ல. மேற்குத் திசையைச் சேர்ந்ததும் அல்ல. (அதன் மீது பகலின் வெயிலோ, மாலை வெயிலோ படாத ஷாம் நாட்டு சைதூன் போன்றது). நெருப்பு அதற்குப் படாத போதும் அதன் எண்ணெய் கூட பிரகாசிக்கும். பிரகாசத்திற்கு மேல் பிரகாசமாகும். அல்லாஹ் தான் நாடியோருக்கு தனது பிரகாசத்தின் பக்கம் நேர்வழிகாட்டுகின்றான். மனிதர்களுக்கு அல்லாஹ்

உதாரணங்களைக் கூறகின்றான். அல்லாஹ் அனைத்தையும் நன்கு அறிந்தவன்." (24 : 35)

மேற்படி வசனம் பிரகாசமானவன் என்ற நாமத்திற்கு சொந்தக் காரனாகிய அல்லாஹ் மனிதர்களுக்கு வழங்குகின்ற ஈமானியப் பிரகாசம், குர்ஆன் என்ற பிரகாசமான வேதம், தூதர் என்ற பிரகாசமான வழிகாட்டி போன்ற பெறுமதியான அம்சங்களை உணர்த்தியுள்ளான் என்பது தஃப்ஸீர் துறை சார் அறிஞர்களின் விளக்கமாகும்.

இதை விளக்கும் ஷீஆ நூல்கள் பின்வரும் அமைப்பில் விளக்கம் தருவதைப் பார்க்கின்றோம்.)

مثل تفسير المشكاة بفاطمة والمصباح الحسن والزجاجة الحسين، والكوكب الدري فاطمة ونور على نور أي إمام منها (أي من فاطمة) بعد إمام (مسائل علي بن جعفر ص ٣١٧ ) أحاديث يحتج بها الشيعة – ( ١ / ٥٨٧

- மாடம் என்பது பாத்திமா(رضي الله عنها) அவர்களாம்,
- விளக்கு என்பது ஹஸன் (رضي الله عنه) அவர்களாம்,
- அந்தக் கண்ணாடிக் கூண்டு என்பது ஹுஸைன் (رضي الله عنه) அவர்களாம்,
- ஒளிவீசும் நட்சத்திரம் என்பது பாத்திமா (رضي الله عنها) அவர்களாம்.
- சைதூன் மரம் என்பது இமாம்களின் மூலம் வெடித்துப் பரவும் அறிவாம்.
- பிரகாசத்திற்கு மேல் பிரகாசம் என்பது அவரது சந்ததியில் பிறக்கும் ஷீஆக்களின் இமாம்களைக் குறிக்குமாம்.

ஷரீஆக்கு மாற்றமான இவ்வாறான விளக்கங்கள் தந்து, ஒட்டுமொத்த சமுதாயத்திற்கும் விளங்காத உள் விளக்கங்கள், குறியீடுகள் வைத்து பேசுவோரைத்தான் பாத்தினியாக்கள் என அடையாளப்படுத்தப்படும்.



٥٥

# இன்னும் சில ஆதாரங்கள்

காபிர்களான அவர்கள் மறுமையைப் பொய்ப்பித்தனர் என்பதை விளக்கு கின்ற போது,

بَلْ كَذَّبُوا بِالسَّاعَةِ} [الفرقان، آية: ١١.] قال: يعني كذبوا بولاية علي [النعماني/ الغيبة: ص ٥٤، البرهان: ٣/١٥٧، مرآة الأنوار: ص ١٨٢ .ஸ. (( أصول مذهب الشيعة الإمامية الإثني عشرية عرض ونقد – ( ١ / ١٨٥))

நபித் தோழர்களான ஸஹாபாக்கள் அலி (رضي الله عنه) அவர்களுக்குத்தான் முதலாவது ஆட்சி அதிகாரம் உண்டு என்பதைப் பொய்ப்பித்தனர் என விளக்குகின்றனர். (கலாநிதி: நாஸிரி அல்கிஃபாரி- உசூலு மஸாஹிபிஷ் ஷீஆ)

இவர்களின் மற்றொரு விளக்கம் பற்றி இமாம் இப்னு தைமிய்யா அவர்கள் விளக்குகின்ற போது,

وهؤلاء الباطنية قد يفسرون: {وَكُلَّ شَيْءٍ أحْصَيْنَاهُ فِي إِمَامٍ مُبِينٍ} [يس، آية: ١٢.] أنه علي.. وقوله: {فَقَاتِلُواْ أَئِمَّةَ الْكُفْرِ} [التوبة، آية: ١٢.] أنهم طلحة والزبير، {وَالشَّجَرَةَ الْمَلْعُونَةَ فِي الْقُرْآنِ} [الإسراء، آية: ٦٠.] بأنها بنو أمية" [مجموع فتاوى شيخ الإسلام ابن تيمية: ١٣/٢٣٦–٢٣٧.].

அனைத்தையும் நாம் ஒரு தாய் ஏட்டில் பதிந்துள்ளோம் (யாசீன்- 12), என்ற வசனம் தாய் ஏடு என்பதை அலி(رضي الله عنه) அவர்கள் என்றும், இறை நிராகரிப்பின் தலைவர்களை நீங்கள் கொலை

செய்யுங்கள் (அத்தவ்பா: 12) என்ற வசனத்தில் வரும் காஃபிர்கள் என்பது தல்ஹா, மற்றும் சுபைர்(ﷺ) ஆகிய இருவரும் என்றும், இந்தக் குர்ஆனில் சபிக்கப்பட்ட மரத்தையும் (காண்பித்தோம்). (அல்இஸ்ரா-60) என்ற வசனத்தை பனு உமைய்யாக்கள் என்றும் பாத்தினிய்யாக்கள் விளக்குவதாக இமாம் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள், விளக்கி உள்ளனர்.

நபித்தோழர்களான அபூபக்கர், உமர் (ﷺ) ஆகிய இருவர் பற்றியும் விளக்கும் போது,

وُيســموهما رضي الله تعالى عنهما بفرعون وهامان (٤٢٢) , وبالوَثَنْيِن (٤٢٣) , وباللات والعزى (٤٢٤) .(( اعتقاد الشـيعة الاثنى عشـرية سؤال وجواب – عبد الرحمن بن سعد الشثري (١ / ٨٠))

பிர்அவ்ன், ஹாமான் என்ற வசனமும், லாத்து, உஸ்ஸா என்ற சிலை பற்றிய வசனமும் இவ்விருவரையும்தான் குறிக்கின்றது என வாதிடுகின்றனர். (இஃதிகாதுஷ் ஷீஆ அல் இஸ்னை அஷ்அரிய்யா-அப்துர் ரஹ்மான் அஷ்ஷுதரி)

ஈருலகிலும் அல்லாஹ் இந்த வழிகேடர்களை சபிப்பானாக! இவ்வாறான அழுகிப் போன, இஸ்லாத்தில் இல்லாத பல விளக்கங்கள் ஷீஆக்களின் தஃப்ஸீர்களில் இமாம் ஜஃபர் ஸாதிக்(ﷺ) அவர்கள் பேரில் புனையப்பட்டுள்ளதை தாரளமாகக் காண முடியும்.

55

# ஷாஃபி மத்ஹப் மக்கள் சிந்திக்க வேண்டும்

*?

இமாம் ஷாஃபி (ரஹ்) அவர்கள் சிறந்த?நூற்றாண்டில் வாழ்ந்த அறிஞர்களில் ஒருவர். அவர்கள் மண்ணறைகள் கட்டப்படுவது, அவை வணங்கப்படுவது பற்றி கடுமையாக எச்சரித்தவர்கள். இமாம் ஷாஃபி (ரஹ்) அவர்கள் பெயரில் அவர்களின் போதனைகளை அகீதாவிலும், சட்டங்களிலும் மீறிய பலர் பிற்காலத்தில் அவர்களின் மத்ஹபில் இணைந்து கொண்டனர் என்பதே உண்மை.

நபித்தோழர்களின் மண்ணறைகள் அடையாளப் படுத்தப்பட்டதாக இல்லை என்பதை விபரிக்கும் இந்த இமாம் அவர்கள் மண்ணறைகளை உயர்த்துவதை தான் ஷரீஆவாகக் காணவில்லை என்ற கருத்தில் உறுதியாக இருப்பவர்கள். இவர்களின் பின்வரும் கூற்றைக் கவனியுங்கள்.

وَأُحِبُّ أَنْ لاَ يُزَادَ فِي الْقَبْرِ تُرَابٌ من غَيْرِهِ ((الأم. للشافعي – (١ / ٢٧٧))

(அடக்கம் செய்கின்ற போது) ஒரு மண்ணறையில் பிறிதொரு வேறு மண்ணைக் கொண்டு அதிகரிக்கப்படாமல் இருப்பதை நான் விரும்புகின்றேன். (அஷ்ஷாஃபிஈ – அல் உம்மு).

وَإِنَّمَا أُحِبُّ أَنْ يُشَخِّصَ علـــى وَجْهِ الأَرْضِ شِبْرًا أو نَحْوُهُ وَأُحِبُّ أَنْ لاَ يُبْنَى وَلاَ يُجَصَّصَ فإن ذلك يُشْبِهُ الزِّينَةَ وَالْخُيَلاَءَ وَلَيْسَ الْمَوْتُ مَوْضِعَ وَاحِدٍ مِنْهُمَا ولم أَرَ قُبُـــــــورَ الْمُهَاجِرِينَ وَالأَنْصَارِ مُجَصَّصَةً

கப்ர்– மண்ணறையானது பூமியில் இருந்து ஒரு சாண், அல்லது அது போன்ற அளவு மாத்திரம் தெரிவது எனது விருப்பமாகும். அதனைக் கட்டாமல் இருப்பதும், அதற்கு சுண்ணாம்பு பூசாமல் விடுவதும் எனது விருப்பமாகும். ஏனெனில், அந்தச் செயல், அலங்காரம், பெருமை என்ற பண்புக்கு ஒப்பாகின்றது.

மண்ணறை என்பது மேற்படி இரு பண்புகளும் மரணித்த ஒரு மனிதருக்கு செய்யும் இடமில்லை. நபித்தோழர்களான அன்ஸாரிகள், மற்றும் முஹாஜிரீன்களின் மண்ணறைகள் சுண்ணாம்பினால் பூசப்பட்டதாக நான் காணவில்லை எனக் குறிப்பிட்ட பின்னர்.

قَالَ الشّافِعيُّ : وقدرَأيت من الْوُلاَةِ من يَهْدِمَ بمَكّة ما يُبْنَى فيها فلم أَرَ الْفُقَهَاء يَعِيبُونَ ذلك (( الأم. للشافعي – (١ / ٢٧٧))

'மக்காவில் உள்ள ஆட்சியாளர்கள் அங்கு கட்டப்பட்டிருந்த கப்ருகளை தகர்ப்பதைக் கண்டேன். மார்க்கப் பெருந்தகைகளான அறிஞர் பெருமக்கள் யாரும் அதனைக் குறைகாணவும் நான் காணவில்லை." (அஷ்ஷாஃபிஈ – அல் உம்மு).

ஹதீஸிலும் ஷாஃபி மத்ஹபிலும் கூறப்பட்டுள்ள தெளிவான இந்த நிலைப்பாடே ஒரு முஸ்லிமின் நிலைப்பாடாக இருக்க வேண்டும். அதற்கு மாற்றமாக அதனைக் கட்டி அடங்கப்பட்டிருப்போரிடம் தேவைகளை வேண்டுவது, அதற்காக நேர்ச்சைகளை நிறைவு செய்வது, அவற்றில் விழாக்கொண்டாடுவது போன்ற அனைத்து செயற்பாடுகளும் ஷீஆ, மற்றும் யூத கிறிஸ்தவ வழிமுறைகள் சார்ந்ததாகும். தரீக்காவாதிகள் என தம்மை அடையாளப்படுத்திய பலர் இந்த இணைவைப்பைச் செய்வோராக இருப்பதைக் கொண்டு அது சரியான வழிமுறையாக மாறிவிடாது.

நபி(ﷺ) அவர்களின் மண்ணறையையோ மற்றவர்களின் மண்ணறைகளையோ முத்தமிடுவது கூடாது என்பது இமாம்களின் ஏகோபித்த முடிவாகும்.

இமாம் கஸ்ஸாலி அவர்களின் இஹ்யாவில் பின்வரும் தீர்ப்பைக் கவனிக்கவும்.

وليس من السنة أن يمس الجدار ولا أن يقبله [إحياء علوم الدين – \ ١ / ٢٥٩ ))

நபி(ﷺ) அவர்கள் அடங்கப்பட்டுள்ள மண்ணறைச் சுவரைத் தொடுவதோ, அதை முத்தமிடுவதோ சுன்னா அவர்களின் வழியில் உள்ளது அல்ல. (இஹ்யா) இஹ்யாவில் மற்றொரு இடத்தில்:

والمستحب في زيارة القبور أن يقف مستدبر القبلة مستقبلا بوجهه الميت وأن يسلم ولا يمسح القبر ولا يمسه ولا يقبله فإن ذلك من عادة النصارى [إحياء علوم الدين – جزء ٤ – صفحة ٤٩١]

நபி(ﷺ) அவர்களின் மண்ணறையை ஸியாரத் செய்கின்ற போது (ஸியாரத் செய்பவர்) கிப்லாத் திசையை தனக்குப் பின்பக்கமாக ஆக்கி தனது முகத்தை மய்யித்தின் பக்கமாக முன்னோக்கி ஸலாம் சொல்வார். "கப்ரைத் தொடுவதும், அவற்றை முத்தமிடுதும் கிறிஸ்தவ, மற்றும் யூத மக்களின் பண்பாடாகும் (இஹ்யா, பாகம்: 4. பக்கம்: 491)

மண்ணறைகளைக் கட்டி வணங்கும் வழிமுறையை அஹ்லுல் பைத்தினர் பெயரில் ஷீஆக்களும் சூபிகளான உஸ்மானியர்களுமே முஸ்லிம் உலகில் முதலாவது தோற்றுவித்தவர்கள் என்பது வரலாறாகும்.

இஸ்லாமிய எழுச்சி தொடங்கப்பட்டுள்ளதாக சில இயக்கப் பிரியர்களால் பிரச்சாரம் செய்யப்படும் தற்போதைய துருக்கியில் பலநூறு மண்ணறைகள் அரசினால் பராமரிக்கப்பட்டு வணங்கப்படுவது அதற்கு மற்றொரு சான்றாகும்.

௨௨

# மரணித்த மகான்கள், பெரியார்கள் பெயரில் அறுத்துப் பலியிடல்

இமாம் ஷாஃபிஈ (ரஹ்) அவர்களின் மத்ஹபு சார்ந்த இமாம் நவவி (ரஹ்) அவர்கள், மரணித்த மகான்கள், பெரியார்கள் பெயரில் அறுத்துப் பலியிடுவதைப் பெரும்பாவங்களில் ஒன்றாகக் கணித்துள்ளது பற்றி அவர்களின் பின்வரும் தீர்ப்பை உங்கள் கவனத்திற்கு கொண்டுவருவது பொருத்தமெனக் காண்கின்றோம்.

لَعَنَ اللَّهُ مَنْ ذَبَحَ لِغَيْرِ اللَّهِ (( صحيح مسلم \ ٥٢٣٩))

“அல்லாஹ் அதல்லாதோருக்காக அறுத்துப் பலியிடுபவனை அல்லாஹ் சபிப்பானாக!” என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள். (ஆதாரம் முஸ்லிம்)

இதற்கு விளக்கமளிக்கும் ஷாஃபி மத்ஹபின் பிரபல அறிஞர்களில் ஒருவரான இமாம் நவவி (ரஹ்) அவர்கள்

وَأَما الَّذْبح لِغَيْرِ اللَّه فَالْمَرَاد بِهِ أَنْ يَذْبح بِاسْمِ غَيْر اللَّه تَعَالَى كَمَنْ ذَبَحَ لِلصَّنَمِ أَو الصَّلِيب أَو لِموسَى أَو لِعِيسَى صَلَّى اللَّه عَلَيْهِمَا أَو لِلْكَعْبَةِ وَنَحْو ذَلِك ، فَكُلّ هَذَا حَرَام ، وَلَا تَحِلّ هَذِهِ الذَّبِيحَة ، سَوَاء كَانَ الذَّابِح مُسْلِمًا أَو نَصْرَانِيًّا أَو يَهُودِيًّا ، نَصَّ عَلَيْهِ الشَّافِعِيّ ، وَاتَّفَقَ عَلَيْهِ أَصْحَابنَا ، فَإِنْ قَصَدَ مَعَ ذَلِكَ تَعْظِيم الْمَذْبُوح لَهُ غَيْر اللَّه تَعَالَى وَالْعِبَادَة لَهُ كَانَ ذَلِكَ كُفْرًا ، فَإِنْ كَانَ الذَّابِح مُسْلِمًا قَبْل ذَلِكَ صَارَ بِالذَّبْحِ مُرْتَدًّا ، (( شرح النووي على مسلم – (ج ٦ / ص ٤٧٥)

அல்லாஹ் அல்லாதோருக்காக அறுத்தல் என்பதன் நோக்கம் என்னவெனில் சிலை, சிலுவை, மூஸா(عليه السلام) அல்லது ஈஸா (عليه السلام) ஆகியோருக்காக, அல்லது கஃபாவிற்காக, அல்லது அதல்லாதவற்றிற்காக அறுத்துப்பலியிடுபவன் (செயல்) போன்றதாகும். இவை அனைத்தும் ஹராமாகும். அறுப்பவன் முஸ்லிமாகவோ, அல்லது கிறிஸ்தவனாகவோ, அல்லது யூதனாகவோ இருந்தாலும் அந்தப் பலிப்பிராணி ஹலாலாக மாட்டாது. இதையே இமாம் ஷாஃபி (ரஹ்) அவர்கள் உறுதியாகக் குறிப்பிட்டுள்ளார்கள். இக்கருத்திலேயே நமது தோழர்களும் ஏகோபித்த முடிவில் இருக்கின்றனர்.

அத்துடன் அல்லாஹ் அல்லாத யாருக்காக இவ்வாறு அறுக்கப்படுகின்றதோ அது அவரை கண்ணியப் படுத்துவதையும், அவருக்கு வழிப்படுவதையும் அறுத்துப் பலியிடுபவர் நோக்கமாகக் கொள்வாரானால் அது “குஃப்ர்” எனும் இறைநிராகரிப்பாகி விடும், அறுப்பவன் முஸ்லிமாக இருப்பின் அறுத்த காரணத்தால் அவன் “முர்தத்” மதம் மாறியவனாக மாறிவிடுகின்றான். (பார்க்க: ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம்: பாகம் -6 பக்கம்: 475)

இவ்வளவு கடுமையான நிலைப்பாட்டைக் கொண்ட மத்ஹபின் தீர்ப்பை முதுகுக்குப்பின் தூக்கி எறிந்த ஆலிம்கள் பெரியார்கள், மற்றும் அவ்லியாக்கள் பெயரில் மவ்லித் மற்றும் புர்தா பாடல்கள் பாடி இவ்வாறான அனாச்சாரங்களை அரங்கேற்றுவது ஷீஆ சிந்தனையின் உச்சகட்டமேயன்றி சுன்னா வழியல்ல என்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

# இறுதியாக சில வார்த்தைகள்

பாத்தினிய்யாக்கள் தொடர்பான இஸ்லாமிய அறிஞர்களின் நிலைப்பாடு தெளிவானதாகும்.

المسلمون جميعًا يُنكِرون على القرامطة والباطنية والإسماعيلية وزنادقةِ الفلاسفة وغُلاةِ الصوفيةِ تأويل نصوصِ الأحكام الشرعية في العبادات والمعاملات والجنايات ونحو ذلك ((جامع المسائل لابن تيمية – عزير شمس – (٥ / ٧٤)

கராமித்தாக்கள், பாதினிய்யா, இஸ்மாயீலிய்யா, தர்க்க வியலாளர்களான இஸ்லாமிய சமூகத்திலுள்ள புல்லுருவிகள் (ஸனாதிகா பிரிவினர்), மற்றும் எல்லை மீறிய சூபிக்கள் என்போர் மார்க்க சட்டங்கள் தொடர்பாக வணக்க வழிபாடுகள், கொடுக்கல் வாங்கல்கள், குற்றவியல்கள் போன்ற சட்டங்களில் மார்க்கத்திற்குப் புறம்பான விளக்கங்கள் தருவதை முஸ்லிம்கள் அனைவர்களும் நிராகரிக்கின்றனர். (அஸீஸ் ஷம்ஸ்– ஜாமிவுல் மஸாயில்)

இமாம் இப்னு தைமிய்யாவின் மற்றொரு கருத்தை தருகின்ற ஆய்வாளர் மம்துாஹ் அல்ஹர்பி அவர்கள் இவ்வாறு பதிவிட்டுள்ளார்கள்.

من زعم أن القرآن نقص منه آيات و كتمت، أو زعم أن له تأويلات باطنة تُسقط الأعمال المشروعة، فلا خلاف في كفرهم، ومن زعم أن الصحابة ارتلوا بعد رسول الله عليه الصلاة والسلام، إلا نفرًا قليلًا لا يبلغون بضعة عشر نفسًا، أو أنهم فسقوا عامَتهم، فهذا لا ريب أيضًا في كفره، بل من يشكُ في كفر مثلُ هذا، فإن كفره متعين.(موسوعة فرق الشيعة – ( ١ /



எவன் ஒருவன் குர்ஆனில் இருந்து சில வசனங்கள் குறைந்துள்ளதாகவோ, அல்லது (இருட்டடிப்புச் செய்யப்பட்டு) மறைக்கப்பட்டுள்ளதாகவோ, அல்லது மார்க்கமாக்கப்பட்ட அமல்களை விழுத்தாட்கின்ற உள்ளார்ந்த விளக்கம் இருப்பதாகவோ நம்புகின்றானோ அவ்வாறானவர்கள் காஃபிர்கள் என்பதில் சந்தேகமில்லை.

எவன் ஒருவன் நபித்தோழர்களில் குறிப்பிட்ட சிலரைத் தவிர மற்ற அனைவரும் நபி(ﷺ) அவர்களின் மரணத்தின் பின்னால் மதம்மாறிப்போனார்கள் என்றோ, அல்லது பொதுப்படையாக அவர்கள் பாவிகள் என்றோ நம்புகின்றானோ அவனது இறை நிராகாரிப்பில் சந்தேகம் கொள்ளத் தேவை இல்லை. இவ்வாறானவர்களின் இறை நிராகரிப்பில் யார் சந்தேகிக்கின்றானோ இந்த விஷயத்தில் மாத்திரம் அவனது இறை நிராகரிப்பு உறுதி செய்யப்படல் வேண்டும் . (மம்தூஹ் அல்ஹர்பி– மவ்சூஅது ஃபிரகிஷ்ஷீஆ–)

இந்தக் கருத்தினை மேற்படி பிரிவுகள் தொடர்பான விடயத்தில் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

# முடிவுரை

நபி(ﷺ) அவர்களின் மரணத்தின் பின்னால் இஸ்லாமிய உம்மத்தின் இறுக்கமான கட்டமைப்பை சீர் குலைப்பதற்காக கவாரிஜ்கள் தோன்றினர். பின் முஃதஸிலா, ஜஹ்மிய்யா, கத்ரிய்யா போன்ற சிந்தனா ரீதியான சக்திகள் வெளிப்படத் தொடங்கின. அதனைத் தொடர்ந்து ஷீஆ, இஸ்மாயீலிய்யா, பாத்திமிய்யா, போன்ற பாத்தினிய்யா பிரிவுகள் ஆன்மீகப் போர்வையில் களம் இறங்கி செயலாற்றின.

யூதர்கள் முஸ்லிம்களைப் பிரித்தாளும் தமது நோக்கத்தை நிறைவு செய்யவதற்காக மூன்றாம் கலிஃபா உஸ்மான் பின் அஃப்பான் (ரலி) அவர்களின் காலத்தில் எமன் நாட்டைச் சேர்ந்த யூதன் இப்னு ஸபஃ என்பவனை இரையாக்கியதன் பயனாக அவன் வெளிப்படையில் இஸ்லாத்தை தழுவினான். இதற்கு முன்னர் இரண்டாம் கலீஃபாவை ஈரான் நாட்டைச் சேர்ந்த 'அபூ லுஃலுஆ அல் மஜூஸி' என்ற நெருப்பு வணங்கியின் மூலம் மிகக் கச்சிதமான முறையில் படுகொலை செய்தனர்.

பின்னர், அவன் கலீஃபாக்களின் கிலாஃபத்திற்கு எதிரான கருத்துக்களை மறைமுகமாகப் பரப்ப ஆரம்பித்தான். அதற்காக நபி (ﷺ) அவர்களின் குடும்பத்தில் முக்கியமான ஒருவராகக் கணிக்கப்படும் நான்காம் கலீஃபா அலி(ரலி) அவர்கள் பலிக்கடாவாக்கப்பட்டார்கள் என்பதுதான் கற்பனை செய்ய முடியாத ஒரு திட்டமிடலாகும்.

எவ்விதமான ஆய்வோ, தெளிவான அறிவோ இன்றி அவனது கருத்துக்களை அங்கீகரித்த ஒரு குழுவினர் நபி (ﷺ) அவர்களின் மரணத்திற்குப் பின்னால் அலி (ரலி) அவர்கள்தான் ஆட்சிக்கு தகுதியானவர் என்றும், அவர்களுக்குச் செல்ல வேண்டிய ஆட்சியை கலீஃபாக்கள் அபகரித்துள்ளனர். எனவே, அவர்கள் துரோகிகள், காபிர்கள், முர்தத்துகள் என்றும் கூறி அஹ்லுல் பைத்தினரை நேசித்தல் என்ற கோஷத்தோடு தோற்றம் பெற்றனர்.

இதன் விளைவாக அலி(ரலி) அவர்கள் ஆட்சிக்குப் பின்னால் ஷீஆக்கள் என்ற போர்வையில் ஒரு குழு தலை தூக்கியது. இந்தக் குழு ஆரம்பத்தில் தம்மை அலி (ரலி) அவர்களின் நேசர்கள் என்றது. பிற்பட்ட காலங்களில் பன்னிரெண்டு இமாம்களை மாத்திரம் நேசிக்கும் பிரிவினர் என்றும், அவர்களில் முதலாவது இமாம் அலி பின் அபீதாலிப் (ரலி) அவர்கள்தாம் என்றும், கலீஃபாக்கள் என்போர் ஆட்சி அபகரிப்பாளர்கள் என்றும் பிரச்சாரம் செய்து தம்மை அஹ்லுல்பைத்தினர் வழி வந்த ஷீஆக்கள் என்றும் பொய் நாமம் சூடி அழைத்துக் கொண்டது.

இந்தப் பிரிவினர் ஹிஜ்ரி 260 ற்குப் பின்னர் நம்பி வந்த பன்னிரெண்டு இமாம்கள் வரிசையில் ஆறாவது இமாமாகிய இமாம் ஜஃபர் ஸாதிக் (ரஹ்) அவர்களின் மரணத்தின் பின்னால் தமக்குத் தலைமை இமாமாக யார் வருவார் என்பதில் கருத்து முரண்பட்டுக் கொண்டனர். அதன் விளைவாக அவர்களில் ஒரு சாரார் மூஸவிய்யா, ஜஃபரிய்யா என்றும், **மற்ற சாரார் இஸ்மாயீலிய்யா என்றும் தமக்குள் பிரிந்தனர்.**

இவ்விரு குழுக்களிலும் இருந்தே பாத்தினிய்யா என்ற அகண்ட கிளைகளையுடைய ஆல விருட்சமான பல வழிகேட்டுப் பிரிவுகள் அஹ்லுல் பைத்தினர் பேரில் முஸ்லிம் உம்மத்தில் ஊடுருவியது. அவர்கள் அனைவரும் மொத்தத்தில் பாத்தினிய்யாக்கள் என அழைக்கப்பட்டனர்.

அவர்கள் ஷீஆ இஸ்னா அஷரிய்யா, இமாமிய்யா, இஸ்மாயீலிய்யா, நுஸைரிய்யா, (அலவிய்யா), துரூஸ், உபைதிய்யா, (பாத்திமிய்யா), கராமித்தா, பஹாயிய்யா, காதியானிய்யா என்ற பல

பெயர்களில் அறிமுகமாகி முஸ்லிம் உலகை சீரழித்தனர்..

சில போது சிலுவைப் போராளிகள், மற்றும் இஸ்லாமிய பிரதேச ஆக்கிரமிப்பாளர்கள் என்பவர்களோடு மறைமுகமாக கைகோர்த்து, நபித்தோழர்களின் வழி வந்த சுன்னா முஸ்லிம்களைக் கருவறுத்து அவர்களின் பிரதேசங்களை அன்னிய படைகளுக்குத் தாரை வார்த்ததன் மூலம் தமது அரசியல், சமய இலக்குகளை அடைந்து கொண்டனர்.

இன்றைய ஈரானிலும், சிரியா, எமனிலும் ஷீஆ வேஷம் தரித்தவர்களால் கொலை செய்யப்படும் நமது சகோதர சுன்னா முஸ்லிம்களின் நிலை இதற்கு மற்றொரு சான்றாகும்.

ومن اطلع على تاريخ الحروب الصـــــــليبية. لا سيما [كتاب الروضتين في أخبار الدولتين النورية والصـلاحية] . عرف دور الروافض والباطنية في حرب الإسلام ((المفصـل في شرح آية الولاء والبراء – ( ١ / ٤٢ ))

சிலுவைப் போராளிகளின் வரலாற்றைப் பற்றி அறிபவர்கள் குறிப்பாக, இமாம்களான இப்னு கஸீர் அவர்களின் அல் பிதாயா வையும் இப்னு தைமிய்யாவின் நூல்களையும் இமாம் அபூஷா அல்மக்திஸி அவர்கள் எழுதிய அர்ரவ்ளதைன் என்ற நூலையும் வாசித்தால் ஷீஆ ராபிழாக்களின் மற்றும் பாத்தினிய்யாக்கள் என்போரின் இஸ்லாத்திற்கு எதிரான போர் பற்றிய பங்களிப்பை தெளிவாக அறிந்து கொள்ள முடியும் என்கிறார் ஆய்வார் நாயிஃப் அஷ்ஷஹ்ஹூத்.

இவரது கூற்றின் படி சுன்னாக்களின் சுத்தமான இஸ்லாமிய ராஜ்யங்களாகக் காணப்பட்ட பாரஸீக ஈரானின் தொன்மையான பல நகரங்களை பச்சையான ஷீஆத் தேசமாக மாற்றுவதற்கு அனைத்து வசதிகளையும் செய்து அவர்களை ஷீஆக்களுக்கு தாரை வார்த்த பெருமை சூபிகளுக்கே உண்டு.

சூஃபிகள் என்ற துறவிகள் தம்மை அஹ்லுல் பைத்தினரின் பரம்பரையில் வந்தவர்களாகவும், முக்தி நிலையை அடைந்து விட்டதனால் இஸ்லாமிய கடமைகள் செய்யத் தேவையில்லாத மெய்ஞ்ஞானம் பெற்றவர்கள் என்றும் வாதிட்டுக் கொண்டு, இஸ்லாமிய மார்க்கக் கடமைகளைப் பாழடித்து மார்க்கத்தையும் தேசத்தையும் நாசமாக்கிய நாசகாரப் பெருமை சூபிகளுக்கே உண்டு.

இப்படி பல அதிசயத் தகவல்களைக் கொண்டு இந்நூல் அல்லாஹ்வின் பேரருளால் வெளிவருவது பற்றி அகமகிழ்கின்றேன்.

இந்நூலில் காணப்படும் தகவல்களைப் படிக்கும் பித்அத்வாதிகளான அஹ்லுஸ்ஸுன்னா மக்கள் ஈரானுக்கு கொடி தூக்கிய நண்பர்கள் நமது கலீஃபாக்களையும், இமாம்களையும் மதிக்கும் சுன்னத் ஜமாத் முஸ்லிம்கள், நடுநிலைவாதம் பேசுவோரில் பலர் இது தொடர்பாக பல உண்மைகளை அறிந்து கொள்வார்கள் என்று ஆதரவு வைக்கின்றோம் என்ற இப்றாஹீம் (عليه السلام) அவர்களின் பிரார்த்தனையோடு விடை பெறுகின்றேன்.

رَبَّنَا اغْفِرْ لِى وَلِوَالِدَىَّ وَلِلْمُؤْمِنِيْنَ يَوْمَ يَقُوْمُ الْحِسَابُ( إبراهيم : ٤١)

அல்லாஹ்வே! எனக்கும் எனது பெற்றோருக்கும் இறை நம்பிக்கையாளர்களாக முஃமின்களுக்கும் நீ வழங்கவிருக்கும் அந்நாளில் மன்னிப்புத் தருவாயாக!

அல்லாஹ் அனைவருக்கும் மார்க்கத்தில் நல்லதை நாடுவானாக!

இவன்,
**எம்.ஜே.எம். ரிஸ்வான் மதனி**

**10.12.2018**
**திகண**

# உசாத்துணை நூல்கள்
# المصادر والمراجع

55


١. القرآن الكريم
٢. المصادر الحديثية
٣. تفسير القرطبي\ الإمام القرطبي
٤. الأم. للشافعي رحمه الله
٥. الروضتين في أخبار النورية و الصلاحية \ ابو شامة المقدسي
٦. أحكام المرتد عند شيخ الإسلام ابن تيمية – جمع وتحقيق : نايف الشحوذ
٧. سير أعلام النبلاء. تحقيق الأرنؤوط
٨. اللدولة العثمانية عوامل النهوض وأسباب السقوط – \ الدكتور علي محمد محمد الصَّلاَّبِّي
٩. إحياء علوم الدين \ الإمام أبو حامد الغزالي
١٠. فضائح الباطنية \ – الإمام أبو حامد الغزالي
١١. شرح النووي على مسلم \ الإمام ابوزكريا النووي
١٢. موســوعة الرد على المذاهب الفكرية المعاصــرة\ جمع وإعداد : علي بن نايف الشحود
١٣. البداية والنهاية \ الإمام ابن كثير
١٤. الكامل في التاريخ \ ابن الأثير
١٥. أثر اليهود والنصارى والمجوس في التشيع / السيد أبو علي المرتضى بن سالم الهاشمي
١٦. مجموع مؤلفات تاريخ الرافضة
١٧. دولة السلاجقة\ الدكتور علي محمد محمد الصَّلاَّبِّي
١٨. استشهاد الحسين - رضي الله عنه - بين الحقائق والأوهام \ الدكتور علي محمد محمد الصَّلاَّبِّي
١٩. الدولة الأموية عوامل الإزدهار وتداعيات الإنهيار \ الدكتور علي محمد محمد الصَّلاَّبِّي
٢٠. عودة الصفويين بقلم : عبدالعزيز بن صالح المحمود
٢١. أحوال أهل السنة في إيران الدكتور عبد الله محمد الغريب
٢٢. شرح العقيدة الطحاوية لابن جبرين
٢٣. منهاج السنة ابن تيمية رحمه الله
٢٤. أسباب رفع العقوبة \ ابن تيمية رحمه الله
٢٥. إقامة الدليل على إبطال التحليل\ ابن تيمية رحمه الله
٢٦. أسباب رفع العقوبة عن العبد \ ابن تيمية ، تحقيق : علي بن نايف الشحود
٢٧. الفتاوى الكبرى \ ابن تيمية
٢٨. السلوك لمعرفة دول الملوك \ أبو العباس أحمد بن علي بن عبد القادر، الحسيني العبيدي، تقي الدين المقريزي (المتوفى : ٨٤٥ هـ
٢٩. الكامل في التاريخ \عز الدين أبو الحســن علي بن محمد بن عبد الكريم الجزري المعروف ب " ابن الأثير
٣٠. الوافي بالوفيات | صلاح الدين خليل بن أيبك الصفدي (المتوفى : ٧٦٤ هـ)
٣١. العبر في خبر من غبر \ المؤلف : أبو عبدالله محمد بن أحمد بن عثمان بن قايماز

الذهبي

٣٢. السلوك لمعرفة دول الملوك \ أبو العباس أحمد بن علي بن عبد القادر، الحسيني العبيدي، تقي الدين المقريزي

٣٣. الشيعة والتشيع –فرق وتاريخ– ஹ العلامة إحسان إلهي ظهير

٣٤. الإسماعيلية \ العلامة حسان إلهي ظهير،

٣٥. أصول مذاهب الشيعة الاثني عشرية – د: ناصر القفاري

٣٦. مجموع مؤلفات عقائد الرافضة والرد عليها \ المكتبة الشاملة

٣٧. عقيدة الدروز عرض ونقض تأليف : الدكتور محمد أحمد الخطيب

٣٨. الموالاة والمعاداة في الشريعة الإسلامية \ الدكتور : محماس بن عبد الله بن محمد الجلعود

٣٩. اتعاظ الحنفاء بأخبار الأئمة الفاطميين الخلفاء\ تقي الدين أحمد بن علي المقريزي

٤٠. بغية الطلب في تاريخ حلب المؤلف : ابن العديم

٤١. البدء والتاريخ \ المؤلف : مطهر بن طاهر المقدس

٤٢. تاريخ الأمم والملوك \ الإمام الطبري

٤٣. تاريخ الإسلام \ الإمام الذهبي

٤٥. المسالك و الممالك. المؤلف : أبو بكر (المشهور بالبكري) بن محمد شطا الدمياطي

٤٦. إغاثة اللهفان من مصائد الشيطان \ الإمام ابن القيم

٤٧. المنار المنيف \ الإمام ابن القيم

٤٨. الصواعق المرسلة \ الإمام ابن القيم

٤٩. الصفدية \ : أحمد بن عبد الحليم بن تيمية الحراني أبو العباس ، تحقيق : د. محمد رشاد سالم

٥٠. تاريخ مكة المشرفة والمسجد الحرام والمدينة الشريفة والقبر الشريف \ أبو البقاء محمد بن أحمد بن محمد ابن الضياء المكي الحنفي

٥١. الأعلام \ الزركلي

٥٢. شرحة نونية القرني ل \ كاملة الكواري

٥٣. مفهوم الصبر عند ابن تيمية رحمه الله

٥٤. حادي الأرواح إلى بلاد الأفراح \ الإمام ابن القيم الجوزية

٥٥. أصول الإسماعيلية \ الدكتور سليمان بن عبد الله السلومي

٥٦. أسباب رفع العقوبة \ شيخ الإسلام ابن تيمية

٥٧. المفصل في شرح آية الولاء والبراء \ نايف الشحوذ

٥٨. بيان مذهب الباطنية وبطلانه \ الديلمي

٥٩. نظم الدرر – ت: عبدالرزاق غالب

٦٠. اعتقاد الشيعة الاثنى عشرية سؤال وجواب –\ عبد الرحمن بن سعد الشثري

٦١. جامع المسائل لابن تيمية \ عزير شمس

٦٢. موسوعة فرق الشيعة \ ممدوح الحربي \ تنسيق أعضاء شبكة الدفاع عن السنة)

٦٣. الانحراف العقدي في أدب الحداثة\ الدكتور سعيد ا الغامدي

٦٤. العواصم من القواصم \ ابن العربي المالكي

٦٥. كشف أسرار الباطنية \ الدكتور الحمادي اليماني

இஸ்லாமிய இணையதளங்கள் - المواقع الإسلامية :

www. dorer.net
www.dd-sunnah.net
www.saaid.net
www.alsrsdaab.com
www.al3wasem.ahlamontada.com
www.sahab.net